பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதி வெளியீடு

உ

சிவ சிவ



## திருநாவுக்கரசு சுவாமிகள்

# தேவாரம்

[தலமுறை]



ஹேவிளம்பி சித்திரைச் சதயம்

25—4—1957



ஸ்ரீ குமரகுருபரன் சங்கம் : : ஸ்ரீவைகுண்டம்

பன்னிரு திருமுறைப் பதிப்பு வெளியீடு எண் 3

உ

சிவ சிவ

# திருநாவுக்கரசர் தேவாரம்

[ தல முறை ]

திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடம்
ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்
8—4—1950-ம் உ யில் நிறுவிய
ஸ்ரீ ஆதிகுமரகுருபர சுவாமிகள் நினைவுப் பன்னிருதிருமுறைப்
பதிப்பு நிதியிலிருந்து வெளியிடப்பெற்றது

பதிப்பாசிரியர்
T. M. குமரகுருபரன் பிள்ளை B. A., B. L.,
நிரந்தரத் தலைவர்
ஸ்ரீ குமரகுருபரன் சங்கம், ஸ்ரீவைகுண்டம்

விலை ரூ. 2—4—0

பன்னிரு திருமுறைப் பதிப்பு வெளியீடு எண் 3

முதற்பதிப்பு 1957

உ
சிவ சிவ

திருநாவுக்கரசர் திருவேகாதசமாலை

பதிகமே ழெழுநூறு பகருமா கவியோகி
பரசுநா வரசான பரமகா ரணவீசன்
அதிகைமா நகர்மேவி அருளினல் அமண்மூடர்
அவர்செய்வா தைகள்தீரும் அனகன்வார் கழல்சூடின்
நிதியரா குவர்; சீர்மை உடையரா குவர்; வாய்மை
நெறியரா குவர்;பாவம் வெறியரா குவர்;சால
மதியரா குவர்;ஈசன் அடியரா குவர்;வானம்
உடையரா குவர்பாரில் மனிதரா னவர்தாமே.

— நம்பியாண்டார் நம்பிகள்

குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம்.

உ

சிவ சிவ

# பதிப்புரை

"திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
திருநாவுக் கரையன்றன் அடியார்க்கும் அடியேன்" —சுந்தரர்

சைவ சமயத்தின் உயர்நிலையை விளக்கும் சைவத் திருமுறைகள் பன்னிரண்டையும், மக்கள் எளிதிற் பெற்றுப் பாராயணஞ் செய்து சிந்தையில் இருத்தி அவற்றின் மேன்மையை உணர்ந்து உய்யும்பொருட்டு நன்முறையில் பதிப்பித்துச் சைவ மக்களுக்கு உதவிவரும் பெருமை திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்துத் தலைவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான்[redacted]வாமிகள் அவர்களைச் சாரும்.

பன்னிரு திருமுறைகளையும் அடக்க விலையில் பெற்று மக்கள் பயன் அடைதற்பொருட்டு 8—4—1950-ல் "ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுப் பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதி" என்னும் பேரறக் கட்டளை நிறுவி ரூ. 50,000 பெறுமானமும் உள்ள ஸ்தாவர சொத்துக்களை ஷெ தர்மத்திற்கென ஒதுக்கியும் ஷெ சொத்துக்களின் வருமானத்திலிருந்து பன்னிரு திருமுறைகளை அச்சிட்டு அடக்க விலைக்கு விற்று வருவதற்கான நிபந்தனைகளும் வகுத்தருளி அதன் நிர்வாகப் பொறுப்பையும் ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மடம் மானேஜிங் டிரஸ்டி அவர்களுக்கு ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் அளித்துள்ளார்கள். இத்தரும சாஸனம் இதன் பிற்சேர்க்கையில் அச்சிடப்பெற்றுள்ளது.

இத்தரும சாஸனத்திற்கண்ட ஷரத்துக்களின்படி "பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதி மூன்றாவது வெளியீடாக" திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் திருவுளப்பாங்கின்படி ஹேவிளம்பி சித்திரைச் சதய நாளில் வெளியாகிறது.

சைவத் திருமுறைகளில் திருநாவுக்கரசு சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளியவை நான்கு, ஐந்து, ஆறாந்திருமுறைகள் என்பதும் அவர் சித்திரைச் சதய நாளில் இறைவன் திருவடி நீழலிற் கலந்தார் என்பதும் அன்பர்கள் அறிந்ததே.

1949-ம் வருஷம் ஸ்ரீ தி. பட்டுச்சாமி ஓதுவார் அவர்கள் ஸ்ரீ காசிமடம் வெளியீடாக வெளியிட்ட திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரப் பதிப்பை ஆதாரமாகக் கொண்டு இப்பதிப்பின் உள்ளுறை, திருநாவுக்கரசு சுவாமிகள் சரித்திர வரலாறு முதலியனவும் பிறவும் பதிப்பிக்கப்பெறுகின்றன. இத் தேவாரப் பதிப்பு தலமுறைப்படி அமைந்துள்ளது; இன்றி யமையாத குறிப்புரை பாடபேதம் முதலியவற்றுடன் கூடியது; சிவத்தல யாத்திரை செய்வோர் தலங்கள்தோறுஞ் சென்று இறைவனை வாயாரப் புகழ்ந்துபாடி வணங்குவதற்கு ஏற்ற வகையில் அமைந்திருக்கின்றது.

அடியேன்பால் உள்ள பெருங்கருணையினால் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் அடியேனுக்கும் இச்சீரிய சிவநெறித் தொண்டில் கலந்துகொள்ளும் ஒரு வாய்ப்புக் கொடுத்து அருளியதை அடியேன் எழுமையும் மறவேன்.

இப்பதிப்பு அழகுடன் அமைவதற்கும் விரைவில் அச்சா வதற்குமான பல்வேறு முறைகளை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் அவ்வப்போது அறிவுறுத்தியருளியும், தொழிலாளர்கள் அச்சுப்பணியில் ஆர்வத்துடனும் உண்மையுடனும் ஈடுபட இடை யிடையே கண்காணிப்புச்செய்து தக்கவழியில் ஊக்குவித்தருளியும், குறிப்பிட்ட காலத்தில் இப்பதிப்பு வெளிவரத் தோன்றாத் துணையாய் நின்று ஆசீர்வதித்தும் அருளிய ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களுக்கு மனமொழி மெய்களாற் கூடிய வணக்கத் தையும் நன்றியறிதலையும் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் அருள் ஆணையின் வண்ணம் ஒழுகி நிற்கும் ஸ்ரீ காசிமடம் இளவரசு ஸ்ரீமத் மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள் அவர்களுக்கும் என் வணக்கமும், நன்றியும் உரியனவாகும்.

இப்பதிப்பு அச்சாகுங்கால் அச்சுப்பிரதிகளைத் திருத்தி உதவிய கோவில்பட்டி ஓய்வுபெற்ற தமிழ்ப்பண்டிதர் திருவாளர் ஏ. நாரம்புநாத தேசிகர் அவர்களுக்கும், திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரி பிரின்சிபால் சிவநெறிச்செல்வர் திரு. கே. எம். வேங்கடராமையா எம். ஏ., பி. ஓ. எல்., அவர்களுக்கும் எனது நன்றி உரியனவாகும்.

இங்ஙனம்

ஸ்ரீவைகுண்டம்
ஹேவிளம்பி
சித்திரைச் சதயநாள்
25—4—'57.

**T. M. குமரகுருபரன் பிள்ளை**
B. A., B. L.,
ஸ்ரீ குமரகுருபரன் சங்கம்
நிரந்தரத் தலைவர்



உ

ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபரன் சங்க வெளியீடுகள்

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1. | திருமூலர் திருமந்திரம் | 2 | 8 | 0 |
| 2. | அகத்தியர் தேவாரத்திரட்டு | 0 | 6 | 0 |
| 3. | திருநாவுக்கரசர் தேவாரம் (தலமுறை) | 2 | 4 | 0 |

செந்திலாண்டவன் துணை

# உள்ளுறை

உ

செந்திலாண்டவன் துணை

# திருநாவுக்கரசு சுவாமிகள் வரலாறு

இடையறுப் பேரன்பும் மழைவாரும்
இணைவிழியும் உழவா ரத்திண்
படையறுத் திருக்கரமும் சிவபெருமான்
திருவடிக்கே பதித்த நெஞ்சும்
நடையறுப் பெருந்துறவும் வாகீசப்
பெருந்தகைதன் ஞானப் பாடல்
தொடையறுச் செவ்வாயும் சிவவேடப்
பொலிவழகும் துதித்து வாழ்வாம்.

—காஞ்சிப் புராணம்

உலகில் பிறவியெடுத்த உயிர்கள் இன்பப் பேற்றை விரும்புகின்றன. இஃது இயற்கை; பேரின்பப் பெரும் பேறு எய்துவதே மக்கட் பிறவியின் மாண்பயன். பேரின்பப் பேறு கருதி இறைவனை அடைய அடியார்கள் முயலும் மார்க்கங்கள் நான்காம். அவற்றுள், ஒன்று தாச மார்க்கம். இதன் வாயிலாகச் சிவபெருமானைத் தம் அனுபவங்களால் நேரிற்கண்டு பேரின்பப் பெருவாழ்வு எய்திய பெரியார் திருநாவுக்கரசு சுவாமிகள். இவர் சைவ சமயாசாரியார் நால்வருள் "திருநின்ற செம்மையே செம்மையாகக் கொண்ட" செல்வர் ஆவர்.

திருநாவுக்கரசு சுவாமிகள் தமிழ்நாட்டில் திருமுனைப்பாடி நாட்டில் திருவாமூரில் சைவ வேளாளர் மரபில், குறுக்கையர் குடியில் திருவவதாரஞ் செய்தார். அவர் தந்தை புகழனார்; தாய் மாதினியார்; தமக்கை திலகவதியார். மருள் நீக்கியார் என்ற பிள்ளைத் திருநாமத்தோடு அவர் வளர்ந்து வரலானார்.

திலகவதியாருக்கு உரிய காலத்தில் மணமுடிக்கக் கருதினர் பெற்றோர்; சிவபக்தியிற் சிறந்த கலிப்பகையார் என்பவரை

மணவாளனைக் குறித்துப் பேசி முடித்தனர். கலிப்பகையார் சேனாதிபதி; இடையில் போர் நேரவே கலிப்பகையார் போர் மேற் சென்று பொருது வீரசுவர்க்கம் அடைந்தார். இதற் கிடையில் புகழனாரும் மாதினியாரும் இறைவன் திருவடியை எய்தினர். பெற்றோர் பிரிவால் உள்ளம் வெதும்பியிருந்த திலகவதியார், கலிப்பகையார் செய்தியைக் கேட்டதும் வாழ்க் கையில் வெறுப்புக்கொண்டு தீயிலிறங்கி இறக்கக் கருதினார்; ஆனால், தம்பியாரும் உயிர்விடத் துணியவே, அவர் பொருட்டு உயிர்வாழ முடிவு செய்தார்.

தமக்கையார் ஆதரவில் வளர்ந்தார் திருநாவுக்கரசர். இவர் கல்வி கேள்விகளில் சிறப்புற்றார்; உலக நிலையாமையை உணர்ந்து மெய்யறிவு பெற்றுத் துறவு நெறியை மேற்கொண்டார்; பிறசமய நுண்பொருள்களை அறிய விரும்பிப் பாடலிபுத்திரத் திற்குச் சென்று சமண நூல்களைக் கற்றார்; அந்நூல் கருத்துக் களால் மனங்கவரப் பெற்று அச்சமயத்தைச் சார்ந்தார்; சில காலத்தில் அச்சமய நூல்களில் வல்லவராகித் தருமசேனர் என்னும் பெயருடன் ஆசிரியராய்த் திகழ்ந்தார்.

தம்பியாரின் மனமாற்றத்தைக் கண்ட திலகவதியார் வருந்தினார்; தம் தம்பியாரின் மனத்தினை நன்னெறிக்குத் திருப்ப வேண்டுமென்று சிவபெருமானிடம் மனங்குழைந்து வேண்டிக் கொண்டார். இவ்வேண்டுகோளுக்கு இரங்கினான் இறைவன். அவன் அருளால் தருமசேனரைத் தடுப்பதற்கரிய சூலை நோய் பற்றியது. நோயால் வருந்திய தருமசேனர் சமணர்களின் பலவகை முயற்சியாலும் குணங்காணாமல் இறுதியில் தமக்கையாரை அணுகித் தம் துன்பந் தொலையுமாறு குறையிரந்து வேண்டினார்.

தம்பியாரின் நிலை கண்டு வருந்தினார் திலகவதியார்; பின்னர், ஐந்தெழுத்தோதித் திருநீறளித்து, திருவதிகை வீரட்டானேச் சுரரை வணங்கச் செய்தார். அப்பொழுது இறைவன் அருளால் செந்தமிழ் மாலை சாற்றும் உணர்வு பெற்றார் மருள் நீக்கியார். உடனே, "கூற்றாயினவாறு" என்று தொடங்கும் திருப்பதிகம்

பாடி உள்ளமுருகினர். நோய் நீங்கியது; இன்பம் பொங்கியது. "செந்தமிழில் நாவின் திறங்காட்டிப் பதிகம் பாடியமையால் நாவுக்கரசு என்னும் நற்பெயர் வழங்குவதாக" என்ற சொற்கள் வானத்திடை எழுந்தன. திருநாவுக்கரசர் மனங்களித்து அன்று முதல் சிவநேயச் செல்வராய் நீறு பூசி, கண்டிகை பூண்டு இறைவனுக்குத் தொண்டு புரியும் கருத்தினராய் உழவாரப்படை தாங்கி உலவி வரலானர்.

சமணத்தைக் கைவிட்டுச் சைவத்தைச் சார்ந்த நாவுக்கரசரின் செய்தியைக் கேட்ட சமண முனிவர்களும் மன்னனும் அரவெனச் சீறினர். நாவுக்கரசரை வரவழைத்து நீற்றறையில் இட்டனர்; நஞ்சை அருந்தச் செய்தனர்; யானைக் காலில் இடறச் செய்தனர்; இறுதியாகக் கல்லுடன் கட்டிக் கடலில் இட்டனர். சிவன் சேவடி மறவாச் செம்மலாகிய நாவுக்கரசர் திருப்பதிகங்கள் பாடி ஒன்றாலும் துன்புறாதிருந்த உயர்நிலையைக் கண்டு உறுதி குலைந்து தளர்வுற்றுத் திகைத்தனர் சமணர்கள். அரசன் வியப்புற்றுச் சைவ சமயமே மெய்ச்சமயமென உணர்ந்து சைவனானன். அதற்கறிகுறியாகத் தன் பெயரால் திருவதிகையில் குணதரவீச்சரம் என்னும் கோயில் ஒன்றையும் கட்டுவித்தான்.

பின்னர் வாகீசப் பெருந்தகையார் திருவதிகையில் சிவத்தொண்டு புரிந்து வரலானர்; பல நாட்களுக்குப் பிறகு, பல தலங்களையும் காண விரும்பினர்; நடுநாட்டில் பல தலங்களையும் கண்டு மகிழ்ந்து திருப்பெண்ணாகடம் அடைந்தார்; அங்குத் தூங்கானை மாடத்து இறைவன்பால், "பொன்னர் திருவடிக் கொன் றுண்டு விண்ணப்பம்" என்னும் பதிகம் பாடி, அவன் ஆணைப்படி பூதம் ஒன்றினல் இடபக்குறியும், சூல முத்திரையும் தம் தோளில் பொறிக்கப் பெற்றார்; அதன் பின்னர்ச் சிதம்பரத்தை அடைந்து பொன்னம்பலவன் பொற்கழல் பணிந்து பதிகம் பாடிப் பரவசரானர்; அங்கிருந்து சீகாழி சென்று ஆளுடைய பிள்ளையாரை அகமகிழக் கண்டு களித்து, அவரால், அப்பரே என்று அருமையாக அழைக்கப் பெற்றார்; சோழ நாட்டுப் பதிகளைத் தரிசித்து வருங்கால் திருச்சத்தி முற்றத்தில், "கோவாய் முடுகி" என்னும் பதிகம் பாடி இறைவன் அடிச்சுவடு தம்

முடிமேல் பொறிக்கப்படவேண்டுமென்று வேண்டிப் பணிந்தார்; அவ்வேண்டுகோள் நல்லூரில் நிறைவேறியது; திருவையாற்றை யடுத்துள்ள திங்களூரையடைந்து அப்பூதியடிகளால் உபசரிக்கப் பெற்றார்; அங்கு அப்பூதியடிகளின் மூத்த மகனார் அரவு தீண்டி ஆவி நீத்தமை கண்டு, "ஒன்று கொலாம்" என்ற பதிகம் பாடி உயிர்ப்பித்தார்.

அப்பால் வாக்கின் வேந்தர் காவிரிக்கரையிலுள்ள பல சிவத் தலங்களையும் தரிசித்துக்கொண்டே போய்த் திருவாரூரை யடைந்து பூங்கோயிலில் எழுந்தருளிய புற்றிடங்கொண்ட பெருமானைக் கண்டு வணங்கி உள்ளம் உருகப் பதிகம் பாடிக் களித்தார்; பிறகு, திருப்புகலூரை அடைந்து முருக நாயனார் திருமடத்தில் தங்கியிருந்து, அங்கு வந்த திருஞானசம்பந்தருடன் அளவளாவி இன்புற்றார். பின்னர் நாவுக்கரசர் ஞானசம்பந் தருடன் சேர்ந்து பல தலங்களையும் வணங்கித் திருவீழிமிழலையை அடைந்து ஆண்டவனிடம் பொற்காசு பெற்று அடியார்களின் அரும் பசிப்பிணியைப் போக்கினார்; திருமறைக்காடு சென்று "பண்ணினேர் மொழியாள் உமை" என்ற பதிகம் பாடி வேதங் களால் அடைக்கப்பட்டிருந்த கதவைத் திறக்கச் செய்தார். மறைக்காட்டு மணாளர் அப்பரைத் திருவாய்மூருக்கு வரும்படி பணித்து வழிகாட்டிச் செல்ல, அப்பர் பின் தொடர்ந்து திருவாய்மூரை அடைந்து இறைவனது காட்சியைப் பெற்றார். அதன் பின்னர், ஞானசம்பந்தர் பாண்டி நாடு செல்லவும், நாவரசர் சிவத்தலங்களை வணங்கிக்கொண்டு பழையாறை வடதளி வந்தடைந்தார்; அங்குச் சமணர் சூழ்ச்சியால் மறைப் புண்டிருந்த சிவலிங்கத்தை வெளிப்படுத்தி, "தலையெலாம் பறிக்கும் சமண்," என்ற பதிகம் பாடி வணங்கிப் பின் பல தலங்களைப் பாடித் தரிசித்துத் திருப்பைஞ்ஞீலி சேர்ந்தார்.

அப்பர் அவ்வூருக்கு வழிநடந்து செல்லுங்கால் பசியாலும், நீர் வேட்கையாலும் வருந்தினார். இறைவன் ஒரு சோலையில் பொதி சோறும் நீரும் கொடுத்து அவர் இளைப்பைப்போக்கினார். அதன்பின் நாவுக்கரசர் நடுநாட்டுத் தலங்களைத் தரிசித்துவிட்டுத் திருக்காளத்தி மலையை அடைந்தார்; வட கயிலையைக் கண்டு

களிக்க விரும்பி, அடியார்கள் புடைசூழக் காசிவரையில்சென்ருர்; பின்னர் உடன் வந்த அடியார் குழுவை அங்கேயே நிறுத்தி விட்டுத் தனித்துச் செல்லலானுர்.

திருநாவுக்கரசர் உடல் தளர்ந்த நிலையிலும் உள்ளந் தளராமல் சென்ருர்; கால் தேய்ந்தது; கை தேய்ந்தது; மார்புந் தேய்ந்தது; ஆயினும், மனத்தில் தளராமல் இருந்த விருப்பம் தேயாமல் உடல் முழுதும் தேயும்படி புரண்டு சென்ருர்; பின்னர் அதுவும் முடியாமல் அசைவற்றுக் கிடந்தார். அந்நிலையில் கயிலைப் பெருமான் முனிவர் வடிவத்தோடு தோன்றி, "அன்பனே! கயிலை மனிதர் காணும் தன்மையது அன்று; திரும்பிச் செல்க" என்ருர். வாகீசப் பெருந்தகையார், 'ஆளுநாயகன் கயிலையிலிருக்கை கண்டல்லால் மாளுமிவ்வுடல் கொண்டு மீளேன்' என்று மறுத்தார். இவரது மனவுறுதி கண்டு மகிழ்ந்த மங்கை பாகன், 'ஓங்கு நாவினுக்கரசனே எழுந்திரு' எனவும் நாவுக்கரசர் தீங்கு நீங்கிய உடலினராய் எழுந்தார். பிறகு; சிவபெருமான் பணித்தபடி அங்கிருந்த ஒரு பொய்கையில் மூழ்கித் தென்னுட்டி லுள்ள திருவையாற்றின்கண் ஒரு பொய்கையிலிருந்து எழுந்தார்; அங்குக் கயிலைக் கோலமாகிய அம்மையப்பரின் காட்சியைக் கண்டு, மகிழ்ந்து, '**மாதர் பிறைக் கண்ணியானை**' என்ற பதிகம் பாடித் துதித்தார்.

அதன்பின் அப்பர் காவிரியின் இருமருங்குமுள்ள தலங்களைத் தரிசித்துக்கொண்டு, திருப்பூந்துருத்தியை அடைந்தார்; அங்குத் திருமடம் ஒன்று அமைத்து உழவாரப் பணி புரிந்து வந்தார்; அப்பொழுது திருஞான சம்பந்தர் தன்னைக் காண விரும்பி வரும் செய்தி அறிந்து எதிர் சென்று எவரும் அறியா வகையில் சம்பந்தரின் சிவிகையைத் தாங்கி வரலானுர். நாவுக்கரசரைக் காணும் பெருவிருப்பில், 'அப்பர் எங்குற்ருர்' என்று உடன் வருவோரைச் சம்பந்தர் வினவ, நாவுக்கரசர், 'உம்மடியேன் உம்மடிகள் தாங்கிவரும் பெருவாழ்வு வந்து எய்தப்பெற்று இங்குற்றேன்' என்ருர். உடனே சம்பந்தர் கீழிறங்கி வணங்க நாவுக்கரசரும் வணங்கினுர். இருவரும் அன்பு கலந்து அகமகிழ்ந்தனர்.

ஞானசம்பந்தர் பாண்டிநாட்டுச் சிறப்பியல்புகளைத் தெரிவிக்க, நாவுக்கரசர் கேட்டு, அந்நாட்டைக் காண விரும்பிச் சென்று, பல தலங்களையும் கண்டு களித்தார்; பிறகு, மீண்டும் சோழநாடு திரும்பித் திருப்புகலூரை அடைந்து பதிகம் பல பாடிப் பரமனை வழிபட்டார்; அங்கு மண், பொன், பெண் என்னும் மூவாசைகளையும் முற்றத் துறந்த முனிவராய்த் திகழ்ந்து திருத்தொண்டு புரியலானார். அப்பொழுது, 'இனியும் மண்ணுலகில், நில்லாமே தாம் மாதொரு பாகன் மலரடிக்கீழ்த் தங்கிவிட வேண்டும்' என்ற கருத்துடையவராய், திருநாவுக்கரசு சுவாமிகள் ஒரு சித்திரை மாதச் சதைய நன்னாளில், 'எண்ணுகேன் என் சொல்லி' என்ற தமது இறுதித் திருத்தாண்டகத்தைப் பாடி, 'புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன்' எனப் புகன்று, அடைதற்கரிய சிவானந்த ஞான வடிவேயாகி அண்ணலார் சேவடிக்கீழ் அமர்ந்து இனிதிருந்தார்.

திருநாவுக்கரசர், நடுநாட்டின்கண் அரசு புரிந்த மகேந்திர பல்லவன் காலத்தவர் என்று வரலாறு கூறுகிறது. அம்மன்னவன் காலம் கி. பி. 600-630. அம்மன்னவனுடைய மகனாகிய முதலாம் நரசிம்மவர்மன் காலத்திலும் அப்பர் வாழ்ந்துள்ளார். ஆதலால், திருநாவுக்கரசரின் காலம் கி. பி. ஏழாம் நூற்றாண்டின் இடைப்பகுதியாகும் என்பது துணிபு.

---

உ
செந்திலாண்டவன் துணை
திருச்சிற்றம்பலம்

# திருநாவுக்கரசு சுவாமிகள்
அருளிச்செய்த
# தேவாரப் பதிகங்கள்



## தலமுறை

### சோழநாட்டில் காவிரிக்கு வடகரையில் உள்ள தலங்கள்

### 1. கோயில்*

திருக்குறுந்தொகை – [5-ம் திருமுறை]
திருச்சிற்றம்பலம்

அன்னம் பாலிக்குந் தில்லைச்சிற் றம்பலம்
பொன்னம் பாலிக்கு மேலுமிப் பூமிசை
என்னம் பாலிக்கு** மாறுகண் டின்புற
இன்னம் பாலிக்கு மோஇப் பிறவியே. 1

அரும்பற் றப்பட ஆய்மலர் கொண்டுநீர்
சுரும்பற் றப்படத் தூவித் தொழுமினோ
கரும்பற் றச்சிலைக் காமனைக் காய்ந்தவன்
பெரும்பற் றப்புலி யூரெம் பிரானையே. 2

அரிச்சுற் றவினை யால்அடர்ப் புண்டுநீர்
எரிச்சுற் றக்கிடந் தாரென் றயலவர்
சிரிச்சுற் றுப்பல பேசப்ப டாமுனம்
திருச்சிற் றம்பலஞ் சென்றடைந் துய்ம்மினே. 3

அல்லல் என்செயும் அருவினை என்செயும்
தொல்லை வல்வினைத் தொந்தந்தான் என்செயும்

*கோயில்–சிதம்பரம். **என்னன் பாலிக்கு என்றும் பாடம்.

தில்லை மாநகர்ச் சிற்றம் பலவனார்க்
கெல்லை யில்லதோ ரடிமைபூண் டேனுக்கே. 4

ஊனில் ஆவி உயிர்க்கும் பொழுதெலாம்
நான்நி லாவி யிருப்பனென் னாதனைத்
தேன்நி லாவிய சிற்றம் பலவனார்
வான்நி லாவி யிருக்கவும் வைப்பரே. 5

சிட்டர் வானவர் சென்று வரங்கொளும்
சிட்டர் வாழ்தில்லைச் சிற்றம் பலத்துறை
சிட்டன் சேவடி கைதொழச் செல்லும்அச்
சிட்டர் பாலணு கான்செறு காலனே. 6

ஒருத்த னார்உல கங்கட் கொருசுடர்
திருத்த னார்தில்லைச் சிற்றம் பலவனார்
விருத்த னார்இளை யார்விடம் உண்டஎம்
அருத்த னார்அடி யாரை அறிவரே. 7

விண்நி றைந்ததோர் வெவ்வழ லின்னுரு
எண்நி றைந்த இருவர்க் கறிவொணாக்
கண்நி றைந்த கடிபொழில் அம்பலத்
துள்நி றைந்துநின் றாடும் ஒருவனே. 8

வில்லை வட்டப் படவாங்கி அவுணர்தம்
வல்லைவட் டம்மதில் மூன்றுடன் மாய்த்தவன்
தில்லைவட் டந்திசை கைதொழு வார்வினை
ஒல்லைவட் டங்கடந் தோடுதல் உண்மையே. 9

நாடி நாரணன் நான்முக னென்றிவர்
தேடி யுந்திரிந் துங்காண வல்லரோ
மாட மாளிகை சூழ்தில்லை அம்பலத்
தாடி பாதமென் நெஞ்சுள் இருக்கவே. 10

மதுர வாய்மொழி மங்கையோர் பங்கினன்
சதுரன் சிற்றம் பலவன் திருமலை
அதிர ஆர்த்தெடுத் தான்முடி பத்திற
மிதிகொள் சேவடி சென்றடைந் துய்ம்மினே. 11

திருச்சிற்றம்பலம்

## திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பனைக்கை மும்மத வேழம் உரித்தவன்
நினைப்ப வர்மனங் கோயிலாக் கொண்டவன்
அனைத்தும் வேடமாம் அம்பலக் கூத்தனைத்
தினைத்த னைப்பொழு தும்மறந் துய்வனே. 1

தீர்த்த னைச்சிவ னைச்சிவ லோகனை
மூர்த்தி யைமுத லாய ஒருவனைப்
பார்த்த னுக்கருள் செய்தசிற் றம்பலக்
கூத்த னைக்கொடி யேன்மறந் துய்வனே. 2

கட்டும் பாம்புங் கபாலங்கை மான்மறி
இட்ட மாயிடு காட்டெரி யாடுவான்
சிட்டர் வாழ்தில்லை அம்பலக் கூத்தனை
எட்ட னைப்பொழு தும்மறந் துய்வனே. 3

மாணி பால்கறந் தாட்டி வழிபட
நீணு லகெலாம் ஆளக் கொடுத்தவன்*
ஆணியைச் செம்பொன் அம்பலத் துள்நின்ற
தாணு வைத்தமி யேன்மறந் துய்வனே. 4

பித்த னைப்பெருங் காடரங் காவுடை
முத்த னைமுளை வெண்மதி சூடியைச்
சித்தனைச் செம்பொன் அம்பலத் துள்நின்ற
அத்த னைஅடி யேன்மறந் துய்வனே. 5

நீதி யைநிறை வைமறை நான்குடன்
ஓதி யைஒரு வர்க்கும் அறிவொணாச்
சோதி யைச்சுடர்ச் செம்பொனின் அம்பலத்
தாதி யைஅடி யேன்மறந் துய்வனே. 6

மைகொள் கண்டன்எண் தோளன்முக் கண்ணினன்
பைகொள் பரம்பரை யார்த்த பரமனார்
செய்ய மாதுறை சிற்றம்ப லத்தெங்கள்
ஐய னைஅடி யேன்மறந் துய்வனே. 7

---

* கொடுத்தவென் என்றும் பாடம்,

முழுதும் வானுல கத்துள தேவர்கள்
தொழுதும் போற்றியுந் தூயசெம் பொன்னினால்
எழுதி மேய்ந்தசிற் றம்பலக் கூத்தனை
இழுதை யேன்மறந் தெங்ஙனம் உய்வனே. 8

காரு லாமலர்க் கொன்றையந் தாரனை
வாரு லாமுலை மங்கைம ணாளனைத்
தேரு லாவிய தில்லையுட் கூத்தனை
ஆர்கி லாஅமு தைமறந் துய்வனே. 9

ஓங்கு மால்வரை ஏந்தலுற் றான்சிரம்
வீங்கி விம்முற ஊன்றிய தாளினன்
தேங்கு நீர்வயல் சூழ்தில்லைக் கூத்தனைப்
பாங்கி லாத்தொண்ட னேன்மறந் துய்வனே. 10

திருச்சிற்றம்பலம்



திருநேரிசை – பண் – கொல்லி [4–ம் திருமுறை]
திருச்சிற்றம்பலம்

செஞ்சடைக் கற்றை முற்றத் திளநிலா எறிக்குஞ் சென்னி
நஞ்சுடை கண்ட னாரைக் காணலா நறவ நாறும்
மஞ்சடை சோலைத் தில்லை மல்குசிற் றம்ப லத்தே
துஞ்சடை இருள்கி ழியத் துளங்கெரி யாடு மாறே. 1

ஏறனார் ஏறு தம்பால் இளநிலா எறிக்குஞ் சென்னி
ஆறனார் ஆறு சூடி ஆயிழை யாளோர் பாகம்
நாறுபூஞ் சோலைத் தில்லை நவின்றசிற் றம்ப லத்தே
நீறுமெய் பூசி நின்று நீண்டெரி யாடு மாறே. 2

சடையனார் சாந்த நீற்றர் தனிநிலா எறிக்குஞ் சென்னி
உடையனா ருடைதலையில் உண்பதும் பிச்சை யேற்றுக்
கடிகொள்பூந் தில்லை தன்னுட் கருதுசிற் றம்ப லத்தே
அடிகழ லார்க்க நின்று அனலெரி யாடு மாறே. 3

பையர வசைத்த அல்குற் பனிநிலா எறிக்குஞ் சென்னி
மையரிக் கண்ணி யாளும்* மாலுமோர் பாக மாகிச்

* கண்ணினாளும் என்றும் பாடம்.

செய்யெரி தில்லை தன்னுட் திகழ்ந்தசிற் றம்ப லத்தே
கையெரி வீசி நின்று கனலெரி யாடு மாறே. 4

ஓதினர் வேதம் வாயால் ஒளிநிலா எறிக்குஞ் சென்னிப்
பூதனர் பூதஞ் சூழப் புலியுரி யதள னார்தாம்
நாதனர் தில்லை தன்னுள் நவின்றசிற் றம்ப லத்தே
காதில்வெண் குழைகள் தாழக் கனலெரி யாடு மாறே. 5

ஓருடம் பிருவ ராகி ஒளிநிலா எறிக்குஞ் சென்னிப்
பாரிடம் பாணி செய்யப் பயின்றஎம் பரம மூர்த்தி
காரிடந் தில்லை தன்னுட் கருதுசிற் றம்ப லத்தே
பேரிடம் பெருக நின்று பிறங்கெரி யாடு மாறே. 6

மூதற்றனிச் சடையை மூழ்க முகிழ்நிலா எறிக்குஞ் சென்னி
மதக்களிற் றுரிவை போர்த்த மைந்தரைக் காண லாகும்
மதத்துவண் டறையுஞ் சோலை மல்குசிற் றம்ப லத்தே
கதத்ததோ ரரவ மாடக் கனலெரி யாடு மாறே. 7

மறையனார் மழுவொன் றேந்தி மணிநிலா எறிக்குஞ் சென்னி
இறைவனார் எம்பி ரானார் ஏத்துவார் இடர்கள் தீர்ப்பார்
சிறைகொள்நீர்த் தில்லை தன்னுள் திகழ்ந்தசிற் றம்ப லத்தே
அறைகழ லார்க்க நின்று அனலெரி யாடு மாறே. 8

விருத்தனாய்ப் பால னாகி விரிநிலா எறிக்குஞ் சென்னி
நிருத்தனார் நிருத்தஞ் செய்ய நீண்டபுன் சடைகள் தாழக்
கருத்தனார் தில்லை தன்னுட் கருதுசிற் றம்ப லத்தே
அருத்தமா மேனி தன்னோ டனலெரி யாடு மாறே. 9

பாலனாய் விருத்த னாகிப் பனிநிலா எறிக்குஞ் சென்னி*
காலனைக் காலாற் காய்ந்த கடவுளார் விடையொன் றேறி
ஞாலமாந் தில்லை தன்னுள் நவின்றசிற் றம்ப லத்தே
நீலஞ்சேர் கண்ட னார்தாம் நீண்டெரி யாடு மாறே. 10

மதியிலா அரக்க னோடி மாமலை யெடுக்க நோக்கி
நெதியன்**தோள் நெரிய வூன்றி நீடிரும் பொழில்கள் சூழ்ந்த
மதியந்தோய் தில்லை தன்னுள் மல்குசிற் றம்ப லத்தே
அதிசயம் போல நின்று அனலெரி யாடு மாறே. 11

திருச்சிற்றம்பலம்

---

* சென்னிக் - காலனை என்றும் பாடம். ** நெதியின் என்றும் பாடம்.

### திருநேரிசை - பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

பத்தனாய்ப் பாட மாட்டேன் பரமனே பரம யோகீ
எத்தினாற் பத்தி செய்கேன் என்னைநீ இகழ வேண்டாம்
முத்தனே முதல்வா தில்லை அம்பலத் தாடு கின்ற
அத்தாவுன் ஆடல் காண்பான் அடியனேன் வந்த வாறே. 1

கருத்தனாய்ப் பாட மாட்டேன் காம்பன தோளி பங்கா
ஒருத்தரால் அறிய வொண்ணாத் திருவுரு வுடைய சோதீ
திருத்தமாந் தில்லை தன்னுள் திகழ்ந்தசிற் றம்ப லத்தே
நிருத்தம்நான் காண வேண்டி நேர்பட வந்த வாறே. 2

கேட்டிலேன் கிளைபி ரியேன் கேட்குமா கேட்டி யாகில்
நாட்டினேன் நின்றன் பாதம் நடுப்பட நெஞ்சி னுள்ளே
மாட்டினீர் வாளை பாயும் மல்குசிற் றம்ப லத்தே
கூட்டமாங் குவிமு லையாள் கூடநீ யாடு மாறே. 3

சிந்தையைத் திகைப்பி யாதே செறிவுடை அடிமை செய்ய
எந்தைநீ அருளிச் செய்யாய் யாதுநான் செய்வ தென்னே
செந்தியார் வேள்வி ஓவாத் தில்லைச்சிற் றம்ப லத்தே
அந்தியும் பகலும் ஆட அடியிணை அலசுங் கொல்லோ. 4

கண்டவா திரிந்து நாளுங் கருத்தினால் நின்றன் பாதங்
கொண்டிருந் தாடிப் பாடிக் கூடுவன் குறிப்பி னாலே
வண்டுபண் பாடுஞ் சோலை மல்குசிற் றம்ப லத்தே
எண்டிசை யோரும் ஏத்த இறைவநீ யாடு மாறே. 5

பார்த்திருந் தடிய னேன்நான் பரவுவன் பாடி யாடி
மூர்த்தியே என்பன் உன்னை மூவரில் முதல்வன் என்பன்
ஏத்துவர் இடர்கள் தீர்ப்பாய் தில்லைச்சிற் றம்ப லத்துக்
கூத்தாவுன் கூத்துக் காண்பான் கூடநான் வந்த வாறே. 6

பொய்யினைத் தவிர விட்டுப் புறமலா அடிமை செய்ய
ஐயநீ அருளிச் செய்யாய் ஆதியே ஆதி மூர்த்தி
வையகந் தன்னில் மிக்க மல்குசிற் றம்ப லத்தே
பையநின் னாடல் காண்பான் பரமநான் வந்த வாறே. 7

மூனத்தினார் திகைத்து நாளும் மாண்பலா நெறிகள் மேலே
கனைப்பரால் என்செய் கேனோ கறையணி கண்டத் தானே

தினைத்தனை வேதங் குன்றாத் தில்லைச்சிற் றம்ப லத்தே
அனைத்துநின் நிலயங் காண்பான்*அடியனேன் வந்தவாறே.

நெஞ்சினைத் தூய்மை செய்து நினைக்குமா நினைப்பி யாதே
வஞ்சமே செய்தி யாலோ வானவர் தலைவ னேநீ
மஞ்சடை சோலைத் தில்லை மல்குசிற் றம்ப லத்தே
அஞ்சொலாள் காண நின்று அழகநீ யாடு மாறே. 9

மண்ணுண்ட மாலவனும் மலர்மிசை மன்னி னும்
விண்ணுண்ட திருவு ருவம் விரும்பினர் காண மாட்டார்
திண்ணுண்ட திருவே மிக்க தில்லைச்சிற் றம்ப லத்தே
பண்ணுண்ட பாட லோடும் பரமநீ யாடு மாறே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருவிருத்தம் – பண் – கொல்லி [4–ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பாளை யுடைக்கமு கோங்கிப்பன் மாடம் நெருங்கியெங்கும்
வாளை யுடைப்புனல் வந்தெறி வாழ்வயல் தில்லைதன்னுள்
ஆள வுடைக்கழற் சிற்றம் பலத்தரன் ஆடல்கண்டால்
பீளை யுடைக்கண்க ளாற்பின்னைப் பேய்த்தொண்டர் காண்பதென்னே.

பொருவிடை யொன்றுடைப் புண்ணிய மூர்த்தி புலியதளன்
உருவுடை யம்மலை மங்கை மணாளன் உலகுக்கெல்லாம்
திருவுடை அந்தணர் வாழ்கின்ற தில்லைச்சிற் றம்பலவன்
திருவடி யைக்கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்பதென்னே. 2

தொடுத்த மலரொடு தூபமுஞ் சாந்துங்கொண் டெப்பொழுதும்
அடுத்து வணங்கும் அயனொடு மாலுக்குங் காண்பரியான்
பொடிக்கொண் டணிந்து பொன்னாகிய தில்லைச் சிற்றம்பலவன்
உடுத்த துகில்கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்பதென்னே. 3

வைச்ச பொருள்நமக் காகுமென் றெண்ணி நமச்சிவாய
அச்ச மொழிந்தேன் அணிதில்லை யம்பலத் தாடுகின்ற
பிச்சன் பிறப்பிலி பேர்நந்தி உந்தியின் மேலசைத்த
கச்சின் அழகுகண் டாற்பின்னைக் கண்கொண்டு காண்பதென்னே. 4

---

* இலயங் காண்பான் என்றும் பாடம்

செய்ஞ்ஞின்ற நீல மலர்கின்ற தில்லைச்சிற் றம்பலவன்
மைஞ்ஞின்ற ஒண்கண் மலைமகள் கண்டு மகிழ்ந்துநிற்க
நெய்ஞ்ஞின் றெரியும் விளக்கொத்த நீல மணிமிடற்றான்
கைஞ்ஞின்ற ஆடல்கண்டாற் பின்னைக்கண்கொண்டு
[காண்பதென்னே. 5

ஊனத்தை நீக்கி உலகறிய என்னை யாட்கொண்டவன்
தேனைத் தெனக்கினி யான்தில்லைச் சிற்றம் பலவன்எங்கோன்
வானத் தவருய்ய வன்னஞ்சை உண்டகண் டத்திலங்கும்
ஏனத்தெயிறு கண்டாற் பின்னைக் கண்கொண்டு காண்பதென்னே. 6

தெரித்த கணையால் திரிபுர மூன்றுஞ்செந் தீயின்மூழ்க
எரித்த இறைவன் இமையவர் கோமான் இணையடிகள்
தரித்த மனத்தவர் வாழ்கின்ற தில்லைச்சிற் றம்பலவன்
சிரித்த முகங்கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்பதென்னே. 7

சுற்று மமரர் சுரபதி நின்திருப் பாதமல்லால்
பற்றொன் றிலோமென் றழைப்பப் பரவையுள் நஞ்சையுண்டான்
செற்றங் கனங்கனைத் தீவிழித் தான்தில்லை யம்பலவன்
நெற்றியிற்கண் கண்டகண் கொண்டு மற்றினிக் காண்பதென்னே. 8

சித்தத் தெழுந்த செழுங்கம லத்தன்ன சேவடிகள்
வைத்த மனத்தவர் வாழ்கின்ற தில்லைச்சிற் றம்பலவன்
முத்தும் வயிரமும் மாணிக்கந் தன்னுள் விளங்கியதூ
மத்த மலர்கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்பதென்னே. 9

தருக்கு மிகுத்துத்தன் தோள்வலி யுன்னித் தடவரையை
வரைக்கை களாலெடுத் தார்ப்ப மலைமகள் கோன்சிரித்து
அரக்கன் மணிமுடி பத்தும் அணிதில்லை யம்பலவன்
நெருக்கி மிதித்த விரல்கண்ட கண்கொண்டு காண்பதென்னே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

கருநட்ட கண்டனை அண்டத் தலைவனைக் கற்பகத்தைச்
செருநட்ட மும்மதில் எய்யவல் லானைச்செந் தீமுழங்கத்
திருநட்ட மாடியைத் தில்லைக் கிறையைச்சிற் றம்பலத்துப்
பெருநட்ட மாடியை வானவர் கோனென்று வாழ்த்துவனே. 1

ஒன்றி யிருந்து நினைமின்கள் உந்தமக் கூனமில்லைக்
கன்றிய காலனைக் காலாற் கடிந்தான் அடியவற்காச்*
சென்று தொழுமின்கள் தில்லையுட் சிற்றம் பலத்துநட்டம்
என்றுவந் தாய்என்னும் எம்பெரு மான்றன் திருக்குறிப்பே. 2

கன்மன வீர்கழி யுங்கருத் தேசொல்லிக் காண்பதென்னே
நன்மன வர்நவில் தில்லையுட் சிற்றம் பலத்துநட்டம்
பொன்மலை யில்வெள்ளிக் குன்றது போலப் பொலிந்திலங்கி
என்மன மேயொன்றிப் புக்கனன் போந்த சுவடில்லையே. 3

குனித்த புருவமுங் கொவ்வைச்செவ் வாயிற் குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியிற் பால்வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்தபொற் பாதமுங் காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டு வதேஇந்த மாநிலத்தே. 4

வாய்த்தது நந்தமக் கீதோர் பிறவி** மதித்திடுமின்
பார்த்தற்குப் பாசு பதமருள் செய்தவன் பத்தருள்ளீர்
கோத்தன்று முப்புரந் தீவளைத் தான்தில்லை யம்பலத்துக்
கூத்தனுக் காட்பட் டிருப்பதன் றோநந்தங் கூழைமையே. 5

பூத்தன பொற்சடை பொன்போல் மிளிரப் புரிகணங்கள்
ஆர்த்தன கொட்டி யரித்தன பல்குறட் பூதகணம்
தேத்தென என்றிசை வண்டுகள் பாடுசிற் றம்பலத்துக்
கூத்தனிற் கூத்துவல் லாருள ரோஎன்றன் கோல்வளைக்கே. 6

முடிகொண்ட மத்தமும் முக்கண்ணின் நோக்கும் முறுவலிப்பும்
துடிகொண்ட கையுந் துதைந்தவெண் ணீறுஞ் சுரிகுழலாள்
படிகொண்ட பாகமும் பாய்புலித் தோலும்என் பாவிநெஞ்சில்
குடிகொண்ட வாதில்லை யம்பலக் கூத்தன் குரைகழலே. 7

படைக்கல மாகஉன் நாமத் தெழுத்தஞ்சென் நாவிற் கொண்டேன்
இடைக்கலம் அல்லேன் எழுபிறப் பும்உனக் காட்செய்கின்றேன்
துடைக்கினும் போகேன் தொழுது வணங்கித்தூ நீறணிந்துன்
அடைக்கலங் கண்டாய் அணிதில்லைச் சிற்றம் பலத்தரனே. 8

பொன்னொத்த மேனிமேல் வெண்ணீ றணிந்து புரிசடைகள்
மின்னொத் திலங்கப் பலிதேர்ந் துழலும் விடங்கவேடச்

---

*அடியவர்க்காச், அடியவற்காய்ச் என்றும் பாடங்கள்.
**ஈதோ பிறவி என்றும் பாடம்,

சின்னத்தி ஞல்மலி தில்லையுட் சிற்றம் பலத்துநட்டம்
என்அத்தன் ஆடல்கண் டின்புற்ற தாலிவ் விருநிலமே. 9

சாட எடுத்தது தக்கன்றன் வேள்வியிற் சந்திரனை
வீட எடுத்தது காலனை நாரணன் நான்முகனும்
தேட எடுத்தது தில்லையுட் சிற்றம் பலத்துநட்டம்
ஆட எடுத்திட்ட பாதமன் றேநம்மை ஆட்கொண்டதே. 10

திருச்சிற்றம்பலம்

---

## பெரிய திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

அரியானை அந்தணர்தம் சிந்தை யானை அருமறையின் அகத்தானை அணுவை யார்க்கும், தெரியாத தத்துவனைத் தேனைப் பாலைத் திகழொளியைத் தேவர்கள்தங் கோனை மற்றைக், கரியானை நான்முகனைக் கனலைக் காற்றைக் கனைக்கடலைக் குலவரையைக் கலந்து நின்ற, பெரியானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 1

கற்றானைக் கங்கைவார் சடையான் தன்னைக் காவிரிசூழ் வலஞ்சுழியுங் கருதி னானை, அற்றார்க்கும் அலந்தார்க்கும் அருள் செய்வானை ஆரூரும் புகுவானை அறிந்தோ மன்றே, மற்றாருந் தன்னொப்பா ரில்லா தானை வானவர்க ளெப்பொழுதும் வணங்கி ஏத்தப், பெற்றானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 2

கருமானின் உரியதளே உடையா வீக்கிக் கனைகழல்கள் கலந்தொலிப்ப அனல்கை ஏந்தி, வருமானத் திரள் தோள்கள் மட்டித் தாட வளர்மதியஞ் சடைக்கணிந்து மானேர் நோக்கி, அருமான வாண்முகத்தா ளமர்ந்து காண அமரர்கணம் முடி வணங்க ஆடுகின்ற, பெருமானைப் பெரும்பற்றப் புலியூரானைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 3

அருந்தவர்கள் தொழுதேத்தும் அப்பன் தன்னை அமரர்கள் தம் பெருமானை அரனை மூவா, மருந்தமரர்க் கருள்புரிந்த மைந்தன் தன்னை மறிகடலுங் குலவரையும் மண்ணும் விண்ணும், திருந் தொளிய தாரகையுந் திசைக ளெட்டுந் திரிசுடர்கள் ஓரிரண்டும்

பிறவு மாய, பெருந்தகையைப் பெரும்பற்றப் புலியூ ரானைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 4

அருந்துணையை அடியார்தம் அல்லல் தீர்க்கும் அருமருந்தை அகல்ஞாலத் தகத்துள் தோன்றி, வருந்துணையுஞ் சுற்றமும் பற்றும் விட்டு வான்புலன்கள் அகத்தடக்கி மடவா ரோடும், பொருந்தணைமேல் வரும்பயனைப் போக மாற்றிப் பொதுநீக்கித் தனைநினைய வல்லோர்க் கென்றும், பெருந்துணையைப் பெரும் பற்றப் புலியூ ரானைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 5

கரும்பமரும் மொழிமடவாள் பங்கன் தன்னைக் கனவயிரக் குன்றனைய காட்சி யானை, அரும்பமரும் பூங்கொன்றைத் தாரான் தன்னை அருமறையோ டாறங்க மாயி னானைச், சுரும்பமருங் கடி பொழில்கள் சூழ்தென் னூரர்ச் சுடர்க்கொழுந்தைத் துளக்கில்லா விளக்கை மிக்க, பெரும்பொருளைப் பெரும்பற்றப் புலியூ ரானைப் பேசாத நாளெல்லரம் பிறவா நாளே. 6

வரும்பயனை எழுநரம்பி னோசை யானை வரைசிலையா வான வர்கள் முயன்ற வாளி, அரும்பயஞ்செ யவுணர்புர மெரியக் கோத்த அம்மானை அலைகடல் நஞ்சயின்றான் தன்னைச், சுரும்ப மருங் குழன்மடவார் கடைக்கண் நோக்கில் துளங்காத சிந்தை யராய்த் துறந்தோ ருள்ளப், பெரும்பயனைப் பெரும்பற்றப் புலியூ ரானைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 7

காரானை யீருரிவைப் போர்வை யானைக் காமருபூங் கச்சியே கம்பன் தன்னை, ஆரேனும் அடியவர்கட் கணியான் தன்னை அமரர்களுக் கறிவரிய அளவி லானைப், பாரோரும் விண்ணோரும் பணிய நட்டம் பயில்கின்ற பரஞ்சுடரைப் பரனை எண்ணில், பேரானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 8

முற்றாத பால்மதியஞ் சூடி னானை மூவுலகுந் தானாய முதல்வன் தன்னைச், செற்றார்கள் புரமூன்றுஞ் செற்றான் தன்னைத் திகழொளியை மரகதத்தைத் தேனைப் பாலைக், குற்றாலத் தமர்ந் துறையுங் குழகன் தன்னைக் கூத்தாட வல்லானைக் கோனை ஞானம், பெற்றானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 9

காரொளிய திருமேனிச் செங்கண் மாலுங் கடிக்கமலத் திருந்தவனுங்* காணா வண்ணம், சீரொளிய தழற்பிழம்பாய் நின்ற தொல்லைத் திகழொளியைச் சிந்தைதனை மயக்கந் தீர்க்கும், ஏரொளியை இருநிலனும் விசும்பும் விண்ணும் ஏழுலகுங் கடந் தண்டத் தப்பால் நின்ற பேரொளியைப் பெரும்பற்றப் புலியூ ரானைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே.** 10

திருச்சிற்றம்பலம்

---

## புக்க திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

மங்குல் மதிதவழும் மாடவீதி மயிலாப்பி லுள்ளார் மருக லுள்ளார், கொங்கிற் கொடுமுடியார் குற்றா லத்தார் குடமூக்கி லுள்ளார் போய்க் கொள்ளம் பூதூர்த், தங்குமிட மறியார் சால நாளார் தருமபுரத் துள்ளார் தக்க ளூரார், பொங்குவெண் ணீறணிந்து பூதஞ் சூழப் புலியூர்ச் சிற்றம்பலமே புக்கார் தாமே. 1

நாக மரைக்கசைத்த நம்ப ரிந்நாள் நனிபள்ளி யுள்ளார் போய் நல்லூர்த் தங்கிப், பாகப் பொழுதெலாம் பாசூர்த் தங்கிப் பரிதி நியமத்தார் பன்னி ருநாள், வேதமும் வேள்விப் புகையும் ஓவா விரிநீர் மிழலை எழுநாள் தங்கிப், போகமும் பொய்யாப் பொருளு மானார் புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 2

தூறங்காட்டி யெல்லாம் விரித்தார் போலுந் தூமதியும் பாம்பு முடையார் போலும், மறங்காட்டி மும்மதிலும் எய்தார் போலும் மந்திரமுந் தந்திரமுந் தாமே போலும், அறங்காட்டி அந்தணர்க் கன் றால நீழல் அறமருளிச் செய்த அரனா ரிந்நாள், புறங்காட் டெரியாடிப் பூதஞ்சூழப் புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 3

வாரேறு வனமுலையாள் பாக மாக மழுவாள்கை யேந்தி மயானத் தாடிச், சீரேறு தண்வயல்சூழ் ஓத வேலித் திருவாஞ்சி யத்தார் திருநள் ளாற்றார், காரேறு கண்டத்தார் காமற் காய்ந்த கண்விளங்கு நெற்றியார் கடல்நஞ் சுண்டார், போரேறு தாமே றிப் பூதஞ் சூழப் புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 4

---

*கடிக்கமலத் திருந்தயனும் என்றும் பாடம். **பிறவா நாளே. இறந்துபட்ட நாட்களே; மங்கல வழக்கு.

காரார் கமழ்கொன்றைக் கண்ணி சூடிக் கபாலங்கை யேந்திக் கணங்கள் பாட, ஊரா ரிடும்பிச்சை கொண்டு ழலும் உத்தமராய் நின்ற ஒருவ னார்தாம், சீரார் கழல்வணங்குந் தேவ தேவர் திருவாரூர்த் திருமூலட் டானம் மேயார், போரார் விடையேறிப் பூதஞ் சூழப் புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 5

காதார் குழையினர் கட்டங் கத்தர் கயிலாய மாமலையார் காரோ ணத்தார், மூதாயர் மூதாதை யில்லார் போலும் முதலு மிறுதியுந் தாமே போலும், மாதாய மாதர் மகிழ அன்று வன்மத வேள் தன்னுடலங் காய்ந்தா ரிந்நாள், போதார் சடைதாழப் பூதஞ் சூழப் புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 6

இறந்தார்க்கும் என்றும் இறவா தார்க்கும் இமைய வர்க்கும் ஏகமாய் நின்று சென்று, பிறந்தார்க்கு மென்றும் பிறவா தார்க்கும் பெரியான்றன் பெருமையே பேச நின்று, மறந்தார் மனத்தென்றும் மருவார் போலும் மறைக்காட் டுறையும் மழுவாட் செல்வர், புறந்தாழ் சடைதாழப் பூதஞ் சூழப் புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 7

சூலாவெண் தலைமாலை* யென்பு பூண்டு குளிர்கொன்றைத் தாரணிந்து கொல்லே றேறிக், கலாவெங் களிற்றுரிவைப் போர்வை மூடிக் கையோ டனலேந்திக் காடு றைவார், நிலா வெண் மதியுரிஞ்ச நீண்ட மாடம் நிறைவயல்சூழ் நெய்த்தானம் மேய செல்வர், புலால்வெண் தலையேந்திப் பூதஞ் சூழப் புலியூர்ச் சிற்றம்பலமே புக்கார் தாமே. 8

சந்தித்த கோவணத்தர் வெண்ணூல் மார்பர் சங்கரனைக் கண்டீரோ கண்டோ மிந்நாள், பந்தித்த வெள்விடையைப் பாய வேறிப் படுதலையி லென்கொலோ ஏந்திக் கொண்டு, வந்திங் கென் வெள்வளையுந் தாமு மெல்லா மணியாரூர் நின்றந்தி கொள்ளக் கொள்ளப், பொன்றீ மணிவிளக்குப் பூதம் பற்றப் புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 9

பாதங்கள் நல்லார் பரவி யேத்தப்** பத்திமையாற் பணி செய்யுந் தொண்டர் தங்கள், ஏதங்கள் தீர இருந்தார் போலும்

*குலாவெண் ணெடுமாலை என்றும் பாடம். **ஏத்தி என்றும் பாடம்.

எழு பிறப்பும் ஆளுடைய ஈச ஞர்தாம், வேதங்க ளோதியோர் வீணையேந்தி விடை யொன்று தாமேறி வேத கீதர், பூதங்கள் சூழப் புலித்தோல் வீக்கிப் புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 10

பட்டுடுத்துத் தோல்போர்த்துப் பாம்பொன் ஞர்த்துப் பகவஞர் பாரிடங்கள் சூழ நட்டஞ், சிட்டராய்த் தீயேந்திச் செல்வார் தம்மைத் தில்லைச்சிற் றம்பலத்தே கண்டோ மிந்நாள், விட்டிலங்கு சூலமே வெண்ணூ லுண்டே ஓதுவதும் வேதமே வீணை யுண்டே, கட்டங்கங் கையதே சென்று காணீர் கறைசேர் மிடற்றெங் கபாலி யார்க்கே. 11

திருச்சிற்றம்பலம்

---

கனகசபை, சுவாமி — சபாநாயகர்; தேவி — சிவகாமி யம்மை. திருமூலட்டானம், சுவாமி — திருமூலநாதர்; தேவி — உமையம்மை.

---

## 2. திருவேட்களம்

### திருக்குறுந்தொகை [5–ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நன்று நாடொறும் நம்வினை போயறும்
என்றும் இன்பந் தழைக்க இருக்கலாம்
சென்று நீர்திரு வேட்களத் துள்ளுறை
துன்று பொற்சடை யானைத் தொழுமினே. 1

கருப்பு வெஞ்சிலைக் காமனைக் காய்ந்தவன்
பொருப்பு வெஞ்சிலை யாற்புரஞ் செற்றவன்
விருப்பன் மேவிய வேட்களங் கைதொழு
திருப்ப ஞகில் எனக்கிட ரில்லையே. 2

வேட்க ளத்துறை வேதியன் எம்மிறை
ஆக்க* ளேறுவர் ஆனஞ்சு மாடுவர்
பூக்கள் கொண்டவன் பொன்னடி போற்றிஞல்
காப்பர் நம்மைக் கறைமிடற் றண்ணலே. 3

---

* ஆக்கள், கள்: அசை; தருமதேவதை, திருமால், இந்திரன் மூவரும் ஒவ்வொரு சமயம் இடபமாய்த் தாங்கினர். ஆதலின் பன்மை விகுதியுமாம்.

அல்லல் இல்லை அருவினை தானில்லை
மல்கு வெண்பிறை சூடும் மணாளனார்
செல்வ னார்திரு வேட்களங் கைதொழ
வல்ல ராகில் வழியது காண்மினே. 4

துன்ப மில்லைத் துயரில்லை யாமினி
நம்ப னாகிய நன்மணி கண்டனார்
என்பொ னாருறை வேட்கள நன்னகர்
இன்பன் சேவடி ஏத்தி யிருப்பதே. 5

கட்டப் பட்டுக் கவலையில் வீழாதே
பொட்ட வல்லுயிர் போவதன் முன்னம்நீர்
சிட்ட னார்திரு வேட்களங் கைதொழப்
பட்ட வல்வினை யாயின பாறுமே. 6

வட்ட மென்முலை யாளுமை பங்கனார்
*எட்டு மொன்றும் இரண்டுமூன் றாயினார்
சிட்டர் சேர்திரு வேட்களங் கைதொழு
திட்ட மாகி யிருமட நெஞ்சமே. 7

நட்ட மாடிய நம்பனை நாள்தொறும்
இட்டத் தாலினி தாக நினைமினோ
வட்ட வார்முலை யாளுமை பங்கனார்
சிட்ட னார்திரு வேட்களந் தன்னையே. 8

வட்ட மாமதில் மூன்றுடை** வல்லரண்
சுட்ட கொள்கைய ராயினுஞ் சூழ்ந்தவர்
குட்ட வல்வினை தீர்த்துக் குளிர்விக்கும்
சிட்டர் பொற்றிரு வேட்களச் செல்வரே. 9

சேட னாருறை யுஞ்செழு மாமலை
ஓடி ஆங்கெடுத் தான்முடி பத்திற
வாட வூன்றி மலரடி வாங்கிய
வேட னாருறை வேட்களஞ் சேர்மினே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—பாசுபதேசுவரர்; தேவி—நல்லநாயகி.

---

*எட்டு – அட்டமூர்த்தம். ஒன்று – பரம்பொருள். இரண்டு– சிவம் சக்தி. மூன்று–முத்தொழிற்றலைவர். **மூன்றுடன் என்றும் பாடம்.

## 3. திருக்கழிப்பாலை**

**பண் – காந்தாரம்** [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**வ**னபவள வாய்திறந்து வானவர்க்குந் தானவனே என்கின்றாளால், சினபவளத் திண்தோள்மேற் சேர்ந்திலங்கு வெண்ணீற்றன் என்கின் றாளால், அனபவள மேகலையோ டப்பாலைக் கப்பாலான் என்கின் றாளால், கனபவளஞ் சிந்துங் கழிப்பாலைச் சேர்வானைக் கண்டாள் கொல்லோ. 1

**வ**ண்டுலவு கொன்றை வளர்புன் சடையானே என்கின் றாளால், விண்டலர்ந்து நாறுவதோர் வெள்ளெருக்க நாண்மல ருண்டென்கின் றாளால், உண்டயலே தோன்றுவதோர் உத்தரியப் பட்டு டையன் என்கின் றாளால், கண்டயலே* தோன்றுங் கழிப்பாலைச் சேர்வானைக் கண்டாள் கொல்லோ. 2

**பி**றந்திளைய திங்களெம் பெம்மான் முடிமேல தென்கின் றாளால், நிறங்கிளருங் குங்குமத்தின் மேனி யவன்நிறமே யென்கின்றாளால், மறங்கிளர்வேற் கண்ணாள் மணிசேர் மிடற்றவனே யென்கின் றாளால், கறங்கோத மல்குங் கழிப் பாலைச் சேர்வானைக் கண்டாள் கொல்லோ. 3

**இ**ரும்பார்ந்த சூலத்தன் ஏந்தியோர் வெண்மழுவன் என்கின் றாளால், சுரும்பார் மலர்க்கொன்றைச் சுண்ணவெண் ணீற்றவனே என்கின் றாளால், பெரும்பால னாகியோர் பிஞ்ஞகவேடத்தன் என்கின் றாளால், கரும்பானல் பூக்குங் கழிப்பாலைச் சேர்வானைக் கண்டாள் கொல்லோ. 4

**ப**ழியிலான் புகழுடையன் பால்நீற்றன் ஆனேற்றன் என்கின் றாளால், விழியுலாம் பெருந்தடங்கண் இரண்டல்ல மூன்றுளவே என்கின் றாளால், சுழியுலாம் வருகங்கை தோய்ந்த சடையவனே என்கின் றாளால், கழியுலாஞ் சூழ்ந்த கழிப்பாலைச் சேர்வானைக் கண்டாள் கொல்லோ. 5

---

**இது கொள்ளிடத்தின் வடகரையில் காரைமேடு என்ற இடத்தில் இருந்தது. இப்போது திருநெல்வாயில் என்னும் சிவ புரியில் தனிக்கோயிலாக அமைத்து வைக்கப்பட்டிருக்கிறது. *கண் டலயலே என்றும் பாடம்.

பண்ணார்ந்த வீணை பயின்ற விரலவனே என்கின் றாளால், எண்ணார் புரமெரித்த எந்தை பெருமானே என்கின் றாளால், பண்ணார் முழவதிரப் பாடலொ டாடலனே என்கின் றாளால், கண்ணார் பூஞ்சோலைச் கழிப்பாலைச் சேர்வானைக் கண்டாள் கொல்லோ. 6

முதிருஞ் சடைமுடிமேல் மூழ்கும் இளநாகம் என்கின் றாளால், அதுகண் டதனருகே தோன்றும் இளமதியம் என்கின் றாளால், சதுர்வெண் பளிக்குக் குழைகாதின் மின்னிடுமே என்கின் றாளால், கதிர்முத்தஞ் சிந்துங் கழிப்பாலைச் சேர்வானைக் கண்டாள் கொல்லோ. 7

ஓரோத மோதி உலகம் பலிதிரிவான் என்கின் றாளால், நீரோத மேற நிமிர்புன் சடையானே என்கின் றாளால், பாரோத மேனிப் பவளம் அவன் நிறமே என்கின் றாளால், காரோத மல்குங் கழிப்பாலைச் சேர்வானைக் கண்டாள் கொல்லோ. 8

வானுலாந் திங்கள் வளர்புன் சடையானே என்கின் றாளால், ஊனுலாம் வெண்டலைகொண் டூரூர் பலிதிரிவான் என்கின் றாளால், தேனுலாங் கோதை திளைக்குந் திருமார்பன் என்கின் றாளால், கானுலாஞ் சூழ்ந்த கழிப்பாலைச் சேர்வானைக் கண்டாள் கொல்லோ. 9

அடர்ப்பரிய இராவணனை அருவரைக்கீழ் அடர்த்தவனே என்கின் றாளால், சுடர்ப்பெரிய திருமேனிச் சுண்ணவெண் ணீற்றவனே என்கின் றாளால், மடற்பெரிய ஆலின்கீழ் அறம் நால்வர்க் கன்றுரைத்தான் என்கின் றாளால், கடற்கருவி சூழ்ந்த கழிப்பாலைச் சேர்வானைக் கண்டாள் கொல்லோ. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருக்குறுந்தொகை* [5.ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வண்ண மும்வடி வுஞ்சென்று கண்டிலள்
எண்ணி நாமங்கள் ஏத்தி நிறைந்திலள்
கண்ணு லாம்பொழில் சூழ்கழிப் பாலையெம்
அண்ண லேயறி வானிவள் தன்மையே. 1

---

*இத் திருப்பதிகத்தில் 9-ம் செய்யுள் சிதைந்து போயிற்று.

மருந்து வானவர் உய்யநஞ் சுண்டுகந்
திருந்த வன்கழிப் பாலையுள் எம்பிரான்
திருந்து சேவடி சிந்தையுள் வைத்திவள்
பரிந்து ரைக்கிலு மென்சொற் பழிக்குமே. 2

மழலை தான்வரச் சொல்தெரி கின்றிலள்
குழலின் நேர்மொழி கூறிய கேண்மினோ
அழக னேகழிப் பாலைஎம் அண்ணலே
இகழ்வ தோஎனை என்றுகொள் என்னுமே. 3

செய்ய மேனிவெண் ணீறணி வான்றனை
மைய லாகி மதிக்கில ளாரையும்
கைகொள் வெண்மழு வன்கழிப் பாலைஎம்
ஐய னேஅறி வானிவள் தன்மையே. 4

கருத்த னைக்கழிப் பாலையுள் மேவிய
ஒருத்த னைஉமை யாளொரு பங்கனை
அருத்தி யாற்சென்று கண்டிட வேண்டுமென்று
ஒருத்தி யாருளம் ஊசல தாடுமே. 5

கங்கை யைச்சடை வைத்து மலைமகள்
கங்கை யையுட னேவைத்த நாதனார்
திங்கள் சூடி திருக்கழிப் பாலையான்
இங்கு வந்திடு மென்றிறு மாக்குமே. 6

ஐய னேஅழ கேஅன லேந்திய
கைய னேகறை சேர்தரு கண்டனே
மையு லாம்பொழில் சூழ்கழிப் பாலைஎம்
ஐய னேவிதி யேஅருள் என்னுமே. 7

பத்தர் கட்கமு தாய பரத்தினை
முத்த னைமுடி வொன்றிலா மூர்த்தியை
அத்த னைஅணி யார்கழிப் பாலைஎம்
சித்த னைச்சென்று சேருமா செப்புமே. 8-9

பொன்செய் மாமுடி வாளரக் கன்தலை
அஞ்சு நான்குமொன் றும்மிறுத் தானவன்
என்செ யான்கழிப் பாலையுள் எம்பிரான்
துஞ்சும் போதும் துணையென லாகுமே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருநேரிசை [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நங்கையைப் பாகம் வைத்தார் ஞானத்தை* நவில வைத்தார்
அங்கையில் அனலும் வைத்தார் ஆனையின் உரிவை வைத்தார்
தங்கையின் யாழும் வைத்தார் தாமரை மலரும் வைத்தார்
கங்கையைச் சடையுள் வைத்தார் கழிப்பாலைச் சேர்ப்ப னாரே. 1

விண்ணினை விரும்ப வைத்தார் வேள்வியை வேட்க வைத்தார்
பண்ணினைப் பாட வைத்தார் பத்தர்கள் பயில வைத்தார்
மண்ணினைத் தாவ நீண்ட மாலினுக் கருளும் வைத்தார்
கண்ணினை நெற்றி வைத்தார் கழிப்பாலைச் சேர்ப்ப னாரே. 2

வாமனை வணங்க வைத்தார் வாயினை வாழ்த்த வைத்தார்
சோமனைச் சடைமேல் வைத்தார் சோதியுட் சோதி வைத்தார்
ஆமனெய்† யாட வைத்தார் அன்பெனும் பாசம் வைத்தார்
காமனைக் காய்ந்த கண்ணார் கழிப்பாலைச் சேர்ப்ப னாரே. 3

ஆரியன அங்கம் வேதம் அந்தணர்க் கருளும் வைத்தார்
பெரியன புரங்கள் மூன்றும் பேரழ லுண்ண வைத்தார்
பரியதீ வண்ண ராகிப் பவளம்போல் நிறத்தை வைத்தார்
கரியதோர் கண்டம் வைத்தார் கழிப்பாலைச் சேர்ப்ப னாரே. 4

கூரிருள் கிழிய நின்ற கொடுமழுக் கையில் வைத்தார்
பேரிருள் கழிய மல்கு பிறைபுனற் சடையுள் வைத்தார்
ஆரிருள் அண்டம் வைத்தார் அறுவகைச் சமயம் வைத்தார்
காரிருள் கண்டம் வைத்தார் கழிப்பாலைச் சேர்ப்ப னாரே. 5

உட்டங்கு சிந்தை வைத்தார் உள்குவார்க் குள்ளம் வைத்தார்
விட்டங்கு வேள்வி வைத்தார் வெந்துயர் தீர வைத்தார்
கட்டங்கு நடமும் வைத்தார் ஞானமு நவில** வைத்தார்
கட்டங்கந் தோள்மேல் வைத்தார் கழிப்பாலைச் சேர்ப்ப னாரே. 6

ஊனப்பே ரொழிய வைத்தார் ஓதியே உணர வைத்தார்
ஞானப்பேர் நவில வைத்தார் ஞானமும் நடு‡வும் வைத்தார்

* கானத்தை என்றும் பாடம், †ஆமனே என்றும் பாடம்; ஆமனே-ஆ-மன்-ஐ = ஆனைந்து- ** ஞாலமு நவில என்றும், ஞானமு நவில என்றும் பாடம். ‡ நடு-குறிக்கோள்.

வானப்பே ராறும் வைத்தார் வைகுந்தற் காழி வைத்தார்
கானப்பேர் காதல் வைத்தார் கழிப்பாலைச் சேர்ப்ப னாரே. 7

கொங்கினும் அரும்பு வைத்தார் கூற்றங்கள் கெடுக்க வைத்தார்
சங்கினுள் முத்தம் வைத்தார் சாம்பலும் பூச வைத்தார்
அங்கமும் வேதம் வைத்தார் ஆலமும் உண்டு வைத்தார்
கங்குலும் பகலும் வைத்தார் கழிப்பாலைச் சேர்ப்ப னாரே. 8

சதுர்முகன் தானும் மாலுந் தம்மிலே இகலக் கண்டு
எதிர்முக மின்றி நின்ற எரியுரு வதனை வைத்தார்
பிதிர்முகன் காலன் றன்னைக் கால்தனிற் பிதிர வைத்தார்
கதிர்முகஞ் சடையில் வைத்தார் கழிப்பாலைச் சேர்ப்ப னாரே. 9

மாலினாள் நங்கை யஞ்ச மதிலிலங் கைக்கு மன்னன்
வேலினன் வெகுண்டெ டுக்கக் காண்டலும் வேத நாவன்
நூலினன் நோக்கி நக்கு நொடிப்பதோ ரளவில் வீழக்
காலினால் ஊன்றி யிட்டார் கழிப்பாலைச் சேர்ப்ப னாரே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருவிருத்தம்* [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நெய்தற் குருகுதன் பிள்ளையென் றெண்ணி நெருங்கிச்சென்று
கைதை மடல்புல்கு தென்கழிப் பாலை யதனுறைவாய்
பைதற் பிறையொடு பாம்புடன் வைத்த பரிசறியோம்
எய்தப் பெறின்இரங் காதுகண் டாய்நம் இறையவனே. 1

பருமா மணியும் பவளமுத் தும்பரந் துந்திவரை
பொருமால் கரைமேல் திரைகொணர்ந்தெற்றப் பொலிந்திலங்கும்
கருமா மிடறுடைக் கண்டன்எம் மான்கழிப் பாலையெந்தை
பெருமா னவனென்னை யாளுடை யானிப் பெருநிலத்தே. 2

நாட்பட் டிருந்தின்பம் எய்தலுற் றிங்கு நமன் தமரால்
கோட்பட் டொழிவதன் முந்துற வேகுளி ரார்தடத்துத்
தாட்பட்ட தாமரைப் பொய்கையந் தண்கழிப் பாலையண்ணற்
காட்பட் டொழிந்தமன் றேவல்ல மாயிவ் வகலிடத்தே. 3

திருச்சிற்றம்பலம்

---

* இப்பதிகத்துள் இம்மூன்றொழிய ஏனைய செய்யுட்கள் சிதைந்து போயின.

## திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

ஊனுடுத்தி யொன்பது வாசல் வைத்து வொள்ளெலும்பு தூணா வுரோம மேய்ந்து, தாமெடுத்த கூரை தவிரப் போவார் தயக்கம் பலபடைத்தார் தாம ரையினார், கானெடுத்து மாமயில்க ளாலுஞ் சோலைக் கழிப்பாலை மேய கபா லப்பனார், வானிடத்தை யூடறுத்து வல்லைச் செல்லும் வழிவைத்தார்க் கவ்வழியே போதும் நாமே. 1

முறையார்ந்த மும்மதிலும் பொடியாச் செற்று முன்னுமாய்ப் பின்னுமாய் முக்க ணெந்தை, பிறையார்ந்த சடைமுடிமேற் பாம்பு கங்கை பிணக்கந்தீர்த் துடன்வைத்தார் பெரிய நஞ்சுக், கறையார்ந்த மிடற்றடங்கக் கண்ட எந்தை கழிப்பாலை மேய கபா லப்பனார், மறையார்ந்த வாய்மொழியான் மாய யாக்கை வழி வைத்தார்க் கவ்வழியே போதும் நாமே. 2

நெளிவுண்டாக் கருதாதே நிலமன் தன்னை நினைமின்கள் நித் தலும்நே ரிழையா ளாய, ஒளிவண்டார் கருங்குழலி யுமையாள் தன்னை யொருபாகத் தமர்ந்தடியா ருள்கி யேத்தக், களிவண்டார் கரும்பொழில்சூழ் கண்டல் வேலிக் கழிப்பாலை மேய கபா லப்பனார், வளியுண்டார்* மாயக் குரம்பை நீங்க வழிவைத்தார்க் கவ்வழியே போதும் நாமே. 3

பொடிநாறு மேனியர் பூதிப் பையர் புலித்தோலர் பொங்கர வர் பூண நூலர், அடிநாறுங் கமலத்தர் ஆரூ ராதி ஆனஞ்சு மாடும் ஆதிரையி னார்தாங், கடிநாறு பூஞ்சோலை கமழ்ந்து நாறுங் கழிப்பாலை மேய கபா லப்பனார், மடிநாறு மேனியிம் மாயம் நீங்க வழிவைத்தார்க் கவ்வழியே போதும் நாமே. 4

விண்ணானாய் விண்ணவர்கள் விரும்பி வந்து வேதத்தாய் கீதத்தாய் விரவி யெங்கும், எண்ணானாய் எழுத்தானாய் கடலே ழானாய் இறையானாய் எம்மிறையே யென்று நிற்கும், கண்ணானாய் காரானாய் பாரு மானாய் கழிப்பாலை யுள்ளுறையுங் கபா லப்பனார்** மண்ணானாய்† மாயக் குரம்பை நீங்க வழிவைத்தார்க் கவ்வழியே போதும் நாமே. 5

---

* வளிவண்டார் என்றும் பாடம். ** கமலப்பாதர் என்றும் பாடம். †மண்ணாய என்றும் பாடம்.

விண்ணப்ப விச்சா தரர்களேத்த விரிகதிரோன் எரிசுடரான் விண்ணு மாகிப், பண்ணப்பன் பத்தர் மனத்து ளேயும் பசுபதி பாசுபதன் தேச மூர்த்தி, கண்ணப்பன் கண்ணப்பக் கண்டு கந்தார் கழிப்பாலை மேய கபா லப்பனார், வண்ணப் பிணிமாய யாக்கை நீங்க வழிவைத்தார்க் கவ்வழியே போதும் நாமே. 6

பிணம்புல்கு பீறற் குரம்பை மெய்யாப் பேதப் படுகின்ற பேதை மீர்காள், நிணம்புல்கு சூலத்தர் நீல கண்டர் எண்டோளர் எண்ணிறைந்த குணத்தி னாலே, கணம்புல்லன் கருத்துகந்தார் காஞ்சியுள்ளார் கழிப்பாலை மேய கபா லப்பனார், மணம்புல்கு மாயக் குரம்பை நீங்க வழிவைத்தார்க் கவ்வழியே போதும் நாமே. 7

இயல்பாய ஈசனை எந்தை தந்தை என்சிந்தை மேவி யுறை கின் றானை, முயல்வானை மூர்த்தியைத் தீர்த்த மான தியம்பகன் திரிசூலத் தன்ன கையன், கயல்பாயுங் கண்டல்சூழ் வுண்ட வேலிக் கழிப்பாலை மேய கபா லப்பனார், மயலாய மாயக் குரம்பை நீங்க வழிவைத்தார்க் கவ்வழியே போதும் நாமே. 8

செற்றதோர் மனமொழிந்து சிந்தை செய்து சிவமூர்த்தி யென்றெழுவார் சிந்தையுள்ளால், உற்றதோர் நோய்களைந்திவ் வுலக மெல்லாங் காட்டுவான் உத்தமன்றா னோதா தெல்லாம், கற்றதோர் நூலினன் களிறு செற்றான் கழிப்பாலை மேய கபா லப்பனார், மற்றிதோர் மாயக் குரம்பை நீங்க வழிவைத்தார்க் கவ்வழியே போதும் நாமே. 9

பொருதலங்கல் நீண்முடியான் போர ரக்கன் புட்பகந்தான் பொருப்பின்மீ தோடா தாக, இருநிலங்கள் நடுக்கெய்த எடுத்தி டுதலும் ஏந்திழையாள் தான்வெருவ இறைவன் நோக்கிக், கரதலங்கள் கதிர்முடியா றஞ்சி னோடு கால்விரலா லூன்று கழிப்பாலையார், வருதலங்க மாயக் குரம்பை நீங்க வழிவைத்தார்க் கவ்வழியே போதும் நாமே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—பால்வண்ணநாதர்; தேவி—வேதநாயகி.

---

## 4. திருச்சாய்க்காடு*

### திருநேரிசை [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

தோடுலா மலர்கள் தூவித் தொழுதெழு மார்க்கண் டேயன்
வீடுநாள் அணுகிற் றென்று மெய்கொள்வான் வந்த காலன்
பாடுதான் செல்லும் அஞ்சிப் பாதமே சரண மென்னச்
சாடினார் காலன் மாளச் சாய்க்காடு மேவி னாரே. 1

வடங்கெழு மலைமத் தாக வானவர் அசுர ரோடு
கடைந்திட எழுந்த நஞ்சங் கண்டுபஃ றேவர் அஞ்சி
அடைந்துநும் சரணம் என்ன அருள்பெரி துடைய ராகித்
தடங்கடல் நஞ்சம் உண்டார் சாய்க்காடு மேவி னாரே. 2

அரண்இலா வெளிய நாவல் அருநிழ லாக ஈசன்
வரணிய லாகித் தன்வாய் நூலினாற் பந்தர் செய்ய
முரணிலாச் சிலந்தி தன்னை முடியுடை மன்ன னாக்கித்
தரணிதா னாள வைத்தார் சாய்க்காடு மேவி னாரே. 3

அரும்பெருஞ் சிலைக்கை வேட னாய்விறற் பார்த்தற் கன்று**
உரம்பெரி துடைமை காட்டி ஒள்ளமர் செய்து மீண்டே
வரம்பெரி துடைய னாக்கி வாளமர் முகத்தின் மன்னுஞ்
சரம்பொலி தூணி ஈந்தார் சாய்க்காடு மேவி னாரே. 4

இந்திரன் பிரமன் அங்கி எண்வகை வசுக்க ளோடு
மந்திர மறைய தோதி வானவர் வணங்கி வாழ்த்தத்
தந்திரம் அறியாத் தக்கன் வேள்வியைத் தகர்த்த ஞான்று
சந்திரற் கருள்செய் தாருஞ்† சாய்க்காடு மேவி னாரே. 5

ஆமலி பாலும் நெய்யும் ஆட்டிஅர்ச் சனைகள் செய்து
பூமலி கொன்றை சூட்டப் பொறாததன் தாதை தாளைக்
கூர்மழு வொன்றால் ஓச்சக் குளிர்சடைக் கொன்றை மாலைத்
தாமநற் சண்டிக் கீந்தார் சாய்க்காடு மேவி னாரே. 6

---

* திருச்சாய்க்காடு – சாயாவனம். ** வேடனாயவ் விற்பார்த்தற்கன்று என்றும் பாடம். † சந்திரற் கருளிச் செய்தார் என்றும் பாடம்.

மையறு மனத்த னாய பகீரதன் வரங்கள் வேண்ட
ஐயமில் அமரர் ஏத்த ஆயிர முகம தாகி
வையகம் நெளியப் பாய்வான் வந்திழி கங்கை யென்னுந்
தையலைச் சடையில் ஏற்றார் சாய்க்காடு மேவி னாரே. 7

கூவப்பெருந் தடக்கை வேடன் கொடுஞ்சிலை இறைச்சிப் பாரந்
துவர்ப்பெருஞ் செருப்பால் நீக்கித் தூயவாய்க் கலசம் ஆட்ட
உவப்பெருங் குருதி சோர ஒருகணை யிடந்தங் கப்பத்
தவப்பெருந் தேவு செய்தார் சாய்க்காடு மேவி னாரே. 8

நக்குலா மலர்பன் னூறு கொண்டுநன் ஞானத் தோடு
மிக்கபூ சனைகள் செய்வான் மென்மல ரொன்று காணு(து)
ஒக்குமென் மலர்க்கண் என்றங் கொருகணை யிடந்தும் அப்பச்
சக்கரங் கொடுப்பர் போலுஞ் சாய்க்காடு மேவி னாரே. 9

புயங்கள்ஐஞ் ஞான்கும் பத்து மாயகொண் டரக்க னோடிச்
சிவன்திரு மலையைப் பேர்க்கத் திருமலர்க் குழலி அஞ்ச
வியன்பெற எய்தி வீழ விரல்சிறி தூன்றி மீண்டே
சயம்பெற நாம மீந்தார் சாய்க்காடு மேவி னாரே. 10

திருச்சிற்றம்பலம்

## திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வானத் திளமதியும் பாம்புந் தன்னில் வளர்சடைமேல் ஆதரிப்ப வைத்தார் போலுந், தேனைத் தினைத்துண்டு வண்டு பாடுந் தில்லை நடமாடுந் தேவர் போலும், ஞானத்தின் ஒண்சுட ராய் நின்றார்போலும் நன்மையுந் தீமையு மானார் போலுந், தேனைத் தடியார்க் கினியார் போலுந் திருச்சாய்க்காட் டினி துறையுஞ் செல்வர் தாமே. 1

விண்ணோர் பரவநஞ் சுண்டார் போலும் வியன்துருத்தி* வேள்விக் குடியார் போலும், அண்ணா மலையுறையும் அண்ணல் போலும் அதியரைய மங்கை யமர்ந்தார் போலும், பண்ணார் களிவண்டு பாடி யாடும் பராய்த்துறையுள் மேய பரமர் போலுந், திண்ணார் புகார்முத் தலைக்குந் தெண்ணீர்த் திருச்சாய்க்காட் டினிதுறையுஞ் செல்வர் தாமே. 2

* துருத்தி-குத்தாலம்,

கானிரிய வேழ முரித்தார் போலுங் காவிரிப்பூம் பட்டினத் துள்ளார் போலும், வானிரிய வருபுரமூன் றெரித்தார் போலும் வடகயிலை மலையதுதம் மிருக்கை போலும், ஊனிரியத் தலைகலனு வுடையார் போலும் உயர்தோணி புரத்துறையும் ஒருவர் போலுந், தேனிரிய மீன்பாயுந் தெண்ணீர்ப் பொய்கைத் திருச் சாய்க்காட் டினிதுறையுஞ் செல்வர் தாமே. 3

ஊனுற்ற வெண்தலைசேர் கையர் போலும் ஊழி பலகண் டிருந்தார் போலும், மானுற்ற கரதலமொன் றுடையார் போலும் மறைக்காட்டுக் கோடி மகிழ்ந்தார் போலுங், கானுற்ற ஆட லமர்ந்தார் போலுங் காமனையுங் கண்ணழலாற் காய்ந்தார் போலுந், தேனுற்ற சோலை திகழ்ந்து தோன்றுந் திருச்சாய்க்காட் டினிதுறையுஞ் செல்வர் தாமே. 4

கார்மல்கு கொன்றையந் தாரார் போலுங் காலனையும் ஒருதையால் கண்டார் போலும், பார்மல்கி யேத்தப் படுவார் போலும் பருப்பதத்தே பல்லூழி நின்றார் போலும், ஊர்மல்கு பிச்சைக் குழன்றார் போலும் ஒத்தூர் ஒருநாளும் நீங்கார் போலுஞ், சீர்மல்கு பாட லுகந்தார் போலுந் திருச்சாய்க்காட் டினிதுறையுஞ் செல்வர் தாமே. 5

மாவாய்ப் பிளந்துகந்த மாலுஞ் செய்ய மலரவனுந் தாமே யாய் நின்றார் போலும், மூவாத மேனி முதல்வர் போலும் முது குன்ற மூதூ ருடையார் போலுங், கோவாய முனிதன்மேல் வந்த கூற்றைக் குரைகழலா லன்று குமைத்தார் போலுந், தேவாதி தேவர்க் கரியார் போலுந் திருச்சாய்க்காட் டினிதுறை யுஞ் செல்வர் தாமே. 6

கடுவெளியோ டோரைந்து மானார் போலுங் காரோணத் தென்று மிருப்பார் போலும், இடிகுரல்வாய்ப் பூதப் படையார் போலும் ஏகம்பம் மேவி யிருந்தார் போலும், படியொருவ ரில்லாப் படியார் போலும் பாண்டிக் கொடுமுடியுந் தம்மூர் போலுஞ், செடிபடுநோ யடியாரைத் தீர்ப்பார் போலுந் திருச் சாய்க்காட் டினிதுறையுஞ் செல்வர் தாமே. 7

விலையிலா ஆரஞ்சேர் மார்பர் போலும் வெண்ணீறு மெய்க் கணிந்த விகிர்தர் போலும், மலையினார் மங்கை மணாளர் போலும்

மாற்பேறு காப்பாய் மகிழ்ந்தார் போலுந், தொலைவிலார்* புரமூன்றுந் தொலைத்தார் போலுஞ் சோற்றுத் துறைதுருத்தி யுள்ளார் போலுஞ், சிலையினூர் செங்க ணரவர் போலுந் திருச்சாய்க்காட் டினிதுறையுஞ் செல்வர் தாமே. 8

அல்லல் அடியார்க் கறுப்பார் போலும் அமருலகந் தம்மடைந்தார்க் காட்சி போலும், நல்லமும் நல்லூரும் மேயார் போலும் நள்ளாறு நாளும் பிரியார் போலும், முல்லை முகைநகையாள் பாகர் போலும் முன்னமே தோன்றி முளைத்தார் போலுந், தில்லை நடமாடுந் தேவர் போலுந் திருச்சாய்க்காட் டினி துறையுஞ் செல்வர் தாமே.

உறைப்புடைய இராவணன்பொன் மலையைக் கையால் ஊக்கஞ்செய் தெடுத்தலுமே உமையா ளஞ்ச, நிறைப்பெருந் தோள் இருபதும்பொன் முடிகள் பத்தும் நிலஞ்சேர விரல் வைத்த நிமலர் போலும், பிறைப்பிளவு சடைக்கணிந்த பெம்மான் போலும் பெண்ணு ணுருவாகி நின்றூர் போலுஞ், சிறப்புடைய அடியார்கட் கினியார் போலுந் திருச்சாய்க்காட் டினிதுறையுஞ் செல்வர் தாமே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி-சாயாவனேசுவரர்; தேவி-குயிலினும் நன்மொழியம்மை.

---

## 5. திருவெண்காடு

### திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பண்காட் டிப்படி யாயதன் பத்தர்க்குக்
கண்காட் டிக்கண்ணில் நின்ற மணியொக்கும்
பெண்காட் டிப்பிறைச் சென்னிவைத் தான்திரு
வெண்காட் டையடைந் துய்ம்மட நெஞ்சமே. 1

கொள்ளி வெந்தழல் வீசிநின் றுடுவார்
ஒள்ளி யகணஞ் சூழுமை பங்கனர்

---

* துலையிலார் என்றும், துலைவிலார் என்றும் பாடங்கள்.

வெள்ளி யன்கரி யன்பசு வேறிய
தெள்ளி யன்திரு வெண்கா டடைநெஞ்சே. 2

ஊனைக் கும்இன்பம் வேண்டி உழலாதே
வானைக் கும்வழி யாவது நின்மினே
தானைக் குந்தன் னடியவர் நாவினில்
தேனைக் குந்திரு வெண்கா டடைநெஞ்சே. 3

பருவெண் கோட்டுப் பைங்கண்மத வேழத்தின்
உருவங் காட்டிநின் றானுமை யஞ்சவே
பெருவெண் காட்டிறை வன்னுறை யும்மிடம்
திருவெண் காடடைந் துய்ம்மட நெஞ்சமே. 4

பற்ற வன்கங்கை பாம்பு மதியுடன்
உற்ற வன்சடை யான்உயர் ஞானங்கள்
கற்ற வன்கய வர்புரம் ஓம்பால்
செற்ற வன்திரு வெண்கா டடைநெஞ்சே. 5

கூடி னானுமை யாளொரு பாகமாய்
வேட னாய்விச யற்கருள் செய்தவன்
சேட னார்சிவ னார்சிந்தை மேயவெண்
காட னாரடி யேஅடை நெஞ்சமே. 6

தரித்த வன்கங்கை பாம்பு மதியுடன்
புரித்த புன்சடை யான்கய வர்புரம்
எரித்த வன்மறை நான்கினோ டாறங்கம்
விரித்த வன்னுறை வெண்கா டடைநெஞ்சே. 7

பட்டம் இண்டை யவைகொடு பத்தர்கள்
சிட்ட னாதியென் றுசிந்தை செய்யவே
நட்ட மூர்த்திஞா னச்சுட ராய்நின்ற
அட்ட மூர்த்திதன் வெண்கா டடைநெஞ்சே. 8

ஏன வேடத்தி னானும் பிரமனும்
தான வேடமுன் தாழ்ந்தறி கின்றிலா
ஞான வேடன் விசயற் கருள் செயும்
கான வேடன்றன் வெண்கா டடைநெஞ்சே. 9

பாலை யாடுவர் பன்மறை யோதுவர்
சேலை யாடிய கண்ணுமை பங்கனார்

வேலை யார்விட முண்டவெண் காடர்க்கு
மாலை யாவது மாண்டவர் அங்கமே. 10

இராவ ணஞ்செய மாமதி பற்றவை
இராவ ணம்முடை யான்றனை யுள்குமின்
இராவ ணன்றனை யூன்றி அருள்செய்த
இராவ ணன்திரு வெண்கா டடைமினே. 11

திருச்சிற்றம்பலம்



திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

தூண்டு சுடர்மேனித் தூநீ றாடிச் சூலங்கை யேந்தியோர் சுழல்வாய் நாகம், பூண்டு பொறியரவங் காதிற் பெய்து பொற் சடைக ளவைதாழப் புரிவெண் ணூலர், நீண்டு கிடந்திலங்கு திங்கள் சூடி நெடுந்தெருவே வந்தெனது நெஞ்சங் கொண்டார், வேண்டு நடைநடக்கும் வெள்ளே றேறி வெண்காடு மேவிய விகிர்த னாரே. 1

பாதந் தனிப்பார்மேல்* வைத்த பாதர் பாதாள மேழுருவப் பாய்ந்த பாதர், ஏதம் படாவண்ணம் நின்ற பாதர் ஏழுலகு மாய் நின்ற ஏக பாதர், ஓதத் தொலிமடங்கி யூருண் டேறி யொத்துலக மெல்லா மொடுங்கி யபின், வேதத் தொலிகொண்டு வீணை கேட் பார் வெண்காடு மேவிய விகிர்த னாரே. 2

நென்னலையோர் ஓடேந்திப் பிச்சைக் கென்று வந்தார்க்கு வந்தேனென் றில்லே புக்கேன், அந்நிலையே நிற்கின்றார் ஐயங் கொள்வார் அருகே வருவார்போல் நோக்கு கின்றார், நுந்நிலைமை யேதோநும் மூர்தா னேதோ என்றேனுக் கொன்றாகச் சொல்ல மாட்டார், மென்முலையார் கூடி விரும்பி யாடும் வெண்காடு மேவிய விகிர்த னாரே. 3

ஆகத் துமையடக்கி யாறு சூடி ஐவா யரவசைத்தங் கானே றேறிப், போகம் பலவுடைத்தாய்ப் பூதஞ் சூழப் புலித்தோ லுடை யாப் புகுந்து நின்றார், பாகிடுவான் சென்றேனைப் பற்றி நோக்கிப்

* பாதந் தரிப்பவர்மேல் என்றும் பாடம்.

பரிசழித்தென் வளைகவர்ந்தார் பாவி யேனை, மேக முகிலுரிஞ்சு சோலை சூழ்ந்த வெண்காடு மேவிய விகிர்த னாரே. 4

கொள்ளைக் குழைக்காதிற் குண்டைப் பூதங் கொடுகொட்டி கொட்டிக் குனித்துப் பாட, உள்ளங் கவர்ந்திட்டுப் போவார் போல உழிதருவர் நான்தெரிய மாட்டேன் மீண்டேன், கள்ள விழிவிழிப்பர் காணுக் கண்ணுற் கண்ணுளார் போலே கரந்து நிற்பர், வெள்ளச் சடைமுடியர் வேத நாவர் வெண்காடு மேவிய விகிர்த னாரே. 5

தொட்டிலங்கு சூலத்தர் மழுவா ளேந்திச் சுடர்க்கொன் றைத் தாரணிந்து சுவைகள் பேசிப், பட்டிவெள் ளேறேறிப் பலியுங் கொள்ளார் பார்ப்பாரைப் பரிசழிப்பா ரொக்கின் ருரால்**, கட்டிலங்கு வெண்ணீற்றர் கனலப் பேசிக் கருத் தழித்து வளைகவர்ந்தார் காலை மாலை, விட்டிலங்கு சடைமுடியர் வேத நாவர் வெண்காடு வேவிய விகிர்த னாரே. 6

பெண்பா லொருபாகம் பேணு வாழ்க்கைக் கோள்நாகம் பூண்பனவும் நாணுஞ் சொல்லார், உண்பார் உறங்குவார் ஒவ்வா நங்கா யுண்பதுவும் நஞ்சன்றே லோபி யுண்ணர், பண்பால் அவிர் சடையர்* பற்றிநோக்கிப் பாலைப் பரிசழியப் பேசு கின்ருர், விண் பால் மதிசூடி வேதம் ஓதி வெண்காடு மேவிய விகிர்த னாரே. 7

மருதங்க ளாமொழிவர் மங்கை யோடு வானவரும் மால யனுங் கூடித் தங்கள், சுருதங்க ளாற்றுதித்துத் தூநீ ராட்டித் தோத்திரங்கள் பலசொல்லித் தூபங் காட்டிக், கருதுங்கொல் எம்பெருமான் செய்குற் றேவல் என்பார்க்கு வேண்டும் வரங் கொடுத்து, விகிர்தங்க ளாநடப்பர்** வெள்ளே றேறி வெண் காடு மேவிய விகிர்த னாரே. 8

புள்ளானும் நான்முகனும் புக்கும் போந்துங் காணுர் பொறி யழலாய்† நின்ருன் தன்னை, உள்ளானை யொன்றல்லா உருவினனை உலகுக் கொருவிளக்காய் நின்ருன் தன்னைக், கள்

** பரிசழிப்பார் போகின்ருரால் என்றும் பாடம். * பண்பால் விரிசடையர் என்றும் பாடம். ** விகிர்தங்களான டப்பர் என்றும் பாடம். †பொரியழலாய் என்றும் பாடம்.

ளேந்து கொன்றைதூய்க் காலை மூன்றும் ஓவாமே நின்று தவங்கள் செய்த, வெள்ளானை வேண்டும் வரங்கொ டுப்பார் வெண்காடு மேவிய விகிர்த னாரே. 9

மாக்குன் றெடுத்தோன்தன் மைந்த னாகி மாவேழம் வில்லா மதித்தான் தன்னை, நோக்குந் துணைத்தேவ ரெல்லாம் நிற்க நொடி வரையில் நோவ விழித்தான் தன்னைக், காக்குங் கடலி லங்கைக் கோமான் தன்னைக் கதிர்முடியுங் கண்ணும் பிதுங்க வூன்றி, வீக்கந் தவிர்த்த விரலார் போலும் வெண்காடு மேவிய விகிர்த னாரே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி-சுவேதாரணியேசுவரர்; தேவி-பிரமவித்தியா நாயகி.

---

## 6. திருப்பிரமபுரம்†

### [திருத்தோணிபுரம்]

### திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

யாதி யன்று* மனைக்கிரு வென்றக்கால்
நீதி தான்சொல நீயெனக் காரெனும்
சோதி யார்தரு தோணி புரவர்க்குத்
தாதி யாவன்நா னென்னுமென் னையலே. 1

நக்கம் வந்து பலியிடென் றூர்க்கிட்ட
மிக்க தையலை வெள்வளை கொள்வது
தொக்க நீர்வயல் தோணி புரவர்க்குத்
தக்க தன்று தமது பெருமைக்கே. 2

கெண்டை போல்நய னத்திம வான்மகள்
வண்டு வார்குழ லாளுட னாகவே
துண்ட வான்பிறைத் தோணி புரவரைக்
கண்டு காமுறு கின்றனள் கன்னியே. 3

---

† திருப்பிரமபுரம்-சீகாழி; இது வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பை, கொச்சை வயம், கழுமலம் என்னும் வேறு பெயர்களையும் உடையது. *மாதி யென்று என்றும் பாடம்.

பாலை யாழ்மொழி யாளவள் தாழ்சடை
மேல வாவது கண்டனள் விண்ணுறச்
சோலை யார்தரு தோணி புரவர்க்குச்
சால நல்லளா கின்றனள் தையலே. 4

பண்ணின் நேர்மொழி யாள்பலி யிட்டஇப்
பெண்ணை மால்கொடு பெய்வளை கொள்வது
சுண்ண மாடிய தோணிபு ரத்துறை
அண்ண லாருக்குச் சால அழகிதே. 5

முல்லை வெண்நகை மொய்குழ லாய்உனக்
கல்ல னுவ தறிந்திலை நீகனித்
தொல்லை யார்பொழில் தோணி புரவர்க்கே
நல்லை யாயிடு கின்றனை நங்கையே. 6

ஒன்று தானறி யாருல கத்தவர்
நின்று சொல்லி நிகழ்ந்த** நினைப்பிலர்
துன்று வார்பொழில் தோணி புரவர்தம்
கொன்றை சூடுங் குறிப்பது வாகுமே. 7

உறவு பேய்க்கணம் உண்பது வெண்டலை
உறைவ தீமம் உடலிலோர் பெண்கொடி
துறைக ளார்கடல் தோணி புரத்துறை
இறைவ னுக்கிவள் என்கண்டன் பாவதே. 8

மாக யானை மருப்பேர் முலையினர்
போக யானு மவள்புக்க தேபுகத்
தோகை சேர்தரு தோணி புரவர்க்கே
ஆக யானும் அவர்க்கினி யாளதே. 9

இட்ட மாயின செய்வாளென் பெண்கொடி
கட்டம் பேசிய காரரக் கன்றனைத்
துட்ட டக்கிய தோணி புரத்துறை
அட்ட மூர்த்திக்கு அன்பது வாகியே. 10

திருச்சிற்றம்பலம்

---

** நிகழ்த்த என்றும் பாடம்.

[திருக்கழுமலம்]

**திருவிருத்தம் [4-திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

பார்கொண்டு மூடிக் கடல்கொண்ட ஞான்றுநின் பாதமெல்லாம்
நாலஞ்சு புள்ளினம் ஏந்தின என்பர் நளிர்மதியம்
கால்கொண்ட வண்கைச் சடைவிரித் தாடுங் கழுமலவர்க்
காளன்றி மற்றுமுண் டோஅந்த ணாழி அகலிடமே. 1

கடையார் கொடிநெடு மாடங்கள் எங்குங் கலந்திலங்க
உடையான் உடைதலை மாலையுஞ் சூடி உகந்தருளி
விடைதா னுடையஅவ் வேதியன் வாழுங் கழுமலத்துள்
அடைவார் வினைகள் அவைஎள்க நாடொறும் ஆடுவரே. 2

திரைவாய்ப் பெருங்கடல் முத்தங் குவிப்ப முகந்துகொண்டு
நுரைவாய் நுளைச்சிய ரோடிக் கழுமலத் துள்ளழுந்தும்
விரைவாய் நறுமலர் சூடிய விண்ணவன் தன்னடிக்கே
வரையாப் பரிசிவை நாடொறும் நந்தமை ஆள்வனவே. 3

விரிக்கும் அரும்பதம் வேதங்கள் ஓதும் விழுமியநூல்
உரைக்கில் அரும்பொருள் உள்ளுவர் கேட்கில் உலகமுற்றும்
இரிக்கும் பறையொடு பூதங்கள் பாடக் கழுமலவன்
நிருத்தம் பழம்படி யாடுங்* கழல்நம்மை ஆள்வனவே. 4

சிந்தித் தெழுமன மேநினை யாமுன் கழுமலத்தைப்
பந்தித்த வல்வினை தீர்க்கவல் லானைப் பசுபதியைச்
சந்தித்த கால மறுத்துமென் றெண்ணி யிருந்தவர்க்கு
முந்தித் தொழுகழல் நாடொறும் நந்தமை ஆள்வனவே. 5

நிலையும் பெருமையும் நீதியுஞ் சால அழகுடைத்தாய்
அலையும் பெருவெள்ளத் தன்று மிதந்தஇத் தோணிபுரம்
சிலையில் திரிபுர மூன்றெரித் தார்தங் கழுமலவர்
அலருங் கழலடி நாடொறும் நந்தமை ஆள்வனவே. 6

முற்றிக் கிடந்து முந்நீரின் மிதந்துடன் மொய்த்தமரர்
சுற்றிக் கிடந்து தொழப்படு கின்றது சூழரவம்
தெற்றிக் கிடந்துவெங் கொன்றைளந் துன்றிவெண் திங்கள்சூடும்
கற்றைச் சடைமுடி யார்க்கிட மாய கழுமலமே. 7

---

* பழம்படி ஆடும் - அநாதியாகிய அருட்கூத்து ஆடும்.

உடலும் உயிரும் ஒருவழிச் செல்லும்உல கத்துள்ளே†
அடையும் உனைவந் தடைந்தார் அமரர் அடியிணைக்கீழ்
நடையும் விழவொடு நாடொறும் மல்குங் கழுமலத்துள்
விடையன் தனிப்பதம் நாடொறும் நந்தமை ஆள்வனவே. 8

பரவைக் கடல்நஞ்சம் உண்டது மில்லைஇப் பார்முழுதும்
நிரவிக் கிடந்து தொழப்படு கின்றது நீண்டிருவர்
சிரமப் படவந்து சார்ந்தார் கழலடி காண்பதற்கே
அரவக் கழலடி நாடொறும் நந்தமை ஆள்வனவே. 9

கரையார் கடல்சூழ் இலங்கையர் கோன்றன் முடிசிதறத்
தொலையா மலரடி ஊன்றலும் உள்ளம் விதிர்விதிர்த்துத்
தலையாய்க் கிடந்து‡யர்ந் தான்றன் கழுமலங் காண்பதற்கே
அலையாப் பரிசிவை** நாடொறும் நந்தமை ஆள்வனவே.‡‡ 10

திருச்சிற்றம்பலம்

---

## திருவிருத்தம்*

திருச்சிற்றம்பலம்

படையார் மழுவொன்று பற்றிய கையன் பதிவினவில்
கடையார் கொடிநெடு மாடங்கள் ஓங்குங் கழுமலமாம்
மடைவாய்க் குருகினம் பாளை விரிதொறும் வண்டினங்கள்
பெடைவாய் மதுவுண்டு பேரா திருக்கும் பெரும்பதியே. 1

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி-பிரமபுரீசுரர், தோணியப்பர்; தேவி-திருநிலைநாயகி.

---

† சிவநெறியிற் சென்று சிவபுண்ணியம் புரிந்து ஈடேறுதற்கு அமைந்த இவ்வுலகம் என்பது இவ்வடியின் கருத்து. ‡ தலையாய்க் கிடந்து-அடிதலை வைத்தவனாய்ப் பணிந்து. ** மலையாப் பரிசிவை என்றும் பாடம். ‡‡ "நந்தமை ஆள்வனவே" என்ற மகுடம் 1, 2, 7-ம் பாட்டுக்களில் இன்மையால், அவை வேறு ஒரு தனிப் பதிகத்தைச் சேர்ந்தவையோ என்று ஆன்றோர் ஐயுறுவர். *இப் பதிகத்தில் முதற் செய்யுள் தவிர ஏனைய செய்யுட்கள் சிதைவுற்றன.

## 7. திருப்புள்ளிருக்குவேளூர்*

### திருக்குறுந்தொகை** [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வெள்ளெ ருக்கர வம்விர வுஞ்சடைப்
புள்ளி ருக்குவே ளூரரன் பொற்கழல்
உள்ளி ருக்கும் உணர்ச்சியில் லாதவர்
நள்ளி ருப்பர் நரகக் குழியிலே. 1

மாற்ற மொன்றறி யீர்மனை வாழ்க்கை போய்க்
கூற்றம் வந்துமைக் கொள்வதன் முன்னமே
போற்ற வல்லீரேற் புள்ளிருக்கு வேளூர்
சீற்ற மாயின தேய்ந்தறுங் காண்மினே. 2

அரும றையனை ஆனொடு பெண்ணனைக்
கருவி டம்மிக வுண்டவெங் கண்டனைப்
புரிவெண் ணூலனைப் புள்ளிருக்கு வேளூர்
உருகி னைபவர் உள்ளங் குளிருமே. 3

தன்னு ருவை பொருவர்க் கறிவொணா
மின்னு ருவனை மேனிவெண் நீற்றனைப்
பொன்னு ருவனைப் புள்ளிருக்கு வேளூர்
என்ன வல்லவர்க் கில்லை யிடர்களே. 4

செங்கண் மால்பிர மற்கும் அறிவொணா
அங்கி யின்னுரு வாகி அழல்வதோர்
பொங்க ரவனைப் புள்ளிருக்கு வேளூர்
மங்கை பாகனை வாழ்த்த வருமின்பே. 5

குற்ற மில்லியைக் கோலச் சிலையினால்
செற்ற வர்புரஞ் செந்தழ லாக்கியைப்
புற்ற ரவனைப் புள்ளிருக்கு வேளூர்
பற்ற வல்லவர் பாவம் பறையுமே. 6

கையி னோடுகால் கட்டி யுமரெலாம்
ஐயன் வீடினன் என்பதன் முன்னம்நீர்

* திருப்புள்ளிருக்குவேளூர் – வைத்தீசுவரன் கோவில். **இப் பதிகத்தில் 9-ம் செய்யுள் சிதைந்து போயிற்று.

பொய்யி லாஅரன் புள்ளிருக்கு வேளூர்
மையு லாவிய கண்டனை வாழ்த்துமே. 7

உள்ளம் உள்கி உகந்து சிவனென்று
மெள்ள வுள்க வினைகெடும் மெய்ம்மையே
புள்ளி னார்பணி புள்ளிருக்கு வேளூர்
வள்ளல் பாதம் வணங்கித் தொழுமினே. 8-9

அரக்க னார்தலை பத்தும் அழிதர
நெருக்கி மாமலர்ப் பாதம் நிறுவிய
பொருப்ப னாருறை புள்ளிருக்கு வேளூர்
விருப்பி னால்தொழு வார்வினை வீடுமே. 10

திருச்சிற்றம்பலம்

---

திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**ஆ**ண்டானை அடியேனை ஆளாக் கொண்டு அடியோடு முடியயன்மா லறியா வண்ணம், நீண்டானை நெடுங்களமா நகரான் தன்னை நேமிவான் படையால்நீ ளுரவோன் ஆகங், கீண்டானைக் கேதாரம் மேவி னானைக் கேடிலியைக் கிளர்பொறி வாள் அரவோ டென்பு, பூண்டானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப் போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே. 1

சீர்த்தானைச் சிறந்தடியேன் சிந்தை யுள்ளே திகழ்ந்தானைச் சிவன் தன்னைத் தேவ தேவைக், கூர்த்தானைக் கொடுநெடுவேற் கூற்றந் தன்னைக் குரைகழலாற் குமைத்துமுனி கொண்ட அச்சம், பேர்த்தானைப் பிறப்பிலியை இறப்பொன் றில்லாப் பெம்மானைக் கைம்மாவி னுரிவை பேணிப், போர்த்தானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப் போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே. 2

**ப**த்திமையாற் பணிந்தடியேன் தன்னைப் பன்னாள் பாமாலை பாடப் பயில்வித் தானை, எத்தேவும் ஏத்தும் இறைவன் தன்னை எம்மானை என்னுள்ளத் துள்ளே யூறும், அத்தேனை அமுதத்தை ஆவின்பாலை அண்ணிக்குந் தீங்கரும்பை அரனை ஆதிப், புத்தேளைப் புள்ளிருக்கு வேளூ ரானைப் போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே. 3

இருளாய வுள்ளத்தி னிருளை நீக்கி யிடர்பாவங் கெடுத்தேழையேனை யுய்யத், தெருளாத சிந்தைதனைத் தெருட்டித் தன்போற் சிவலோக நெறியறியச் சிந்தை தந்த, அருளானை ஆதிமாதவத்து ளானை ஆறங்கம் நால்வேதத் தப்பால் நின்ற, பொருளானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப் போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே. 4

மின்னுருவை விண்ணகத்தி லொன்றாய் மிக்கு வீசுங்கால் தன்னகத்தில் இரண்டாய்ச் செந்தீத், தன்னுருவின் மூன்றாய்த் தாழ் புனலின் நான்காய்த் தரணிதலத் தஞ்சாகி யெஞ்சாத் தஞ்ச, மன்னுருவை வான்பவளக் கொழுந்தை முத்தை வளரொளியை வயிரத்தை மாசொன் றில்லாப், பொன்னுருவைப் புள்ளிருக்கு வேளூ ரானைப் போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே. 5

அறையார்பொற் கழலார்ப்ப அணியார் தில்லை அம்பலத்துள் நடமாடும் அழகன் தன்னைக், கறையார்மூ விலைநடுவேற் கடவுள் தன்னைக் கடல்நாகைக் காரோணங் கருதி னானை, இறையானை என்னுள்ளத் துள்ளே விள்ளா திருந்தானை ஏழ்பொழிலுந் தாங்கி நின்ற, பொறையானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப் போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே. 6

நெருப்பனைய திருமேனி வெண்ணீற் றானை நீங்காதென் னுள்ளத்தி னுள்ளே நின்ற, விருப்பவனை வேதியனை வேத வித்தை வெண்காடும் வியன்துருத்தி நகரும் மேவி, இருப்பவனை இடைமருதோ டீங்கோய் நீங்கா இறையவனை எனையாளுங் கயிலை என்னும், பொருப்பவனைப் புள்ளிருக்கு வேளூ ரானைப் போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே. 7

பேரா யிரம்பரவி வானோ ரேத்தும் பெம்மானைப் பிரிவிலா அடியார்க் கென்றும், வாராத செல்வம் வருவிப் பானை மந்திரமும் தந்திரமும் மருந்து மாகித், தீராநோய் தீர்த்தருள வல்லான் தன்னைத் திரிபுரங்கள் தீயெழத்திண் சிலைகைக் கொண்ட, போரானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப் போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே.

பண்ணியனைப் பைங்கொடியாள் பாகன் தன்னைப் படர்சடைமேற் புனல்கரந்த படிறன் தன்னை, நண்ணியனை யென்னாக்கித்

தன்னை ஞானை நான்மறையின் நற்பொருளை நளிர்வெண் திங்கள், கண்ணியனைக் கடியநடை விடையொன் றேறுங் காரணனை நாரணனைக் கமலத் தோங்கும், புண்ணியனைப் புள்ளிருக்கு வேளூ ரானைப் போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே. 2

இறுத்தானை இலங்கையர்கோன் சிரங்கள் பத்தும் எழுநரம்பின் இன்னிசைகேட் டின்புற் றானை, அறுத்தானை அடியார்தம் அருநோய் பாவம் அலைகடலில் ஆலால முண்டு கண்டங், கறுத்தானைக் கண்ணழலாற் காமன் ஆகங் காய்ந்தானைக் கனன் மழுவுங் கலையு மங்கை, பொறுத்தானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப் போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே. 3

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—வைத்தியநாதர்; தேவி—தையனாயகி.

---

## 8. திருநின்றியூர்

### திருக்குறுந்தொகை — [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கொடுங்கண் வெண்டலை கொண்டு குறைவிலைப்
படுங்க ணொன்றில ராய்ப்பலி தேர்ந்துண்பர்
நெடுங்கண் மங்கைய ராட்டயர் நின்றியூர்க்
கடுங்கைக் கூற்றுதைத் திட்ட கருத்தரே. 1

வீதி வேல்நெடுங் கண்ணியர் வெள்வளை
நீதி யேகொளப் பாலது நின்றியூர்
வேதம் ஓதி விளங்குவெண் தோட்டராய்க்
காதில் வெண்குழை வைத்தளங் கள்வரே. 2

புற்றி னார்அர வம்புலித் தோல்மிசைச்
சுற்றி னார்சுண்ணப் போர்வைகொண் டார்சுடர்
நெற்றிக் கண்ணுடை யாரமர் நின்றியூர்
பற்றி னாரைப்பற் றாவினைப் பாவமே. 3

பறையின் ஓசையும் பாடலின் ஓசையும்
மறையின் ஓசையும் மல்கி அயலெலாம்*

---

* மல்கிவய லெலாம் என்றும் பாடம்,

நிறையும் பூம்பொழில் சூழ்திரு நின்றியூர்
உறையும் ஈசனை உள்குமென் உள்ளமே. 4

சுனையுள் நீலஞ் சுளியும் நெடுங்கணாள்
இனைய னென்றென்று மேசுவ தென்கொலோ
நினையுந் தண்வயல் சூழ்திரு நின்றியூர்ப்
பனையின் ஈருரி போர்த்த பரமரே. 5

உரைப்பக் கேண்மினும் உச்சியு ளான்றனை
நிறைப்பொன் மாமதில் சூழ்திரு நின்றியூர்
உரைப்பொற் கற்றைய ரார்இவ ரோஎனில்
திரைத்துப் பாடித் திரிதருஞ் செல்வரே. 6

கன்றி யூர்முகில் போலுங் கருங்களி(று)
இன்றி ஏறல னிது என்கொலோ
நின்றி யூர்பதி யாக நிலாயவன்
வென்றி யேறுடை எங்கள் விகிர்தனே. 7

நிலையி லாவெள்ளை மாலையன் நீண்டதோர்**
கொலைவி லால்எயில் எய்த கொடியவன்
நிலையி னார்வயல் சூழ்திரு நின்றியூர்
உரையி னால்தொழு வார்வினை ஓயுமே. 8

அஞ்சி யாகிலும் அன்புபட் டாகிலும்
நெஞ்சம் வாழி நினைநின்றி யூரைநீ
இஞ்சி மாமதில் எய்திமை யோர்தொழக்
குஞ்சி வான்பிறை சூடிய கூத்தனே. 9

எளிய னாமொழி யாஇலங் கைக்கிறை
களியி னாற்கயி லாய மெடுத்தவன்
நெளிய வூன்றவ லானமர் நின்றியூர்
அளியி னாற்றொழு வார்வினை அல்குமே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி–மகாலட்சுமீசுவரர்; தேவி–உலகநாயகி.

** மாலயனீண்டதோர் என்றும் பாடம்.

## 9. திருப்புன்கூர்

[திருப்புன்கூரும் திருநீடூரும்]*

**திருத்தாண்டகம்** [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பிறவாதே தோன்றிய பெம்மான் தன்னைப் பேணாதார் அவர் தம்மைப் பேணா தானைத், துறவாதே கட்டறுத்த சோதி யானைத் தூநெறிக்குந் தூநெறியாய் நின்றான் தன்னைத், திறமாய எத்திசையுந் தானே யாகித் திருப்புன்கூர் மேவிய சிவலோகனை, நிறமாமொளியானை நீடு ரானை நீதனே** னென்னேநான் நினையா வாறே. 1

பின்றானும் முன்றானு மானான் தன்னைப் பித்தர்க்குப் பித்தனாய் நின்றான் தன்னை, நன்றாங் கறிந்தவர்க்குந் தானே யாகி நல்வினையுந் தீவினையு மானான் தன்னைச், சென்றோங்கி விண்ணளவுந் தீயானானைத் திருப்புன்கூர் மேவிய சிவலோகனை, நின்றாய நீடூர் நிலாவி னானை நீதனே னென்னேநான் நினையா வாறே. 2

இல்லானை எவ்விடத்தும் உள்ளான் தன்னை இனிய நினையாதார்க் கின்னா தானை, வல்லானை வல்லடைந்தார்க் கருளும் வண்ணம் மாட்டாதார்க் கெத்திறத்தும் மாட்டா தானைச், செல்லாத செந்நெறிக்கே செல்விப் பானைத் திருப்புன்கூர் மேவிய சிவலோகனை, நெல்லால் விளைகழனி நீடு ரானை நீதனே னென்னே நான் நினையா வாறே. 3

கலைஞானங் கல்லாமே கற்பித் தானைக் கடுநரகஞ் சாராமே காப்பான் தன்னைப், பலவாய வேடங்கள் தானே யாகிப் பணிவார்கட் கங்கங்கே பற்றா னானைச், சிலையாற் புரமெரித்த தீயாடியைத் திருப்புன்கூர் மேவிய சிவலோகனை, நிலையார் மணிமாட நீடூரானை நீதனே னென்னேநான் நினையா வாறே. 4

நோக்காதே எவ்வளவும் நோக்கி னானை நுணுகாதே யாதொன்றும் நுணுகி னானை, ஆக்காதே யாதொன்று மாக்கி னானை அணுகாதா ரவர்தம்மை அணுகா தானைத், தேக்காதே தென்கடல்நஞ் சுண்டான் தன்னைத் திருப்புன்கூர் மேவிய சிவலோகனை, நீக்காத பேரொளிசேர் நீடூரானை நீதனே னென்னேநான் நினையாவாறே. 5

---

* இத்திருப்பதிகம் சில பிரதிகளில் இல்லை என்று சைவசித்தாந்த மகா சமாசப் பதிப்புத் தேவாரத்தில் கூறப்பட்டுள்ளது.

** நீதன்–நீசன்; நினையாமையால் நீதன் என்றது.

பூணலாப் பூணானைப் பூசாச் சாந்த முடையானை முடை நாறும் புன்க லத்தில், ஊணலா வூணானை யொருவர் காணா உத்தமனை யொளிதிகழும் மேனி யானைச், சேணுலாஞ் செழும்பவளக் குன்றொப் பானைத் திருப்புன்கூர் மேவிய சிவலோகனை, நீணுலா மலர்க்கழனி நீடு ரானை நீதனே னென்னேநான் நினையாவாறே. 6

உரையார் பொருளுக் குலப்பி லானை யொழியாமே எவ்வுயிரு மானான் தன்னைப், புரையாய்க் கனமாயாழ்ந் தாழா தானைப் புதியனவு மாய்மிகவும் பழையான் தன்னைத், திரையார் புனல்சேர் மகுடத் தானைத் திருப்புன்கூர் மேவிய சிவலோகனை, நிரையார் மணிமாட நீடு ரானை நீதனே னென்னேநான் நினையா வாறே. 7

கூடரவத் தணையானுங் குளிர்தண் பொய்கை மலரவனுங் கூடிச்சென் றறிய மாட்டார், ஆரொருவ ரவர்தம்மை யறிவார் தேவர் அறிவோமென் பார்க்கெல்லா மறிய லாகாச், சீராவக் கழலானை நிழலார் சோலைத் திருப்புன்கூர் மேவிய சிவலோகனை, நீராவத் தண்கழனி நீடு ரானை நீதனே னென்னேநான் நினையா வாறே. 8

கையெலாம் நெய்பாயக் கழுத்தே கிட்டக் கால் நிமிர்த்து நின்றுண்ணுங் கையர் சொன்ன, பொய்யெலாம் மெய்யென்று கருதிப் புக்குப் புள்ளுவ*ரா லகப்படா துய்யப் போந்தேன், செய்யெலாஞ் செழுங்கமலப் பழன வேலித் திருப்புன்கூர் மேவிய சிவலோகனை, நெய்தல்வாய்ப் புனற்படப்பை நீடு ரானை நீதனே னென்னேநான் நினையா வாறே. 9

இகழுமா றெங்ஙனே யேழை நெஞ்சே இகழாது பரந்தொன்றாய் நின்றான் தன்னை, நகழுமால் வரைக்கீழிட் டரக்கர் கோனை நலனழித்து நன்கருளிச் செய்தான் தன்னைத், திகழுமா மதகரியி னுரிபோர்த் தானைத் திருப்புன்கூர் மேவிய சிவலோகனை, நிகழுமா வல்லானை நீடு ரானை நீதனே னென்னேநான் நினையா வாறே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி-சிவலோகநாதர்; தேவி-சொக்கநாயகி.

---

* புள்ளுவர்-கள்வர்.

## 10. திருஅன்னியூர்*

### திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பாற லைத்த படுவெண் தலையினன்
நீற லைத்தசெம் மேனியன் நேரிழை
கூற லைத்தமெய் கோளர வாட்டிய
ஆற லைத்த சடைஅன்னி யூரரே. 1

பண்டொத் தமொழி யாளையொர் பாகமாய்
இண்டைச் செஞ்சடை யன்இருள் சேர்ந்ததோர்**
கண்டத் தன்கரி யின்உரி போர்த்தவன்
அண்டத் தப்புறத் தான்அன்னி யூரரே. 2

பரவி நாளும் பணிந்தவர் தம்வினை
துரவை யாகத் துடைப்பவர்† தம்மிடம்
குரவம் நாறுங் குழலுமை கூறராய்
அரவ மாட்டுவர் போல்அன்னி யூரரே. 3

வேத கீதர்விண் ணோர்க்கும் உயர்ந்தவர்
சோதி வெண்பிறை துன்று சடைக்கணி
நாதர் நீதியி னலடி யார்தமக்(கு)
ஆதி யாகிநின் றார்அன்னி யூரரே. 4

எம்பி ரான்இமை யோர்கள் தமக்கெலாம்
இன்ப ராகி இருந்தஎம் மீசனார்
துன்ப வல்வினை போகத் தொழுமவர்க்(கு)
அன்ப ராகிநின் றார்அன்னி யூரரே. 5

வெந்த நீறுமெய் பூசுநன் மேனியர்
கந்த மாமலர் சூடுங் கருத்தினர்
சிந்தை யார்சிவ னார்செய்ய தீவண்ணர்
அந்த ணாளர்கண் டீர்அன்னி யூரரே. 6

ஊனை யார்தலை யிற்பலி கொண்டுழல்
வானை வானவர் தாங்கள் வணங்கவே

---

* 'பொன்னூர்' என வழங்கப்பெறும். **கூர்ந்ததோர் என்றும் பாடம். † துரப்பவர் என்றும் பாடம்.

தேனை யார்குழ லாளையொர் பாகமா
ஆனை யீருரி யார்அன்னி யூரரே. 7

காலை போய்ப் பலி தேர்வர்கண் ணார்நெற்றி
மேலை வானவர் வந்து விரும்பிய
சோலை சூழ்புறங் காடரங் காகவே
ஆலின் கீழறத் தார்அன்னி யூரரே. 8

எரிகொள் மேனியர் என்பணிந் தின்பராய்த்
திரியு மூவெயில் தீயெழச் செற்றவர்
கரிய மாலொடு நான்முகன் காண்பதற்
கரிய ராகிநின் றார்அன்னி யூரரே. 9

வஞ்ச ரக்கன் கரமுஞ் சிரத்தொடும்
அஞ்சு மஞ்சுமோ ராறுநான் கும்மிறப்
பஞ்சின் மெல்விர லால்அடர்த் தாயிழை
அஞ்சல் அஞ்சலென் றார்அன்னி யூரரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி—ஆபத்சகாயேசுவரர்; தேவி—பெரியநாயகி.

## 11. திருமணஞ்சேரி*

### திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பட்ட நெற்றியர் பாய்புலித் தோலினர்
நட்ட நின்று நவில்பவர் நாடொறும்
சிட்டர் வாழ்திரு வார்மணஞ் சேரியெம்
வட்ட வார்சடை யார்வண்ணம் வாழ்த்துமே. 1

துன்னு வார்குழ லாளுமை யாளொடும்
பின்னு வார்சடை மேற்பிறை வைத்தவர்
மன்னு வார்மணஞ் சேரி மருந்தினை
உன்னு வார்வினை யாயின ஓயுமே. 2

புற்றி லாடர வாட்டும் புனிதனார்
தெற்றி னார்புரந் தீயெழச் செற்றவர்
சுற்றி னார்மதில் சூழ்மணஞ் சேரியார்
பற்றி னாரவர் பற்றவர் காண்மினே. 3

* 'கீழைத் திருமணஞ்சேரி' என்று வழங்குவர்.

மத்த மும்மதி யும்வளர் செஞ்சடை
முத்தர் முக்கணர் மூசர வம்மணி
சித்தர் தீவணர் சீர்மணஞ் சேரியெம்
வித்தர் தாம்விருப் பாரை விருப்பரே. 4

துள்ளு மான்மறி தூமழு வாளினர்
வெள்ள நீர்கரந் தார்சடை மேலவர்
அள்ள லார்வயல் சூழ்மணஞ் சேரியெம்
வள்ள லார்கழல் வாழ்த்தல்வாழ் வாவதே. 5

நீர்ப ரந்த நிமிர்புன் சடையின்மேல்
ஊர்ப ரந்த உரகம் அணிபவர்
சீர்ப ரந்த திருமணஞ் சேரியார்
ஏர்ப ரந்தங் கிலங்குசூ லத்தரே. 6

சுண்ணத் தர்சுடு நீறுகந் தாடலார்
விண்ணத் தம்மதி சூடிய வேதியர்
மண்ணத் தம்முழ வார்மணஞ் சேரியார்
வண்ணத் தம்முலை யாளுமை வண்ணரே. 7

துன்ன வாடையர் தூமழு வாளினர்
பின்னு செஞ்சடை மேற்பிறை வைத்தவர்
மன்னு வார்பொழில் சூழ்மணஞ் சேரியெம்
மன்ன னார்கழ லேதொழ வாய்க்குமே. 8

சித்தர் தேவர்கள் மாலொடு நான்முகன்
புத்தர் சேரமண் கையர்* புகழவே
மத்தர் தாமறி யார்மணஞ் சேரியெம்
அத்த னாரடி யார்க்கல்ல லில்லையே. 9

கடுத்த மேனி அரக்கன் கயிலையை
எடுத்த வன்னெடு நீண்முடி பத்திறப்
படுத்த லும்மணஞ் சேரி யருளெனக்
கொடுத்த னன்கொற்ற வாளொடு நாமமே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி-அருள்வள்ளல் நாயகர்; தேவி-யாழின்மொழியம்மை.

---

* தேரமண்கையர் என்றும் பாடம்.

## 12. திருக்குறுக்கை வீரட்டம்*

### திருநேரிசை [4-ம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

*ஆதியிற் பிரம னார்தாம் அர்ச்சித்தார் அடியி ணைக்கீழ்*
*ஓதிய வேத நாவர் உணருமா றுணர லுற்றார்*
*சோதியுட் சுடராய்த் தோன்றிச் சொல்லினை யிறந்தார் பல்பூக்*
*கோதிவண் டறையுஞ் சோலைக் குறுக்கைவீ ரட்ட னாரே.* 1

நீற்றினை நிறையப் பூசி நித்தலும் நியமஞ் செய்து
ஆற்றுநீர் பூரித் தாடடும் அந்தண னாரைக் கொல்வான்
சாற்றுநாள் அற்ற தென்று† தருமரா சற்காய் வந்த
கூற்றினைக் குமைப்பர் போலுங் குறுக்கைவீ ரட்ட னாரே. 2

தழைத்ததோர் ஆத்தி யின்கீழ்த் தாபர மணலாற் கூப்பி
அழைத்தங்கே ஆவின் பாலைக் கறந்துகொண் டாட்டக் கண்டு
பிழைத்ததன் தாதை தாளைப் பெருங்கொடு மழுவால் வீசக்
குழைத்ததோர் அமுதம் ஈந்தார் குறுக்கைவீ ரட்ட னாரே. 3

சிலந்தியும் ஆனைக் காவில் திருநிழற் பந்தர் செய்து
உலந்தவண் இறந்த போதே கோச்செங்க ணானு மாகக்
கலந்தநீர்க் காவிரி சூழ் சோணாட்டுச் சோழர் தங்கள்
குலந்தனிற் பிறப்பித் திட்டார் குறுக்கைவீ ரட்ட னாரே. 4

ஏறுடன் ஏழ டர்த்தான் எண்ணிஆ யிரம்பூக் கொண்டு
ஆறுடைச் சடையி னானை அர்ச்சித்தான் அடியி ணைக்கீழ்
வேறுமோர் பூக்கு றைய மெய்ம்மலர்க் கண்ணை மிண்டக்
கூறுமோர் ஆழி ஈந்தார் குறுக்கைவீ ரட்ட னாரே. 5

கல்லினால் எறிந்து கஞ்சி தாமுணுஞ் சாக்கியனார்
நெல்லினார் சோறு ணாமே நீள்விசும் பாள வைத்தார்
*எல்லியாங் கெரிகை ஏந்தி எழில்திகழ் நட்ட மாடிக்*
*கொல்லியம் பண்உ கந்தார் குறுக்கைவீ ரட்ட னாரே.* 6

---

* 'குறுக்கை' என்று வழங்கப்படும். ** இத்திருப்பதிகம் ஒவ்வோர் சரிதத்தை ஒவ்வோர் பாட்டில் கூறி இறைவன் புகழை விளக்குகிறது. † சாற்றி நாளற்றதென்று என்றும் பாடம். ‡ கையுடை இறைச்சிப்பாரம் என்றும் பாடம்.

காப்பதோர் வில்லும் அம்புங் கையதோர் இறைச்சிப் பாரம்‡
தோற்பெருஞ் செருப்புத் தொட்டுத் தூயவாய்க் கலசம் ஆட்டித்
தீப்பெருங் கண்கள் செய்ய குருதிநீர் ஒழுகத் தன்கண்
கோப்பதும் பற்றிக் கொண்டார் குறுக்கைவீ ரட்ட னாரே. 7

நிறைமறைக் காடு தன்னில் நீண்டெரி தீபந் தன்னைக்
கறைநிறத் தெலிதன் மூக்குச் சுட்டிடக் கனன்று தூண்ட
நிறைகடல் மண்ணும் விண்ணும் நீண்டவா னுலக மெல்லாங்
குறைவறக் கொடுப்பர் போலுங் குறுக்கைவீ ரட்ட னாரே. 8

அணங்குமை பாக மாக அடக்கிய ஆதி மூர்த்தி
வணங்குவார் இடர்கள் தீர்க்கும் மருந்துநல் அருந்த வத்த
கணம்புல்லர்க் கருள்கள் செய்து காதலாம் அடியார்க் கென்றுங்
குணங்களைக் கொடுப்பர் போலுங் குறுக்கைவீ ரட்ட னாரே. 9

எடுத்தனன் எழிற்கயிலை இலங்கையர் மன்னன் தன்னை
அடுத்தொரு விரலால் ஊன்ற அலறிப்போய் அவனும் வீழ்ந்து
விடுத்தனன் கைந ரம்பால் வேதகீ தங்கள் பாடக்
கொடுத்தனர் கொற்ற வாணாள்§ குறுக்கைவீ ரட்ட னாரே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

நெடியமால் பிரமனோடு நீரெனும் பிலயங்* கொள்ள
அடியொடு முடியுங் காணார் அருச்சுனற் கம்பும் வில்லும்
துடியுடை வேட ராகித் தூயமந் திரங்கள் சொல்லிக்
கொடிநெடுந் தேர்கொ டுத்தார் குறுக்கைவீ ரட்ட னாரே. 1

ஆத்தமாம் அயனு மாலும் அன்றிமற் றொழிந்த தேவர்
சோத்தம்**எம் பெருமா னென்று தொழுதுதோத் திரங்கள் சொல்லத்
தீர்த்தமாம் அட்ட மிமுன் சீருடை ஏழு நாளுங்
கூத்தராய் வீதி போந்தார் குறுக்கைவீ ரட்ட னாரே. 2

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—வீரட்டேசுவரர்; தேவி—ஞானம்பிகை.

---

§ வாணாள் - வாழ்நாள். * பிலயம் - பிரளயம். ** சோத்தம் - இழிந்தோர் செய்யும் அஞ்சலி.

## 13. திருக்குரக்குக்கா†

### திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மரக்கொக் காமென வாய்விட் டலறிநீர்
சரக்குக் காவித் திரிந்தய ராதுகால்
பரக்குங் காவிரி நீரலைக் குங்கரைக்
குரக்குக் காவடை யக்கெடுங் குற்றமே. 1

கட்டா றேகழி காவிரி பாய்வயல்
கொட்டா றேபுன லூறு குரக்குக்கா
முட்டா ருஅடி யேத்த முயல்பவர்க்(கு)
இட்டா ருஇட ரோட எடுக்குமே. 2

கையனைத்துங் கலந்தெழு காவிரி*
செய்ய னைத்திலுஞ் சென்றிடுஞ் செம்புனல்
கொய்ய னைத்துங் கொணருங் குரக்குக்கா
ஐய னைத்தொழு வார்க்கல்ல லில்லையே. 3

மிக்க னைத்துத் திசையும் அருவிகள்
புக்குக் காவிரி போந்த புனற்கரைக்
கொக்கி னம்பயில் சோலைக் குரக்குக்கா
நக்க னைநவில் வார்வினை நாசமே. 4

விட்டு வெள்ளம் விரிந்தெழு காவிரி
இட்ட நீர்வய லெங்கும் பரந்திடக்
கொட்ட மாமுழ வோங்கு குரக்குக்கா
இட்ட மாயிருப் பார்க்கிட ரில்லையே. 5

மேலை வானவ ரோடு விரிகடல்
மாலும் நான்முக னும் அளப்பொணுக்
கோல மாளிகைக் கோயில் குரக்குக்காப்
பால ராய்த்திரி வார்க்கில்லை பாவமே. 6

ஆல நீழ லமர்ந்த அழகனர்
கால னையுதை கொண்ட கருத்தனர்
கோல மஞ்ஞைகள் ஆலுங் குரக்குக்காப்
பால ருக்கருள் செய்வர் பரிவொடே. 7

---

† இஃது அநுமன் பூசித்ததனல் பெற்ற பெயர். * கலந்திழி காவிரி என்றும் பாடம்.

செக்க ரங்கெழு செஞ்சுடர்ச் சோதியார்*
அக்க ரையரெம் மாதிபு ராணனூர்
கொக்கி னம்வயல் சேருங் குரக்குக்கா
நக்க னைத்தொழ நம்வினை நாசமே. 8

உருகி ஊன்குழைந் தேத்தி யெழுமின்நீர்
கரிய கண்டன் கழலடி தன்னையே
குரவ னஞ்செழுங் கோயில் குரக்குக்கா
இரவும் எல்லியும் ஏத்தித் தொழுமினே. 9

இரக்க மின்றி மலையெடுத் தான்முடி
உரத்தை ஒல்க அடர்த்தா னுறைவிடம்
குரக்கி னங்குதி கொள்ளுங் குரக்குக்கா
வரத்த னைப்பெற** வானுல காள்வரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி-கொந்தளேசுவரர்; தேவி-கொந்தளநாயகி.

## 14. திருவோமாம்புலியூர்

### திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]†

திருச்சிற்றம்பலம்

ஆராரும் மூவிலைவேல் அங்கை யானை அலைகடல்நஞ் சயின் றானை அமர ரேத்தும், ஏராரும் மதிபொதியுஞ் சடையி னானை எழுபிறப்பும் எனையாளா வுடையான்§ தன்னை, ஊராரும் பட நாகம் ஆட்டு வானை உயர்புகழ்சேர் தருமோமாம் புலியூர் மன்னுஞ், சீராரும் வடதளியெஞ் செல்வன் தன்னைச் சேராதே திகைத்து நாள் செலுத்தி னேனே. 1

ஆதியான் அரிஅயனென் றறிய வொண்ணா அமரர் தொழுங் கழலானை யமலன் தன்னைச், சோதிமதி கலைதொலையத்‡ தக்க னெச்சன் சுடரிரவி அயிலெயிறு தொலைவித் தானை, ஓதிமிக அந்தணர்கள் எரிமூன் றோம்பும் உயர்புகழார் தருமோமாம்

* செஞ்சடைச் சோதியார் என்றும் பாடம், ** வரத்தினைப் பெற என்றும் பாடம். † இப்பதிகத்தில் 10-ம் செய்யுள் சிதைந்து போயிற்று. § எனையாளவுடையான் என்றும் பாடம். ‡ கலைசிதையத் என்றும் பாடம்.

புலியூர் மன்னுந், தீதில்திரு வடதளியெஞ் செல்வன் தன்னைச் சேராதே திகைத்துநாள் செலுத்தி னேனே. 2

வருமிக்க மதயானை யுரித்தான் தன்னை வானவர்கோன் தோளனைத்தும் மடிவித் தானைத், தருமிக்க குழலுமையாள் பாகன் தன்னைச் சங்கரனெம் பெருமானைத் தரணி தன்மேல் உருமிக்க மணிமாடம் நிலாவு வீதி உத்தமர்வாழ் தருமோமாம் புலியூர் மன்னுந், திருமிக்க வடதளியெஞ் செல்வன் தன்னைச் சேராதே திகைத்துநாள் செலுத்தி னேனே. 3

அன்றினவர் புரமூன்றும் பொடியாய் வேவ அழல்விழித்த கண்ணானை அமரர் கோனை, வென்றிமிகு காலனுயிர் பொன்றி வீழ விளங்குதிரு வடியெடுத்த விகிர்தன் தன்னை, ஒன்றியசீர் இருபிறப்பர் முத்தீ யோம்பும் உயர்புகழ்நான் மறையோமாம் புலியூர் நாளுந், தென்றல்மலி வடதளியெஞ் செல்வன் தன்னைச் சேராதே திகைத்துநாள் செலுத்தி னேனே. 4

பாங்குடைய எழிலங்கி யருச்சனைமுன் விரும்பப் பரிந்த வனுக் கருள்செய்த பரமன் தன்னைப், பாங்கிலா நரகதனில் தொண்ட ரானோர் பாராத வகைபண்ண வல்லான் தன்னை, ஓங்கு மதில் புடைதழுவும் எழிலோமாம் புலியூர் உயர்புகழந் தணரேத்த வுலகர்க் கென்றுங், தீங்கில்திரு வடதளியெஞ் செல்வன் தன்னைச் சேராதே திகைத்துநாள் செலுத்தி னேனே. 5

அருந்தவத்தோர் தொழுதேத்தும் அம்மான் தன்னை ஆராத இன்னமுதை அடியார் தம்மேல், வருந்துயரந் தவிர்ப்பானை உமையாள் நங்கை மணவாள நம்பியையென் மருந்து தன்னைப், பொருந்துபுனல் தழுவுவயல் நிலவு துங்கப் பொழில்கெழுவு தருமோமாம் புலியூர் நாளுந், திருந்துதிரு வடதளியெஞ் செல்வன் தன்னைச் சேராதே திகைத்துநாள் செலுத்தி னேனே. 6

மலையானை வருமலையன் றுரிசெய் தானை மறையானை மறை யாலும் அறிய வொண்ணாக், கலையானைக் கலையாருங் கையி னானைக் கடிவானை அடியார்கள் துயர மெல்லாம், உலையாத அந்தணர்கள் வாழு மோமாம் புலியூரெம் உத்தமனைப் புரமூன் றெய்த, சிலையானை வடதளியெஞ் செல்வன் தன்னைச் சேராதே திகைத்துநாள் செலுத்தி னேனே. 7

சேர்ந்தோடு மணிக்கங்கை சூடி னானைச் செழுமதியும் படஅரவும் உடன்வைத் தானைச், சார்ந்தோர்கட் கினியானைத் தன்னொப் பில்லாத் தழலுருவைத் தலைமகனைத் தகைநால் வேதம், ஓர்ந்தோதிப் பயில்வார்வாழ் தருமோமாம் புலியூர் உள்ளானைக் கள்ளாத அடியார் நெஞ்சில், சேர்ந்தானை வடதளியெஞ் செல்வன் தன்னைச் சேராதே திகைத்துநாள் செலுத்தி னேனே. 8

வார்கெழுவு முலையுமையாள் வெருவ அன்று மலையெடுத்த வாளரக்கன் தோளுந் தாளும், ஏர்கெழுவு சிரம்பத்தும் இறுத்து மீண்டே இன்னிசைகேட் டிருந்தானை இமையோர் கோனைப், பார்கெழுவு புகழ் மறையோர் பயிலும் மாடப் பைம்பொழில்சேர் தருமோமாம் புலியூர் மன்னுஞ், சீர்கெழுவு வட்தளி†யெஞ் செல்வன் தன்னைச் சேராதே திகைத்துநாள் செலுத்தி னேனே. 9-10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—துயர்தீர்த்தநாதர்; தேவி—பூங்கொடி நாயகி.

---

## 15. திருநாரையூர்.

### திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வீறு தானுடை வெற்பன் மடந்தையோர்
கூற ளுகிலுங் கூன்பிறை சூடிலும்
நாறு பூம்பொழில் நாரையூர் நம்பனுக்(கு)
ஆறு சூடலும் அம்ம அழகிதே. 1

புள்ளி கொண்ட புலியுரி யாடையும்
வெள்ளி கொண்டவெண் பூதிமெய் யாடலும்
நள்ளி தெண்டிரை நாரையூ ரான்நஞ்சை
அள்ளி யுண்டலும் அம்ம அழகிதே. 2

வேடு தங்கிய வேடமும் வெண்டலை
ஓடு தங்கிய வுண்பலி கொள்கையும்
நாடு தங்கிய நாரையூ ரான்நடம்
ஆடு பைங்கழல் அம்ம அழகிதே. 3

---

† வடதளி – திருவோமாம் புலியூர் ஆலயத்தின் கீழ்ப் பகுதியிலுள்ள ஓர் ஆலயம்.

கொக்கின் தூவலுங் கூவிளங் கண்ணியும்
மிக்க வெண்டலை மாலை விரிசடை
நக்க ணாகிலும் நாரையூர் நம்பனுக்(கு)
அக்கி னாரமும் அம்ம அழகிதே. 4

வடிகொள் வெண்மழு மான்அமர் கைகளும்
பொடிகொள் செம்பவ ளம்புரை மேனியும்
நடிகொள் நன்மயில் சேர்திரு நாரையூர்
அடிகள் தம்வடி வம்ம அழகிதே. 5

சூலம் மல்கிய கையுஞ் சுடரொடு
பாலும் நெய்தயி ராடிய பான்மையும்
ஞாலம் மல்கிய நாரையூர் நம்பனுக்கு
ஆல நீழலும் அம்ம அழகிதே. 6

பண்ணி னான்மறை பாடலொ டாடலும்
எண்ணி லார்*புர மூன்றெரி செய்ததும்
நண்ணி னார்துயர் தீர்த்தலும் நாரையூர்
அண்ண லார்செய்கை அம்ம அழகிதே. 7

என்பு பூண்டொரு தேறி இளம்பிறை
மின்பு ரிந்த சடைமேல் விளங்கவே
நன்ப கற்பலி தேரினும் நாரையூர்
அன்ப னுக்கது அம்ம அழகிதே. 8

முரலுங் கின்னரம் மொந்தை முழங்கவே
இரவி னின்றெரி யாடலு நீடுலாம்**
நரலும் வாரிநன் னாரையூர் நம்பனுக்(கு)
அரவும் பூணுதல் அம்ம அழகிதே. 9

கடுக்கை யஞ்சடை யன்கயி லைம்மலை
எடுத்த வாளரக் கன்தலை ஈரைஞ்சும்
நடுக்கம் வந்திற நாரையூ ரான்விரல்
அடுத்த தன்மையும் அம்ம அழகிதே. 10

திருச்சிற்றம்பலம்

---

* எண்ணினார் என்றும் பாடம். ** நீடுவான் என்றும் பாடம்.

## திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

### திருச்சிற்றம்பலம்

சொல்லானைப் பொருளானைச் சுருதி யானைச் சுடராழி நெடுமாலுக் கருள் செய்தானை, அல்லானைப் பகலானை அரியான் தன்னை அடியார்கட் கெளியானை அரண்மூன் றெய்த, வில்லா னைச் சரம்விசயற் கருள்செய் தானை வெங்கதிரோன் மாமுனிவர் விரும்பி யேத்தும், நல்லானைத் தீயாடு நம்பன் தன்னை நாரையூர் நன்னகரிற் கண்டேன் நானே. 1

பஞ்சுண்ட மெல்லடியாள் பங்கன் தன்னைப் பாரொடுநீர் சுடர்படர்காற் றாயி னானை, மஞ்சுண்ட வானாகி வானந் தன்னில் மதியாகி மதிசடைமேல் வைத்தான் தன்னை, நெஞ்சுண்டென் நினைவாகி* நின்றான் தன்னை நெடுங்கடலைக் கடைந்தவர்போய் நீங்க வோங்கும், நஞ்சுண்டு தேவர்களுக் கமுதீந் தானை நாரை யூர் நன்னகரிற் கண்டேன் நானே. 2

மூவாதி யாவர்க்கும் மூத்தான் தன்னை முடியாதே முதல் நடுவு முடிவா னானைத், தேவாதி தேவர்கட்குந் தேவன் தன்னைத் திசைமுகன்றன் சிரமொன்று சிதைத்தான் தன்னை, ஆவாத அடலேறொன் றுடையான் தன்னை அடியேற்கு நினைதோறும் அண்ணிக் கின்ற, நாவானை நாவினில்நல் லுரையா னானை நாரை யூர் நன்னகரிற் கண்டேன் நானே. 3

செம்பொன்னை நன்பவளந் திகழும் முத்தைச் செழுமணி யைத் தொழுமவர்தஞ் சித்தத் தானை, வம்பவிழும் மலர்க்கணை வேள் உலக்க நோக்கி மகிழ்ந்தானை மதிற்கச்சி மன்னு கின்ற, கம்பனையெங் கயிலாய மலையான் தன்னைக் கழுகினொடு காகுத் தன் கருதி யேத்தும், நம்பனையெம் பெருமானை நாதன் தன்னை நாரையூர் நன்னகரிற் கண்டேன் நானே. 4

புரையுடைய கரியுரிவைப் போர்வை யானைப் புரிசடைமேற் புனலடைத்த புனிதன் தன்னை, விரையுடைய வெள்ளெருக்கங் கண்ணி யானை வெண்ணீறு செம்மேனி விரவி னானை, வரை யுடைய மகள்தவஞ்செய் மணாளன் தன்னை வருபிணிநோய் பிரி விக்கும் மருந்து தன்னை, நரைவிடைநற் கொடியுடைய நாதன் தன்னை நாரையூர் நன்னகரிற் கண்டேன் நானே. 5

* நெஞ்சுண்ட நினைவாகி என்றும் பாடம்.

பிறவாதும் இறவாதும் பெருகி னானைப் பேய்பாட நடமாடும் பித்தன் தன்னை, மறவாத மனத்தகத்து மன்னி னானை மலையானைக் கடலானை வனத்து ளானை, உறவானைப் பகையானை உயிரா னானை உள்ளானைப் புறத்தானை ஓசை யானை, நறவாரும் பூங்கொன்றை சூடி னானை நாரையூர் நன்னகரிற் கண்டேன் நானே. 6

தக்கனது வேள்விகெடச் சாடி னானைத் தலைகலனாப் பலியேற்ற தலைவன் தன்னைக், கொக்கரைசச் சரிவீணைப் பாணி யானைக் கோணாகம் பூணாகக் கொண்டான் தன்னை, அக்கினொடும் என்பணிந்த அழகன் தன்னை அறுமுகனோ டானைமுகற் கப்பன் தன்னை, நக்கனைவக் கரையானை நள்ளாற் றானை நாரையூர் நன்னகரிற் கண்டேன் நானே. 7

அரிபிரமர் தொழுதேத்தும் அத்தன் தன்னை அந்தகனுக் கந்தகனை அளக்க லாகா, எரிபுரியும் இலிங்கபுரா ணத்து ளானை எண்ணாகிப் பண்ணா ரெழுத்தா னானைத், திரிபுரஞ்செற் றொருமூவர்க் கருள்செய் தானைச் சிலந்திக்கும் அரசளித்த செல்வன் தன்னை, நரிவிரவு காட்டகத்தி லாட லானை நாரையூர் நன்னகரிற் கண்டேன் நானே. 8

ஆலாலம் மிடற்றணியா அடக்கி னானை ஆலதன்கீழ் அறம்நால்வர்க் கருள்செய் தானைப், பாலாகித் தேனாகிப் பழமு மாகிப் பைங்கரும்பா யங்கருந்துஞ் சுவையா னானை, மேலாய வேதியர்க்கு வேள்வி யாகி வேள்வியினின் பயனாய விமலன் தன்னை, நாலாய மறைக்கிறைவ னாயி னானை நாரையூர் நன்னகரிற் கண்டேன் நானே. 9

மீளாத ஆளென்னை உடையான் தன்னை வெளிசெய்த வழிபாடு மேவி னானை, மாளாமை மறையவனுக் குயிரும் வைத்து வன்கூற்றின் உயிர்மாள உதைத்தான் தன்னைத், தோளாண்மை கருதிவரை யெடுத்த தூர்த்தன் தோள்வலியுந் தாள்வலியுந் தொலைவித் தாங்கே, நாளோடு வாள்கொடுத்த நம்பன் தன்னை நாரையூர் நன்னகரிற் கண்டேன் நானே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—சௌந்தரேசுவரர்; தேவி—திரிபுரசுந்தரி.

---

## 16. திருக்கடம்பூர்*

### திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

தளருங் கோளர வத்தொடு தண்மதி
வளருங் கோல வளர்சடை யார்க்கிடம்
கிளரும் பேரிசைக் கின்னரம் பாட்டறாக்
களருங் கார்க்கடம் பூர்க்கரக் கோயிலே.** 1

வெலவ லான்புலன் ஐந்தொடு வேதமும்
சொலவ லான்சுழ லுந்தடு மாற்றமும்
அலவ லான்மனை யார்ந்தமென் தோளியைக்
கலவ லான்கடம் பூர்க்கரக் கோயிலே. 2

பொய்தொ ழாது புலியுரி யோன்பணி
செய்தெ ழாஎழு வார்பணி செய்தெழா
வைதெ ழாதெழு வாரவர் எள்கநீர்
கைதொ ழாஎழு மின்கரக் கோயிலே. 3

துண்ணெ னாமனத் தால்தொழு நெஞ்சமே
பண்ணி னல்முனம் பாடலது செய்தே
எண்ணி லார்எயில் மூன்றும் எரித்தழுக்
கண்ணி னன்கடம் பூர்க்கரக் கோயிலே. 4

சுனையுள் நீல மலரன கண்டத்தன்
புனையும் பொன்னிறக் கொன்றை புரிசடைக்
கனையும் பைங்கழ லான்கரக் கோயிலை
நினையும் உள்ளத் தவர்வினை நீங்குமே. 5

குணங்கள் சொல்லியுங் குற்றங்கள் பேசியும்
வணங்கி வாழ்த்துவர் அன்புடை யாரெலாம்
வணங்கி வான்மலர் கொண்டடி வைகலும்
கணங்கள் போற்றிசைக் குங்கரக் கோயிலே. 6

பண்ணி னார்மறை பல்பல பூசனை
மண்ணி னார்செய்வ தன்றியும் வைகலும்

---

* 'மேலக்கடம்பூர்' என்று வழங்குவர். ** கரக்கோயில் என்பது திருக்கடம்பூர் ஆலயத்தின் பெயர்.

விண்ணி ஞர்கள் வியக்கப் படுவன†
கண்ணி ஞர்கடம் பூர்க்கரக் கோயிலே. 7

அங்கை ஆரழல் ஏந்திநின் ருடலன்
மங்கை பாட மகிழ்ந்துடன் வார்சடைக்
கங்கை யானுறை யுங்கரக் கோயிலைத்
தங்கை யால்தொழு வார்வினை சாயுமே. 8

நங்க டம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென்க டம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே. 9

பணங்கொள் பாற்கடல் பாம்பணை யானொடும்
மணங்க மழ்மலர்த் தாமரை யானவன்
பிணங்கும் பேரழல் எம்பெரு மாற்கிடம்
கணங்கள் போற்றிசைக் குங்கரக் கோயிலே. 10

வரைக்கண் நாலஞ்சு தோளுடை யான்தலை
அரைக்க வூன்றி அருள்செய்த ஈசனார்
திரைக்குந் தண்புனல் சூழ்கரக் கோயிலை
உரைக்கும் உள்ளத்த வர்வினை ஓயுமே. 11

திருச்சிற்றம்பலம்

---

## திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

ஒருவ ராய்இரு மூவரு மாயவன்
குருவ தாய குழகன் உறைவிடம்
பருவ ரால்குதி கொள்ளும் பழனஞ்சூழ்
கருவ தாங்கடம் பூர்க்கரக் கோயிலே. 1

வன்னி மத்தம் வளரிளந் திங்களோர்
கன்னி யாளைக் கதிர்முடி வைத்தவன்
பொன்னின் மல்கு புணர்முலை யாளொடும்
மன்னி னன்கடம் பூர்க்கரக் கோயிலே. 2

இல்லக் கோலமும் இந்த இளமையும்
அல்லற் கோலம் அறுத்துய வல்லீரே

† வியக்கப்படுமவன் என்றும் பாடம்.

ஒல்லைச் சென்றடை யுங்கடம் பூர்நகர்ச்
செல்வக் கோயில் திருக்கரக் கோயிலே. 3

வேறு சிந்தையி லாதவர் தீவினை
கூறு செய்த குழகன் உறைவிடம்
ஏறு செல்வத் திமையவர் தாந்தொழும்
ஆறு சேர்கடம் பூர்க்கரக் கோயிலே. 4

திங்கள் தங்கிய செஞ்சடை மேலுமோர்
மங்கை தங்கும் மணாளன் இருப்பிடம்
பொங்கு சேர்மணற் புன்னையும் ஞாழலும்
தெங்கு சேர்கடம் பூர்க்கரக் கோயிலே. 5

மல்லை ஞாலத்து வாழும் உயிர்க்கெலாம்
எல்லை யான பிரானார் இருப்பிடம்
கொல்லை முல்லை கொழுந்தகை மல்லிகை
நல்ல சேர்கடம் பூர்க்கரக் கோயிலே. 6

தளரும் வாளர வத்தொடு தண்மதி
வளரும் பொற்சடை யாற்கிட மாவது
கிளரும் பேரொலி கின்னரம் பாட்டறாக்
களரி யார்கடம் பூர்க்கரக் கோயிலே. 7

உற்றா ராய்உற வாகி உயிர்க்கெலாம்
பெற்றா ராயபி ரானார் உறைவிடம்
முற்றார் மும்மதில் எய்த முதல்வனார்
கற்றார் சேர்கடம் பூர்க்கரக் கோயிலே. 8

வெள்ளை நீறணி மேனிய வர்க்கெலாம்
உள்ள மாய பிரானார் உறைவிடம்
பிள்ளை வெண்பிறை சூடிய சென்னியான்
கள்வன் சேர்கடம் பூர்க்கரக் கோயிலே. 9

பரப்பு நீரிலங் கைக்கிறை வன்அவன்
உரத்தி னால்அடுக் கல்எடுக் கல்லுற
இரக்க மின்றி இறைவிர லாற்றலை
அரக்கி னன்கடம் பூர்க்கரக் கோயிலே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—அமிர்தகடேசுவரர்; தேவி—சோதிமின்னம்மை.

# 17. திருப்பந்தணைநல்லூர் *

## திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நோதங்க மில்லாதார் நாகம் பூண்டார் நூல்பூண்டார் நூன்மேலோ ராமை பூண்டார், பேய்தங்கு நீள்நாட்டில் நட்ட மாடிப் பிறைசூடுஞ் சடைமேலோர் புனலுஞ் சூடி, ஆதங்கு பைங்குழலாள் பாகங் கொண்டார் அனல் கொண்டார் அந்திவாய் வண்ணங் கொண்டார், பாதங்க நீறேற்றார் பைங்க ணேற்றார் பலியேற்றார் பந்தணை நல்லூ ராரே. 1

காடலாற் கருதாதார் கடல்நஞ் சுண்டார் களிற்றுரிவை மெய்போர்த்தார் கலன தாக, ஓடலாற் கருதாதார் ஒற்றி யூரார் உறுபிணியுஞ் செறுபகையு மொற்றைக் கண்ணால், பீடுலாந் தனைசெய்வார் பிடவ மொந்தை குடமுழவங் கொடுகொட்டி குழலு மோங்கப், பாடலா ராடலார் பைங்க ணேற்றார் பலியேற்றார் பந்தணை நல்லூ ராரே. 2

பூதப் படையுடையார் பொங்கு நூலார் புலித்தோ லுடையினார் போரேற்றினார், வேதத் தொழிலார் விரும்ப நின்றார் விரிசடைமேல் வெண்திங்கட் கண்ணி சூடி, ஓதத் தொலிகடல்வாய் நஞ்ச முண்டார் உம்பரோ டம்பொன் னுலக மாண்டு, பாதத் தொடுகழலார் பைங்க ணேற்றார் பலியேற்றார் பந்தணை நல்லூ ராரே. 3

நீருலாஞ் சடைமுடிமேல் திங்க ளேற்றார் நெருப்பேற்றார் அங்கையில் நிறையு மேற்றார், ஊரெலாம் பலியேற்றார் அரவ மேற்றார் ஒலிகடல் வாய்நஞ்சம் மிடற்றி லேற்றார், வாருலா முலைமடவாள் பாக மேற்றார் மழுவேற்றார் மான்மறியோர் கையி லேற்றார், பாருலாம் புகழேற்றார் பைங்க ணேற்றார் பலியேற்றார் பந்தணை நல்லூ ராரே. 4

தொண்டர் தொழுதேத்துஞ் சோதி யேற்றார் துளங்கா மணிமுடியார் தூய நீற்றார், இண்டைச் சடைமுடியார் ஈமஞ் சூழ்ந்த இடு பிணக்காட் டாடலா ரேமந் தோறும், அண்டத்துக் கப்புறத்தார் ஆதி யானார் அருக்கனா யாரழலா யடியார் மேலைப், பண்டை

* 'பந்தநல்லூர்' என்று வழங்கப் பெறும்.

வினையறுப்பார் பைங்க ணேற்றார் பலியேற்றார் பந்தணை நல்லூ
ராரே. 5

கடமன்னு களியானை யுரிவை போர்த்தார் கானப்பேர் காத
லார் காதல் செய்து, மடமன்னு மடியார்தம் மனத்தி னுள்ளார்
மானுரிதோல் மிசைத் தோளார் மங்கை காண, நடமன்னி யாடு
வார் நாகம் பூண்டார் நான்மறையோ டாறங்கம் நவின்ற நாவார்,
படமன்னு திருமுடியார் பைங்க ணேற்றார் பலியேற்றார் பந்தணை
நல்லூ ராரே. 6

முற்றா மதிச்சடையார் மூவரானார் மூவுலகு மேத்தும் முதல்வ
ரானார், கற்றார் பரவுங் கழலார் திங்கள் கங்கையாள் காதலார் காம்
பேய் தோளி, பற்றாகும் பாகத்தார் பால்வெண் ணீற்றார் பான்
மையா லூழி யுலக மானார், பற்றார் மதிலெரித்தார் பைங்க ணேற்
றார் பலியேற்றார் பந்தணை நல்லூ ராரே. 7

கண்ணமரு நெற்றியார் காட்டார் நாட்டார் கனமழுவாட்
கொண்டதோர் கையார் சென்னிப், பெண்ணமருஞ் சடைமுடி
யார் பேரோன் றில்லார் பிறப்பிலார் இறப்பிலார்† பிணியோன் றில்
லார், மண்ணவரும் வானவரும் மற்றை யோரும் மறையவரும்
வந்தெதிரே வணங்கி யேத்தப், பண்ணமரும் பாடலார் பைங்க
ணேற்றார் பலியேற்றார் பந்தணை நல்லூ ராரே. 8

ஏறேறி யேழுலகு மேத்தநின்றார் இமையவர்கள் எப்பொழுது
மிறைஞ்ச நின்றார், நீறேறு மேனியார் நீல முண்டார் நெருப்புண்
டார் அங்கை யனலு முண்டார், ஆறேறு சென்னியார் ஆனஞ்
சாடி யனலுமிழும் ஐவா யரவு மார்த்தார், பாறேறு வெண்டலை
யார் பைங்க ணேற்றார் பலியேற்றார் பந்தணை நல்லூ ராரே. 9

கல்லூர் கடிமதில்கள் மூன்று மெய்தார் காரோணங் காத
லார் காதல் செய்து, நல்லூரார் ஞானத்தார் ஞான மானார் நான்
மறையோ டாறங்கம் நவின்ற நாவார், மல்லூர் மணிமலையின்
மேலிருந்து வாளரக்கர் கோன்தலையை மாளச் செற்றுப்,
பல்லூர் பலிதிரிவார் பைங்க ணேற்றார் பலியேற்றார் பந்தணை
நல்லூ ராரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி—பசுபதீசுவரர்; தேவி—காம்பன்னதோளியம்மை.

† பிறப்பிலார் மூப்பிலார் என்றும் பாடம்.

## 18. திருக்கஞ்சனூர்

### திருத்தாண்டகம் [6-ந் திருமுறை]

*திருச்சிற்றம்பலம்*

மூவிலைநற் சூலம்*வலன் ஏந்தி னானை மூன்று சுடர்க் கண்ணானை மூர்த்தி தன்னை, நாவலனை நரைவிடையொன் றேறு வானை நால்வேதம் ஆறங்க மாயி னானை, ஆவினிலைந் துகந்தானை அமரர் கோவை அயன்திருமா லானானை அனலோன் போற்றுங், காவலனைக் கஞ்சனூ ராண்ட கோவைக் கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே. 1

தலையேந்து கையானை என்பார்த் தானைச் சவந்தாங்கு தோளானைச் சாம்ப லானைக், குலையேறு நறுங்கொன்றை முடிமேல் வைத்துக் கோணாக மசைத்தானைக் குலமாங் கைலை மலையானை மற்றொப்பா ரில்லா தானை மதிகதிரும் வானவரும் மாலும் போற்றுங், கலையானைக் கஞ்சனூ ராண்ட கோவைக் கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே. 2

தொண்டர் குழாம் தொழுதேத்த** அருள்செய் வானைச் சுடர் மழுவாள் படையானைச் சுழிவான் கங்கைத், தெண் திரைகள் பொருதிழிசெஞ் சடையி னானைச் செக்கர்வா னொளியானைச் சேரா தெண்ணிப், பண்டமரர் கொண்டுகந்த வேள்வி யெல்லாம் பாழ்படுத்துத் தலையறுத்துப் பற்கண் கொண்ட, கண்டகனைக் கஞ்சனூ ராண்ட கோவைக் கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே. 3

விண்ணவனை மேருவில்லா வுடையான் தன்னை மெய்யாகிப் பொய்யாகி விதியா னானைப், பெண்ணவனை ஆணவனைப் பித்தன் தன்னைப் பிணமிடுகா டுடையானைப் பெருந்தக் கோனை, என்னவனை எண்டிசையுங் கீழும் மேலும் இருவிசும்பும் இருநிலமுமாகித் தோன்றும், கண்ணவனைக் கஞ்சனூ ராண்ட கோவைக் கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே. 4

உருத்திரனை உமாபதியை உலகா னானை உத்தமனை நித்திலத்தை ஒருவன் தன்னைப், பருப்பதத்தைப் பஞ்சவடி மார்பி

---

* மூவிலை வேற்சூலம் என்றும் பாடம். ** தொண்டர் கழல் தொழுதேத்த என்றும் பாடம்.

ஞானைப் பகலிரவாய் நீர்வெளியாய்ப் பரந்து நின்ற, நெருப்பதனை நித்திலத்தின் தொத்தொப் பானை நீறணிந்த மேனியராய் நினை வார் சிந்தைக், கருத்தவனைக் கஞ்சனூ ராண்ட கோவைக் கற்ப கத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே. 5

ஏடேறு மலர்க்கொன்றை அரவு தும்பை இளமதியம் எருக்கு வா னிழிந்த கங்கை, சேடேறிந்த சடையானைத் தேவர் கோவைச் செம்பொன்மால் வரையானைச் சேர்ந்தார் சிந்தைக், கேடிலியைக் கீழ்வேளூ ராளுங் கோவைக் கிறிபேசி மடவார் பெய் வளைகள் கொள்ளுங், காடவனைக் கஞ்சனூ ராண்ட கோவைக் கற்பகத் தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே. 6

நாரணனும் நான்முகனும் அறியா தானை நால்வேதத் திரு வானை நம்பி தன்னைப், பாரிடங்கள் பணிசெய்யப் பலிகொண் டுண்ணும் பால்வணனைத் தீவணனைப் பகலா னானை, வார்பொதி யும் முலையாளோர் கூறன் தன்னை மானிடங்கை யுடையானை மலிவார் கண்டங், கார்பொதியுங் கஞ்சனூ ராண்ட கோவைக் கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே. 7

வானவனை வலிவலமும் மறைக்காட் டானை மதிசூடும் பெருமானை மறையோன் தன்னை, ஏனவனை இமவான்றன் பேதையோடும் இனிதிருந்த பெருமானை ஏத்து வார்க்குத், தேன வனைத் தித்திக்கும் பெருமான் தன்னைத் தீதிலா மறையோனைத் தேவர் போற்றுங், கானவனைக் கஞ்சனூ ராண்ட கோவைக் கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே. 8

நெருப்புருவு திருமேனி வெண்ணீற் றானை நினைப்பார்தம் நெஞ்சானை நிறைவா னானைத், தருக்கழிய முயலகன்மேல் தாள் வைத்தானைச் சலந்தரனைத் தடிந்தோனைத் தக்கோர் சிந்தை, விருப் பவனை விதியானை வெண்ணீற் றானை விளங்கொளியாய் மெய் யாகி மிக்கோர் போற்றுங், கருத்தவனைக் கஞ்சனூ ராண்ட கோவைக் கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே. 9

மடலாழித் தாமரைஆ யிரத்தி லொன்று மலர்க்கணிடந் திடு தலுமே மலிவான் கோலச், சுடராழி நெடுமாலுக் கருள்செய் தானைத் தும்பியுரி போர்த்தானைத் தோழன் விட்ட,‡ அடலாழித்

‡ போர்த்தான்றன் தோழன் விட்ட என்றும் பாடம்.

தேருடைய இலங்கைக் கோனை அருவரைக்கீழ் அடர்த்தானை
அருளார் கருணைக், கடலானைக் கஞ்சனூ ராண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—அக்கினீசுவரர்; தேவி—கற்பகநாயகி.

---

## 19. திருக்கோடிகா

### திருநேரிசை [4–ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நெற்றிமேற் கண்ணி னானே நீறுமெய் பூசி னானே
கற்றைப்புன் சடையி னானே கடல்விடம் பருகி னானே
செற்றவர் புரங்கள் மூன்றுஞ் செவ்வழல் செலுத்தி னானே
குற்றமில் குணத்தி னானே கோடிகா வுடைய கோவே. 1

கடிகமழ் கொன்றை யானே கபாலங்கை யேந்தி னானே
வடிவுடை மங்கை தன்னை மார்பிலோர் பாகத் தானே
அடியிணை பரவ நாளும் அடியவர்க் கருள்செய் வானே
கொடியணி விழவ தோவாக் கோடிகா வுடைய கோவே. 2

நீறுமெய் பூசி னானே நிழல்திகழ் மழுவி னானே
ஏறுகந் தேறி னானே இருங்கடல் அமுதொப் பானே
ஆறுமோர் நான்கு வேதம் அறமுரைத் தருளி னானே
கூறுமோர் பெண்ணி னானே கோடிகா வுடைய கோவே. 3

காலனைக் காலாற் செற்றன் றருள்புரி கருணை யானே
நீலமார் கண்டத் தானே நீண்முடி யமரர் கோவே
ஞாலமாம் பெருமை யானே நளிர்இளந் திங்கள் சூடுங்
கோலமார் சடையி னானே கோடிகா வுடைய கோவே. 4

பூரண வாரத் தானே புலியுரி அரையி னானே
காணில்வெண் கோவ ணமும் கையிலோர் கபாலம் ஏந்தி
ஊணுமோர்ப் பிச்சை யானே உமையொரு பாகத் தானே
கோணல்வெண் பிறையி னானே கோடிகா வுடைய கோவே. 5

கேழல்வெண் கொம்பு பூண்ட கிளரொளி மார்பி னானே
ஏழையேன் ஏழை யேன்நான் என்செய்கேன் எந்தை பெம்மான்

மாழையொண் கண்ணி ஞர்கள் வலைதனில் மயங்கு கின்றேன்
கூழைஏ றுடைய செல்வா கோடிகா வுடைய கோவே. 6

அழலுமிழ் அங்கை யானே அரிவையோர் பாகத் தானே
தழலுமிழ்* அரவம் ஆர்த்துத் தலைதனிற் பலிகொள் வானே
நிழலுமிழ் சோலை சூழ நீள்வரி வண்டி னங்கள்
குழலுமிழ் கீதம் பாடுங் கோடிகா வுடைய கோவே. 7

ஏவடு சிலையி னாலே புரமவை எரிசெய் தானே
மாவடு வகிர்கொள் கண்ணாள் மலைமகள் பாகத் தானே
ஆவடு துறையு ளானே ஐவரால் ஆட்டப் பட்டேன்
கோவடு குற்றந் தீராய் கோடிகா வுடைய கோவே. 8

ஏற்றநீர்க் கங்கை யானே இருநிலந் தாவி னானும்
நாற்றமா மலர்மேல் ஏறும் நான்முகன் இவர்கள் கூடி
ஆற்றலால் அளக்க லுற்றார்க் கழலுரு வாயி னானே
கூற்றுக்குங் கூற்ற னாய் கோடிகா வுடைய கோவே. 8

பழகநான் அடிமை செய்வேன் பசுபதீ பாவ நாசா
மழகளி யானை யின்தோல் மலைமகள் வெருவப் போர்த்த
அழகனே அரக்கன் திண்டோள் அருவரை நெரிய வூன்றுங்
குழகனே கோல மார்பா கோடிகா வுடைய கோவே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருக்குறுந்தொகை** [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

சங்குலா முன்கைத் தையலோர் பாகத்தன்
வெங்கு லாமத வேழம் வெகுண்டவன்
கொங்கு லாம்பொழிற் கோடிகா வாவென
எங்கி லாததோர் இன்பம்வந் தெய்துமே. 1

வாடி வாழ்வதென் னாவது மாதர்பால்
ஓடி வாழ்வினை உள்கிநீர் நாடொறும்
கோடி காவனைக் கூறிரேற் கூறினேன்
பாடி காவலிற்† பட்டுக் கழிதிரே. 2

---

* தழல் உமிழ் – விடத்தைக் கக்குகின்ற. ** இப்பதிகத்தில் 7, 8, 9-ம் செய்யுட்கள் சிதைந்து போயின. † பாடி காவல் – நீதி தவறியவரை வழக்குநாடி அரசன் நிறுத்தும் தண்டத் தொழில்.

முல்லை நன்முறு வல்லுமை பங்கனார்
தில்லை யம்பலத் தில்லுறை செல்வனார்
கொல்லை யேற்றினர் கோடிகா வாளன் றங்(கு)
ஒல்லை யேத்துவார்க் கூனமொன் றில்லையே. 3

நாவ ளம்பெறு மாறும னன்னுதல்
ஆம ளஞ்*சொலி அன்புசெ யின்னலால்
கோம ளஞ்சடைக் கோடிகா வாளனை
ஏவ ளின்றெனை** ஏசுமவ் வேழையே. 4

வீறு தான்பெறு வார்சில ராகிலும்
நாறு பூங்கொன்றை தான்மிக நல்கானேல்
கூறு வேன்கோடி காவுளாய் என்றுமால்
ஏறு வேன்நும்மால் ஏசப் படுவனே. 5

நாடி நாரணன் நான்முகன் வானவர்
தேடி யேசற வுந்தெரி யாததோர்
கோடி காவனைக் கூறாத நாளெலாம்
பாடி காவலிற் பட்டுக் கழியுமே. 6-7-8-9

வரங்க ளால்வரை யையெடுத் தான்றனை
அரங்க வூன்றி அருள்செய்த அப்பனார்
குரங்கு சேர்பொழிற் கோடிகா வாளனை
இரங்கு வேன்மனத் தேதங்கள் தீரவே. 10

திருச்சிற்றம்பலம்

---

**திருத்தாண்டகம் † [6-ம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

கண்டலஞ்சேர் நெற்றியிளங் காளை கண்டாய் கல்மதில்சூழ் கந்தமா தனத்தான் கண்டாய், மண்டலஞ்சேர் மயக்கறுக்கும் மருந்து கண்டாய் மதிற்கச்சி யேகம்பம் மேயான் கண்டாய், விண்டலஞ்சேர் விளக்கொளியாய் நின்றான் கண்டாய் மீயச்சூர் பிரியாத விகிர்தன் கண்டாய், கொண்டலஞ்சேர் கண்டத்தெங் கூத்தன் கண்டாய் கோடிகா அமர்ந்துறையுங் குழகன் தானே. 1

---

* ஆம் அளவும் என்பது ஆமளம் என நின்றது. ** மேவநின் றேனை என்றும் பாடம். † இப்பதிகத்தில் 9, 10-ம் செய்யுட்கள் சிதைந்துபோயின.

வண்டாடு பூங்குழலாள் பாகன் கண்டாய் மறைக்காட் டுறையு மணாளன் கண்டாய், பண்டாடு பழவினைநோய் தீர்ப் பான் கண்டாய் பரலோக நெறிகாட்டும் பரமன் கண்டாய், செண் டாடி அவுணர்புரஞ் சென்றான் கண்டாய் திருவாரூர்த் திரு மூலட் டானன் கண்டாய், கோண்டாடும் அடியவர்தம் மனத்தான் கண்டாய் கோடிகா அமர்ந்துறையுங் குழகன் தானே. 2

அலையார்ந்த புனற்கங்கைச் சடையான் கண்டாய் அடி யார்கட் காரமுத மானான் கண்டாய், மலையார்ந்த மடமங்கை பங்கன் கண்டாய் வானோர்கள் முடிக்கணியாய் நின்றான் கண் டாய், இலையார்ந்த திரிசூலப் படையான் கண்டாய் ஏழுலகு மாய் நின்ற எந்தை கண்டாய், கொலையார்ந்த குஞ்சரத்தோல் போர்த் தான் கண்டாய் கோடிகா அமர்ந்துறையுங் குழகன்தானே. 3

மற்றொருந் தன்னொப்பா ரில்லான் கண்டாய் மயிலாடு துறை யிடமா மகிழ்ந்தான் கண்டாய், புற்றா டரவணிந்த புனிதன் கண் டாய் பூந்துருத்திப் பொய்யிலி*யாய் நின்றான் கண்டாய், அற்றார் கட் கற்றாய் நின்றான் கண்டாய் ஐயா றகலாத ஐயன் கண் டாய், குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தன் கண்டாய் கோடிகா அமர்ந்துறையுங் குழகன் தானே. 4

வாரார்ந்த வனமுலையாள் பங்கன் கண்டாய் மாற்பேறு காப்பா மகிழ்ந்தான் கண்டாய், போரார்ந்த மால்விடையொன் றூர்வான் கண்டாய் புகலூரை அகலாத புனிதன் கண்டாய், நீரார்ந்த நிமிர்சடையொன் றுடையான் கண்டாய் நினைப்பார்தம் வினைப்பாரம் இழிப்பான்** கண்டாய், கூரார்ந்த மூவிலைவேற் படையான் கண்டாய் கோடிகா அமர்ந்துறையுங் குழகன் தானே. 5

கடிமலிந்த மலர்க்கொன்றைச் சடையான் கண்டாய் கண் ணப்ப விண்ணப்பு†க் கொடுத்தான் கண்டாய், படிமலிந்த பல்பிறவி யறுப்பான் கண்டாய் பற்றற்றார் பற்றவனாய் நின்றான் கண் டாய், அடிமலிந்த சிலம்பலம்பத் திரிவான் கண்டாய் அமரர் கணந் தொழுதேத்தும் அம்மான் கண்டாய், கொடிமலிந்த மதில் தில்லைக் கூத்தன் கண்டாய் கோடிகா அமர்ந்துறையுங் குழகன் தானே. 6

---

* பொய்யிலி – பூந்துருத்தியின் சுவாமி பெயர். ** வினைப் பாரமழிப்பான் என்றும் பாடம். † விண்ணப்பு–சிவத்தன்மை.

உழையாடு கரதலமொன் றுடையான் கண்டாய் ஒற்றியூ ரொற்றியா வுடையான் கண்டாய், கழையாடு கழுக்குன்றம் அமர்ந்தான் கண்டாய் காளத்திக் கற்பகமாய் நின்றான் கண் டாய், இழையாடும் எண்புயத்த இறைவன் கண்டாய் என் நெஞ்சத் துள்நீங்கா எம்மான் கண்டாய், குழையாட நடமாடுங் கூத்தன் கண்டாய் கோடிகா அமர்ந்துறையுங் குழகன் தானே. 7

படமாடு பன்னகக்கச் சசைத்தான் கண்டாய் பராய்த் துறையும் பாசூரும் மேயான் கண்டாய், நடமாடி ஏழுலகந் திரிவான் கண்டாய் நான்மறையின் பொருள்கண்டாய் நாதன் கண்டாய், கடமாடு களிறுரித்த கண்டன் கண்டாய் கயிலாயம் மேவி யிருந்தான் கண்டாய், குடமாடி‡ யிடமாகக் கொண்டான் கண்டாய் கோடிகா அமர்ந்துறையுங் குழகன் தானே. 8-9-10

திருச்சிற்றம்பலம்

சுவாமி—கோடிகாவீசுவரர், திரிகோடீசுவரர்; தேவி—வடி வம்மை, திரிபுரசுந்தரி.

## 20. திருமங்கலக்குடி

திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

தங்க லப்பிய தக்கன் பெருவேள்வி
அங்க லக்கழித் தாரருள் *செய்தவன்
கொங்க லர்க்குழல் கொம்பனை யாளொடு
மங்க லக்குடி மேய மணாளனே. 1

காவி ரியின் வடகரைக் காண்டகு
மாவிரி யும்பொழில் மங்க லக்குடித்
தேவ ரியும்பி ரமனுந் தேடொணாத்
தூவெ ரிச்சுடர்ச் சோதியுட் சோதியே. 2

மங்க லக்குடி ஈசனை மாகாளி
வெங்க திர்ச்செல்வன் விண்ணொடு மண்ணும்நேர்**
சங்கு சக்கர தாரி சதுர்முகன்
அங்க கத்திய னும்அர்ச்சித் தாரன்றே. 3

‡ குடமாடி — திருக்குடமூக்கு. * அங்கலத் தழித்தாரருள் என்றும் பாடம். ** மண்ணுளோர் என்றும் பாடம்.

மஞ்சள் வார்கடல் சூழ்மங் கலக்குடி
நஞ்ச மாரமு தாக நயந்துகொண்(டு)
அஞ்சு மாடல் அமர்ந்தடி யேனுடை
நெஞ்ச மாலய மாக்கொண்டு நின்றதே. 4

செல்வம் மல்கு திருமங் கலக்குடி
செல்வம் மல்கு சிவநிய மத்தராய்ச்
செல்வம் மல்கு செழுமறை யோர்தொழச்
செல்வன் தேவியொ டுந்திகழ் கோயிலே. 5

மன்னு சீர்மங் கலக்குடி மன்னிய
பின்னு வார்சடைப் பிஞ்ஞகன் தன்பெயர்
உன்னு வாரும் உரைக்கவல் லார்களும்
துன்னு வார்நன் னெறிதொடர் வெய்தவே. 6

மாத ரார்மரு வும்மங் கலக்குடி
ஆதிநாயகன் அண்டர்கள் நாயகன்
வேத நாயகன் வேதியர் நாயகன்
பூத நாயகன் புண்ணிய மூர்த்தியே. 7

வண்டு சேர்பொழில் சூழ்மங் கலக்குடி
விண்ட தாதையைத் தாளற வீசிய
சண்ட நாயக னுக்கருள் செய்தவன்
துண்ட மாமதி சூடிய சோதியே. 8

கூசு வாரலர் குண்டர் குணமிலர்
நேச மேது மிலாதவர் நீசர்கள்
மாசர் பால்மங் கலக்குடி மேவிய
ஈசன் வேறு படுக்கஉய்ந் தேனன்றே. 9

மங்க லக்குடி யான்கயி லைம்மலை
அங்க லைத்தெடுக் குற்ற அரக்கர்கோன்
தங்க ரத்தொடு தாள்தலை தோள்தகர்ந்(து)
அங்க லைத்தழு துய்ந்தனன் தானன்றே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி—பிராணவரதேசுவரர்; தேவி—மங்களநாயகி.

## 21. திரு ஆப்பாடி

### திருநேரிசை [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கடலகம் ஏழி னோடும் புவனமுங் கலந்த விண்ணும்*
உடலகத் துயிரும் பாரும் ஒள்ளழ லாகி நின்று
தடமலர்க் கந்த மாலை தண்மதி பகலு மாகி
மடலவிழ் கொன்றை சூடி மன்னும்ஆப் பாடி யாரே. 1

ஆதியும் அறிவு மாகி அறிவினுட் செறிவு மாகிச்
சோதியுட் சுடரு மாகித் தூநெறிக் கொருவ னாகிப்
பாதியிற் பெண்ணு மாகிப் பரவுவார் பாங்க னாகி
வேதியர் வாழுஞ் சேய்ஞல் விரும்பும்ஆப் பாடி யாரே. 2

எண்ணுடை இருக்கு மாகி யிருக்கினுட் பொருளு மாகிப்
பண்ணொடு பாடல் தன்னைப் பரவுவார் பாங்க னாகிக்
கண்ணொரு நெற்றி யாகிக் கருதுவார் கருத லாகாப்
பெண்ணொரு பாக மாகிப் பேணும்ஆப் பாடி யாரே. 3

அண்டமார் அமரர் கோமான் ஆதிஎம் அண்ணல் பாதங்
கொண்டவன் குறிப்பி னாலே கூப்பினான் தாப ரத்தைக்
கண்டவன் தாதை பாய்வான் காலற எறியக் கண்டு
**சண்டியார்க் கருள்கள் செய்த தலைவர்ஆப் பாடி யாரே. 4

சிந்தையுந் தெளிவு மாகித் தெளிவினுட் சிவமு மாகி
வந்தநற் பயனு மாகி வாள்நுதல் பாக மாகி
மந்தமாம் பொழில்கள் சூழ்ந்த மண்ணித்தென் கரைமேல் மன்னி
அந்தமோ டளவி லாத அடிகள்ஆப் பாடி யாரே. 5

வன்னிவா ளரவு மத்தம் மதியமும் ஆறுஞ் சூடி
மின்னிய உருவாஞ் சோதி மெய்ப்பொருட் பயனு மாகிக்
கன்னியோர் பாக மாகிக் கருதுவார் கருத்து மாகி
இன்னிசை தொண்டர் பாட இருந்தஆப் பாடி யாரே. 6

உள்ளுமாய்ப் புறமு மாகி உருவுமாய் அருவு மாகி
வெள்ளமாய்க் கரையு மாகி விரிகதிர் ஞாயி றாகிக்

---

* கலந்து விண்ணும் என்றும் பாடம். ** தண்டியார்க்கருள்கள் என்றும் பாடம்.

கள்ளமாய்க் கள்ளத் துள்ளார் கருத்துமாய் அருத்த மாகி
அள்ளுவார்க் கள்ளல் செய்திட் டிருந்தஆப் பாடி யாரே. 7

மயக்கமாய்த் தெளிவு மாகி மால்வரை வளியு மாகித்
தியக்கமாய் ஒருக்க மாகிச் சிந்தையுள் ஒன்றி நின்று
இயக்கமாய் இறுதி யாகி எண்டிசைக் கிறைவ ராகி
அயக்கமாய் அடக்க மாய ஐவர்ஆப் பாடி யாரே. 8

ஆரழல் உருவ மாகி அண்டமேழ் கடந்த எந்தை
பேரொளி உருவி னானைப் பிரமனும் மாலுங் காணாச்
சீரவை பரவி யேத்திச் சென்றடி வணங்கு வார்க்குப்
பேரருள் அருளிச் செய்வார் பேணும்ஆப் பாடி யாரே. 9

திண்டிறல் அரக்க னோடிச் சீகயி லாயந் தன்னை
எண்டிறல் இலனு மாகி எடுத்தலும் ஏழை அஞ்ச
விண்டிறல் நெரிய வூன்றி மிகக்கடுத் தலறி வீழப்
பண்டிறல் கேட்டு கந்த பரமர்ஆப் பாடி யாரே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—பாலுகந்த ஈசுவரர்; தேவி—பெரிய நாயகி.

---

## 22. திருக்கோட்டையூர்

### திருக்குறுந்தொகை [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கருமணிபோற் கண்டத் தழகன் கண்டாய் கல்லால நிழற்கீ ழிருந்தான் கண்டாய், பருமணிமா நாகம் பூண்டான் கண்டாய் பவளக்குன் றன்ன பரமன் கண்டாய், வருமணிநீர்ப் பொன்னி வலஞ் சுழியான் கண்டாய் மாதேவன் கண்டாய் வரதன் கண் டாய், குருமணிபோல் அழகமருங் கொட்டையூரிற் கோடீச் சரத்* துறையுங் கோமான் தானே. 1

கலைக்கன்று தங்கு கரத்தான் கண்டாய் கலைபயில்வோர் ஞானக்கண் ஆனான் கண்டாய், அலைக்கங்கை செஞ்சடைமேல் ஏற்றான் கண்டாய் அண்ட கபாலத்தப் பாலான் கண்டாய், மலைப்பண்டங் கொண்டு வருநீர்ப் பொன்னி வலஞ்சுழியின்

---

* கோடீச்சரம்-கொட்டையூர் ஆலயத்தின் பெயர்.

மேவிய மைந்தன் கண்டாய், குலைத்தெங்கஞ் சோலைசூழ் கொட்டையூரிற் கோடீச் சரத்துறையுங் கோமான் தானே. 2

செந்தா மரைப்போ தணிந்தான் கண்டாய் சிவன்கண் டாய்தேவர் பெருமான் கண்டாய், பந்தாடு மெல்விரலாள் பாகன் கண்டாய் பாலோடு நெய்தயிர்தே னாடி கண்டாய், மந்தாரம் உந்தி வருநீர்ப் பொன்னி வலஞ்சுழியின் மன்னு மணாளன் கண்டாய், கொந்தார் பொழில் புடைசூழ் கொட்டையூரிற் கோடீச் சரத்துறையுங் கோமான் தானே. 3

பொடியாடு மேனிப் புனிதன் கண்டாய் புட்பாகற் காழி கொடுத்தான் கண்டாய், இடியார் கடுமுழக்கே றூர்ந்தான் கண்டாய் எண்திசைக்கும் விளக்காகி நின்றான் கண்டாய், மடலார் திரைபுரளுங் காவிரிவாய் வலஞ்சுழியின் மேவிய மைந்தன் கண்டாய், கொடியாடு நெடுமாடக் கொட்டை யூரிற் கோடீச் சரத்துறையுங் கோமான் தானே. 4

அக்கரவம் அரைக்கசைத்த அம்மான் கண்டாய் அருமறைக ளாறங்க மானான் கண்டாய், தக்கனது பெருவேள்வி தகர்த்தான் கண்டாய் சதாசிவன்காண் சலந்தரனைப் பிளந்தான் கண்டாய், மைக்கொண்மயில் தழைகொண்டு வருநீர்ப் பொன்னி வலஞ்சுழியான் கண்டாய் மழுவன் கண்டாய், கொக்கமரும் வயல்புடைசூழ் கொட்டை யூரிற் கோடீச் சரத்துறையுங் கோமான் தானே. 5

சண்டனை**நல் லண்டர்தொழச் செய்தான் கண்டாய் சதாசிவன் கண்டாய் சங்கரன்றான் கண்டாய், தொண்டர்பலர் தொழு தேத்துங் கழலான் கண்டாய் சுடரொளியாய்த் தொடர்வரிதாய் நின்றான் கண்டாய், மண்டுபுனல் பொன்னிவலஞ் சுழியான் கண்டாய் மாமுனிவர் தம்முடைய மருந்து கண்டாய், கொண்டல்தவழ் கொடிமாடக் கொட்டை யூரிற் கோடீச் சரத்துறையுங் கோமான் தானே. 6

அணவரியான்§கண்டாய் அமலன் கண்டாய் அவிநாசி‡கண்டாய் அண்டத்தான் கண்டாய், பணமணிமா நாக முடையான்

---

** சண்டன்-சண்டீசர் §அணவு அரியான், அணவுதல்—அணிமையாதல். ‡அவிநாசி-நாசமில்லாதவன்.

கண்டாய் பண்டரங்கன் கண்டாய் பகவன்†† கண்டாய், மணல் வருநீர்ப் பொன்னிவலஞ் சுழியான் கண்டாய் மாதவற்கும் நான் முகற்கும் வரதன் கண்டாய், குணமுடைநல் லடியார்வாழ் கொட்டை யூரிற் கோடீச் சரத்துறையுங் கோமான் தானே. 7

விரைகமழும் மலர்க்கொன்றைத் தாரான் கண்டாய் வேதங் கள் தொழநின்ற நாதன் கண்டாய், அரையதனிற் புள்ளியத ளுடையான் கண்டாய் அழலாடி கண்டாய் அழகன் கண்டாய், வருதிரைநீர்ப் பொன்னிவலஞ் சுழியான் கண்டாய் வஞ்சமனத் தவர்க்கரிய மைந்தன் கண்டாய், குரவமரும் பொழில்புடைசூழ் கொட்டை யூரிற் கோடீச் சரத்துறையுங் கோமான் தானே. 8

தளங்கிளருந் தாமரையா தனத்தான் கண்டாய் தசரதன்றன் மகன் அசைவு தவிர்த்தான் கண்டாய், இளம்பிறையும் முதிர் சடைமேல் வைத்தான் கண்டாய் எட்டெட் டிருங்கலை†யு மானான் கண்டாய், வளங்கிளர்நீர்ப் பொன்னிவலஞ் சுழியான் கண்டாய் மாமுனிகள் தொழுதெழு பொற் கழலான் கண்டாய், *குளங் குளிர்செங் குவளைகிளர் கொட்டை யூரிற் கோடீச் சரத்துறையுங் கோமான் தானே. 9

விண்டார் புரமூன் றெரித்தான் கண்டாய் விலங்கலில்வல் லரக்கனுட லடர்த்தான் கண்டாய், தண்தா மரையானும் மாலுந் தேடத் தழற்பிழம்பாய் நீண்ட கழலான் கண்டாய், வண்டார் பூஞ் சோலைவலஞ் சுழியான் கண்டாய் மாதேவன் கண்டாய் மறையோ டங்கம், கொண்டாடு வேதியர்வாழ் கொட்டை யூரிற் கோடீச் சரத்துறையுங் கோமான் தானே. 10

திருச்சிற்றம்பலம்



சுவாமி—கோடீசுவரர்; தேவி—பந்தாடுநாயகி.



†† பகவன்–ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக் கியம் என்னும் ஆறும் உடையவன். † எட்டெட் டிருங்கலை – 64 கலைஞானங்கள். * குளங்கிளர் என்றும் பாடம்.

## 23. திருஇன்னம்பர் *

### திருநேரிசை [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

விண்ணவர் மகுட கோடி மிடைந்தசே வடியார் போலும்
பெண்ணொரு பாகர் போலும் பேடவி யாணர் போலும்
வண்ணமால் அயனுங்காணு மால்வரை எரியர் போலும்
எண்ணுரு வநேகர் போலும் இன்னம்பர் ஈச னாரே. 1

பன்னிய மறையர் போலும் பாம்பரை யுடையர் போலும்
துன்னிய சடையர் போலும் தூமதி மத்தர் போலும்
மன்னிய மழுவர் போலும் மாதிடம் மகிழ்வர் போலும்
என்னையும் உடையர் போலும் இன்னம்பர் ஈச னாரே. 2

மறியொரு கையர் போலும் மாதுமை யுடையர் போலும்
பறிதலைப் பிறவி நீக்கிப் பணிகொள வல்லர் போலும்
செறிவுடை அங்க மாலை சேர்திரு வுருவர் போலும்
எறிபுனற் சடையர் போலும் இன்னம்பர் ஈச னாரே. 3

விடமலி கண்டர் போலும் வேள்வியை அழிப்பர் போலும்
கடவுநல் விடையர்** போலுங் காலனைக் காய்வர் போலும்
படமலி அரவர் போலும் பாய்புலித் தோலர் போலும்
இடர்களைந் தருள்வர் போலும் இன்னம்பர் ஈச னாரே. 4

அளிமலர்க் கொன்றை துன்றும் அவிர்சடை யுடையர் போலும்
களிமயிற் சாய லோடுங் காமனை விழிப்பர் போலும்
வெளிவளர் உருவர் போலும் வெண்பொடி யணிவர் போலும்
எளியவர் அடியர்க் கென்றும் இன்னம்பர் ஈச னாரே. 5

கணையமர் சிலையர் போலுங் கரியுரி உடையர் போலும்
துணையமர் பெண்ணர் போலுந் தூமணிக் குன்றர் போலும்
அணையுடை† யடியர் கூடி அன்பொடு மலர்கள் தூவும்
இணையடி உடையர் போலும் இன்னம்பர் ஈச னாரே. 6

பொருப்பமர் புயத்தர் போலும் புனலணி சடையர் போலும்
மருப்பிள வாமை தாங்கு மார்பில்வெண் ணூலர் போலும்

---

* 'இன்னம்பூர்' என்று வழங்குவர். ** கடவுள் நல்விடையர் என்றும் பாடம். † அணைவுடை என்றும் பாடம்.

உருத்திர மூர்த்தி போலும் உணர்விலார் புரங்கள் மூன்றும்
எரித்திடு சிலையர் போலும் இன்னம்பர் ஈச னாரே. 7

காடிடம் உடையர் போலுங் கடிகுரல் விளியர் போலும்
வேடுரு வுடையர் போலும் வெண்மதிக் கொழுந்தர் போலும்
கோடலர் வன்னி தும்பை கொக்கிற கலர்ந்த கொன்றை
ஏடமர் சடையர் போலும் இன்னம்பர் ஈச னாரே. 8

காறிடு விடத்தை யுண்ட கண்டர்எண் டோளர் போலும்
நீறுடை உருவர் போலும் நினைப்பினை அரியர் போலும்
பாறுடைத் தலைகை ஏந்திப் பலிதிரிந் துண்பர் போலும்
ஏறுடைக் கொடியர் போலும் இன்னம்பர் ஈச னாரே. 9

ஆர்த்தெழு மிலங்கைக் கோனை அருவரை அடர்ப்பர் போலும்
பார்த்தனோ டமர்பொருது படைகொடுத் தருள்வர் போலும்
தீர்த்தமாங் கங்கை தன்னைத் திருச்சடை வைப்பர் போலும்.
ஏத்தவ ழுலகும் வைத்தார் இன்னம்பர் ஈச னாரே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருவிருத்தம் [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மன்னும் மலைமகள் கையால் வருடின மாமறைகள்
சொன்ன துறைதொறுந் தூப்பொரு ளாயின தூக்கமலத்
தன்ன வடிவின அன்புடைத் தொண்டர்க் கமுதரும்பி*
இன்னல் களைவன இன்னம்ப ரான்றன் இணையடியே. 1

பைதற் பிணக்குழைக் காளிவெங் கோபம்பங் கப்படுப்பான்
செய்தற் கரிய திருநடஞ் செய்தன சீர்மறையோன்
உய்தற் பொருட்டு வெங்கூற்றை யுதைத்தன உம்பர்க்கெல்லாம்
எய்தற் கரியன இன்னம்ப ரான்றன் இணையடியே. 2

சுணங்குநின் றார்கொங்கை யாள்உமை சூடின தூமலரால்
வணங்கிநின் றும்பர்கள் வாழ்த்தின மன்னு மறைகள்தம்மில்
பிணங்கிநின் றின்னன என்றறி யாதன பேய்க்கணத்தோ
டிணங்கிநின் றாடின இன்னம்ப ரான்றன் இணையடியே. 3

---

* தொண்டர்க் கமுதருத்தி என்றும் பாடம்.

ஆறேன் றியசம யங்களின் அவ்வவர்க் கப்பொருள்கள்
வேறேன் றிலாதன விண்ணோர் மதிப்பன மிக்குவமன்
மாறென் றிலாதன மண்ணொடு விண்ணகம் மாய்ந்திடினும்
ஈறென் றிலாதன இன்னம்ப ரான்றன் இணையடியே. 4

அரக்கர்தம் முப்புரம் அம்பொன்றி னாலட லங்கியின்வாய்க்
கரக்கமுன் வைதிகத் தேர்மிசை நின்றன கட்டுருவம்
பரக்கவெங் கானிடை வேடுரு வாயின பல்பதிதோ
றிரக்க நடந்தன இன்னம்ப ரான்றன் இணையடியே. 5

கீண்டுங் கிளர்ந்தும்பொற் கேழல்முன் தேடின கேடுபடா
ஆண்டும் பலபல வூழியு மாயின ஆரணத்தின்
வேண்டும் பொருள்கள் விளங்கநின் றாடின மேவுசிலம்
பீண்டுங் கழலின இன்னம்ப ரான்றன் இணையடியே. 6

போற்றுந் தகையன பொல்லா முயலகன் கோபப்புன்மை
ஆற்றுந் தகையன ஆறு சமயத் தவரவரைத்
தேற்றுந் தகையன தேறிய தொண்டரைச் செந்நெறிக்கே
ஏற்றுந் தகையன இன்னம்ப ரான்றன் இணையடியே. 7

பயம்புன்மை சேர்தரு பாவந் தவிர்ப்பன பார்ப்பதிதன்
குயம்பொன்மை மாமல ராகக் குலாவின கூடவொண்ணாச்
சயம்புவென் றேதகு தாணுவென் றேசதுர் வேதங்கள்நின்
றியம்புங் கழலின இன்னம்ப ரான்றன் இணையடியே. 8

அயன்நெடு மால்இந் திரன்சந் திராதித்தர் அமரரெல்லாம்**
சயசய என்றுமுப் போதும் பணிவன தண்கடல்சூழ்
வியன்நில முற்றுக்கும் விண்ணுக்கும் நாகர் வியன்நகர்க்கும்
இயபர மாவன இன்னம்ப ரான்றன் இணையடியே. 9

தருக்கிய தக்கன்றன் வேள்வி தகர்த்தன தாமரைப்போ
துருக்கிய செம்பொன் உவமன் இலாதன வொண்கயிலை
நெருக்கிய வாளரக் கன்தலை பத்தும் நெரித்தவன்றன்
இருக்கியல் பாயின இன்னம்ப ரான்றன் இணையடியே. 10

திருச்சிற்றம்பலம்

---

** அயனொடுமாலிந்திரன் சந்திராதித் தமரரெலாம் என்றும் பாடம்.

## திருக்குறுந்தொகை – [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

என்னி லாரும் எமக்கினி யாரில்லை
என்னி லும்இனி யாஞெரு வன்னுளன்
என்னு ளேஉயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக்
கென்னு ளேநிற்கும் இன்னம்பர் ஈசனே. 1

மட்டுண் பார்கள் மடந்தையர் வாட்கணால்
கட்டுண் பார்கள் கருதுவ தென்கொலோ
தட்டி முட்டித் தள்ளாடித் தழுக்குழி
எட்டு மூர்த்தியர் இன்னம்பர் ஈசனே. 2

கனலுங் கண்ணியுந் தண்மதி யோடுடன்
புனலுங் கொன்றையுஞ் சூடும் புரிசடை
அனலுஞ் சூலமும் மான்மறிக் கையினர்
எனலும் என்*மனத் தின்னம்பர் ஈசனே. 3

மழைக்கண் மாமயி லாலும் மகிழ்ச்சியான்
அழைக்குந் தன்னடி யார்கள்தம் அன்பினைக்
குழைக்குந் தன்னைக் குறிக்கொள வேண்டியே
இழைக்கு மென்மனத் தின்னம்பர் ஈசனே. 4

தென்ன வன்னெனை யாளுஞ் சிவனவன்
மன்ன வன்மதி யம்மறை யோதியான்
முன்ன மன்னவன் சேர்வன பூமியான்
இன்னம் இன்புற்ற இன்னம்பர் ஈசனே. 5

விளக்கும் வேறு படப்பிறர் உள்ளத்தில்
அளக்குந் தன்னடி யார்மனத் தன்பினைக்
குளக்கும் என்னைக் குறிக்கொள வேண்டியே
இளக்கும் என்மனத் தின்னம்பர் ஈசனே. 6

சடைக்க ணாள்புன லாள்அனல் கையதோர்
கடைக்க ணால்மங்கை நோக்கிம வான்மகள்
படைக்க ணால்பரு கப்படு வான்நமக்(கு)
இடைக்க ணாய்நின்ற இன்னம்பர் ஈசனே. 7

---

* இனலும்என் என்றும் பாடம்.

தொழுது தூமலர் தூவித் துதித்துநின்
றழுது காமுற் றரற்றுகின் றூரையும்
பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்
எழுதுங் கீழ்க்கணக் கின்னம்பர் ஈசனே. 8

விரியுந் தண்ணிள வேனிலில் வெண்பிறை
புரியுங் காமனை வேவப் புருவமும்
திரியும் எல்லையில் மும்மதில் தீயெழுந்(து)
எரிய நோக்கிய இன்னம்பர் ஈசனே. 9

சனியும் வெள்ளியுந் திங்களும் ஞாயிறும்
முனிவ னைய்முடி பத்துடை யான்றனைக்
கனிய வூன்றிய காரண மென்கொலோ
இனிய னைய்நின்ற இன்னம்பர் ஈசனே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

அல்லிமலர் நாற்றத் துள்ளார் போலும் அன்புடையார் சிந்தை அகலார் போலுஞ், சொல்லின் அருமறைகள் தாமே போலுந் தூநெறிக்கு வழிகாட்டுந் தொழிலார் போலும், வில்லிற் புரமூன் றெரித்தார் போலும் வீங்கிருளும் நல்வெளியு மானார் போலும், எல்லி நடமாட வல்லார் போலும் இன்னம்பர்த் தான் தோன்றி யீச னாரே. 1

கோழிக் கொடியோன்தன் தாதைபோலுங் கொம்பனாள் பாகங் குளிர்ந்தார் போலும், ஊழி முதல்வருந் தாமே போலும் உள்ளூவா ருள்ளத்தி னுள்ளார் போலும், ஆழித்தேர் வித்தகரும் தாமே போலும் அடைந்தவர்கட் கன்பராய் நின்றார் போலும், ஏழு பிறவிக்குந் தாமே போலும், இன்னம்பர்த் தான்தோன்றி யீச னாரே. 3

தொண்டர்கள் தம்தகவி னுள்ளார் போலுந் தூநெறிக்குந் தூநெறியாய் நின்றார் போலும், பண்டிருவர் காணாப் படியார் போலும் பத்தர்கள்தம் சித்தத்* திருந்தார் போலுங், கண்ட

* பத்தர்கட்குச் சித்தத் என்றும் பாடம்.

மிறையே கருத்தார் போலுங் காமனையுங் காலனையுங் காய்ந்தார் போலும், இண்டைச் சடைசேர் முடியார் போலும் இன்னம்பர்த்தான்தோன்றி யீச னாரே. 3

வானத் திளந்திங்கட் கண்ணி தன்னை வளர்சடைமேல் வைத்துகந்த மைந்தர் போலும், ஊனொத்த வேலொன் றுடையார் போலும் ஒளிநீறு பூசு மொருவர் போலுந், தானத்தின் முப்பொழுதுந் தாமே போலுந் தம்மிற் பிறர்பெரியா ரில்லை போலும்,** ஏனத் தெயிறிலங்கப் பூண்டார் போலும் இன்னம்பர்த் தான்தோன்றி யீச னாரே. 4

சூழுந் துயரம் அறுப்பார் போலுந் தோற்றம் இறுதியாய் நின்றார் போலும், ஆழுங் கடல்நஞ்சை யுண்டார் போலும் ஆட லுகந்த அழகர் போலுந், தாழ்வின் மனத்தேனை யாளாக் கொண்டு தன்மை யளித்த தலைவர் போலும், ஏழு பிறப்பு மறுப்பார் போலும் இன்னம்பர்த் தான் தோன்றி யீச னாரே. 5

பாதத் தணியுஞ் சிலம்பர் போலும் பாரூர் விடையொன் றுடையார் போலும், பூதப் படையாள் புனிதர் போலும் பூம்புக லூர் மேய புராணர் போலும், வேதப் பொருளாய் வினைவார் போலும் வேடம் பரவித் திரியுந் தோண்டர், ஏதப் படாவண்ணம் நின்றார் போலும் இன்னம்பர்த் தான்தோன்றி யீச னாரே. 6

பல்லார் தலையோட்டில் ஊணார் போலும் பத்தர்கள்தம் சித்தத் திருந்தார் போலுங், கல்லாதார் காட்சிக் கரியார் போலுங் கற்றவர்கள் ஏதங் களைவார் போலும், பொல்லாத பூதப் படையார் போலும் பொருகடலும் ஏழ்மலையுந் தாமே போலும், எல்லாரு மேத்தத் தகுவார் போலும் இன்னம்பர்த் தான்தோன்றி யீச னாரே. 7

மட்டு மலியுஞ் சடையார் போலும் மாதையோர் பாக முடையார் போலுங், கட்டம் பிணிகள் தவிர்ப்பார் போலுங் காலன் தன் வாழ்நாள் கழிப்பார் போலும், நட்டம் பயின்றாடும் நம்பர் போலும் ஞாலமெரி நீர்வெளிகா லானார் போலும், எட்டுத் திசைகளுந் தாமே போலும் இன்னம்பர்த் தான்தோன்றி யீச னாரே. 8

** ரில்லார்போலும் என்றும் பாடம்.

கருவுற்ற காலத்தே யென்னை ஆண்டு கழற்போது தந்தளித்த கள்வர் போலுஞ், செருவிற் புரமூன்றும் அட்டார் போலுந் தேவர்க்கும் தேவராஞ் செல்வர் போலும், மருவிப் பிரியாத மைந்தர் போலும் மலரடிகள் நாடி வணங்க லுற்ற, இருவர்க் கொருவராய் நின்றார் போலும் இன்னம்பர்த் தான் தோன்றி யீச னாரே. 9

அலங்கற் சடைதாழ ஐய மேற்று அரவம் அரையார்க்க வல்லார் போலும், வலங்கை மழுவொன் றுடையார் போலும் வான்தக்கன் வேள்வி சிதைத்தார் போலும், விலங்கல் எடுத்துகந்த வெற்றியானை விறலழித்து மெய்ஞ்ஞரம்பால் கீதங் கேட்டன், றிலங்கு சுடர்வாள் கொடுத்தார் போலும் இன்னம்பர்த் தான் தோன்றி யீச னாரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி—எழுத்தறிநாதர்; தேவி—சௌந்தரநாயகி.

## 24. திருப்புறம்பயம்*

### திருத்தாண்டகம் [6–ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கொடிமாட நீடெருவு கூடல் கோட்டூர் கொடுங்கோளூர் தண்வளவி கண்டி யூரும், நடமாடு நன்மருகல் வைகி நாளும் நலமாகு மொற்றியூ ரொற்றி யாகப், படுமாலை வண்டறையும் பழனம் பாசூர் பழையாறும் பாற்குளமுங் கைவிட்டிந்நாள், பொடியேறு மேனியராய்ப் பூதஞ் சூழப் புறம்பயம்நம் மூரென்று போயி னாரே. 1

முற்றொருவர் போல முழுநீ றாடி முளைத்திங்கள் சூடிமுந் நூலும் பூண்டு, ஒற்றொருவர் போல உறங்கு வேன்கை ஒளிவளையை யொன்றொன்றா எண்ணு கின்றார், மற்றொருவ ரில்லைத் துணையெனக்கு மால்கொண்டாற் போல மயங்கு வேற்குப், புற்றரவக் கச்சார்த்துப் பூதஞ் சூழப் புறம்பயம்நம் மூரென்று போயி னாரே. 2

ஆகாத நஞ்சுண்ட அந்தி வண்ணர் ஐந்தலைய மாசுணங் கொண் டம்பொற் றோள்மேல், ஏகாச மாவிட்டோ டொன்றேந்

*இத்தலம் பிரளயத்துக்குப் புறம்பாய் இருந்தமையால் பெற்ற பெயர். (புறம்பு+அயம், அயம்-நீர்.)

திவங்*திடு திருவே பலியென்றூர்க் கில்லே புக்கேன், பாகேதுங் கொள்ளார் பலியுங் கொள்ளார் பாவியேன் கண்ணுள்ளே பற்றி நோக்கிப், போகாத வேடத்தர் பூதஞ் சூழப் புறம்பயம்நம் மூரென்று போயி னாரே. 3

பன்மலிந்த வெண்டலை கையி லேந்திப் பனிமுகில்போல் மேனிப் பவந்த நாதர், நென்மலிந்த நெய்த்தானஞ் சோற்றுத் துறை நியமந் துருத்தியும் நீடூர் பாச்சில், கன்மலிந் தோங்கு கழு நீர்க் குன்றங் கடனாகைக் காரோணங் கைவிட் டிந்நாள் பொன் மலிந்த கோதையருந் தாமுமெல்லாம் புறம்பயம்நம் மூரென்று போயி னாரே. 4

செத்தவர்தம் தலைமாலை கையி லேந்திச் சிரமாலை சூடிச் சிவந்த மேனி, மத்தகத்த யானை யுரிவை மூடி மடவா ளவளோடு மானொன் றேந்தி, அத்தவத்த தேவர் அறுப தின்மர் ஆறுநா றாயி ரவர்க் காடல் காட்டிப், புத்தகங் கைக்கொண்டு புலித்தோல் வீக்கிப் புறம்பயம்நம் மூரென்று போயி னாரே. 5

நஞ்சடைந்த கண்டத்தர் வெண்ணீ றாடி நல்லபுலி யதள்மேல் நாகங் கட்டிப், பஞ்சடைந்த மெல்விரலாள் பாக மாகப் பராய்த் துறையே னென்றோர் பவள வண்ணர், துஞ்சிடையே வந்து துடி யுங் கொட்டத் துண்ணென் றெழுந்திருந்தேன் சொல்ல மாட் டேன், புன்சடையின் மேலோர் புனலுஞ் சூடிப் புறம்பயம்நம் மூரென்று போயி னாரே. 6

மறியிலங்கு கையர் மழுவொன் றேந்தி மறைக்காட்டே னென்றோர் மழலை பேசிச், செறியிலங்கு திண்தோள்மேல் நீறு கொண்டு திருமுண்ட மாஇட்ட திலக நெற்றி, நெறியிலங்கு கூந்த லார் பின்பின் சென்று நெடுங்கண் பனிசோர நின்று நோக்கிப், பொறியிலங்கு பாம்பார்த்துப் பூதஞ் சூழப் புறம்பயம்நம் மூரென்று போயி னாரே. 7

நில்லாதே பல்லூரும் பலிகள் வேண்டி நிரைவளையார் பலி பெய்ய நிறையுங் கொண்டு, கொல்லேறுங் கொக்கரையுங் கொடு கொட்டியுங் குடமூக்கி லங்கொழியக் குளிர்தண் பொய்கை, நல்லாளை நல்லூரே தவிரே னென்று நறையூரிற் றூமுந் தவிர்வார்

* விட்டொன் றேந்திவங் என்றும் பாடம்.

போலப், பொல்லாத வேடத்தர் பூதஞ் சூழப் புறம்பயம்நம் மூரென்று போயி னரே. 8

விரையேறு நீறணிந்தோ ராமை பூண்டு வெண்தோடு பெய் திடங்கை வீணை யேந்தித், திரையேறு சென்னிமேல் திங்கள் தன்னைத் திசைவிளங்க வைத்துகந்த செந்தீ வண்ணர், அரையேறு மேகலையாள் பாக மாக ஆரிடத்தி லாட லமர்ந்த ஐயன், புரை யேறு தாமேறிப் பூதஞ் சூழப் புறம்பயம்நம் மூரென்று போயி னரே. 9

கோவாய இந்திரனுள் ளிட்டா ராகக் குமரனும் விக்கின விநாய கன்னும், பூவாய பீடத்துமேல யன்னும் பூமி யளந்தானும் போற்றி சைப்பப், பாவாய இன்னிசைகள் பாடி யாடிப் பாரிடமுந் தாமும் பரந்து பற்றிப், பூவார்ந்த கொன்றை பொறிவண் டார்க்கப் புறம்பயம்நம் மூரென்று போயி னரே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—சாட்சிநாதேசுவரர்; தேவி—கரும்படுசொல்லம்மை.

---

## 25. திருவிசயமங்கை

**திருக்குறுந்தொகை**** [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

குசையும் அங்கையிற் கோசமுங் கொண்டவவ்*
வசையின் மங்கல வாசகர் வாழ்த்தவே
இசைய மங்கையுந் தானுமொன் றாயினன்
விசைய மங்கையுள் வேதியன் காண்மினே. 1

ஆதி நாதன் அடல்விடை மேலமர்
பூத நாதன் புலியத ளாடையன்
வேத நாதன் விசயமங் கையுளான்
பாத மோதவல் லார்க்கில்லை பாவமே. 2

கொள்ளி டக்கரைக் கோவந்த புத்தூரில்
வெள்வி டைக்கருள் செய்விச யமங்கை
உள்ளி டத்துறை கின்ற உருத்திரன்
கிள்ளி டத்தலை யற்ற தயனுக்கே. 3

---

* கொண்டவன் என்றும் பாடம்

திசையு மெங்குங் குலுங்கத் திரிபுரம்
அசைய அங்கெய்திட் டாரழ லூட்டினன்
விசைய மங்கை விருத்தன் புறத்தடி
விசையின் மங்கி விழுந்தனன் காலனே. 4

பொள்ள லாக்கை அகத்தில்ஐம் பூதங்கள்
கள்ள மாக்கிக் கலக்கிய காரிருள்
விள்ள லாக்கி விசயமங் கைப்பிரான்
உள்ளம் நோக்கியென் னுள்ளுள் உறையுமே. 5

கொல்லை யேற்றுக் கொடியொடு பொன்மலை
வில்லை யேற்றுடை யான்விச யமங்கைச்
செல்வ போற்றியென் பாருக்குத் தென்திசை
எல்லை யேற்றலும் இன்சொலு மாகுமே. 6

கண்பல் உக்கக் கபாலம்அங் கைக்கொண்டு
உண்ப லிக்குழல் உத்தமன் உள்ளொளி
வெண்பி றைக்கண்ணி யான்விச யமங்கை
நண்ப னைத்தொழப் பெற்றது நன்மையே. 7

பாண்டு வின்மகன் பார்த்தன் பணிசெய்து
வேண்டும் நல்வரங் கொள்விச யமங்கை
ஆண்ட வன்னடி யேநினைந் தாசையால்
காண்ட லே*கருத் தாகியி ருப்பனே. 8

வந்து கேண்மின் மயல்தீர் மனிதர்காள்
வெந்த நீற்றன் விசயமங் கைப்பிரான்
சிந்தை யால்நினை வார்களைச் சிக்கெனப்
பந்து வாக்கி உயக்கொளுங் காண்மினே. 9

இலங்கை வேந்தன் இருபது தோளிற
விலங்கல் சேர்வி ரலான்விச யமங்கை
வலஞ்செய் வார்களும் வாழ்த்திசைப் பார்களும்
நலஞ்செய் வாரவர் நன்னெறி நாடியே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி—விசயநாதேசுவரர்; தேவி—மங்கைநாயகி.

---

* காண்டலென் என்றும் பாடம்.

## 26. திருப்பழனம்

பண்-பழந்தக்கராகம் [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

சொல்மாலை பயில்கின்ற குயிலினங்காள் சொல்லீரே
பன்மாலை வரிவண்டு பண்மிழற்றும் பழனத்தான்
முன்மாலை* நகுதிங்கள் முகிழ்விளங்கு முடிச்சென்னிப்
பொன்மாலை மார்பன்என் புதுநலமுண் டிகழ்வானோ. 1

கண்டகங்காள் முண்டகங்காள் கைதைகாள் நெய்தல்காள்
பண்டரங்க** வேடத்தான் பாட்டோவாப் பழனத்தான்
வண்டுலாந் தடம்மூழ்கி மற்றவனென் தளிர்வண்ணம்
கொண்டநாள் தானறிவான் குறிக்கொள்ளா தொழிவானோ. 2

மனைக்காஞ்சி இளங்குருகே மறந்தாயோ மதமுகத்த
பனைக்கைம்மா வுரிபோர்த்தான் பலர்பாடும் பழனத்தான்
நினைக்கின்ற நினைப்பெல்லாம் உரையாயோ நிகழ்வண்டே
சுனைக்குவளை மலர்க்கண்ணாள் சொற்றாதாய்ச் சோர்வாளோ. 3

புதியையாய் இனியையாம் பூந்தென்றல் புறங்காடு
பதியாவ திதுவென்று பலர்பாடும் பழனத்தான்
மதியாதார் வேள்விதனை மதித்திட்ட மதிகங்கை
விதியாளன் என்னுயிர்மேல் விளையாடல்† விடுத்தானோ. 4

மண்பொருந்தி வாழ்பவர்க்கும் மாதீர்த்த வேதியர்க்கும்
விண்பொருந்து தேவர்க்கும் வீடுபேறாய் நின்றானைப்
பண்பொருந்த இசைபாடும் பழனஞ்சேர் அப்பனைஎன்
கண்பொருந்தும் போதத்தும்‡ கைவிடநான் கடவேனோ. 5

பொங்கோத மால்கடலிற் புறம்புறம்போய் இரைதேரும்
செங்கால்வெண் மடநாராய் செயற்படுவ தறியேன்நான்
அங்கோல வளைகவர்ந்தான் அணிபொழில்சூழ் பழனத்தான்
தங்கோல நறுங்கொன்றைத் தாரருளா தொழிவானோ. 6

---

*முன்மாலை—அந்திப்பொழுது. **பாண்டரங்கம்—சிவன் கூத்து.
† உயிர்மேல் விளையாடல் – உயிருணின்று ஆளாகக் கொள்ளுதல்.
‡ போழ்தத்துங் என்றும் பாடம்.

துணையார முயங்கிப்போய்த் துறைசேரும் மடநாராய்
பணையார வாரத்தான் பாட்டோவாப் பழனத்தான்
கணையார இருவிசும்பிற் கடிஅரணம் பொடிசெய்த
இணையார மார்பன்என் எழில்நலமுண் டிகழ்வானே. 7

கூடைவவாய்§ மணிவரன்றிக் கொழித்தோடுங் காவிரிப்பூம்
பாவைவாய் முத்திலங்கப் பாய்ந்தாடும் பழனத்தான்
கோவைவாய் மலைமகள்கோன் கொல்லேற்றின் கொடியாடைப்
பூவைகாள் மழலைகாள் போகாத பொழுதுளதே. 8

புள்ளிமான் பொறிஅரவம் புள்ளுயர்த்தான் மணிநாகப்
பள்ளியான் தொழுதேத்த இருக்கின்ற பழனத்தான்
உள்ளுவார்* வினைதீர்க்கும் என்றுரைப்பர் உலகெல்லாம்
கள்ளியேன் நான்இவற்கென் கனவளையுங் கடவேனே. 9

வஞ்சித்தென் வளைகவர்ந்தான் வாரானே யாயிடினும்
பஞ்சிக்காற் சிறகன்னம் பரந்தார்க்கும் பழனத்தான்
அஞ்சிப்போய்க் கலிமெலிய அழலோம்பும் அப்பூதி
குஞ்சிப்பூ வாய்நின்ற சேவடியாய் கோடியையே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருநேரிசை [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

ஆடினா ரொருவர் போலு மலர்கமழ் குழலி னாளைக்
கூடினா ரொருவர் போலுங் குளிர்புனல் வளைந்த திங்கள்
சூடினா ரொருவர் போலுந் தூயநன் மறைகள் நான்கும்
பாடினா ரொருவர் போலும் பழனத்தெம் பரம னாரே. 1

போவதோர் நெறியு மானார் புரிசடைப் புனித னார்நான்
வேவதோர் வினையிற் பட்டு வெம்மைதான் விடவுங் கில்லேன்
கூவல்தான் அவர்கள் கேளார் குணமிலா ஐவர் செய்யும்
பாவமே தீர நின்றார் பழனத்தெம் பரம னாரே. 2

கண்டராய் முண்ட ராகிக் கையிலோர் கபால மேந்தித்
தொண்டர்கள் பாடி யாடித் தொழுகழற் பரம னார்தாம்

---

§ குவைவவாய் என்பது கூவைவவாய் என்றாயிற்று. * உள்குவார் என்றும் பாடம்.

விண்டவர் புரங்க ளெய்த வேதியர் வேத நாவர்
பண்டைஎன் வினைகள் தீர்ப்பார் பழனத்தெம் பரம னாரே. 3

நீரவன் தீயி னோடு நிழலவன் எழில தாய
பாரவன் விண்ணின் மிக்க பரமவன் பரம யோகி
யாரவ னண்டமிக்க திசையினோ டொளிக ளாகிப்
பாரகத் தமுத மானார் பழனத்தெம் பரம னாரே. 4

ஊழியா ரூழி தோறும் உலகினுக் கொருவ ராகிப்
பாழியார் பாவந் தீர்க்கும் பராபரர் பரம தாய
ஆழியான் அன்னத் தானும் அன்றவர்க் களப்பரிய
பாழியார் பரவி யேத்தும் பழனத்தெம் பரம னாரே. 5

ஆலின்கீழ் அறங்க ளெல்லாம் அன்றவர்க் கருளிச் செய்து
நூலின்கீ ழவர்கட் கெல்லா நுண்பொரு ளாகி நின்று
காலின்கீழ்க் காலன் தன்னைக் கடுகத்தான் பாய்ந்து பின்னும்
பாலின்கீழ் நெய்யு மானார் பழனத்தெம் பரம னாரே. 6

ஆதித்தன் அங்கி சோமன் அயனோடு மால்பு தனும்
போதித்து நின்று லகிற் போற்றிசைத் தாரி வர்கள்
சோதித்தா ரேழு லகுஞ் சோதியுட் சோதி யாகிப்
பாதிப்பெண் ணுருவ மானார் பழனத்தெம் பரம னாரே. 7

காற்றனாற் காலற் காய்ந்து காருரி போர்த்த ஈசர்
தோற்றனார் கடலுள் நஞ்சைத் தோடுடைக் காதர் சோதி
ஏற்றினார் இளவெண் திங்கள் இரும்பொழில் சூழ்ந்த காயம்
பாற்றினார் வினைக ளெல்லாம் பழனத்தெம் பரம னாரே. 8

கண்ணனும் பிரம னோடு காண்கில ராகி வந்தே
எண்ணியுந் துதித்தும் ஏத்த எரியுரு வாகி நின்று
வண்ணநன் மலர்கள் தூவி வாழ்த்துவார் வாழ்த்தி ஏத்தப்
பண்ணுலாம் பாடல் கேட்டார் பழனத்தெம் பரம னாரே. 9

குடையுடை அரக்கன் சென்று குளிர்கயி லாய வெற்பின்
இடைமட வரலை அஞ்ச எடுத்தலும் இறைவன் நோக்கி
விடையுடை விகிர்தன் தானும் விரலினால் ஊன்றி மீண்டும்
படைகொடை அடிகள் போலும் பழனத்தெம் பரம னாரே. 10

திருச்சிற்றம்பலம்

## திருவிருத்தம் [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மேவித்து நின்று விளைந்தன வெந்துயர் துக்கமெல்லாம்
ஆவித்து நின்று கழிந்தன அல்லல் அவையறுப்பான்
பாவித்த பாவனை நீயறி வாய்பழ னத்தரசே
கூவித்துக் கொள்ளுந் தனை அடி யேனைக் குறிக்கொள்வதே. 1

சுற்றிநின் றார்புறங் காவல் அமரர் கடைத்தலையில்
மற்றுநின் றார்திரு மாலொடு நான்முகன் வந்தடிக்கீழ்ப்
பற்றிநின் றார்பழ னத்தர சேஉன் பணியறிவான்
உற்றுநின் றார்அடி யேனைக் குறிக்கொண் டருளுவதே. 2

ஆடிநின் றாய்அண்டம் ஏழுங் கடந்துபோய் மேலவையும்
கூடிநின் றாய்குவி மென்முலை யாளையுங் கொண்டுடனே
பாடிநின் றாய்பழ னத்தர சேஅங்கோர் பான்மதியம்
சூடிநின் றாய்அடி யேனைஅஞ் சாமைக் குறிக்கொள்வதே. 3

எரித்துவிட் டாய்அம்பி னாற்புர மூன்றுமுன் னேபடவும்
உரித்துவிட் டாய்உமை யாள்நடுக் கெய்தவோர் குஞ்சரத்தைப்
பரித்துவிட் டாய்பழ னத்தர சேகங்கை வார்சடைமேல்
தரித்துவிட் டாய்அடி யேனைக் குறிக்கொண் டருளுவதே. 4

முன்னையு முன்னை முளைத்தன மூளயி லும்முடனே
மன்னியு மங்கு மிருந்தனை மாய மனத்தவர்கள்
பன்னிய நூலின் பரிசறி வாய்பழ னத்தரசே
உன்னியும் உன்னடி யேனைக் குறிக்கொண் டருளுவதே. 5

ஏய்ந்தறுத் தாய்இன்ப னாய்இருந் தேபடைத் தான்தலையைக்
காய்ந்தறுத் தாய்கண்ணி னாலன்று காமனைக் காலனையும்
பாய்ந்தறுத் தாய்பழ னத்தர சேஎன் பழவினைநோய்
ஆய்ந்தறுத் தாய்அடி யேனைக் குறிக்கொண் டருளுவதே. 6

மற்றுவைத் தாய்அங்கோர் மாலொரு பாகம் மகிழ்ந்துடனே
உற்றுவைத் தாய்உமை யாளொடுங் கூடும் பரிசெனவே*
பற்றிவைத் தாய்பழ னத்தர சேஅங்கோர் பாம்பொருகை
சுற்றிவைத் தாய்அடி யேனைக் குறிக்கொண் டருளுவதே. 7

* பரிசவனே என்றும் பாடம்,

ஊரினின் றாய்ஒன்றி நின்றுவிண் டாரையும் ஒள்ளழலால்
போரினின் றாய்பொறை யாய்உயி ராவி சுமந்துகொண்டு
பாரினின் றாய்பழ னத்தர சேபணி செய்பவர்கட்
காரநின் றாய்அடி யேனைக் குறிக்கொண் டருளுவதே. 8

போகம்வைத் தாய்புரி புன்சடை மேலொர் புனலதனை
ஆகம்வைத் தாய்மலை யான்மட மங்கை மகிழ்ந்துடனே
பாகம்வைத் தாய்பழ னத்தர சேஉன் பணியருளால்
ஆகம்பவைத் தாய்அடி யேனைக் குறிக்கொண் டருளுவதே. 9

அடுத்திருந் தாய்அரக் கன்முடி வாயொடு தோள்நெரியக்
கெடுத்திருந் தாய்கிளர்ந் தார்வலி யைக்கிளை யோடுடனே
படுத்திருந் தாய்பழ னத்தர சேபுலி யின்னுரிதோல்
உடுத்திருந் தாய்அடி யேனைக் குறிக்கொண் டருளுவதே. 10

திருச்சிற்றம்பலம்

---

திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

அருவ னாய்அத்தி யீருரி போர்த்துமை
உருவ னாய்ஒற்றி யூர்பதி யாகிலும்
பருவ ரால்வயல் சூழ்ந்த பழனத்தான்
திருவி னாற்றிரு வேண்டுமித் தேவர்க்கே. 1

வையம் வந்து வணங்கி வலங்கொளும்
ஐய னைஅறி யார்சிலர் ஆதர்கள்
பைகோ ளாடர வார்த்த பழனன்பால்
பொய்யர் காலங்கள் போக்கிடு வார்களே. 2

வண்ண மாக முறுக்கிய வாசிகை
திண்ண மாகத் திருச்சடைச் சேர்த்தியே
பண்ணு மாகவே பாடும் பழனத்தான்
எண்ணும் நீர்அவன் ஆயிர நாமமே. 3

மூர்க்கப் பாம்பு* பிடித்தது மூச்சிட
வாக்கப் பாம்பினைக் கண்ட துணிமதி

---

* மூக்கப் பாம்பு என்றும் பாடம்.

பாக்கப் பாம்பினைப் பற்றும் பழனத்தான்
தார்க்கொண் மாலை சடைக்கணிந் திட்டதே.* 4

நீல முண்ட மிடற்றினன் நேர்ந்ததோர்
கோல முண்ட குணத்தால் நிறைந்ததோர்
பாலு முண்டு பழனன்பா லென்னிடை
மாலு முண்டிறை யென்றன் மனத்துளே. 5

மந்த மாக வளர்பிறை சூடியோர்
சந்த மாகத் திருச்சடை சாத்துவான்
பந்த மாயின தீர்க்கும் பழனத்தான்
எந்தை தாய்தந்தை எம்பெரு மானுமே. 6

மார்க்க மொன்றறி யார்மதி யில்லிகள்
பூக்க ரத்திற் புரிகிலர் மூடர்கள்
பார்க்க நின்று பரவும் பழனத்தான்
தாட்கள் நின்று தலைவணங் கார்களே. 7

ஏறி னார்இமை யோர்கள் பணிகண்டு
தேறு வாரலர் தீவினை யாளர்கள்
பாறி னார்பணி வேண்டும் பழனத்தான்
கூறி னான்உமை யாளொடுங் கூடவே. 8

சுற்று வார்தொழு வார்சுடர் வண்ணன்மேல்
தெற்றி னார்திரி யும்புரம் மூன்றெய்தான்
பற்றி னார்வினை தீர்க்கும் பழனனை
எற்றி னான்மறக் கேனெம் பிரானையே. 9

பொங்கு மாகடல் சூழ்இலங் கைக்கிறை
அங்க மான இறுத்தருள் செய்தவன்
பங்க னென்றும் பழனன் உமையொடும்
தங்கன் தானடி** யேனுடை யுச்சியே. 10

திருச்சிற்றம்பலம்

---

* சடைக்கரந் திட்டதே என்றும் பாடம். ** தாளடி என்றும் பாடம்.

## திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

அலையார் கடல்நஞ்ச முண்டார் தாமே அமரர்களுக் கருள் செய்யும் ஆதி தாமே, கொலையாய கூற்ற முதைத்தார் தாமே கொல்வேங்கைத் தோலொன் றசைத்தார் தாமே, சிலையால் புர மூன் றெரித்தார் தாமே தீநோய் களைந்தென்னை யாண்டார் தாமே, பலிதேர்ந் தழகாய பண்பர் தாமே பழன நகரெம் பிரானார் தாமே. 1

வெள்ள மொருசடைமே லேற்றார் தாமே மேலார் கண் மேலார்கண் மேலார் தாமே, கள்ளங் கடிந்தென்னை யாண்டார் தாமே கருத்துடைய பூதப் படையார் தாமே, உள்ளத் துவகை தருவார் தாமே உறுநோய் சிறுபிணிகள் தீர்ப்பார் தாமே, பள்ளப் பரவைநஞ் சுண்டார் தாமே பழன நகரெம் பிரானார் தாமே. 2

இரவும் பகலுமாய் நின்றார்தாமே எப்போதும் என்னெஞ்சத் துள்ளார் தாமே, அரவ மரையி லசைத்தார் தாமே அனலாடி யங்கை மறித்தார் தாமே, குரவங் கமழுங் குற்றாலர் தாமே கோலங்கள் மேன்மே லுகப்பார் தாமே, பரவும் அடியார்க்குப் பாங்கர் தாமே பழன நகரெம் பிரானார் தாமே. 3

மாறில் மதில்மூன்று மெய்தார் தாமே வரியரவங் கச்சாக ஆர்த்தார் தாமே, நீறுசேர் திருமேனி நிமலர் தாமே நெற்றி நெருப்புக்கண் வைத்தார் தாமே, ஏறு கொடுஞ் சூலக் கையார்* தாமே யென்பா பரண மணிந்தார் தாமே, பாறுண் தலையிற் பலி யார் தாமே பழன நகரெம் பிரானார் தாமே. 4

சீரால் வணங்கப் படுவார் தாமே திசைக்கெல்லாந் தேவாகி நின்றார் தாமே, ஆரா அமுதமு மானார் தாமே யளவில் பெருமை யுடையார் தாமே, நீரார் நியம முடையார் தாமே நீள்வரை வில்லாக வளைத்தார் தாமே, பாரார் பரவப் படுவார் தாமே பழன நகரெம் பிரானார் தாமே. 5

காலனுயிர் வெளவ வல்லார் தாமே கடிதோடும் வெள்ளை விடையார் தாமே, கோலம் பலவு முகப்பார் தாமே கோள்நாக நாணாகப் பூண்டார் தாமே, நீலம் பொலிந்த மிடற்றார் தாமே நீள் வரையி னுச்சி யிருப்பார் தாமே, பால விருத்தரு மானார் தாமே பழன நகரெம் பிரானார் தாமே. 6

---

* ஏறுகொடி சூலக்கையர் என்றும் பாடம்.

ஏய்ந்த வுமைநங்கை பங்கர் தாமே யேழுழிக் கப்புறமாய் நின்றார் தாமே, ஆய்ந்து மலர்தூவ நின்றார் தாமே அளவில் பெருமை யுடையார் தாமே, தேய்ந்த பிறைசடைமேல் வைத்தார் தாமே தீவாய் அரவதனை யார்த்தார் தாமே, பாய்ந்த படர்கங்கை யேற்றார் தாமே பழன நகரெம் பிரானார் தாமே. 7

ஓராதா ருள்ளத்தில் நில்லார் தாமே யுள்ளூறும் அன்பர் மனத்தார் தாமே, பேராதென் சிந்தை யிருந்தார் தாமே பிறர்க் கென்றுங் காட்சிக் கரியார் தாமே, ஊராரு மூவுலகத் துள்ளார் தாமே உலகை நடுங்காமற் காப்பார் தாமே, பாரார் முழவத் திடையார் தாமே பழன நகரெம் பிரானார் தாமே. 8

நீண்டவர்க்கோர் நெருப்புருவ மானார் தாமே நேரிழையை யொருபாகம் வைத்தார் தாமே, பூண்டரவைப் புலித்தோல்மே லார்த்தார் தாமே பொன்னிறத்த வெள்ளச் சடையார் தாமே, ஆண்டுலகே ழனைத்தினையும் வைத்தார் தாமே அங்கங்கே சிவமாகி நின்றார் தாமே, பாண்டவரிற் பார்த்தனுக்குப் பரிந்தார் தாமே பழன நகரெம் பிரானார் தாமே. 9

விடையேறி வேண்டுலகத் திருப்பார் தாமே விரிகதிரோன் சோற்றுத் துறையார் தாமே, புடைசூழத் தேவர் குழாத்தார் தாமே பூந்துருத்தி நெய்த்தானம் மேயார் தாமே, அடைவே புனல் சூழ் ஐயாற்றார் தாமே அரக்கனையும் ஆற்றல் அழித்தார் தாமே, படையாப் பல்பூத முடையார் தாமே பழன நகரெம் பிரானார் தாமே. திருச்சிற்றம்பலம் 10

சுவாமி-ஆபத்சகாயேசுவரர்; தேவி-பெரியநாயகி.

---

## 27. திருவையாறு

பண்–காந்தாரம்* [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மாதர்ப் பிறைக்கண்ணி யானை மலையான் மகளொடும் பாடிப்
போதொடு நீர்சுமந் தேத்திப் புகுவா ரவர்பின் புகுவேன்
யாதுஞ் சுவடு படாமல் ஐயா றடைகின்ற போது
காதன் மடப்பிடி யோடுங் களிறு வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். 1

---

* இத்திருப்பதிகம் திருக்கயிலைக் காட்சியைக் கண்டு அது சேயதாகிய பின் பாடியருளியதாகும்.

போழிளங் கண்ணியி னானைப் பூந்துகி லாளொடும் பாடி
வாழியம் போற்றியென் றேத்தி வட்டமிட் டாடா வருவேன்
ஆழி வலவ*னின் றேத்தும் ஐயா றடைகின்ற போது
கோழி பெடையொடுங் கூடிக் குளிர்ந்து வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். 2

எரிப்பிறைக் கண்ணியி னானை யேந்திழை யாளொடும் பாடி
முரித்த இலயங்க ளிட்டு† முகமலர்ந் தாடா வருவேன்
அரித்தொ ழுகும்வெள் ளருவி ஐயா றடைகின்ற போது
வரிக்குயில் பேடையொ டாடி வைகி வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். 3

பிறையிளங் கண்ணியி னானைப் பெய்வளை யாளொடும் பாடித்
துறையிளம் பன்மலர் தூவித் தோளைக் குளிரத் தொழுவேன்
அறையிளம் பூங்குயி லாலும் ஐயா றடைகின்ற போது
சிறையிளம் பேடையொ டாடிச் சேவல் வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். 4

ஏடு மதிக்கண்ணி யானை ஏந்திழை யாளொடும் பாடிக்
காடொடு நாடு மலையுங் கைதொழு தாடா வருவேன்
ஆட லமர்ந்துறை கின்ற ஐயா றடைகின்ற போது
பேடை மயிலொடுங் கூடிப் பிணைந்து வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். 5

தண்மதிக் கண்ணியி னானைத் தையல்நல் லாளொடும் பாடி
உண்மெலி சிந்தைய னாகி உணரா வுருகா வருவேன்
அண்ண லமர்ந்துறை கின்ற ஐயா றடைகின்ற போது
வண்ணப் பகன்றி**லொ டாடி வைகி வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். 6

கடிமதிக் கண்ணியி னானைக் காரிகை யாளொடும் பாடி
வடிவொடு வண்ணமிரண்டும் வாய்வேண்டுவசொல்லிவாழ்வேன்
அடியிணை ஆர்க்குங் கழலான் ஐயா றடைகின்ற போது
இடிகுர லன்னதொர் ஏனம் இசைந்து வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். 7

---

* ஆழிவலவன் – கடலரசன். † முரித்த இலயங்கள் – இடைவிட்டு இசைக்கும் தாளவொத்து. ** பகன்றில்–(பகா அன்றில்) இணைபிரியாத அன்றிற் பறவை.

விரும்பு மதிக்கண்ணி யானை மெல்லிய லாளொடும் பாடிப்
பெரும்புலர் காலை யெழுந்து பெறுமலர் கொய்யா வருவேன்
அருங்கலம் பொன்மணி* யுந்தும் ஐயா றடைகின்ற போது
கருங்கலை பேடையோ டாடிக் கலந்து வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். 8

முற்பிறைக் கண்ணியி னானை மொய்குழ லாளொடும் பாடிப்
பற்றிக் கயிறறுக் கில்லேன் பாடியும் ஆடா வருவேன்
அற்றருள் பெற்றுநின் றாரோ டையா றடைகின்ற போது
நற்றுணைப் பேடையோ டாடி நாரை வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். 9

திங்கள் மதிக்கண்ணி யானைத் தேமொழி யாளொடும் பாடி
எங்கருள் நல்குங்கொ லெந்தை எனக்கினி யென்னா வருவேன்
அங்கிள மங்கைய ராடும் ஐயா றடைகின்ற போது
பைங்கிளி பேடையோ டாடிப் பறந்து வருவன** கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். 10

வளர்மதிக் கண்ணியி னானை வார்குழ லாளொடும் பாடிக்
களவு படாததொர் காலங் காண்பான் கடைக்கணிக் கின்றேன்
அளவு படாததோ ரன்போ டையா றடைகின்ற போது
இளமண நாகு தழுவி ஏறு வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். 11

திருச்சிற்றம்பலம்

---

பண்-பழந்தக்கராகம் [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

விடகிலேன் அடிநாயேன் வேண்டியக்கால் யாதொன்றும்
இடைகிலேன் அமணர்கள்தம் மறவுரைகேட் டலமந்தேன்
தொடர்கின்றேன் உன்னுடைய தூமலர்ச்சே வடிகாண்பான்
அடைகின்றேன் ஐயாறர்க் காளாய்நான் உய்ந்தேனே. 1

செம்பவளத் திருவுருவர் திகழ்சோதி குழைக்காதர்
கொம்பமருங் கொடிமருங்குற் கோல்வளையா ளொருபாகர்
வம்பவிழும் மலர்க்கொன்றை வளர்சடைமேல் வைத்துகந்த
அம்பவள ஐயாறர்க் காளாய்நான் உய்ந்தேனே. 2

---

* பன்மணி என்றும் பாடம். ** பறந்து வருவன என்றும் பாடம்.

நணியானே சேயானே நம்பானே செம்பொன்னின்
துணியானே தோலானே சுண்ணவெண் ணீற்றானே
மணியானே வானவர்க்கு மருந்தாகிப் பிணிதீர்க்கும்
அணியானே* ஐயாறர்க் காளாய்நான் உய்ந்தேனே. 3

ஊழித்தீ யாய்நின்றாய் உள்குவார் உள்ளத்தாம்
வாழித்தீ யாய்நின்றாய் வாழ்த்துவார் வாயானே
பாழித்தீ யாய்நின்றாய் படர்**சடைமேற் பனிமதியம்
ஆழித்தீ ஐயாறர்க் காளாய்நான் உய்ந்தேனே. 4

சடையானே சடையிடையே தவழுந்தண் மதியானே
விடையானே விடையேறிப் புரமெரித்த வித்தகனே
உடையானே உடைதலைகொண் டூரூருண் பலிக்†குழலும்
அடையானே ஐயாறர்க் காளாய்நான் உய்ந்தேனே. 5

நீரானே தீயானே நெதியானே கதியானே
ஊரானே உலகானே உடலானே உயிரானே
பேரானே பிறைசூடி பிணிதீர்க்கும் பெருமானென்(று)
ஆராத ஐயாறர்க் காளாய்நான் உய்ந்தேனே. 6

கண்ணானாய் மணியானாய் கருத்தானாய் அருத்தானாய்
எண்ணானாய் எழுத்தானாய் எழுத்தினுக்கோர் இயல்பானாய்
விண்ணானாய் விண்ணிடையே புரமெரித்த வேதியனே
அண்ணான ஐயாறர்க் காளாய்நான் உய்ந்தேனே. 7

மின்னானாய் உருவானாய் வேதத்தின் பொருளானாய்
பொன்னானாய் மணியானாய் பொருகடல்வாய் முத்தானாய்
நின்னானார் இருவர்க்குங் காண்பரிய நிமிர்சோதி
அன்னானே‡ ஐயாறர்க் காளாய்நான் உய்ந்தேனே. 8

முத்திசையும் புனற்பொன்னி மொய்பவளங் கொழித்துந்தப்
பத்தர்பலர் நீர்மூழ்கிப் பலகாலும் பணிந்தேத்த
எத்திசையும் வானவர்கள் எம்பெருமா னெனஇறைஞ்சும்
அத்திசையாம் ஐயாறர்க் காளாய்நான் உய்ந்தேனே. 9

---

* அணியான என்றும் பாடம். ** நின்றபடர் என்றும் பாடம்
†கொண்டூரின்பலிக் என்றும் பாடம். ‡அன்னான என்றும் பாடம்.

கருவரைசூழ் கடல்இலங்கைக் கோமானைக் கருத்தழியத்
திருவிரலால் உதகரணஞ் செய்துகந்த சிவமூர்த்தி
பெருவரைசூழ் வையகத்தார் பேர்நந்தி என்றேத்தும்
அருவரைசூழ் ஐயாறர்க் காளாய்நான் உய்ந்தேனே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருநேரிசை [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கங்கையைச் சடையுள்வைத்தார் கதிர்ப்பொறி அரவும் வைத்தார்
திங்களைத் திகழ வைத்தார் திசைதிசை தொழவும் வைத்தார்
மங்கையைப் பாகம் வைத்தார் மான்மறி மழுவும் வைத்தார்
அங்கையுள் அனலும் வைத்தார் ஐயன்ஐ யாற னாரே. 1

பொடிதனைப் பூச வைத்தார் பொங்குவெண் ணூலும் வைத்தார்
கடியதோர் நாகம் வைத்தார் காலனைக் கால வைத்தார்*
வடிவுடை மங்கை தன்னை மார்பிலோர் பாகம் வைத்தார்
அடியிணை தொழவும் வைத்தார் ஐயன்ஐ யாற னாரே. 2

உடைதரு கீளும் வைத்தார் உலகங்க ளனைத்தும் வைத்தார்
படைதரு மழுவும் வைத்தார் பாய்புலித் தோலும் வைத்தார்
விடைதரு கொடியும் வைத்தார் வெண்புரி நூலும் வைத்தார்
அடைதர அருளும் வைத்தார் ஐயன்ஐ யாற னாரே. 3

தொண்டர்கள் தொழவும் வைத்தார் தூமதி சடையில் வைத்தார்
இண்டையைத் திகழ வைத்தார் எமக்கென்று மின்பம் வைத்தார்
வண்டுசேர் குழலி னாளை மருவியோர் பாகம் வைத்தார்
அண்டவா னவர்கள் ஏத்தும் ஐயன்ஐ யாற னாரே. 4

வானவர் வணங்க வைத்தார் வல்வினை மாய வைத்தார்
கானிடை நடமும் வைத்தார் காமனைக் கனலா வைத்தார்
ஆனிடை ஐந்தும் வைத்தார் ஆட்டுவார்க் கருளும் வைத்தார்
ஆனையின் உரிவை வைத்தார் ஐயன்ஐ யாற னாரே. 5

சங்கணி குழையும் வைத்தார் சாம்பல்மெய்ப் பூச வைத்தார்
வெங்கதிர் எரிய வைத்தார் விரிபொழி லனைத்தும் வைத்தார்
கங்குலும் பகலும் வைத்தார் கடுவினை களைய வைத்தார்
அங்கம தோ‡த வைத்தார் ஐயன்ஐ யாற னாரே. 6

---

* காலனைக் காலில் வைத்தார் என்றும் பாடம். ‡ அங்கமது–அங்கத்தையுடையது; வேதம்.

பத்தர்கட் கருளும் வைத்தார் பாய்விடை ஏற வைத்தார்
சித்தத்தை ஒன்ற வைத்தார் சிவமதே நினைய வைத்தார்
முத்தியை முற்ற வைத்தார் முறைமுறை நெறிகள் வைத்தார்
அத்தியின் உரிவை வைத்தார் ஐயன்ஐ யாற னாரே. 7

ஏறுகந் தேற வைத்தார் இடைமரு திடமும் வைத்தார்
நாறுபூங் கொன்றை வைத்தார் நாகமும் அரையில் வைத்தார்
கூறுமை யாக வைத்தார் கொல்புலித் தோலும் வைத்தார்
ஆறுமோர் சடையில் வைத்தார் ஐயன்ஐ யாற னாரே. 8

பூதங்கள் பலவும் வைத்தார் பொங்குவெண் ணீறும் வைத்தார்
கீதங்கள் பாட வைத்தார் கின்னரந் தன்னை வைத்தார்
பாதங்கள் பரவ வைத்தார் பத்தர்கள் பணிய வைத்தார்
ஆதியும் அந்தம் வைத்தார் ஐயன்ஐ யாற னாரே. 9

இரப்பவர்க் கீய வைத்தார் ஈபவர்க் கருளும் வைத்தார்
கரப்பவர்** தங்கட் கெல்லாங் கடுநர கங்கள் வைத்தார்
பரப்புநீர்க் கங்கை தன்னைப் படர்சடைப் பாகம் வைத்தார்
அரக்கனுக் கருளும் வைத்தார் ஐயன்ஐ யாற னாரே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருநேரிசை*

திருச்சிற்றம்பலம்

குண்டனாய்ச் சமண ரோடே கூடிநான் கொண்ட மாலைத்
துண்டனே சுடர்கொள் சோதீ தூநெறி யாகி நின்ற
அண்டனே அமரர் ஏறே திருவையா றமர்ந்த தேனே
தொண்டனேன் தொழுதுன் பாதஞ்சொல்லிநான் திரிகின்றேனே.† 1

பீலிகை இடுக்கி நாளும் பெரியதோர் தவமென் றெண்ணி
வாலிய தறிகள் போல மதியிலார் பட்ட தென்னே
வாலியார் வணங்கி ஏத்துந் திருவையா றமர்ந்த தேனே(டு)
ஆலியா எழுந்த நெஞ்சம் அழகிதா எழுந்த வாறே. 2

தட்டிடு சமண ரோடே தருக்கிநான் தவமென் றெண்ணி
ஒட்டிடு மனத்தி னீரே உம்மையான் செய்வ தென்னே

---

** கரப்பவர்–வஞ்சகர். *இப்பதிகம் அமணரினின்று போந்த சரிதக் குறிப்பை உணர்த்தும். †நானறிகின்றேனே என்றும் பாடம்.

மொட்டிடு மலப் பொய்கைத் திருவையா றமர்ந்த தேனோ(டு)
ஒட்டிடும் உள்ளத் தீரே உம்மைநான் உகந்திட் டேனே. 3

பாசிப்பல் மாசு மெய்யர் பலமிலாச் சமண ரோடு
நேசத்தா லிருந்த நெஞ்சை நீக்குமா றறிய மாட்டேன்
தேசத்தார் பரவி யேத்துந் திருவையா றமர்ந்த தேனை
வாசத்தால் வணங்க வல்லார் வல்வினை மாயு மன்றே. 4

கடுப்பொடி யட்டி மெய்யிற் கருதியோர் தவமென் றெண்ணி
வடுக்களோ டிசைந்த நெஞ்சே மதியிலி பட்ட தென்னே
மடுக்களில் வாளை பாயுந் திருவையா றமர்ந்த தேனை
அடுத்துநின் றுன்னு நெஞ்சே அருந்தவஞ் செய்த வாறே. 5

துறவியென் றவம தோரேன் சொல்லிய செலவு செய்து
உறவினல் அமண ரோடும் உணர்விலேன் உணர்வொன் றின்றி
நறவமார் பொழில்கள் சூழ்ந்த திருவையா றமர்ந்த தேனை
மறவிலா நெஞ்ச மேநன் மதியுனக் கடைந்த வாறே. 6

பல்லுரைச் சமண ரோடே பலபல கால மெல்லாஞ்
சொல்லிய செலவு செய்தேன் சோர்வனுன் நினைந்த போது
மல்லிகை மலருஞ் சோலைத் திருவையா றமர்ந்த தேனை
எல்லியும் பகலு மெல்லாம் நினைந்தபோ தினிய வாறே. 7

மண்ணுளார் விண்ணு ளாரும் வணங்குவார் பாவம் போக
எண்ணிலாச் சமண ரோடே இசைந்தனை ஏழை நெஞ்சே
தெண்ணிலா எறிக்குஞ் சென்னித் திருவையா றமர்ந்த தேனைக்
கண்ணினுற் காணப் பெற்றுக் கருதிற்றே முடிந்த வாறே. 8

குருந்தம தொசித்த மாலும் குலமலர் மேவி னானும்
திருந்துநற் றிருவ டியுந் திருமுடி காண மாட்டார்
அருந்தவ முனிவ ரேத்துந் திருவையா றமர்ந்த தேனைப்
பொருந்திநின் றுன்னு நெஞ்சே பொய்வினை மாயு மன்றே. 9

அறிவிலா அரக்க னோடி அருவரை எடுக்க லுற்று
முறுகினன் முறுகக் கண்டு மூதறி வாளன் நோக்கி
நிறுவினன் சிறுவிரலால் நெரிந்துபோய் நிலத்தில் வீழ
அறிவினல் அருள்கள் செய்தான் திருவையா றமர்ந்த தேனே. 10

திருச்சிற்றம்பலம்

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

தானலா துலக மில்லை சகமலா தடிமை யில்லை
கானலா தாட லில்லை கருதுவார் தங்க ளுக்கு
வானலா தருளு மில்லை வார்குழல் மங்கை யோடும்
ஆனலா தூர்வ தில்லை ஐயன்ஐ யாற னார்க்கே. 1

ஆலலால் இருக்கை இல்லை அருந்தவ முனிவர்க் கன்று
நூலலால் நொடிவ தி*ல்லை நுண்பொரு ளாய்ந்து கொண்டு
மாலுநான் முகனும் கூடி மலரடி வணங்க வேலை
ஆலலால் அமுத மில்லை ஐயன்ஐ யாற னார்க்கே. 2

நரிபுரி சுடலை தன்னில் நடமலால் நவிற்ற லில்லை
சுரிபுரி குழலி யோடுந் துணையலால் இருக்கை யில்லை
தெரிபுரி சிந்தை யார்க்குத் தெளிவலால் அருளுமில்லை
அரிபுரி மலர்கொண் டேத்தும் ஐயன்ஐ யாற னார்க்கே. 3

தொண்டலால் துணையு மில்லை தோலலா துடையு மில்லை
கண்டலா தருளு மில்லை கலந்தபின் பிரிவ தில்லை
பண்டைநான் மறைகள் காணாப் பரிசின னென்றென் றெண்ணி
அண்டவா னவர்கள் ஏத்தும் ஐயன்ஐ யாற னார்க்கே. 4

எரியலா லுருவ மில்லை ஏறலால் ஏற லில்லை
கரியலாற் போர்வை யில்லை காண்டகு சோதி யார்க்குப்
பிரிவிலா அமரர் கூடிப் பெருந்தகைப் பிரானென் றேத்தும்
அரியலாற் றேவி யில்லை ஐயன்ஐ யாற னார்க்கே. 5

என்பலாற் கலனு மில்லை எருதலா லூர்வ தில்லை
புன்புலால் நாறு காட்டிற் பொடியலாற் சாந்து மில்லை
துன்பிலாத் தொண்டர் கூடித் தொழுதழு தாடிப் பாடும்**
அன்பலாற் பொருளு மில்லை ஐயன்ஐ யாற னார்க்கே. 6

கீளலால் உடையு மில்லை கிளர்பொறி யரவம் பைம்பூண்
தோளலால் துணையு மில்லை தொத்தலர் கின்ற வேனில்
வேளலாற் காயப் பட்ட வீரரு மில்லை மீளா
ஆளலாற் கைம்மா றில்லை ஐயன்ஐ யாற னார்க்கே. 7

---

* நொடிவது-கையாற் காட்டி யுணர்த்துவது. ** தொழு தெழுந் தாடிப்பாடும் என்றும் பாடம்.

சகமலா தடிமை யில்லை தானலால் துணையு மில்லை
நகமெலாந் தேயக் கையால் நாண்மலர் தொழுது தூவி
முகமெலாங் கண்ணீர் மல்க முன்பணிந் தேத்துந் தொண்டர்
அகமலாற் கோயி லில்லை ஐயன்ஐ யாற னார்க்கே. 8

உமையலா துருவ மில்லை உலகலா துடைய தில்லை
நமையெலா முடைய ராவர் நன்மையே தீமை யில்லை
கமையெலா முடைய ராகிக் கழலடி பரவுந் தொண்டர்க்
கமைவிலா அருள்கொ டுப்பார் ஐயன்ஐ யாற னார்க்கே. 9

மலையலா லிருக்கை யில்லை மதித்திடா அரக்கன் றன்னைத்
தலையலால் நெரித்த தில்லை தடவரைக் கீழ டர்த்து
நிலையிலார் புரங்கள் வேவ நெருப்பலால் விரித்த தில்லை
அலையினார் பொன்னி மன்னும் ஐயன்ஐ யாற னார்க்கே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருவிருத்தம் [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

அந்திவட் டத்திங்கட் கண்ணியன் ஐயா றமர்ந்து தந்தென்
புந்திவட் டத்திடைப் புக்குநின் றானையும் பொய்யென்பனோ
சிந்திவட் டச்சடைக் கற்றை யலம்பச் சிறிதலர்ந்த
நந்திவட் டத்தொடு கொன்றை வளாவிய நம்பனையே. 1

பாடகக் கால்கழற் கால்பரி திக்கதி ருக்கவந்தி
நாடகக் கால்நங்கை முன்செங்கண் ஏனத்தின் பின்நடந்த
காடகக் கால்கணங் கைதொழுங் காலெங் கணாய்நின்றகால்
ஆடகக் காலரி மான்தேர் வலவன்ஐ யாற்றனவே.*

திருச்சிற்றம்பலம்

---

## திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

குறுவித்த வாகுற்ற நோய்வினை காட்டிக் குறுவித்தநோய்
உறுவித்த வாவுற்ற நோய்வினை தீர்ப்பான் உகந்தருளி
அறிவித்த வாறடி யேனைஐ யாறன் அடிமைக்களே
செறிவித்த வாதொண்ட னேனைத்தன் பொன்னடிக் கீழெனையே. 9

---

* பரிமாறேர வல்வினை யாற்றினவே என்றும் பாடம்.

கூர்வித்த வாகுற்ற நோய்வினை காட்டியுங் கூர்வித்தநோய்
ஊர்வித்த வாவுற்ற நோய்வினை தீர்ப்பான் உகந்தருளி
ஆர்வித்த வாறடி யேனைஐ யாறன் அடிமைக்களே
சேர்வித்த வாதொண்ட னேனைத்தன் பொன்னடிக் கீழெனையே.2

தாக்கின வாசல மேவினை* காட்டியுந் தண்டித்தநோய்
நீக்கின வாநெடு நீரின்நின் றேற நினைந்தருளி
ஆக்கின வாறடி யேனைஐ யாறன் அடிமைக்களே
நோக்கின வாதொண்ட னேனைத்தன் பொன்னடிக் கீழெனையே.3

தருக்கின நான்தக வின்றியு மோடச் சலமதனுள்
நெருக்கின வாநெடு நீரின்நின் றேற நினைந்தருளி
உருக்கின வாறடி யேனைஐ யாறன் அடிமைக்களே
பெருக்கின வாதொண்ட னேனைத்தன் பொன்னடிக்கீழெனையே.4

இழிவித்த வாறிட்ட நோய்வினை காட்டி இடர்ப்படுத்துக்
கழிவித்த வாகட்ட நோய்வினை தீர்ப்பான் கலந்தருளி
அழிவித்த வாறடி யேனைஐ யாறன் அடிமைக்களே
தொழுவித்த வாதொண்ட னேனைத்தன் பொன்னடிக் கீழெனையே. 5

இடைவித்த வாறிட்ட நோய்வினை காட்டி இடர்ப்படுத்து
உடைவித்த வாறுற்ற நோய்வினை தீர்ப்பா னுகந்தருளி
அடைவித்த வாறடி யேனைஐ யாறன் அடிமைக்களே
தொடர்வித்த வாதொண்ட னேனைத்தன் பொன்னடிக் கீழெனையே. 6

படக்கின வாபட நின்றுபன் னாளும் படக்கினநோய்
அடக்கின வாறது வன்றியுந் தீவினை பாவமெல்லாம்
அடக்கின வாறடி யேனைஐ யாறன் அடிமைக்களே
தொடக்கின வாதொண்ட னேனைத்தன் பொன்னடிக் கீழெனையே. 7

மறப்பித்த வாவல்லை நோய்வினை காட்டி மறப்பித்தநோய்
துறப்பித்த வாதுக்க நோய்வினை தீர்ப்பான் உகந்தருளி
இறப்பித்த வாறடி யேனைஐ யாறன் அடிமைக்களே
சிறப்பித்த வாதொண்ட னேனைத்தன் பொன்னடிக் கீழெனையே.8

துயக்கின வாதுக்க நோய்வினை காட்டித் துயக்கினநோய்
இயக்கின வாறிட்ட நோய்வினை தீர்ப்பான் இசைந்தருளி
அயக்கின வாறடி யேனைஐ யாறன் அடிமைக்களே
மயக்கின வாதொண்ட னேனைத்தன் பொன்னடிக் கீழெனையே. 9

* சலமேல் வினை என்றும் பாடம்.

கறுத்துமிட் டார்கண்டங் கங்கை சடைமேற் கரந்தருளி
இறுத்துமிட் டார்இலங் கைக்கிறை தன்னை இருபதுதோள்
அறுத்துமிட் டாரடி யேனைஐ யாறன் அடிமைக்களே*
பொறுத்துமிட் டார்தொண்ட னேனைத்தன் பொன்னடிக்
கீழெனையே.†

திருச்சிற்றம்பலம்

---

### திருவிருத்தம்*

திருச்சிற்றம்பலம்

சிந்திப் பரியன சிந்திப் பவர்க்குச் சிறந்து செந்தேன்
முந்திப் பொழிவன முத்தி கொடுப்பன மொய்த்திருண்டு
பந்தித்து நின்ற பழவினை தீர்ப்பன பாம்புசுற்றி
அந்திப் பிறையணிந் தாடும்ஐ யாறன் அடித்தலமே. 1

இழித்தன ஏழேழ் பிறப்பும் அறுத்தன என்மனத்தே
பொழித்தன போரெழிற்‡கூற்றை யுதைத்தனபோற்றவர்க்காய்க்
கிழித்தன தக்கன் கிளரொளி வேள்வியைக் கீழமுன்சென்(று)
அழித்தன ஆறங்க மானஐ யாறன் அடித்தலமே. 2

மணிநிறம் ஒப்பன பொன்னிறம் மன்னின மின்னியல்வாய்
கணிநிற மன்ன கயிலைப் பொருப்பன காதல்செய்யத்
துணிவன சீலத்த ராகித் தொடர்ந்துவி டாததொண்டர்க்
கணியன சேயன தேவர்க்கை யாறன் அடித்தலமே. 3

இருள்தரு துன்பப் படல மறைப்பமெய்ஞ் ஞானமென்னும்
பொருள்தரு கண்ணிழந் துண்பொருள் நாடிப் புகலிழந்த
குருடருந் தம்மைப் பரவக் கொடுநர கக்குழிநின்(று)
அருள்தரு கைகொடுத் தேற்றும்ஐ யாறன் அடித்தலமே. 4

எழுவாய் இறுவாய் இலாதன வெங்கட் பிணிதவிர்த்து**
வழுவா மருத்துவ மாவன மாநர கக்குழிவாய்

---

* அடிமைக்குள் என்றும் பாடம்; அடிமைகள்: உயர்வுப் பன்மை. பலதிறப்பட்ட அருமைத் தொண்டுமாம். † இப்பதிகம் முழுமையும் சூலைதந்து சமண் தீர்த்து ஆட்கொண்டருளிய சரிதக் குறிப்பைக் கொண்டது * இப்பதிகம் முழுமையும் திருவடிப் பெரு மையைக் கூறுவது. சில பிரதிகளில் 11–20 பாசுரங்களைத் தனிப் பதிகமாக அமைத்துள்ளார்கள். ‡பேரெழிற் என்றும் பாடம் **வெங்கள் பிணிதவிர்த்து என்றும் பாடம்.

விழுவா ரவர்தம்மை வீழ்ப்பன மீட்பன மிக்கஅன்போ(டு)
அழுவார்க் கமுதங்கள் காண்கஐ யாறன் அடித்தலமே. 5

துன்பக் கடலிடைத் தோணித் தொழில்பூண்ட தொண்டர்தம்மை
இன்பக் கரைமுகந் தேற்றுந் திறத்தன மாற்றயலே
பொன்பட் டொழுகப் பொருந்தொளிசெய்யுமப் போய்பொருந்தா
அன்பர்க் கணியன காண்கஐ யாறன் அடித்தலமே. 6

களித்துக் கலந்ததொர் காதற் கசிவோடு காவிரிவாய்க்
குளித்துத் தொழுதுமுன் நின்றஇப் பத்தரைக் கோதில் செந்தேன்
தெளித்துச் சுவையமு தூட்டி யமரர்கள் சூழிருப்ப
அளித்துப் பெருஞ்செல்வ மாக்கும்ஐ யாறன் அடித்தலமே. 7

திருத்திக் கருத்தினைச் செவ்வே நிறுத்திச் செறுத்துடலை
வருத்திக் கடிமலர் வாளெடுத் தோச்சி மருங்குசென்று
விருத்திக் குழக்கவல் லோர்கட்கு விண்பட் டிகையிடுமால்
அருத்தித் தருந்தவ ரேத்தும்ஐ யாறன் அடித்தலமே. 8

பாடும் பறண்டையும் ஆந்தையும்* ஆர்ப்பப் பரந்துபல்பேய்
கூடி முழவக் குவிகவிழ் கொட்டக் குறுநரிகள்
நீடுங் குழல்செய்ய வையம் நெளிய நிணப்பிணக்காட்
டாடுந் திருவடி காண்கஐ யாறன் அடித்தலமே. 9

நின்போல் அமரர்கள் நீண்முடி சாய்த்து நிமிர்த்துகுத்த
பைம்போ துழக்கிப் பவளந் தழைப்பன பாங்கறியா
என்போ லிகள்பறித் திட்ட இலையும் முகையுமெல்லாம்
அம்போ தெனக்கொள்ளும் ஐயன்ஐ யாறன் அடித்தலமே. 10

மலையார் மடந்தை மனத்தன வானோர் மகுடமன்னி
நிலையா யிருப்பன நின்றோர் மதிப்பன நீள்நிலத்துப்
புலையாடு புன்மை தவிர்ப்பன பொன்னுல கம்மளிக்கும்
அலையார் புனற்பொன்னி சூழ்ந்தஐ யாறன் அடித்தலமே. 11

பொலம்புண்ட ரீகப் புதுமலர் போல்வன போற்றியென்பார்
புலம்பும் பொழுதும் புணர்துணை யாவன பொன்னனையாள்**

---

* பறண்டையுமாந்தையும் என்றும் பாடம். பறண்டை, மொந்தை-வாத்திய வகைகள். **பொன்னனைய என்றும் பாடம்.

சிலம்புஞ் செறிபா டகமுஞ் செழுங்கிண் கிணித்திரளும்
அலம்புந் திருவடி காண்கஐ யாறன் அடித்தலமே. 12

உற்று ரிலாதார்க் குறுதுணை யாவன ஓதிநன்னூல்
கற்றுர் பரவப் பெருமை யுடையன காதல் செய்ய
கிற்பார் தமக்குக் கிளரொளி வானகந் தான்கொடுக்கும்
அற்றுர்க் கரும்பொருள் காண்கஐ யாறன் அடித்தலமே. 13

வானைக் கடந்தண்டத் தப்பால் மதிப்பன மந்திரிப்பார்
ஊனைக் கழித்துய்யக் கொண்டருள் செய்வன உத்தமர்க்கு
ஞானச் சுடராய் நடுவே யுதிப்பன நங்கையஞ்ச
ஆனை யுரித்தன காண்கஐ யாறன் அடித்தலமே. 14

மாதிர மாநில மாவன வானவர் மாமுகட்டின்
மீதன மென்கழல் வெங்கச்சு வீக்கின வெந்நமனுர்
தூதரை யோடத் துரப்பன துன்பறத் தொண்டுபட்டார்க்
காதர மாவன காண்கஐ யாறன் அடித்தலமே. 15

பேணித் தொழுமவர் பொன்னுல காளப் பிறங்கருளால்
ஏணிப் படிநெறி யிட்டுக் கொடுத்திமை யோர்முடிமேல்
மாணிக்கம் ஒத்து மரகதம் போன்று வயிரமன்னி
ஆணிக் கனகமும் ஒக்கும்ஐ யாறன் அடித்தலமே. 16

ஓதிய ஞானமும் ஞானப் பொருளும் ஒலிசிறந்த
வேதியர் வேதமும் வேள்வியு மாவன விண்ணுமண்ணும்
சோதியஞ் செஞ்சுடர் ஞாயிறும் ஒப்பன தூமதியோ(டு)
ஆதியும் அந்தமு மானஐ யாறன் அடித்தலமே. 17

சுணங்கு முகத்துத் துணைமுலைப் பாவை சுரும்பொடுவண்
டணங்குங் குழலி யணியார் வளைக்கரங் கூப்பிநின்று
வணங்கும் பொழுதும் வருடும் பொழுதும்வண் காந்தளொண்போ
தணங்கும் அரவிந்தம் ஒக்கும்ஐ யாறன் அடித்தலமே. 18

சூழலார் துயர்வெயிற் சுட்டிடும் போதடித் தொண்டர்துன்னும்
நிழலா வனவென்று நீங்காப் பிறவி நிலைகெடுத்துக்
கழலா வினைகள் கழற்றுவ காலவ னங்*கடந்த
அழலார் ஒளியன காண்கஐ யாறன் அடித்தலமே. 19

*காலவனம்–காலதத்துவம்; சுடுகாடு அல்லது இருள் என்றலுமாம்.

வலியான் தலைபத்தும் வாய்விட் டலற வரையடர்த்து
மெலியா வலியுடைக் கூற்றை உதைத்துவிண் ணோர்கண்முன்னே
பலிசேர் படுகடை பார்த்துப்பன் னாளும் பலிகழ
அலியா நிலைநிற்கும் ஐயன்ஐ யாறன் அடித்தலமே. 20

திருச்சிற்றம்பலம்

---

## திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

சிந்தை வாய்தலு ளான்வந்து சீரியன்
பொந்து வார்புலால் வெண்டலைக் கையினன்
முந்தி வாயதோர் மூவிலை வேல்பிடித்
தந்தி வாயதோர் பாம்பர்ஐ யாறரே. 1

பாகம் மாலை மகிழ்ந்தனர் பால்மதி
போக ஆனை*யின் ஈருரி போர்த்தவர்
கோக மாலை குலாயதோர் கொன்றையும்
ஆக ஆன்நெய்அஞ் சாடும்ஐ யாறரே. 2

நெஞ்சம் என்பதோர் நீள்கயந் தன்னுள்ளே
வஞ்சம் என்பதோர் வான்சுழிப் பட்டுநான்
துஞ்சும் போழ்துநின் நாமத் திருவெழுத்(து)
அஞ்சுந் தோன்ற அருளும்ஐ யாறரே. 3

நினைக்கும் நெஞ்சினுள் ளார்நெடு மாமதில்
அனைத்தும் ஒள்ளழல் வாயெரி யூட்டினார்
பனைக்கை வேழத் துரியுடல் போர்த்தவர்
அனைத்து வாய்தலுள் ளாரும்ஐ யாறரே. 4

பரியர் நுண்ணியர் பார்த்தற் கரியவர்
அரிய பாடலர் ஆடல ரன்றியும்
கரிய கண்டத்தர் காட்சி பிறர்க்கெலாம்
அரியர் தொண்டர்க் கெளியர்ஐ யாறரே. 5

புலரும் போது மிலாப்பட்ட** பொற்சுடர்
மலரும் போதுக ளாற்பணி யச்சிலர்

---

* போகமானை என்றும் பாடம். ** மிலர்பட்ட என்றும் பாடம்.

இலரும் போதும் இலாதது மன்றியும்
அலரும் போதும் அணியும்ஐ யாறரே. 6

பங்க மாலைக் குழலியோர் பால்நிறக்
கங்கை மாலையர் காதன்மை செய்தவர்
மங்கை மாலை* மதியமுங் கண்ணியும்
அங்க மாலையுஞ் சூடும்ஐ யாறரே. 7

முன்னை யாறு முயன்றெழு வீரெலாம்
பின்னை யாறு பிரியெனும் பேதைகாள்
மன்னை யாறு மருவிய மாதவன்
தன்னை யாறு தொழத்தவ மாகுமே. 8

ஆனை** யாறென ஆடுகின் றான்முடி
வானை யாறு வளாயது காண்மினோ
நான்ஐ யாறுபுக் கேற்கவன் இன்னருள்
தேனை யாறு திறந்தாலே யொக்குமே. 9

அரக்கின் மேனியன் அந்தளிர் மேனியன்
அரக்கின் சேவடி யாளஞ்ச அஞ்சலென்(று)
அரக்கன் ஈரைந்து வாயும் அலறவே.
அரக்கி னானடி யாலும்ஐ யாறனே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருக்குறுந்தொகை ***

திருச்சிற்றம்பலம்

சிந்தை வண்ணத்த ராய்த்திறம் பாவணம்
முந்தி வண்ணத்த ராய்முழு நீறணி
சந்தி வண்ணத்த ராய்த்தழல் போல்வதோர்
அந்தி வண்ணமு மாவர்ஐ யாறரே. 1

மூல வண்ணத்த ராய்முத லாகிய
கோல வண்ணத்த ராகிக் கொழுஞ்சுடர்
நீல வண்ணத்த ராகி நெடும்பளிங்
கால வண்ணத்த ராவர்ஐ யாறரே. 2

---

* மங்கமாலை என்றும் பாடம். ** ஆனெய் என்பது ஆனைஎன மரீஇயிற்று. ஆனை –(ஆன்+ஐ) பஞ்ச கௌவியமுமாம். *** இப் பதிகம் முழுதும் வண்ணங்களைத் துதித்தலாம்.

சிந்தை வண்ணமுந் தீயதோர் வண்ணமும்
அந்திப் போதழ காகிய வண்ணமும்
பந்திக் காலனைப் பாய்ந்ததோர் வண்ணமும்
அந்தி வண்ணமு மாவர்ஐ யாறரே. 3

இருளின் வண்ணமு மேழிசை வண்ணமும்
சுருளின் வண்ணமுஞ் சோதியின் வண்ணமும்
மருளு நான்முகன் மாலொடு வண்ணமும்
அருளும் வண்ணமு வாவர்ஐ யாறரே. 4

இழுக்கின் வண்ணங்க ளாகிய வெவ்வழல்
குழைக்கும் வண்ணங்க ளாகியுங் கூடியும்
மழைக்கண் மாமுகி லாகிய வண்ணமும்
அழைக்கும் வண்ணமு மாவர்ஐ யாறரே. 5

இண்டை வண்ணமும் ஏழிசை வண்ணமும்
தொண்டர் வண்ணமுஞ் சோதியின் வண்ணமும்
கண்ட வண்ணங்க ளாய்க்கனல் மாமணி
அண்ட வண்ணமு மாவர்ஐ யாறரே. 6

விரும்பும் வண்ணமும் வேதத்தின் வண்ணமும்
கரும்பின் இன்மொழிக்* காரிகை வண்ணமும்
விரும்பு வார்வினை தீர்த்திடும் வண்ணமும்
அரும்பின் வண்ணமு மாவர்ஐ யாறரே. 7

ஊழி வண்ணமும் ஒண்சுடர் வண்ணமும்
வேழ ஈருரி போர்த்ததோர் வண்ணமும்
வாழித் தீயுரு வாகிய வண்ணமும்
ஆழி வண்ணமு மாவர்ஐ யாறரே. 8

செய்த வன்திரு நீறணி வண்ணமும்
எய்த நோக்கரி தாகிய வண்ணமும்
கைது காட்சி யரியதோர் வண்ணமும்
ஐது வண்ணமு மாவர்ஐ யாறரே. 9

எடுத்த வாளரக் கன்திறல் வண்ணமும்
இடர்க்கள் போற்பெரி தாகிய வண்ணமும்
கடுத்த கைந்நரம் பாலிசை வண்ணமும்
அடுத்த வண்ணமு மாவர்ஐ யாறரே. 10

திருச்சிற்றம்பலம்

---

* கரும்பின் மென்மொழிக் என்றும் பாடம்

திருத்தாண்டகம் [6-ந் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

ஆரார்* திரிபுரங்கள் நீறு நோக்கும் அனலாடி ஆரமுதே யென்றேன் நானே, கூரார் மழுவாட் படையொன் றேந்திக் குறட்பூதப் பல்படையா யென்றேன் நானே, பேரா யிரமுடையா யென்றேன் நானே பிறைசூடும் பிஞ்ஞகனே யென்றேன் நானே, ஆரா அமுதேயென் ஐயா றனே† யென்றென்றே‡ நானரற்றி நைகின் றேனே. 1

தீவாயின் முப்புரங்கள் நீறு நோக்குந் தீர்த்தா புராணனே யென்றேன் நானே, மூவா மதிசூடி யென்றேன் நானே முதல்வா, முக் கண்ணனே யென்றேன் நானே, ஏவார் சிலையானே யென் றேன் நானே இடும்பைக் கடல்நின்றும் ஏற வாங்கி, ஆவாவென் றருள்புரியும் ஐயா றனே யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 2

அஞ்சுண்ண வண்ணனே யென்றேன் நானே அடியார்கட் காரமுதே யென்றேன் நானே, நஞ்சணி கண்டனே யென்றேன் நானே நாவலர்கள் நான்மறையே யென்றேன் நானே, நெஞ்சுணர வுள்புக் கிருந்தபோது நிறையும் அமுதமே யென்றேன் நானே, அஞ்சாதே யாள்வானே ஐயா றனே யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 3

தொல்லைத் தொடுகடலே யென்றேன் நானே துலங்கும் இளம் பிறையா யென்றேன் நானே, எல்லை நிறைந்தானே யென்றேன் நானே ஏழ்நரம்பின் இன்னிசையா என்றேன் நானே, அல்லற் கடல்புக் கழுந்து வேனை வாங்கியருள் செய்தா யென்றேன் நானே, எல்லையாம் ஐயாறு என்றேன் நானே யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 4

இண்டைச் சடைமுடியா யென்றேன் நானே இருசுடர் வானத்தா யென்றேன் நானே, தொண்டர் தொழப்படுவா யென்றேன் நானே துருத்திநெய்த் தானத்தா யென்றேன் நானே கண்டங் கறுத்தானே யென்றேன் நானே கனலாகுங் கண்ணனே யென்றேன் நானே, அண்டத்துக் கப்பாலாம் ஐயா றனே யென்றென்றே நானரற்றி நைகின் றேனே 5

* ஆரார்—பகைவர். † ஐயாறன்னே என்றும் பாடம். ‡ என் றென்றே – என்று இனைய பலவும்.

பற்றார் புரமெரித்தா யென்றேன் நானே பசுபதீ பண்டரங்கா என்றேன் நானே, கற்றார்கள் நாவினை யென்றேன் நானே கடுவிடை யொன் றார்தியா யென்றேன் நானே, பற்றுனார் நெஞ்சுளா யென்றேன் நானே பார்த்தற் கருள்செய்தா யென்றேன் நானே, அற்றார்க் கருள்செய்யும் ஐயா றனே யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 6

விண்ணோர் தலைவனே யென்றேன் நானே விளங்கும் இளம் பிறையா யென்றேன் நானே, எண்ணா ரெயிலெரித்தா யென் றேன் நானே யேகம்பம் மேயானே யென்றேன் நானே, பண் ணார் மறைபாடி யென்றேன் நானே, பசுபதீ பால்நீற்றா யென் றேன் நானே, அண்ணாஐ யா றனே யென்றேன் நானே யென் றென்றே நானரற்றி நைகின் றேனே. 7

அவனெ*ன்று நானுன்னை யஞ்சா தேனை அல்லல் அறுப் பானே யென்றேன் நானே, சிவனென்று நானுன்னை யெல்லாஞ் சொல்லச் செல்வந் தருவானே யென்றேன் நானே, பவனா†கி யென்னுள்ளத் துள்ளே நின்று பண்டை வினையறுப்பா யென் றென் நானே, அவனென்றே யாதியே ஐயா றனே யென் றென்றே நானரற்றி நைகின் றேனே. 8

கச்சியே கம்பனே யென்றேன் நானே கயிலாயா காரோணா என்றேன் நானே, நிச்சன் மணாளனே யென்றேன் நானே நினைப்பார் மனத்துளா யென்றேன் நானே, உச்சம்போ தேறேறீ யென்றேன் நானே உள்குவா ருள்ளத்தா யென்றேன் நானே, அச்சம் பணிதீர்க்கும் ஐயா றனே யென்றென்றே நானரற்றி நைகின்றேனே. 9

வில்லாடி வேடனே யென்றேன் நானே வெண்ணீறு மெய்க் கணிந்தா யென்றேன் நானே, சொல்லாய சூழலா யென்றேன் நானே சுலாவாய தொல்நெறியே யென்றேன் நானே, எல்லாமா யென்னுயிரே யென்றேன் நானே இலங்கையர்கோன் தோளி றுத்தா யென்றேன் நானே, அல்லா வினைதீர்க்கும் ஐயா றனே யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 10

திருச்சிற்றம்பலம்

---

* அவன் – முழுமுதல்வனும் அவன். † பவன் – மிகச் சிறந்த சிவநாமம்.

## திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

ஓசை யொலி*யெலா மானாய் நீயே உலகுக் கொருவனாய் நின்றாய் நீயே, வாச மலரெலா மானாய் நீயே மலையான் மருகனாய் நின்றாய் நீயே, பேசப் பெரிதும் இனியாய் நீயே பிரானாய் அடியென்மேல் வைத்தாய் நீயே, தேச விளக்கெலா மானாய் நீயே திருவையா றகலாத செம்பொற் சோதீ. 1

நோக்கரிய திருமேனி யுடையாய் நீயே நோவாமே நோக் கருள வல்லாய் நீயே, காப்பரிய ஐம்புலனுங் காத்தாய் நீயே காமனையுங் கண்ணழலாற் காய்ந்தாய் நீயே, ஆர்ப்பரிய மாநாக மார்த்தாய் நீயே அடியானென் றடியென்மேல் வைத்தாய் நீயே, தீர்ப்பரிய வல்வினைநோய் தீர்ப்பாய் நீயே திருவையா றகலாத செம்பொற் சோதீ. 2

கனத்தகத்துக் கடுஞ்சுடராய் நின்றாய் நீயே கடல்வரைவான் ஆகாய மானாய் நீயே, தனத்தகத்துத் தலைகலனாக் கொண்டாய் நீயே சார்ந்தாரைத் தகைந்தாள வல்லாய் நீயே, மனத்திருந்த கருத்த**றிந்து முடிப்பாய் நீயே, மலர்ச்சே வடியென்மேல் வைத் தாய் நீயே, சினத்திருந்த திருநீல கண்டன் நீயே திருவையா றகலாத செம்பொற் சோதீ. 3

வானுற்ற மாமலைக ளானாய் நீயே வடகயிலை மன்னி யிருந் தாய் நீயே, ஊனுற்ற வொளிமழுவாட் படையாய் நீயே ஒளி மதியோ டரவுபுனல் வைத்தாய் நீயே, ஆனுற்ற ஐந்தும் அமர்ந் தாய் நீயே அடியானென் றடியென்மேல் வைத்தாய் நீயே, தேனுற்ற சொல்மடவாள் பங்கன் நீயே திருவையா றகலாத செம்பொற் சோதீ. 4

பெண்ணாண் பிறப்பிலியாய் நின்றாய் நீயே பெரியார்கட் கெல் லாம் பெரியாய் நீயே, உண்ணா வருநஞ்ச முண்டாய் நீயே ஊழி முதல்வனாய் நின்றாய் நீயே, கண்ணா யுலகெலாங் காத்தாய் நீயே கழற்சே வடியென்மேல் வைத்தாய் நீயே, திண்ணார் மழுவாட் படையாய் நீயே திருவையா றகலாத செம்பொற் சோதீ. 5

---

* ஓசை–பொருளற்றது. ஒலி–பொருளுள்ளது. ** மனத்திருந்த கருத்து–கயிலைக் காட்சி காண நாயனார் கொண்ட கருத்து.

உற்றிருந்த உணர்வெலா மானாய் நீயே உற்றவர்க்கோர் சுற்ற மாய் நின்றாய் நீயே, கற்றிருந்த கலைஞான மானாய் நீயே கற்றவர்க் கோர் கற்பகமாய் நின்றாய் நீயே, பெற்றிருந்த தாய்அவளின் நல்லாய் நீயே பிரானா யடியென்மேல் வைத்தாய் நீயே, செற்றிருந்த திரு நீல கண்டன் நீயே திருவையா றகலாத செம்பொற் சோதீ. 6

எல்லா வுலகமு மானாய் நீயே யேகம்பம் மேவி யிருந்தாய் நீயே, நல்லாரை நன்மை யறிவாய் நீயே ஞானச்சுடர்விளக்காய் நின்றாய் நீயே, பொல்லா வினைக ளறுப்பாய் நீயே புகழ்ச்சே வடி யென்மேல் வைத்தாய் நீயே, செல்வாய செல்வந் தருவாய் நீயே திருவையா றகலாத செம்பொற் சோதீ. 7

ஆவினில் ஐந்தும் அமர்ந்தாய் நீயே அளவில் பெருமை யுடை யாய் நீயே, பூவினில் நாற்றமாய் நின்றாய் நீயே போர்க்கோலங் கொண்டெயி லெய்தாய் நீயே, நாவில் நடுவுரையாய் நின்றாய் நீயே நண்ணி யடியென்மேல் வைத்தாய் நீயே, தேவ ரறியாத தேவன் நீயே திருவையா றகலாத செம்பொற் சோதீ. 8

எண்டிசைக்கும் ஒண்சுடராய் நின்றாய் நீயே ஏகம்பம் மேய இறைவன் நீயே, வண்டிசைக்கும் நறுங்கொன்றைத் தாராய் நீயே வாரா வுலகருள வல்லாய் நீயே, தொண்டிசைத்துன் அடி பரவ நின்றாய் நீயே தூமலர்ச்சே வடியென்மேல் வைத்தாய் நீயே, திண்சிலைக்கோர் சரங்கூட்ட வல்லாய் நீயே திருவையா றகலாத செம்பொற் சோதீ. 9

விண்டார் புரமூன்றும் எய்தாய் நீயே விண்ணவர்க்கும் மேலாகி நின்றாய் நீயே, கண்டாரைக் கொல்லுநஞ் சுண்டாய் நீயே காலங்கள் ஊழியாய் நின்றாய் நீயே, தொண்டாய் அடியேனை ஆண்டாய் நீயே தூமலர்ச்சே வடியென்மேல் வைத்தாய் நீயே, திண்டோள்விட் டெரியாட லுகந்தாய் நீயே திருவையா றகலாத செம்பொற் சோதீ. 10

ஆரு மறியா இடத்தாய் நீயே ஆகாயந் தேரூர வல்லாய் நீயே, பேரும் பெரிய இலங்கை வேந்தன் பெரிய முடிபத் திறுத் தாய் நீயே, ஊரும்* புரமூன்றும் அட்டாய் நீயே ஒண்தா

* ஊரும் — ஊர்ந்து செல்லும்

மறையானும் மாலுங் கூடித், தேரும் அடியென்மேல் வைத்தாய்
நீயெ திருவையா றகலாத செம்பொற் சோதீ. 11
திருச்சிற்றம்பலம்

---

சுவாமி-செம்பொற்சோதி நாதர், ஐயாறப்பர் (பஞ்சநதேசுவரர்);
தேவி—அறம்வளர்த்த நாயகி, (தர்மசம்வர்த்தனி)

---

## 28. திருநெய்த்தானம்*

### திருநேரிசை [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**கா**லனை வீழச் செற்ற கழலடி யிரண்டும் வந்தென்
மேலவா யிருக்கப் பெற்றேன் மேதகத்தோன்று கின்ற
கோலநெய்த் தான மென்னுங் குளிர்பொழிற் கோயில் மேய
நீலம்வைத் தனைய கண்ட நினைக்குமா நினைக்கின் றேனே. 1

**கா**மனை யன்று கண்ணாற் கனலெரி யாக நோக்கித்
தூபமுந் தீபங் காட்டித் தொழுமவர்க் கருள்கள் செய்து
சேமநெய்த் தான மென்னுஞ் செறிபொழிற் கோயில் மேய
வாமனை நினைந்த நெஞ்சம் வாழ்வுற நினைந்த வாறே. 2

**பி**றைதரு சடையின் மேலே பெய்புனற் கங்கை தன்னை
உறைதர வைத்த எங்கள் உத்தமன் ஊழி யாய
நிறைதரு பொழில்கள் சூழ நின்றநெய்த் தான மென்று
குறைதரும் அடிய வர்க்குக் குழகனைக் கூட லாமே. 3

**வ**டிதரு மழுவொன் றேந்தி வார்சடை மதியம் வைத்துப்
பொடிதரு மேனி மேலே புரிதரு நூலர் போலும்
நெடிதரு பொழில்கள் சூழ நின்றநெய்த் தானம் மேவி
அடிதரு கழல்கள் ஆர்ப்ப ஆடும்எம் அண்ண லாரே. 4

**கா**டிட மாக நின்று கனலெரி கையி லேந்திப்
பாடிய பூதஞ் சூழப் பண்ணுடன் பலவுஞ் சொல்லி
ஆடிய கழலர் சீரார் அந்தண்நெய்த் தானம் என்றுங்
கூடிய குழக னாரைக் கூடுமா றறிகி லேனே. 5

---

* 'தில்லை ஸ்தானம்' என்று வழங்குவர்.

வானவர் வணங்கி யேத்தி வைகலும் மலர்கள் தூவத்
தானவர்க் கருள்கள் செய்யுஞ் சங்கரன் செங்கண் ஏற்றன்
தேனமர் பொழில்கள் சூழத் திகழுநெய்த் தானம் மேய
கூனிள மதியி னானைக் கூடுமா றறிகி லேனே. 6

காலதிற் கழல்†க ளார்ப்பக் கனலெரி கையில் வீசி
ஞாலமுங் குழிய நின்று நட்டம தாடு கின்ற
மேலவர் முகடு* தோய விரிசடை திசைகள் பாய
மாலொரு பாக மாக மகிழ்ந்தநெய்த் தான னாரே. 7

பந்தித்த சடையின் மேலே பாய்புன லதனை வைத்து
அந்திப்போ தனலும் ஆடி அடிகள்ஐ யாறு புக்கார்
வந்திப்பார் வணங்கி நின்று வாழ்த்துவார் வாயி னுள்ளார்
சிந்திப்பார் சிந்தை யுள்ளார் திருந்துநெய்த் தான னாரே. 8

சோதியாய்ச் சுடரு மானார் சுண்ணவெண் சாந்து பூசி
ஓதிவா யுலகம் ஏத்த உகந்துதாம் அருள்கள் செய்வார்
ஆதியாய் அந்த மானார் யாவரும் இறைஞ்சி யேத்த
நீதியாய் நியம மாகி நின்றநெய்த் தான னாரே. 9

இலையுடைப் படைகை ஏந்தும் இலங்கையர் மன்னன் றன்னைத்
தலையுடன் அடர்த்து மீண்டே தானவற் கருள்கள் செய்து
சிலையுடன் கணையைச் சேர்த்துத் திரிபுரம் எரியச் செற்ற
நிலையுடை யடிகள் போலும் நின்றநெய்த் தான னாரே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருவிருத்தம் – [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பாரிடஞ் சாடிய பல்லுயிர் வான்அம ரர்க்கருளிக்
காரடைந் தகடல் வாயுமிழ் நஞ்சமு தாகவுண்டான்
ஊரடைந் திவ்வுல கிற்பலி கொள்வது நாமறியோம்
நீரடைந் தகரை நின்றநெய்த் தானத் திருந்தவனே. 1

தேய்ந்திலங் குஞ்சிறு வெண்மதி யாய்நின் திருச்சடைமேல்
பாய்ந்தகங் கைப்புனல் பன்முக மாகிப் பரந்தொலிப்ப
ஆய்ந்திலங் கும்மழு வேலுடை யாய்அடி யேற்குரைநீ
ஏந்திள மங்கையும் நீயும்நெய்த் தானத் திருந்ததுவே. 2

---

†காலதிர்கழல் என்றும் பாடம். *மேலவர்முகடு—விண்ணின்முகடு.

கொன்றடைந் தாடிக் குமைத்திடுங் கூற்றமொன் றார்மதில்மேல்
சென்றடைந் தாடிப் பொருத்துந் தேசமெல் லாமறியும்
குன்றடைந் தாடுங் குளிர்பொழிற் காவிரி யின்கரைமேல்
சென்றடைந் தார்வினை தீர்க்குநெய்த் தானத் திருந்தவனே. 3

கோட்டும் முழவர வத்தொடு கோலம் பலஅணிந்து
நட்டம் பல பயின் றுடுவர் நாகம் அரைக்கசைத்துச்
சிட்டர் திரிபுரந் தீயெழச் செற்ற சிலையுடையான்
இட்டம் உமையொடு நின்ற நெய்த் தானத் திருந்தவனே. 4

கொய்ம்மலர்க் கொன்றை துழாய்வன்னி மத்தமுங் கூவிளமும்
மெய்ம்மலர் வேய்ந்த விரிசடைக் கற்றைவிண் ணோர்பெருமான்
மைம்மலர் நீல நிறங்கருங் கண்ணியோர் பால்மகிழ்ந்தான்
நின்மல னுடல் நிலையநெய்த் தானத் திருந்தவனே. 5

பூந்தார் நறுங்கொன்றை மாலையை வாங்கிச் சடைக்கணிந்து
கூர்ந்தார் விடையினை ஏறிப்பல் பூதப் படைநடுவே
போந்தார் புறவிசை பாடவும் ஆடவுங் கேட்டருளிச்
சேர்ந்தார் உமையவ ளோடுநெய்த் தானத் திருந்தவனே. 6

பற்றின பாம்பன் படுத்த புலியுரித் தோலுடையன்
முற்றின மூன்று மதில்களை மூட்டி எரித்தறுத்தான்
சுற்றிய பூதப் படையினன் சூல மழுவொருமான்
செற்றுநந் தீவினை தீர்க்குநெய்த் தானத் திருந்தவனே. 7

விரித்த சடையினன் விண்ணவர் கோன்விட முண்டகண்டன்
உரித்த கரியுரி மூடியொன் னார்மதில் மூன்றுடனே
எரித்த சிலையினன் ஈடழி யாதென்னை யாண்டுகொண்ட
தரித்த உமையவ ளோடுநெய்த் தானத் திருந்தவனே. 8

தூங்கான் துளங்கான் துழாய்கொன்றைதுன்னிய செஞ்சடைமேல்
வாங்கா மதியமும் வாளர வுங்கங்கை தான்புனைந்தான்
தேங்கார் திரிபுரந் தீயெழ எய்து தியக்கறுத்து
நீங்கான் உமையவ ளோடுநெய்த் தானத் திருந்தவனே. 9

ஊட்டிநின் றான்பொரு வான்நில மும்மதில் தீயம்பினால்
மாட்டிநின் றான்அன்றி னார்வெந்து வீழவும் வானவர்க்குக்
காட்டிநின் றான்கத மாக்கங்கை பாயவொர் வார்சடையை
நீட்டிநின் றான்திரு நின்றநெய்த் தானத் திருந்தவனே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

### திருச்சிற்றம்பலம்

கொல்லி* யான்குளிர் தூங்குகுற் றாலத்தான்
புல்லி யார்புரம் மூன்றெரி செய்தவன்
நெல்லி யானிலை யானநெய்த் தானனைச்
சொல்லி மெய்தொழு வார்சுடர் வாணரே.** 1

இரவ னையிடு வெண்டலை யேந்தியைப்
பரவ னைப்படை யார்மதில் மூன்றையும்
நிரவ னைநிலை யானநெய்த் தானனைக்
குரவ னைத்தொழு வார்கொடி வாணரே. 2

ஆனிடை ஐந்தும் ஆடுவ ராரிருள்
கானி டைநடம் ஆடுவர் காண்மினோ
தேனி டைமலர் பாயுநெய்த் தானனை
வானி டைத்தொழு வார்வலி வாணரே. 3

விண்ட வர்புர மூன்றும்வெண் ணீறெழக்
கண்ட வன்கடி தாகிய நஞ்சினை
உண்ட வன்னொளி யானநெய்த் தானனைத்
தொண்ட ராய்த்தொழு வார்சுடர் வாணரே. 4

முன்கை நோவக் கடைந்தவர் நிற்கவே
சங்கி யாது சமுத்திர நஞ்சுண்டான்
நங்கை யோடு நவின்றநெய்த் தானனைத்
தங்கை யால்தொழு வார்தலை வாணரே. 5

சுட்ட நீறுமெய் பூசிச் சுடலையுள்
நட்ட மாடுவர் நள்ளிருள் பேயொடே
சிட்டர் வானவர் தேருநெய்த் தானனை
இட்ட மாய்த்தொழு வாரின்ப வாணரே. 6

கொள்ளித் தீயெரி வீசிக் கொடியதோர்
கள்ளிக் காட்டிடை யாடுவர் காண்மினோ
தெள்ளித் தேறித் தெளிந்துநெய்த் தானனை
உள்ளத் தால்தொழு வாரும்பர் வாணரே. 7

* கொல்லி—கொல்லிமலை. **வாணர்—வாழ்நர்.

உச்சி மேல்விளங் கும்மிள வெண்பிறை
பற்றி யாடர வோடுஞ்ச டைப்பெய்தான்
நெற்றி யாரழல் கண்டநெய்த் தானனைச்
சுற்றி மெய்தொழு வார்சுடர் வாணரே. 8

மாலொ டும்மறை யோதிய நான்முகன்
காலொ டும்முடி காண்பரி தாயினான்
சேலொ டுஞ்செருச் செய்யுநெய்த் தானனை
மாலொ* டுந்தொழு வார்வினை வாடுமே. 9

வலிந்த தோள்வலி வாளரக் கன்றனை
நெருங்க நீள்வரை யூன்றுநெய்த் தானனார்
புரிந்து கைந்நரம் போடிசை பாடலும்
பரிந்த னை**ப்பணி வார்வினை பாறுமே. 10

திருச்சிற்றம்பலம்

---

திருத்தாண்டகம் † [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வகையெலா முடையாயும் நீயே யென்றும் வான்கயிலை மேவினாய் நீயே யென்றும், மிகையெலாம் மிக்காயும் நீயே யென்றும் வெண்காடு மேவினாய் நீயே யென்றும், பகையெலாந் தீர்த் தாண்டாய் நீயே யென்றும் பாசூர் அமர்ந்தாயும் நீயேயென்றும், திகையெலாந் தொழச் செல்வாய் நீயே யென்றும் நின்றநெய்த் தானாவென் நெஞ்சு ளாயே. 1

ஆர்த்த எனக்கன்பன் நீயே யென்றும், ஆதிக் கயிலாயன் நீயே யென்றும், கூர்த்த நடமாடி நீயே யென்றுங் கோடிகா மேய குழகா வென்றும், பார்த்தற் கருள்செய்தாய் நீயே யென்றும் பழையனூர் மேவிய பண்பா வென்றும், தீர்த்தன் சிவலோகன் நீயே யென்றும் நின்றநெய்த் தானாவென் நெஞ்சு ளாயே. 2

அல்லாய்ப் பகலானாய் நீயே யென்றும் ஆதிக் கயிலாயன் நீயே யென்றும், கல்லா லமர்ந்தாயும் நீயே யென்றுங் காளத்திக் கற்பகமும் நீயே யென்றும், சொல்லாய்ப் பொருளானாய் நீயே யென்றுஞ் சோற்றுத் துறையுறைவாய் நீயே யென்றும், செல்வாய்த்¶ திருவானாய் நீயே யென்றும் நின்றநெய்த் தானாவென் நெஞ்சு ளாயே.

---

* மால்–மயக்கம்; அன்பு மேலீட்டினால் தன்வசம் இழத்தல்.
**பரிந்தன்–பரிவு செய்தவன்; இரங்கியவன். ¶செலவு–பொருள்

மின்னே ரிடைபங்கன் நீயேயென்றும் வெண்கயிலை மேவி ணாய் நீயே யென்றும், பொன்னேர் சடைமுடியாய் நீயே யென்றும் பூத கணநாதன் நீயே யென்றும், என்னு விரதத்தாய் நீயே யென்றும் ஏகம்பத் தென்னீசன் நீயே யென்றும், தென்னூர்ப் பதியுளாய் நீயே யென்றும் நின்றநெய்த் தானாவென் னெஞ்சு ளாயே. 4

முந்தி யிருந்தாயும் நீயே யென்றும் முன்கயிலை மேவினாய் நீயே யென்றும், நந்திக் கருள்செய்தாய் நீயே யென்றும் நடமாடி நள்ளாறன் நீயே யென்றும், பந்திப் பரியாயும் நீயே யென்றும் பைஞ்ஞீலி மேவினாய் நீயே யென்றும், சிந்திப் பரியாயும் நீயே யென்றும் நின்றநெய்த் தானாவென் னெஞ்சு ளாயே. 5

தக்கா ரடியார்க்கு நீயே யென்றுந் தலையார் கயிலாயன் நீயே யென்றும், அக்காரம்* பூண்டாயும் நீயே யென்றும் ஆக் கூரில் தான்றோன்றி நீயே யென்றும், புக்காய வேழுலகும் நீயே யென்றும் புள்ளிருக்கு வேளூராய் நீயே யென்றும், தெக்கார மாகோணத்† தானே யென்றும் நின்றநெய்த் தானாவென் னெஞ்சு ளாயே. 6

புகழும் பெருமையாய் நீயே யென்றும் பூங்கயிலை மேவினாய் நீயே யென்றும், இகழுந் தலையேந்தி நீயே யென்றும் இராமேச் சுரத்தின்பன் நீயே யென்றும், அகழும் மதிலுடையாய் நீயே யென்றும் ஆலவாய் மேவினாய் நீயே யென்றும், திகழும் மதிசூடி நீயே யென்றும் நின்றநெய்த் தானாவென் னெஞ்சு ளாயே. 7

வானவர்க்கு மூத்திளையாய்‡ நீயே யென்றும் வானக் கயி லாயன் நீயே யென்றும், கான நடமாடி நீயே யென்றுங் கடவூரில் வீரட்டன் நீயே யென்றும், ஊனார் முடியறுத்தாய் நீயே யென்றும் ஒற்றியூ ராரூராய் நீயே யென்றும், தேனாய் அமு தானாய்நீயே யென்றும் நின்றநெய்த் தானாவென் னெஞ்சுளாயே. 8

தந்தைதா யில்லாதாய் நீயே யென்றுந் தலையார் கயிலாயன் நீயே யென்றும், எந்தாயெம் பிரானானாய் நீயே யென்றும் ஏகம் பத்தென்னீசன் நீயே யென்றும், முந்திய முக்கணாய் நீயே யென்றும் மூவலூர் மேவினாய் நீயே யென்றும், சிந்தையாய் தேனூராய் நீயே யென்றும் நின்றநெய்த் தானாவென் னெஞ்சு ளாயே. 9

---

* அக்குஆரம் – உருத்திராக்கமணி. † தெக்காரமாகோணம்– திரிகோணமலை என்பர். ‡ மூத்து இளையாய் – முன்னும் பின்னும் உள்ளவர்.

மறித்தான்† வலிசெற்றாய் நீயே யென்றும் வான்கயிலை மேவினாய் நீயே யென்றும், வெறுத்தார் பிறப்பறுப்பாய் நீயே யென்றும் வீழி மிழலையாய் நீயே யென்றும், அறத்தாய் அமுதீந் தாய் நீயே யென்றும் யாவர்க்குந் தாங்கொணா நஞ்ச முண்டு, பொறுத்தாய் புலனைந்தும் நீயே யென்றும் நின்றநெய்த் தானா வென் னெஞ்சு ளாயே. 10

திருச்சிற்றம்பலம்

---

### திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

மெய்த்தானத் தகம்படியுள் ஐவர்* நின்று வேண்டிற்றுக் குறை முடித்து வினைக்குக் கூடாம், இத்தானத் திருந்திங்ஙனுய் வானெண்ணும் இதனையொழி இயம்பக்கேள் ஏழை நெஞ்சே, மைத்தான நீள்நயனி பங்கன் வங்கம் வருதிரைநீர் நஞ்சுண்ட கண்டன் மேய, நெய்த்தான நன்னகரென் றேத்தி நின்று நினையுமா நினைந்தக்கா லுய்ய லாமே. 1

ஈண்டா இரும்பிறவித் துறவா ஆக்கை யிதுநீங்க லாம்விதியுண் டென்று சொல்ல, வேண்டாவே நெஞ்சமே விளம்பக் கேள்நீ விண்ணவர்தம் பெருமானார் மண்ணி லென்னை, ஆண்டானன் றருவரையாற் புரமூன் றெய்த அம்மானை அரிஅயனுங் காணா வண்ணம், நீண்டா னுறைதுறைநெய்த் தான மென்று நினையுமா நினைந்தக்கா லுய்ய லாமே. 2

பரவிப் பலபலவுந் தேடி யோடிப் பாழாங் குரம்பையிடைக் கிடந்து வாளா, குரவிக் குடிவாழ்க்கை வாழவெண்ணிக் குலைகை தவிர்நெஞ்சே கூறக் கேள்நீ, இரவிக் குலமுதலா வானோர் கூடி யெண்ணிறந்த கோடி யமர ராயம், நிரவிக் கரியவன்நெய்த் தான மென்று நினையுமா நினைந்தக்கா லுய்ய லாமே. 3

அலையார் வினைத்திறஞ்சே ராக்கை யுள்ளே அகப்பட்டு ளாசையெனும் பாசந் தன்னுள், தலையாய்க் கடையாகும் வாழ்வி லாழ்ந்து தளர்ந்துமிக நெஞ்சமே அஞ்ச வேண்டா, இலையார் புனற்கொன்றை யெறிநீர்த் திங்கள் இருஞ்சடைமேல் வைத்துகந்தான் இமையோ ரேத்தும், நிலையா னுறைநிறைநெய்த் தான மென்று நினையுமா நினைந்தக்கா லுய்ய லாமே. 4

---

† மறுத்தான் என்றும் பாடம். * ஐவர்-ஐம்புலவாசை.

தினைத்தனையோர் பொறையிலா வுயிர்போங் கூட்டைப் பொருளென்று மிகவுன்னி மதியா லிந்த, அனைத்துலகும் ஆளலா மென்று பேசும் ஆங்காரந் தவிர்நெஞ்சே யமரர்க் காக, முனைத்துவரு மதில் மூன்றும் பொன்ற அன்று முடுகியவெஞ் சிலைவளைத்துச் செந்தீ மூழ்க, நினைத்தபெருங் கருணையன்நெய்த் தான மென்று நினையுமா நினைந்தக்கா லுய்ய லாமே. 5

மிறைபடுமிவ் வுடல்வாழ்வை மெய்யென் றெண்ணி வினையிலே கிடந்தழுந்தி வியவேல் நெஞ்சே, குறைவுடையார் மனத்துளான் குமரன் தாதை கூத்தாடுங் குணமுடையான் கொலைவேற் கையான், அறைகழலுந் திருவடிமேற் சிலம்பு மார்ப்ப அவனிதலம் பெயரவரு நட்டம் நின்ற, நிறைவுடையா னிடமாம்நெய்த் தான மென்று நினையுமா நினைந்தக்கா லுய்ய லாமே. 6

பேசப் பொருளலாப் பிறவி தன்னைப் பெரிதென்றுன் சிறுமனத்தால் வேண்டி யீண்டு, வாசக் குழல்மடவார் போக மென்னும் வலைப்பட்டு வீழாதே வருக நெஞ்சே, தூசக் கரியுரித்தான் தூநீருடித் துதைந்திலங்கு நூல்மார்பன் தொடர கில்லா, நீசர்க் கரிய வன்நெய்த் தான மென்று நினையுமா நினைந்தக்கா லுய்ய லாமே. 7

அஞ்சப் புலனிவற்று லாட்ட வாட்டுண் டருநோய்க் கிடமாய வுடலின் தன்மை, தஞ்ச மெனக்கருதித் தாழேல் நெஞ்சே தாழக் கருதுதியே தன்னைச் சேரா, வஞ்ச மனத்தவர்கள் காண வொண்ணு மணிகண்டன் வானவர்தம் பிரானென் றேத்தும், நெஞ்சர்க் கினியவன்நெய்த் தான மென்று நினையுமா நினைந்தக்கா லுய்ய லாமே. 8

பொருந்தாத உடலகத்திற் புக்க ஆவி போமா றறிந்தறிந்தே புலைவாழ் வுன்னி, இருந்தாங் கிடர்ப்படநீ வேண்டா நெஞ்சே இமையவர் தம் பெருமானன் றுமையா ளஞ்சக் [illegible]ன் மதகரியை வெருவச் சீறுங்‡ கண்ணுதல்கண் டமராடிக கருதார் வேள்வி, நிரந்தரமா இனிதுறைநெய்த் தான மென்று நினையுமா நினைந்தக்கா லுய்ய லாமே. 9

---

‡ வெருவக்கீறுங் என்றும் பாடம்.

உரித்தன் றுனக்கிவ் வுடலின் தன்மை உண்மை யுரைத்தேன்
விரதமெல்லாந், தரித்துந் தவமுயன்றும் வாழா நெஞ்சே தம்மிடையி
லில்லார்க்கொன் றல்லார்க் கன்னன், எரித்தான் அனலுடை
யான் எண்தோ ளானே எம்பெருமா னென்றேத்தா இலங்கைக்
கோனை, நெரித்தானை நெய்த்தானம் மேவி னானை நினையுமா நினைந்
தக்கா லுய்ய லாமே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி—நெய்யாடியப்பர்; தேவி—இளமங்கையம்மை,
வாலாம்பிகையம்மை.

## 29. திருமழபாடி*

திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நீறேறு திருமேனி யுடையான் கண்டாய் நெற்றிமேல் ஒற்
றைக்கண் நிறைந்தான் கண்டாய், கூறாக உமைபாகங் கொண்
டான் கண்டாய் கொடியவிட முண்டிருண்ட கண்டன் கண்டாய்,
ஏறேறி யெங்குந் திரிவான் கண்டாய் ஏழுலகும் ஏழ்மலையு மானான்
கண்டாய், மாறானார் தம்அரணம் அட்டான் கண்டாய் மழபாடி
மன்னும் மணாளன் றானே. 1

கொக்கிறகு சென்னி யுடையான் கண்டாய் கொல்லை விடை
யேறுங் கூத்தன் கண்டாய், அக்கரைமே லாட லுடையான் கண்
டாய் அனலங்கை யேந்திய ஆதி கண்டாய், அக்கோ டரவ மணிந்
தான் கண்டாய் அடியார்கட் காரமுத மானான் கண்டாய், மற்
றிருந்த கங்கைச் சடையான் கண்டாய் மழபாடி மன்னும் மணா
ளன் றானே. 2

நெற்றித் தனிக்கண் ணுடையான் கண்டாய் நேரிழையோர்
பாகமாய் நின்றான் கண்டாய், பற்றிப்பாம் பாட்டும் படிறன்
கண்டாய் பல்லூர் பலிதேர் பரமன் கண்டாய், செற்றார் புரமூன்
றுஞ் செற்றான் கண்டாய் செழுமா மதிசென்னி வைத்தான் கண்
டாய், மற்றொரு குற்ற மிலாதான் கண்டாய் மழபாடி மன்னும்
மணாளன் றானே. 3

* மழு ஆடிய இடம் ஆதலின் மழுவாடி எனப்படும். அது மழபாடி என மருவி வழங்குவதாயிற்று.

அலையார்ந்த புனற்கங்கைச் சடையான் கண்டாய் அண்டத் துக் கப்பாலாய்நின்றான் கண்டாய், கொலையான கூற்றங் குமைத் தான் கண்டாய் கொல்வேங்கைத் தோலொன் றுடுத்தான் கண் டாய், சிலையால் திரிபுரங்கள் செற்றான் கண்டாய் செழுமா மதி சென்னி வைத்தான் கண்டாய், மலையார் மடந்தை மணாளன் கண்டாய் மழபாடி மன்னும் மணாளன் றானே. 4

உலந்தார்*தம் அங்கம் அணிந்தான் கண்டாய் உவகையோ டின்னருள்கள் செய்தான் கண்டாய், நலந்திகழுங் கொன்றைச் சடையான் கண்டாய் நால்வேதம் ஆறங்க மானான் கண்டாய், உலந்தார் தலைகலனுக் கொண்டான் கண்டாய் உம்பரார் தங்கள் பெருமான் கண்டாய், மலர்ந்தார் திருவடியென் தலைமேல் வைத்த மழபாடி மன்னும் மணாளன் றானே. 5

தாமரையான் தன்தலையைச் சாய்த்தான் கண்டாய் தகவுடை யார் நெஞ்சிருக்கை கொண்டான் கண்டாய், பூமலரான் ஏத்தும் புனி தன் கண்டாய் புணர்ச்சிப் பொருளாகி நின்றான் கண்டாய், ஏமருவ வெஞ்சிலையொன் றேந்தி கண்டாய் இருளார்ந்த கண்டத் திறைவன் கண்டாய், மாமருவுங் கலைகையி லேந்தி கண்டாய் மழ பாடி மன்னும் மணாளன் றானே. 6

நீராகி நெடுவரைக ளானான் கண்டாய் நிழலாகி நீள்விசும்பு மானான் கண்டாய், பாராகிப் பௌவமே ழானான் கண்டாய் பகலாகி வானாகி நின்றான் கண்டாய், ஆரேனுந் தன்னடியார்க் கன்பன் கண்டாய் அணுவாகி ஆதியாய் நின்றான் கண்டாய், வாரார்ந்த வனமுலையாள் பங்கன் கண்டாய் மழபாடி மன்னும் மணாளன் றானே. 7

பொன்னியலுந் திருமேனி உடையான் கண்டாய் பூங்கொன் றைத் தாரொன் றணிந்தான் கண்டாய், மின்னியலும் வார்சடை யெம் பெருமான் கண்டாய் வேழத்தின் உரிவிரும்பிப் போர்த்தான் கண்டாய், தன்னியல்பார் மற்றொருவ ரில்லான் கண்டாய் தாங் கரிய சிவந்தானாய் நின்றான் கண்டாய், மன்னிய மங்கையோர் கூறன் கண்டாய் மழபாடி மன்னும் மணாளன் றானே. 8

---

* உலந்தார்—இறந்தார்: அவர் திருமால் பிரமன் முதலியோர்.

ஆலாலம் உண்டுகந்த ஆதி கண்டாய் அடையலர்தம் புர மூன்றும் எய்தான் கண்டாய், காலாலக் காலனையுங் காய்ந்தான் கண்டாய் கண்ணப்பர்க் கருள்செய்த காளை கண்டாய், பாலாரும் மொழிமடவாள் பாகன் கண்டாய் பசுவேறிப் பலிதிரியும் பண்பன் கண்டாய், மாலாலும் அறிவரிய மைந்தன் கண்டாய் மழபாடி மன்னும் மணாளன் றானே. 9

ஒருசுடரா யுலகேழு மானான் கண்டாய் ஓங்காரத் துட்பொரு ளாய் நின்றான் கண்டாய், விரிசுடராய் விளங்கொளியாய்§ நின்றான் கண்டாய் விழவொலியும் வேள்வொலி†யு மானான் கண்டாய், இருசுடர்மீ தோடா இலங்கைக் கோனை யீடழிய இருபதுதோ ளிறுத்தான் கண்டாய், மருசுடரின் மாணிக்கக் குன்று கண்டாய் மழபாடி மன்னும் மணாளன் றானே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருத்தாண்டகம்*

திருச்சிற்றம்பலம்

அலையடுத்த பெருங்கடல்நஞ் சமுதா வுண்டு அமரர்கள்தந் தலைகாத்த ஐயர் செம்பொன், சிலையெடுத்து மாநாக நெருப்புக் கோத்துத் திரிபுரங்கள் தீயிட்ட செல்வர் போலும், நிலையடுத்த பசும்பொன்னால் முத்தால் நீண்ட நிரைவயிரப் பலகையாற் குவை யார்த் துற்ற, மலையடுத்த மழபாடி வயிரத் தூணே யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 1

அறைகலந்த குழல்மொந்தை வீணை யாழும் அந்தரத்திற் கந்தருவர் அமரர் ஏத்த, மறைகலந்த மந்திரமும் நீருங் கொண்டு வழி பட்டார் வானாளக் கொடுத்தி யன்றே, கறைகலந்த பொழிற் கச்சிக் கம்பம் மேய கனவயிரத் திரள்தூணே கலிசூழ் மாடம், மறைகலந்த மழபாடி வயிரத் தூணே யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 2

உரங்கொடுக்கு மிருண்மெய்யர் மூர்க்கர் பொல்லா ஊத்தை வாய்ச் சமணர்தமை யுறவாக் கொண்ட, பரங்கெடுத்திங் கடியேனை யாண்டுகொண்ட பவளத்தின் திரள்தூணே பசும்பொன்

---

§ விளக்கொளியாய் என்றும் பாடம். † வேள் வொலி—வேள்வி யொலி. *இப்பதிகத்தில் 8, 9, 10-ம் செய்யுட்கள் சிதைந்துபோயின.

முத்தே, புரங்கெடுத்துப் பொல்லாத காமன் ஆகம் பொடியாக விழித்தருளிப் புவியோர்க் கென்றும், வரங்கொடுக்கும் மழபாடி வயிரத் தூணே யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 3

ஊனிகந்தூ ணுறிகையர் குண்டர் பொல்லா ஊத்தைவாய்ச் சமணுருற வாகக் கொண்டு, ஞானகஞ்சேர்ந் துள்ளவயி ரத்தை நண்ணு நாயேனைப் பொருளாக ஆண்டு கொண்ட, மீனகஞ்சேர் வெள்ளநீர் விதியாற் சூடும் வேந்தனே விண்ணவர்தம் பெருமான் மேக, வானகஞ்சேர் மழபாடி வயிரத் தூணே யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 4

சிரமேற்ற நான்முகன்றன் தலையும் மற்றைத் திருமால்தன் செழுந் தலையும் பொன்றச் சிந்தி, உரமேற்ற இரவிபல் தகர்த்துச் சோமன் ஒளிர்கலைகள் படவுழக்கி உயிரை நல்கி, நரையேற்ற விடையேறி நாகம் பூண்ட நம்பியையே மறைநான்கும் ஓல மிட்டு, வரமேற்கும் மழபாடி வயிரத் தூணே யென்றென்றே நானரற்றி நைகின் றேனே, 5

சினந்திருத்துஞ் சிறுப்பெரியார் குண்டர் தங்கள் செதுமதி யார்§ தீவினைக்கே விழுந்தேன் தேடிப், புனந்திருத்தும் பொல்லாத பிண்டி‡ பேணும் பொறியிலியேன் தனைப்பொருளா ஆண்டு கொண்டு, தனந்திருத்து மவர்திறத்தை யொழியப் பாற்றித் தயா மூல தன்மவழி* யெனக்கு நல்கி, மனந்திருத்தும் மழபாடி வயிரத்தூணே யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 6

சுழித்துணையாம் பிறவிவழித் துக்கம் நீக்குஞ் சுருள்சடை யெம் பெருமானே தூய தெண்ணீர், இழிப்பரிய பசுபாசப் பிறப்பை நீக்கும் என்துணையே யென்னுடைய பெம்மான் தம் மான், பழிப்பரிய திருமாலும் அயனுங் காணப் பரிதியே சுருதி முடிக் கணியாய் வாய்த்த, வழித்துணையாம் மழபாடி வயிரத் தூணே யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 7, 8, 9, 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—வச்சிரத்தம்பேசுவரர் (வயிரத்தூணுதர்);
தேவி—அழகாம்பிகை,

---

§செதுமதியார்-அறிவீனர். ‡பிண்டி-அசோக மரம். *தயாமூல தன்மவழி-தருமங்களுக்கெல்லாம் மூலமாகிய அன்பு என்னும் அறம். இதனைத் திருநள்ளாறு திருத்தாண்டகம் 6-ம் செய்யுளிற் காண்க.

## 30. திருக்கானூர்

### திருக்குறுந்தொகை* [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

திருவின் நாதனுஞ் செம்மலர் மேலுறை
உருவ னாயுல கத்தி னுயிர்க்கெலாம்
கருவ னாகி முளைத்தவன்** கானூரில்
பரம னாய பரஞ்சுடர் காண்மினே. 1

பெண்டிர் மக்கள் பெருந்துணை நன்னிதி
உண்டின் றே§யென் றுகவன்மின் ஏழைகாள்
கண்டு கொண்மின்நீர் கானூர் முளையினைப்
புண்ட ரீகப் பொதும்பி லொதுங்கியே. 2

தாயத் தார்தமர் நல்நிதி யென்னுமிம்
மாயத் தேகிடந் திட்டு மயங்கிடேல்
காயத் தேயுளன் கானூர் முளையினை
வாய‡த் தால்வணங் கீர்வினை மாயவே. 3

குறியில் நின்றுண்டு கூறையி லாச்சமண்
நெறியை விட்டு நிறைகழல் பற்றினேன்
அறிய லுற்றிரேல் கானூர் முளையவன்
செறிவு செய்திட் டிருப்பதன் சிந்தையே, 4

பொத்தல் மண்சுவர்ப் பொல்லாக் குரம்பையை
மெய்த்த னென்று வியந்திடல் ஏழைகாள்
சித்தர் பத்தர்கள் சேர்திருக் கானூரில்
அத்தன் பாதம் அடைதல் கருமமே. 5

கல்வி ஞானக் கலைப்பொரு ளாயவன்
செல்வம் மல்கு திருக்கானூ ரீசனை
எல்லி யும்பக லும்மிசை வானவர்
சொல்லி டர்நுந் துயரங் கள்தீரவே. 6

---

* இப்பதிகத்தில் 9-ம் செய்யுள் மறைந்து போயிற்று. **கருவ னாகி முளைத்தவன்—இத்தலத்துச் சுவாமியின் பெயர்; முளை—உலகங்கள் யாவும் முளைத்தற்குக் காரணமானவர். §உண்டிதே என்றும் பாடம். ‡வாயம்-அன்பு.

நீரும் பாரும் நெருப்பும் அருக்கனும்
காரும் மாருதங் கானூர் முளைத்தவன்
சேர்வு மொன்றறி யாது திசைதிசை
ஓர்வு மொன்றில ரோடித் திரிவரே. 7

ஓமத் தோடயன் மாலறி யாவணம்
வீமப் பேரொளி யாய விழுப்பொருள்
காமற் காய்ந்தவன் கானூர் முளைத்தவன்
சேமத் தாலிருப் பாவதென் சிந்தையே. 8-9

வன்னி கொன்றை எருக்கணிந் தான்மலை
உன்னி யேசென் றெடுத்தவன் ஒண்டிறல்
தன்னை வீழத் தனிவிரல் வைத்தவன்
கன்னி மாமதிற் கானூர்க் கருத்தனே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி–செம்மேனிநாதர், முளைநாதர்; தேவி–சிவயோகநாயகி.

## 31. திருஅன்பிலாலந்துறை*

### திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வானஞ் சேர்மதி சூடிய மைந்தனை
நீநெஞ் சேகெடு வாய்நினை கிற்கிலை
ஆனஞ் சாடியை அன்பிலா லந்துறைக்
கோன்எஞ் செல்வனைக் கூறிட கிற்றியே. 1

கார ணத்தர் கருத்தர் கபாலியார்
வார ணத்துரி போர்த்த மணாளனார்
ஆர ணப்பொருள் அன்பிலா லந்துறை
நார ணற்கரி யானொரு நம்பியே. 2

அன்பின் ஆனஞ்ச மைந்துட னாடிய
என்பின் ஆனை யுரித்துக் களைந்தவன்
அன்பி லானை**யம் மானையள் ளூறிய
அன்பி னால்நினைந் தாரறிந் தார்களே. 3

* 'அன்பில்' என்று வழங்கப்பெறும். **அன்பிலானை–அன்பிலாலந் துறையில் எழுந்தருளியிருப்பவனை.

சங்கை யுள்ளதுஞ் சாவது மெய்யுமை
பங்க ஞரடி பாவியே நானுய்ய
அங்கண னெந்தை அன்பிலா லந்துறைச்
செங்க ணரடிச் சேரவும் வல்லனே. 4

கொக்கி றகர் குளிர்மதிச் சென்னியர்
மிக்க ரக்கர் புரமெரி செய்தவர்
அக்க ரையினர் அன்பிலா லந்துறை
நக்கு ருவரும் நம்மை யறிவரே. 5

வெள்ள முள்ள விரிசடை நந்தியைக்
கள்ள முள்ள மனத்தவர் காண்கிலார்
அள்ள லார்வயல் அன்பிலா லந்துறை
உள்ள வாறறி யார்சிலர் ஊமரே. 6

பிறவி மாயப் பிணக்கில் அழுந்தினும்
உறவெ லாஞ்சிந்தித் துன்னி உகவாதே
அறவன் எம்பிரான் அன்பிலா லந்துறை
மறவாதே தொழு தேத்தி வணங்குமே. 7

நுணங்கு நூலயன் மாலும் இருவரும்
பிணங்கி யெங்குந் திரிந்தெய்த்துங் காண்கிலா
அணங்கன் எம்பிரான் அன்பிலா லந்துறை
வணங்கும் நும்வினை மாய்ந்தறும் வண்ணமே. 8

பொய்யெ லாமுரைக் குஞ்சமண் சாக்கியக்
கையன் மாருரை கேளா தெழுமினே
ஐயன் எம்பிரான் அன்பிலா லந்துறை
மெய்யன் சேவடி ஏத்துவார் மெய்யரே. 9

இலங்கை வேந்தன் இருபது தோளிற்று
மலங்க மாமலை மேல்விரல் வைத்தவன்
அலங்கல் எம்பிரான் அன்பிலா லந்துறை
வலங்கொள் வாரைவா னோர்வலங் கொள்வரே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—சத்திய வாகீசர், ஆலந்துறைநாதர்;
தேவி—சௌந்தர நாயகி.

---

## 32. திருவானைக்கா*

திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**கோனைக்** காவி‡க் குளிர்ந்த மனத்தராய்த்
தேனைக் காவியுண் ணார்சில தெண்ணர்கள்**
ஆனைக் காவில்எம் மானை அணைகிலார்
ஊனைக் காவி யுழிதர்வர் ஊமரே. 1

திருகு சிந்தையைத் தீர்த்துச்செம் மைசெய்து
பருகி யூறலைப் பற்றிப் பதமறிந்
துருகி நைபவர்க் கூனமொன் றின்றியே
அருகு நின்றிடும் ஆனைக்கா அண்ணலே. 2

துன்ப மின்றித் துயரின்றி யென்றும்நீர்
இன்பம் வேண்டில் இராப்பகல் ஏத்துமின்
என்பொன் ஈசன் இறைவனென் றுள்குவார்க்(கு)
அன்ப னாயிடும் ஆனைக்கா அண்ணலே. 3

நாவால் நன்று நறுமலர்ச் சேவடி
ஓவா தேத்தி யுளத்தடைத் தார்வினை
காவா யென்றுதங் கைதொழு வார்க்கெலாம்
ஆவா என்றிடும் ஆனைக்கா அண்ணலே. 4

வஞ்ச மின்றி வணங்குமின் வைகலும்
வெஞ்சொ லின்றி விலகுமின் வீடற†
நைஞ்சு நைஞ்சுநின் றுள்குளிர் வார்க்கேலாம்
அஞ்ச லேன்றிடும் ஆனைக்கா அண்ணலே. 5

நடையை மெய்யென்று நாத்திகம் பேசாதே
படைகள் போல்வரும் பஞ்சமா பூதங்கள்
தடையொன் றின்றியே தன்னடைந் தார்க்கெலாம்
அடைய நின்றிடும் ஆனைக்கா அண்ணலே. 6

---

* திருவானைக்காவல், என்று வழங்குவர்; இது சம்புகேச்சுரம் (சம்பு–வெண்ணாவல்) எனப்படும். ‡ காவி–விரும்பி. ** தெண்ணர்கள்–அறிவிலிகள். † வீடுற என்றும் பாடம்.

ஒழுகு மாட‡த்துள் ஒன்பது வாய்தலுங்
கழுக ரிப்பதன் முன்னங் கழலடி
தொழுது கைகளால் தூமலர் தூவிநின்(று)
அழும வர்க்கன்பன் ஆனைக்கா அண்ணலே. 7

உருளும் போதறி வொண்ணு உலகத்தீர்
தெருளுஞ் சிக்கெனத் தீவினை சேராதே
இருள றுத்துநின் றீசனென் பார்க்கெலாம்
அருள்கொ டுத்திடும் ஆனைக்கா அண்ணலே 8

நேச மாகி நினைமட நெஞ்சமே
நாச மாய குலநலஞ் சுற்றங்கள்
பாச மற்றுப் பராபர ஆனந்த
ஆசை யுற்றிடும் ஆனைக்கா அண்ணலே. 9

ஓத மாகடல் சூழ்இலங் கைக்கிறை
கீதங் கின்னரம் பாடக் கெழுவினன்
பாதம் வாங்கிப் பரிந்தருள் செய்தங்கோர்
ஆதி யாயிடும் ஆனைக்கா அண்ணலே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

எத்தாயர் எத்தந்தை எச்சுற் றத்தார் எம்மாடு சும்மாடாம்*ஏவர் நல்லார், செத்தால்வந் துதவுவார் ஒருவ ரில்லை சிறுவிறகால் தீமூட் டிச் செல்லா நிற்பர், சித்தாய வேடத்தாய் நீடு பொன்னித் திரு வானைக் காவுடைய செல்வா என்றன், அத்தாவுன் பொற்பாதம் அடையப் பெற்றால் அல்லகண்டங் கொண்டடியேன் என்செய் கேனே. 1

ஊனாகி உயிராகி யதனுள் நின்ற உணர்வாகிப் பிறவனைத் தும் நீயாய் நின்றாய், நானேதும் அறியாமே யென்னுள் வந்து நல்லன வுந்தீயனவுங் காட்டா நின்றாய், தேனாருங் கொன்றை யனே நின்றி யூராய் திருவானைக் காவிலுறை சிவனே ஞானம், ஆனாயுன் பொற்பாதம் அடையப் பெற்றால் அல்லகண்டங் கொண்டடியேன் என்செய் கேனே. 2

---

‡ ஒழுகு மாடம்-உடல், * சும்மாடு-நல்ல செல்வம்.

ஒப்பாயிவ் வுலகத்தோ டொட்டி வாழ்வான் ஒன்றலாத் தவத்தாரோ டுடனே நின்று, துப்பாருங் குறையடிசில் துற்றி நற்றன் திறம்மறந்து திரிவேனைக் காத்து நீவந்(து), எப்பாலும் நுண்ணுணர்வே யாக்கி யென்னை ஆண்டவனே யெழிலானைக் காவா வானோர், அப்பாவுன் பொற்பாதம் அடையப் பெற்றால் அல்ல கண்டங் கொண்டடியேன் என்செய் கேனே. 3

நினைத்தவர்கள் நெஞ்சுளாய் வஞ்சக் கள்வா நிறைமதியஞ் சடை வைத்தாய் அடையா துன்பான், முனைத்தவர்கள் புரமூன்று மெரியச் செற்றாய் முன்னானைத் தோல்போர்த்த முதல்வா வென்றுங், கனைத்தவரும் எருதேறுங் காளா கண்டா கயிலாய மலையாநின் கழலே சேர்ந்தேன், அனைத்துலகும் ஆள்வானே ஆனைக்காவா அல்லகண்டங் கொண்டடியேன் என்செய் கேனே 4

இம்மாயப் பிறப்பென்னுங் கடலாந் துன்பத் திடைச்சுழிப் பட்டிளைப்பேனை இளையா வண்ணங், கைம்மான மனத்துதவிக் கருணை செய்து காதலரு ளவைவைத்தாய் காண நில்லாய், வெம்மான மதகரியி னுரிவை போர்த்த வேதியனே தென்னானைக் காவுள் மேய, அம்மான்நின் பொற்பாதம் அடையப் பெற்றால் அல்லகண்டங் கொண்டடியேன் என்செய் கேனே. 5

உரையாரும் புகழானே யொற்றி யூராய் கச்சியே கம்பனே காரோ ணத்தாய், விரையாரும் மலர்தூவி வணங்கு வார்பால் மிக்கானே அக்கரவம் ஆரம் பூண்டாய், திரையாரும் புனற் பொன்னித் தீர்த்தம் மல்கு திருவானைக் காவிலுறை தேனே வானோர், அரையாவுன் பொற்பாதம் அடையப் பெற்றால் அல்ல கண்டங் கொண்டடியேன் என்செய் கேனே. 6

மையாரும் மணிமிடற்றாய் மாதோர் கூறாய் மான்மறியும் மாமழுவும் அனலு மேந்துங், கையானே காலனுடல் மாளச் செற்ற கங்காளா முன்கோளும் விளைவு மானாய், செய்யானே திருமேனி யரியாய் தேவர் குலக்கொழுந்தே தென்னானைக் காவுள் மேய, ஐயாவுன் பொற்பாதம் அடையப் பெற்றால் அல்லகண்டங் கொண்டடியேன் என்செய் கேனே. 7

இலையாருஞ் சூலத்தாய் எண்தோ ளானே எவ்விடத்தும் நீயல்லா தில்லை யென்று, தலையாரக் கும்பிடுவார் தன்மை யானே

தழல்மடுத்த மாமேருக் கையில் வைத்த, சிலையானே திருவானைக் காவுள் மேய தீயாடீ சிறுநோயால் நலிவுண் டுள்ளம், அலையாதே நின்னடியே அடையப் பெற்றால் அல்லகண்டங் கொண்டடியேன் என்செய் கேனே. 8

விண்ணாரும் புனல்பொதிசெஞ் சடையாய் வேத நெறியானே எறிகடலின் நஞ்ச முண்டாய், எண்ணாரும் புகழானே உன்னை யெம்மான் என்றென்றே நாவினில்எப் பொழுதும் உன்னிக், கண்ணாரக் கண்டிருக்கக் களித்தெப் போதுங் கடிபொழில்சூழ் தென்னானைக் காவுள் மேய, அண்ணாநின் பொற்பாதம் அடையப் பெற்றால் அல்லகண்டங் கொண்டடியேன் என்செய் கேனே. 9

கொடியேயும் வெள்ளேற்றாய் கூளி பாடக் குறட்பூதங் கூத் தாட நீயும் ஆடி, வடிவேயும் மங்கைதனை வைத்த மைந்தா மதி லானைக் காவுளாய் மாகா ளத்தாய், படியேயுங் கடலிலங்கைக் கோமான் தன்னைப் பருமுடியுந் திரள்தோளும் அடர்த்து கந்த, அடியேவந் தடைந்தடிமை யாகப் பெற்றால் அல்லகண்டங் கொண்டடியேன் என்செய் கேனே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

முன்னானைத் தோல்போர்த்த மூர்த்தி தன்னை மூவாத சிந்தையே மனமே வாக்கே, தன்னானை யாப்பண்ணி யேறி னானைச் சார்தற் கரியானைத் தாதை தன்னை, என்னானைக் கன்றினையென் ஈசன் தன்னை யெறிநீர்த் திரையுகளுங் காவிரிசூழ், தென்னானைக் காவா னைத் தேனைப் பாலைச் செழுநீர்த் திரளைச்* சென் றாடி னேனே. 1

மருந்தானை மந்திரிப்பார் மனத்து ளானை வளர்மதியஞ் சடை யானை மகிழ்ந்தென் உள்ளத், திருந்தானை இறப்பிலியைப் பிறப்பி லானை இமையவர்தம் பெருமானை உமையா ளஞ்சக், கருந்தான மதகளிற்றி னுரிபோர்த் தானை கனமழுவாட் படையானைப் பலி கொண்டூரூர், திரிந்தானைத் திருவானைக் காவு ளானைச் செழுநீர்த் திரளைச்சென் றாடி னேனே. 2

---

* செழுநீர்த்திரள் – நீர் இலிங்கம்.

முற்றாத வெண்டிங்கட் கண்ணி யானை முந்நீர்நஞ் சுண்டிமை யோர்க் கமுதம் நல்கும், உற்றானைப் பல்லுயிர்க்குந் துணையா னானை ஓங்காரத் துட்பொருளை உலகை மெல்லாம், பெற்றானைப் பின்னிரக்கஞ் செய்வான் தன்னைப் பிரானென்று போற்றாதார் புரங்கள் மூன்றுஞ், செற்றானைத் திருவானைக் காவு ளானைச் செழு நீர்த் திரளைச்சென் றாடி னேனே. 3

காரானும் மணிமிடற்றெம் பெருமான் தன்னைக் காதில் வெண் குழையானைக் கமழ்பூங் கொன்றைத், தாரானைப் புலிய தளி னுடை யானைத் தானன்றி வேறொன்று மில்லா ஞானப், பேரானை மணியார மார்பி னானைப் பிஞ்ஞகனைத் தெய்வநான் மறைகள் பூண்ட, தேரானைத் திருவானைக் காவு ளானைச் செழு நீர்த் திரளைச்சென் றாடி னேனே. 4

பொய்யேது மில்லாத மெய்யன் தன்னைப் புண்ணியனை நண்ணா தார் புரம்நீ றாக, எய்தானைச் செய்தவத்தின் மிக்கான் தன்னை ஏறமரும் பெருமானை இடமான் ஏந்தும், கையானைக் கங்காள வேடத் தானைக் கட்டங்கக் கொடியானைக் கனல்போல் மேனிச், செய்யானைத் திருவானைக் காவு ளானைச் செழுநீர்த் திரளைச்சென் றாடி னேனே. 5

கலையானைப் பரசுதர பாணி யானைக் கனவயிரத் திரளானை மணிமா ணிக்க, மலையானை யென்தலையி னுச்சி யானை வார்தரு புன் சடையானை மயானம் மன்னும், நிலையானை வரியரவு நாணாக் கோத்து நினையாதார் புரமெரிய வளைத்த மேருச், சிலையானைத் திருவானைக் காவு ளானைச் செழுநீர்த் திரளைச்சென் றாடி னேனே. 6

ஆதியனை யெறிமணியி னோசை யானை அண்டத்தார்க் கறி வொண்ணா தப்பால் மிக்க, சோதியனைத் தூமறையின் பொரு ளான் தன்னைச் சுரும்பமரும் மலர்க்கொன்றைத் தொன்னூல் பூண்ட, வேதியனை அறமுரைத்த பட்டன் தன்னை விளங்குமல ரயன்சிரங்கள் ஐந்தி லொன்றைச், சேதியனைத் திருவானைக் காவு ளானைச் செழுநீர்த் திரளைச்சென் றாடி னேனே. 7

மகிழ்ந்தானைக் கச்சியே கம்பன் தன்னை மறவாது கழல் நினைந்து வாழ்த்தி ஏத்திப், புகழ்ந்தாரைப் பொன்னுலகம் ஆள்

விப் பானைப் பூதகணப் படையானைப் புறங்காட் டாடல், உகந் தானைப் பிச்சையே யிச்சிப் பானை ஒண்பவளத் திரளையென் னுள்ளத் துள்ளே, திகழ்ந்தானைத் திருவானைக் காவு ளானைச் செழுநீர்த் திரளைச்சென் றாடி னேனே. 8

நசையானை நால்வேதத் தப்பா லானை நல்குரவுந் தீப்பிணி நோய் காப்பான் தன்னை, இசையானை யெண்ணிறந்த குணத் தான் தன்னை இடைமருதும் ஈங்கோயும் நீங்கா தேற்றின், மிசை யானை விரிகடலும் மண்ணும் விண்ணும் மிகுதீயும் புனலெறிக் காற் றாகி யெட்டுத், திசையானைத் திருவானைக் காவு ளானைச் செழுநீர்த் திரளைச்சென் றாடி னேனே. 9

பார்த்தானைக் காமனுடல் பொடியாய் வீழப் பண்டயன் மால் இருவர்க்கும் அறியா வண்ணஞ், சீர்த்தானைச் செந்தழல்போ லுருவி னானைத் தேவர்கள்தம் பெருமானைத் திறமுன்னுதே, ஆர்த் தோடி மலையெடுத்த இலங்கை வேந்தன் ஆண்மையெலாங் கெடுத் தவன்தன் இடரப் போதே, தீர்த்தானைத் திருவானைக் காவு ளானைச் செழுநீர்த் திரளைச்சென் றாடி னேனே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி—ஜம்புகேசுவரர்; தேவி—அகிலாண்டநாயகி.

## 33. திருப்பைஞ்ஞீலி

### திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

உடையர் கோவண மொன்றுங் குறைவிலர்
படைகொள் பாரிடஞ் சூழ்ந்தபைஞ் ஞீலியார்
சடையிற் கங்கை தரித்த சதுரரை
அடைய வல்லவர்க் கில்லை அவலமே. 1

மத்த மாமலர் சூடிய மைந்தனார்
சித்த ராய்த்திரி வார்வினை தீர்ப்பரால்
பத்தர் தாந்தொழு தேத்துபைஞ் ஞீலிஎம்
அத்த னைத்தொழ வல்லவர் நல்லரே. 2

* ஞீலி-ஒருவகை வாழை. இங்குப் பசிய ஞீலி தலமாம் ஆதலின் இப்பெயர் பெற்றது.

விழுது சூலத்தன் வெண்மழு வாட்படைக்
கழுது துஞ்சிருட் காட்டகத் தாடலான்
பழுதொன் றின்றிப் பைஞ்ஞீலிப் பரமனைத்
தொழுது செல்பவர் தம்வினை தூளியே. 3

ஒன்றி மாலும் பிரமனுந் தம்மிலே
நின்ற சூழ லறிவரி யானிடம்
சென்று பாரிடம் ஏத்துபைஞ் ஞீலியுள்
என்றும் மேவி யிருந்த அடிகளே. 4

வேழத் தின்னுரி போர்த்த விகிர்தனர்
தாழச் செஞ்சடை மேற்பிறை வைத்தவர்
தாழைத் தண்பொழில் சூழ்ந்தபைஞ் ஞீலியார்
யாழின் பாட்டை யுகந்த அடிகளே. 5

குண்டு பட்டுக் குறியறி யாச்சமண்
மிண்ட ரோடு படுத்துய்யப் போந்துநான்
கண்டங் கார்வயல் சூழ்ந்தபைஞ் ஞீலிஎம்
அண்ட வாணன் அடியடைந் துய்ந்தனே*. 6

வரிப்பை யாடர வாட்டி மதகரி
உரிப்பை மூடிய வுத்தம னுறைறை
திருப்பைஞ் ஞீலி திசைதொழு வார்கள்போய்
இருப்பர் வானவ ரோடினி தாகவே. 7

கோடல் கோங்கம் புறவணி முல்லைமேல்
பாடல் வண்டிசை கேட்கும்பைஞ் ஞீலியார்
பேடு மாணும் பிறறி யாததோர்
ஆடு நாகம் அசைத்த அடிகளே. 8

காரு லாமலர்க் கொன்றையந் தாரினன்
வாரு லாமுலை மங்கையோர் பங்கினன்
தேரு லாம்பொழில் சூழ்ந்தபைஞ் ஞீலிஎம்
ஆர்கி லாஅமு தையடைந் துய்ம்மினே. 9

தருக்கிச் சென்று தடவரை பற்றலும்
நெருக்கி யூன்ற நினைந்து சிவனையே
அரக்கன் பாட அருளும்எம் மானிடம்
இருக்கை ஞீலி**யென் பார்க்கிட ரில்லையே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி—நீலகண்டர், ஆரணியவிடங்கர்; தேவி—விசாலாட்சி,
நீணெடுங்கண்ணி.

---

* துய்ந்தெனே என்றும் பாடம். **ஞீலி—பைஞ்ஞீலி.

## சோழநாட்டில் காவிரிக்குத் தென்கரையில் உள்ள தலங்கள்

### 1. திருவாட்போக்கி*

திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கால பாசம் பிடித்தெழு தூதுவர்
பால கர்விருத் தர்பழை யாரனோர்
ஆல நிழல் அமர்ந்தவாட் போக்கியார்
சீல மார்ந்தவர் செம்மையுள் நிற்பரே.** 1

விடுத்த தூதுவர் வந்து வினைக்குழிப்
படுத்த போது பயனிலை பாவிகாள்
அடுத்த கின்னரங் கேட்கும்வாட் போக்கியை
எடுத்தும் ஏத்தியும் இன்புறு மின்களே. 2

வந்திவ் வாறு வளைத்தெழு தூதுவர்
உந்தி யோடி நரகத் திடாமுனம்
அந்தி யின்னொளி தாங்கும்வாட் போக்கியார்
சிந்தி யாவெழு வார்வினை தீர்ப்பரே. 3

கூற்றம் வந்து குமைத்திடும் போதினால்
தேற்றம் வந்து தெளிவுற லாகுமே
ஆற்ற வும்மருள் செய்யும்வாட் போக்கிபால்
ஏற்று மின்விளக் கையிருள் நீங்கவே. 4

மாறு கொண்டு வளைத்தெழு தூதுவர்
வேறு வேறு படுப்பதன் முன்னமே
ஆறு செஞ்சடை வைத்தவாட் போக்கியார்க்
கூறி யூறி யுருகுமென் னுள்ளமே. 5

கான மோடிக் கடிதெழு தூதுவர்
தான மோடு தலைபிடி யாமுனம்
ஆனஞ் சாடி யுகந்தவாட் போக்கியார்
ஊன மில்லவர்க் குண்மையில் நிற்பரே. 6

---

* 'இரத்தினகிரி' என்று வழங்கப்படும். **செம்மை மறப்பரே என்றும் பாடம்.

பார்த்துப் பாசம் பிடித்தெழு தூதுவர்
கூர்த்த வேலாற் குமைப்பதன் முன்னமே
ஆர்த்த கங்கை யடக்கும்வாட் போக்கியார்
கீர்த்தி மைகள் கிளர்ந்துரை மின்களே. 7

நாடி வந்து நமன்தமர் நல்லிருள்
கூடி வந்து குமைப்பதன் முன்னமே
ஆடல் பாடல் உகந்தவாட் போக்கியை
வாடி யேத்தநம் வாட்டந் தவிருமே. 8

கட்ட றுத்துக் கடிதெழு தூதுவர்
பொட்ட நூக்கிப் புறப்படா முன்னமே
அட்ட மாமலர் சூடும்வாட் போக்கியார்க்
கிட்ட மாகி இணையடி யேத்துமே. 9

இரக்க முன்னறி யாதெழு தூதுவர்
பரக்க ழித்தவர் பற்றுதன் முன்னமே
அரக்க னுக்கருள் செய்தவாட் போக்கியார்
கரப்ப துங்கரப் பாரவர் தங்கட்கே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி–இரத்தினகிரீசுவரர்: தேவி சுரும்பார் குழலம்மை.

## 2. திருக்கடம்பந்துறை*

### திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

முற்றி லாமுலை யாளிவ ளாகிலும்
அற்றந் தீர்க்கும் அறிவில ளாகிலும்
கற்றைச் செஞ்சடை யான்கடம் பந்துறைப்
பெற்றம் ஊர்தியென் றாள்எங்கள் பேதையே. 1

தனகி ருந்ததொர் தன்மைய ராகிலும்
முனகு தீரத் தொழுதெழு மின்களோ
கனகப் புன்சடை யான்கடம் பந்துறை
நினைய வல்லவர் நீள்விசும் பாள்வரே. 2

* 'கடம்பர் கோயில்' என்று வழங்கப்படும்,

ஆரி யந்தமி ழோடிசை யானவன்
கூரி யகுணத் தார்குறி நின்றவன்
காரி கையுடை யான்கடம் பந்துறைச்
சீரி யல்பத்தர் சென்றடை மின்களே. 3

பண்ணின் இன்மொழி கேட்கும் பரமனை
வண்ண நன்மல ரான்பல தேவரும்
கண்ண னும்மறி யான்கடம் பந்துறை
நண்ண நம்வினை யாயின நாசமே. 4

மறைகொண் டம்மனத் தானை மனத்துளே
நிறைகொண் டந்நெஞ்சி னுள்ளுற வைம்மினோ
கறைகண் டன்னுறை* யுங்கடம் பந்துறை
சிறைகொண் டவ்வினை தீரத் தொழுமினே. 5

நங்கை பாகம்வைத் தந்நறுஞ் சோதியைப்
பங்க மின்றிப் பணிந்தெழு மின்களோ
கங்கைச் செஞ்சடை யான்கடம் பந்துறை
அங்கயோதி அரனுறை கின்றதே. 6

அரிய நான்மறை ஆறங்க மாய்ஐந்து
புரியன் தேவர்கள் ஏத்தநஞ் சுண்டவன்
கரிய கண்டத்தி னன்கடம் பந்துறை
உரிய வாறு நினைமட நெஞ்சமே. 7

பூமென் கோதை உமையொரு பாகனை
ஓமஞ் செய்தும்உ ணர்மின்கள் உள்ளத்தால்
காமற் காய்ந்தபி ரான்கடம் பந்துறை
நாமம் ஏத்தநம் தீவினை நாசமே.** 8

பார ணங்கி வணங்கிப் பணிசெய
நார ணன்பிர மன்னறி யாததோர்
கார ணன்கடம் பந்துறை மேவிய
ஆர ணங்கொரு பாலுடை மைந்தனே. 9

நூலால் நன்று நினைமின்கள் நோய்கெடப்
பாலான் ஐந்துடன் ஆடும் பரமனர்

* கறைகொண்டானுறை என்றும் பாடம். ** நம் தம்வினை நாசமே என்றும் பாடம்.

காலால் ஊன்றுகந் தான்கடம் பந்துறை
மேலா னுஞ்செய்த வல்வினை வீடுமே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி—கடம்பவன நாதர்; தேவி—முற்றிலா முலையம்மை.

## 3. திருப்பராய்த்துறை*

### திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கரப்பர் கால மடைந்தவர் தம்வினை
சுருக்கு மாறுவல் லார்கங்கை செஞ்சடைப்
பரப்பு நீர்வரு காவிரித் தென்கரைத்
திருப்ப ராய்த்துறை மேவிய செல்வரே.** 1

மூடி னார்களி யானையின் ஈருரி
பாடி னார்மறை நான்கினோ டாறங்கம்
சேட னார்தென்ப ராய்த்துறைச் செல்வரைத்
தேடிக் கொண்டடி யேன்சென்று காண்பனே. 2

பட்ட நெற்றியர் பால்மதிக் கீற்றினர்
நட்ட மாடுவர் நள்ளிருள் ஏமமும்
சிட்ட னார்தென்ப ராய்த்துறைச் செல்வனார்
இட்ட மாயிருப் பாரை அறிவரே. 3

முன்பெ லாஞ்சில மோழைமை பேசுவர்
என்பெ லாம்பல பூண்டங் குழிதர்வர்
தென்ப ராய்த்துறை மேவிய செல்வனார்,
அன்ப ராயிருப் பாரை அறிவரே. 4

போது தாதொடு கொண்டு புனைந்துடன்
தாத விழ்சடைச் சங்கரன் பாதத்துள்
வாதை தீர்க்கஎன் றேத்திப் பராய்த்துறைச்
சோதி யானைத் தொழுதெழுந் துய்ம்மினே. 5

---

* இத்தலமரம் பராய் மரம் ஆதலால் இப்பெயர் பெற்றது என்பர். ** செல்வர்—சுவாமியின் பெயர்.

நல்ல நான்மறை யோதிய நம்பனைப்
பல்லில் வெண்டலை யிற்பலி கொள்வனைத்
தில்லை யான்தென் பராய்த்துறைச் செல்வனை
வல்லை யாய்வணங் கித்தொழு வாய்மையே. 6

நெருப்பி னுற்குவித் தாலொக்கு நீள்சடைப்
பருப்ப தம்மத யானை யுரித்தவன்
திருப்ப ராய்த்துறை யார்திரு மார்பின் நூல்
பொருப்ப ராவி* இழிபுனல் போன்றதே. 7

எட்ட விட்ட விடுமணல் எக்கர்மேல்
பட்ட நுண்துளி பாயும் பராய்த்துறைச்
சிட்டன் சேவடி சென்றடை கிற்றிரேல்
விட்டு நம்வினை யுள்ளன வீடுமே. 8

நெருப்ப ராய்நிமிர்ந் தாலொக்கு நீள்சடை
மருப்ப ராய்வளைந் தாலொக்கும் வாண்மதி
திருப்ப ராய்த்துறை மேவிய செல்வனார்
விருப்ப ராயிருப் பாரை அறிவரே. 9

தொண்டு பாடியுந் தூமலர் தூவியும்
இண்டை கட்டி இணையடி யேத்தியும்
பண்ட ரங்கர் பராய்த்துறைப் பாங்கரைக்
கண்டு கொண்டடி யேனுய்ந்து போவனே. 10

அரக்கன் ஆற்றல் அழித்த அழகனைப்
பரக்கு நீர்ப்பொன்னி மன்னு பராய்த்துறை
இருக்கை மேவிய ஈசனை யேத்துமின்
பொருக்க நும்வினை† போயறுங் காண்மினே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி-பராய்த்துறைநாதர், செல்வர்;
தேவி-பொன்மயிலம்மையார்.

---

* பொருப்பு அராவி-மலையில் வளைந்து தவழும். † நம்வினை என்றும் பாடம்.

## 4. திருக்கற்குடி*

### திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

### திருச்சிற்றம்பலம்

மூத்தவனை வானவர்க்கும் மூவா மேனி முதலவனைத் திரு வரையின் மூர்க்கப் பாம்பொன், றூர்த்தவனை அக்கரவம் ஆரமாக அணிந்தவனைப் பணிந்தடியா ரடைந்த வன்போ, டேத்தவனை யிறுவரையில் தேனை ஏனோர்க் கின்னமுதம் அளித்தவனை யிடரை யெல்லாங், காத்தவனைக் கற்குடியில் விழுமி யானைக் கற்பகத் தைக் கண்ணாரக் கண்டேன் நானே. 1

செய்யானை வெளியானைக் கரியான் தன்னைத் திசைமுகனைத் திசையெட்டுஞ் செறிந்தான் தன்னை, ஐயானை நொய்யானைச் சீரியானை அணியானைச் சேயானை ஆனஞ் சாடும், மெய்யானைப் பொய்யாது மில்லான் தன்னை விடையானைச் சடையானை வெறித்த மான்கொள், கையானைக் கற்குடியில் விழுமி யானைக் கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே, 2

மண்ணதனில் ஐந்தை மாநீரில் நான்கை வயங்கெரியில் மூன்றை மாருதத் திரண்டை, விண்ணதனி லொன்றை**விரி கதி ரைத் தண் மதியைத் தாரகைகள் தம்மின் மிக்க, எண்ணதனில் எழுத்தை ஏழிசையைக் காமன் எழிலழிய எரியுமிழ்ந்த இமையா நெற்றிக், கண்ணவனைக் கற்குடியில் விழுமி யானைக் கற்பகத் தைக் கண்ணாரக் கண்டேன் நானே. 3

நற்றவனைப் புற்றரவ நாணி னானை நாணாது நகுதலையூண் நயந்தான் தன்னை, முற்றவனை மூவாத மேனி யானை முந்நீரின் நஞ்சமுகந் துண்டான் தன்னைப், பற்றவனைப் பற்றார்தம் பதிகள் செற்ற படையானை அடைவார்தம் பாவம் போக்கக், கற்ற வனைக் கற்குடியில் விழுமி யானைக் கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே. 4

சங்கைதனைத் தவிர்த்தாண்ட தலைவன் தன்னைச் சங்கரனைத் தழலுறுதாள் மழுவாள் தாங்கும் அங்கையனை அங்கமணி ஆகத்

---

* 'உய்யக்கொண்டான்மலை' என வழங்குவர். **மண்ண தனில்.........ஒன்றை-இவ்வடிகள் இறைவன் ஐம்பூத குணங்களில் விளங்கும் நிலையைக் குறிப்பன.

தானை ஆகத்தோர் பாகத்தே அமர வைத்த, மங்கையனை மதி யொடுமா சுணமுந் தம்மின் மருவவிரி சடைமுடிமேல் வைத்த வான்நீர்க், கங்கையனைக் கற்குடியில் விழுமி யானைக் கற்பகத் தைக் கண்ணாரக் கண்டேன் நானே. 5

பெண்ணவனை ஆணவனைப் பேடா ஞானைப் பிறப்பிலியை இறப்பிலியைப் பேரா வாணி, விண்ணவனை விண்ணவர்க்கும் மேலா ஞானை* வேதியனை வேதத்தின் கீதம் பாடும், பண்ணவனைப் பண்ணில்வரு பயனு ஞானைப் பாரவனைப் பாரில்வாழ் உயிர்கட் கெல்லாங், கண்ணவனைக் கற்குடியில் விழுமி யானைக் கற்பகத் தைக் கண்ணாரக் கண்டேன் நானே. 6

பண்டானைப் பரந்தானைக் குவிந்தான் தன்னைப் பாரானை விண்ணாயிவ் வுலக மெல்லாம், உண்டானை உமிழ்ந்தானை உடை யான் தன்னை யொருவருந்தன் பெருமைதனை அறியவொண்ணா, விண்டானை விண்டார்தம் புரங்கள் மூன்றும் வெவ்வழலில் வெந்துபொடி யாகி வீழக் கண்டானைக் கற்குடியில் விழுமி யானைக் கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே. 7

வானவனை வானவர்க்கும் மேலா ஞானை வணங்குமடி யார் மனத்துள் மருவிப் புக்க, தேனவனைத் தேவர்தொழு கழலான் தன்னைச் செய்குணங்கள் பலவாகி நின்ற வென்றிக், கோன வனைக் கொல்லை விடையேற்றி ஞானைக் குழல்முழவம் இயம்பக் கூத்தாட வல்ல, கானவனைக் கற்குடியில் விழுமி யானை கற்பகத் தைக் கண்ணாரக் கண்டேன் நானே. 8

கொலையானை யுரிபோர்த்த கொள்கை யானைக்கோளரியைக் கூரம்பா வரைமேற் கோத்த, சிலையானைச் செம்மைதரு பொரு ளான் தன்னைத் திரிபுரத்தோர் மூவர்**க்குச் செம்மை செய்த, தலையானைத் தத்துவங்க ளானான் தன்னைத் தையலோர் பங்கின னைத் தன்கை யேந்து, கலையானைக் கற்குடியில் விழுமி யானைக் கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே. 9

பொழிலானைப் பொழிலாரும் புன்கூ ரானைப் புறம்பயனை அறம்புரிந்த புகலூ ரானை, எழிலானை இடைமருதி னிடங்கொண்

*மேலாவாய என்றும் பாடம். **மூவர்—தாரகாட்சன், கமலாட்சன், வித்யுன்மாலி என்ற மூவர்.

டானை ஈங்கோய்நீங் கர்துறையும் இறைவன் தன்னை, அழலாடு மேனியனை அன்று சென்றக்* குன்றெடுத்த அரக்கன்தோள் நெரிய வூன்றுங், கழலானைக் கற்குடியில் விழுமி யானைக் கற்ப கத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி—உச்சிநாதர், கற்பகநாதர்; தேவி—அஞ்சனாட்சியம்மை.

## 5. திருச்சிராப்பள்ளி

திருக்குறுந்தொகை** [5–ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மட்டு வார்குழ லாளொடு† மால்விடை
இட்ட மாவுகந் தேறும் இறைவனார்
கட்டு நீத்தவர்க் கின்னரு ளேசெயும்
சிட்டர் போலுஞ் சிராப்பள்ளிச் செல்வரே. 1

அரிய யன்தலை வெட்டிவட் டாடினார்
அரிய யன்தொழு தேத்தும் அரும்பொருள்
பெரிய வன்சிராப் பள்ளியைப் பேணுவார்
அரிய யன்தொழ அங்கிருப் பார்களே. 2

அரிச்சி ராப்பகல் ஐவரால் ஆட்டுண்டு
சுரிச்சி ராதுநெஞ் சேயொன்று சொல்லக்கேள்
திருச்சி ராப்பள்ளி யென்றலுந் தீவினை
நரிச்சி ராது†† நடக்கும் நடக்குமே. 3, 4, 5, 6, 7, 8, 9

தாயு மாய்‡எனக் கேதலை கண்ணுமாய்
பேய னேனையும் ஆண்ட பெருந்தகை
தேய நாதன் சிராப்பள்ளி மேவிய
நாய னாரென நம்வினை நாசமே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி—தாயுமானேசுவர்; தேவி—மட்டுவார்குழலம்மை.

*சென்று என்றும் பாடம். **இப்பதிகத்தில் 4, 5, 6, 7, 8, 9-ம் செய்யுட்கள் மறைந்துபோயின. சில பிரதிகளில் இப்பதிகம் இல்லை என்பர். †மட்டுவார்குழலாள்–அம்மையின் பெயர். ††நரிச்சு இராது–ஒளிந்திராமல். ‡தாயுமாய்–சுவாமியின் பெயர்.

## 6. திருஎறும்பியூர்*

### திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

விரும்பி யூறு விடேல்§மட நெஞ்சமே
கரும்பி னூறல்கண் டாய்கலந் தார்க்கவன்
இரும்பி னூறல ருததோர் வெண்டலை
எறும்பி யூர்மலை யானெங்க ளீசனே. 1

பிறங்கு செஞ்சடைப் பிஞ்ஞகன் பேணுசீர்க்
கறங்கு பூத கணமுடைக் கண்ணுதல்
நறுங்கு ழல்மட வாளொடு** நாடொறும்
எறும்பி யூர்மலை யானெங்க ளீசனே. 2

மருந்து வானவர் தானவர்க் கின்சுவை
புரிந்த புன்சடைப் புண்ணியன் கண்ணுதல்
பொருந்து பூண்முலை மங்கைநல் லாளொடும்
எறும்பி யூர்மலை யானெங்க ளீசனே. 3

நிறங்கொள் கண்டத்து நின்மலன் எம்மிறை
மறங்கொள் வேற்கண்ணி வாணுதல் பாகமாய்
அறம்பு ரிந்தருள் செய்தஎம் அங்கணன்
எறும்பி யூர்மலை யானெங்க ளீசனே, 4

நறும்பொன் நாண்மலர்க் கொன்றையும் நாகமும்
துறும்பு செஞ்சடைத் தூமதி வைத்துவான்
உறும்பொன் மால்வரைப் பேதையோ டூர்தொறும்
எறும்பி யூர்மலை யானெங்க ளீசனே. 5

கறும்பி† யூர்வன ஐந்துள காயத்தில்
திறம்பி யூர்வன மற்றும் பலவுள
குறும்பி யூர்வதோர் கூட்டகத் திட்டெனை
எறும்பி யூரரன் செய்த இயற்கையே. 6

---

* திருஎறும்பியூர்மலை என்று வழங்குவர். தேவர்கள் எறும்பு உருவம் எடுத்துப் பூசித்த காரணத்தால் இப்பெயர் பெற்றதாகும். §ஊறு விரும்பி விடேல் என மாற்றுக. ஊறு-கேடு. **நறுங்குழல் மடவாள்-தேவியின் பெயர். †கறும்பி-துன்புறுத்தி.

மறந்து மற்றிது பேரிடர் நாடொறும்
திறம்பி நீநினை யேல்மட நெஞ்சமே
புறஞ்செய் கோலக் குரம்பையி லிட்டெனை
எறும்பி யூரரன் செய்த இயற்கையே. 7

இன்ப மும்பிறப் பும்இறப் பின்னொடு
துன்ப மும்முட னேவைத்த சோதியான்
அன்ப னேஅர னேயென் றாற்றுவார்க்
கின்ப னாகும் எறும்பியூ ரீசனே. 8

கண்நி றைந்த கனபவ ளத்திரள்
விண்நி றைந்த விரிசுடர்ச் சோதியான்
உள்நி றைந்துரு வாய்உயி ராயவன்
எண்நி றைந்த எறும்பியூ ரீசனே. 9

நிறங்கொள் மால்வரை ஊன்றி எடுத்தலும்
நறுங்கு ழல்மட வாள்நடுக் கெய்திட
மறங்கொள் வாளரக் கன்வலி வாட்டினான்
எறும்பி யூர்மலை எம்மிறை காண்மினே. 10

திருச்சிற்றம்பலம்

திருத்தாண்டகம் [6-ந் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பன்னியசெந் தமிழறியேன் கவியேன் மாட்டேன் எண்ணோடு பண்நிறைந்த கலைக ளாய, தன்னையுந்தன் திறத்தறியாப் பொறியி லேனைத் தன்திறமும் அறிவித்து நெறியுங் காட்டி, அன்னையையும் அத்தனையும் போல அன்பாய் அடைந்தேனைத் தொடர்ந்தென்னை யாளாக் கொண்ட, தென்னெறும்பி யூர்மலைமேல் மாணிக் கத்தைச்* செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன் நானே. 1

பளிங்கின்‡நிழ லுட்பதித்த சோதி யானைப் பசுபதியைப் பாசு பத வேடத் தானை, விளிந்தெழுந்த சலந்தரனை வீட்டி னானை வேதியனை விண்ணவனை மேவி வையம், அளந்தவனை நான்முகனை அல்லல் தீர்க்கும் அருமருந்தை ஆமா றறிந்தென் உள்ளந், தெளிந்தெறும்பி யூர்மலைமேல் மாணிக் கத்தைச் செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன் நானே. 2

*மாணிக்கம்–சுவாமியின் பெயர். ‡பளிங்கு–உயிர்களின் தன்மை.

கருவையென்றன் மனத்திருந்த கருத்தை ஞானக் கடுஞ் சுடரைப் படிந்துகிடந் தமரர் ஏத்தும் உருவையண்டத் தொரு முதலை யோத வேலி யுலகினிறை தொழிலிறுதி நடுவாய் நின்ற, மருவை வென்ற குழல்மடவாள் பாகம் வைத்த மயானத்து மாசிலா மணியை வாசத், திருவெறும்பி யூர்மலைமேல் மாணிக் கத்தைச் செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன் நானே. 3

பகழிபொழிந் தடலரக்கர் புரங்கள் மூன்றும் பாழ்படுத்த பரஞ்சுடரைப் பரிந்து தன்னைப், புகழுமன்பர்க் கின்பமருளும் அமு தைத் தேனைப் புண்ணியனைப் புவனியது முழுதும் போக, உமிழும் அம்பொற் குன்றத்தை முத்தின் தூணை உமையவள்தம் பெருமானை இமையோ ரேத்துந், திகழெறும்பி யூர்மலைமேல் மாணிக்கத்தைச் செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன் நானே. 4

பாரிடங்க ளுடன் பாடப் பயின்று நட்டம் பயில்வானை அயில் வாய சூல மேந்தி, நேரிடும்போர் மிகவல்ல நிமிலன் தன்னை நின்மலனை அம்மலர்கொண் டயனும் மாலும், பாரிடந்தும் மேலு யர்ந்துங் காணா வண்ணம் பரந்தானை நிமிர்ந்துமுனி கணங்க ளேத்துஞ், சீரெறும்பி யூர்மலைமேல் மாணிக் கத்தைச் செழுஞ் சுடரைச் சென்றடையப் பெற்றேன் நானே. 5

கார்முகிலாய்ப் பொழிவானைப் பொழிந்த முந்நீர் கரப்பா னைக் கடியநடை விடையொன் றேறி, ஊர்பலவுந் திரிவானை ஊர தாக ஒற்றியூ ருடையனைய் முற்றும் ஆண்டு, பேரெழுத்தொன்று* டையானைப் பிரம னோடு மாலவனும் இந்திரனும் மந்திரத்தா லேத்துஞ், சீரெறும்பி யூர்மலைமேல் மாணிக் கத்தைச் செழுஞ்சுட ரைச் சென்றடையப் பெற்றேன் நானே. 6

நீணிலவும் அந்தீயும் நீரும் மற்றை நெறியிலங்கு மிருகாலும்§ ஆகாசம்மும், வாணிலவு தாரகையும் மண்ணும் விண்ணும் மன்னு யிரும் என்னுயிருந் தானுஞ் செம்பொன், ஆணியென்றும் அஞ் சனமா மலையே** யென்றும் அம்பவளத் திரளே†ன்றும் அறிந் தோ ரேத்துஞ், சேணெறும்பி யூர்மலைமேல் மாணிக் கத்தைச் செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன் நானே. 7

---

*பேரெழுத்தொன்று—சிகாரம்; பிரணவமுமாம் §மிருகாலும் என்றும் பாடம். **அஞ்சனமாமலை—உமையவள் பாகம். †பவளத் திரள்—சிவன்பாகம்.

அறந்தெரியா ஊத்தைவாய் அறிவில் சிந்தை யாரம்பக் குண்டரோ டயர்த்து நாளும், மறந்துமரன் திருவடிகள் நினைய மாட்டா மதியிலியேன் வாழ்வெலாம் வாளா மண்மேற், பிறந்த நாள் நாளல்ல§ வாளா ஈசன் பேர்பிதற்றிச் சீரடிமைத் திறத்து ளன்பு, செறிந்தெறும்பி யூர்மலைமேல் மாணிக் கத்தைச் செழுஞ் சுடரைச் சென்றடையப் பெற்றேன் நானே. 8

அறிவிலங்கு மனத்தானை அறிவார்க் கன்றி அறியாதார் தந்திறத்தொன் றறியா தானைப், பொறியிலங்கு வாளரவம் புனைந்து பூண்ட புண்ணியனைப் பொருதிரைவாய் நஞ்ச முண்டு, குறியிலங்கு மிடற்றானை மடல்தேன் கொன்றைச் சடையானை மடைதோறுங் கமல மென்பூச், செறியெறும்பி யூர்மலைமேல் மாணிக் கத்தைச் செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன் நானே. 9

அருந்தவத்தின் பெருவலியா லறிவ தன்றி அடலரக்கன் தடவரையை யெடுத்தான் திண்தோள், முரிந்துநெரிந் தழிந்துபா தாள முற்று முன்கைநரம் பினையெடுத்துக் கீதம் பாட, இருந் தவனை யேழுலகு மாக்கி னானை யெம்மானைக் கைம்மாவி னுரிவை போர்த்த, திருந்தெறும்பி யூர்மலைமேல் மாணிக் கத்தைச் செழுஞ் சுடரைச் சென்றடையப் பெற்றேன் நானே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி–மாணிக்கவண்ணர், எறும்பீசுவரர்;
தேவி–நறுங்குழல் நாயகி.

---

## 7. திருக்காட்டுப்பள்ளி*

### திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மாட்டுப் பள்ளி** மகிழ்ந்துறை வீர்க்கெலாம்
கேட்டுப் பள்ளிகண் டீர்கெடு வீரிது
ஒட்டுப் பள்ளி† விட் டோ டுயிருமுனம்
காட்டுப் பள்ளியு ளான்கழல் சேர்மினே. 1

---

§வாளா பிறந்த...நாளல்ல – 'பேசாதநாளெல்லாம் பிறவாத நாளே.' *மேலைத் திருக்காட்டுப்பள்ளி என வழங்கப்பெறும். **மாட்டுப் பள்ளி–செல்வமுடைய இருக்கைகள். †ஒட்டுப்பள்ளி–உடல்.

மாட்டைத் தேடி மகிழ்ந்துநீர் நும்முளே
நாட்டுப் பொய்யெலாம் பேசிடும் நாணிலீர்
கூட்டை விட்டுயிர் போவதன் முன்னமே
காட்டுப் பள்ளியு ளான்கழல் சேர்மினே. 2

தேனை வென்றசொல் லாளொடு செல்வமும்
ஊனை விட்டுயிர் போவதன் முன்னமே
கான வேடர் கருதுங்காட் டுப்பள்ளி
ஞான நாயக னைச்சென்று நண்ணுமே. 3

அருத்த மும்*மனை யாளொடு மக்களும்
பொருத்த மில்லைபொல் லாதது போக்கிடும்
கருத்தன் கண்ணுதல் அண்ணல்காட் டுப்பள்ளித்
திருத்தன் சேவடி யைச்சென்று சேர்மினே. 4

சுற்ற முந்துணை யும்மனை வாழ்க்கையும்
அற்ற போதணை யாரவ ரென்றென்றே
கற்ற வர்கள் கருதுங்காட் டுப்பள்ளிப்
பெற்றம் ஏறும் பிரானடி சேர்மினே. 5

அடும்புங் கொன்றையும் வன்னியும் மத்தமும்
துடும்பல் ** செய்சடைத் தூமணிச் சோதியான்
கடம்பன் தாதை கருதுங்காட் டுப்பள்ளி
உடம்பி னார்க்கோர் உறுதுணை யாகுமே. 6

மெய்யின் மாசுடை யாருடல் மூடுவார்
பொய்யை மெய்யென்று புக்குடன் வீழன்மின்
கையின் மானுடை யான்காட்டுப் பள்ளிஎம்
ஐயன் தன்னடி யேயடைந் துய்ம்மினே. 7

வேலை வென்றகண் ணாரை விரும்பிநீர்
சீலங் கெட்டுத் திகையன்மின் பேதைகாள்
காலை யேதொழுங் காட்டுப்பள் ளியுறை
நீல கண்டனை நித்தல் நினைமினே. 8

இன்று ளார்நாளை யில்லை யெனும்பொருள்
ஒன்றும் ஓரா துழிதரும் ஊமர்காள்

* அருத்தம்–செல்வம், ** துடும்பல்–இருத்தல்.

அன்று வானவர்க் காக விடமுண்ட
கண்ட னூர்காட்டுப் பள்ளிகண் டுய்ம்மினே. 9

எண்ணி லாஅரக் கன்மலை யேந்திட
எண்ணி நீண்முடி பத்தும் இறுத்தவன்
கண்ணு ளார்கரு துங்காட்டுப் பள்ளியை
நண்ணு வாரவர் தம்வினை நாசமே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—தீயாடியப்பர்; தேவி—வார்கொண்ட முலையாள்,
சௌந்தரநாயகி.

---

## 8. திருவாலம்பொழில்

திருத்தாண்டகம் † [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கருவாகிக் கண்ணுதலாய் நின்றான் தன்னைக் கமலத்தோன் தலையரிந்த காபா லியை, உருவார்ந்த மலைமகளோர் பாகத் தானை உணர்வெலா மானானை ஓசை யாகி, வருவானை வலஞ் சுழியெம் பெருமான் தன்னை மறைக்காடும் ஆவடுதண் டுறையும் மேய, திருவானைத் தென் பரம்பரைக் குடி**யின் மேய திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே. 1

உரித்தானைக் களிறதன்தோல் போர்வை யாக வுடையானை உடைபுலியி னதளே யாகத், தரித்தானைச் சடையதன்மேற் கங்கை யங்கைத் தழலுருவை விடமமுதா வுண்டி தெல்லாம், பரித்தானைப் பவளமால் வரையன் னானைப் பாம்பணையான் தனக்கன்றங் காழி நல்கிச், சிரித்தானைத் தென்பரம்பைக் குடியின் மேய திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே. 2

உருமூன்றாய்† உணர்வின்கண் ஒன்றா னானை ஓங்கார மெய்ப் பொருளை உடம்பி னுள்ளால், கருவீன்ற வெங்களவை யறிவான் தன்னைக் காலனைத்தன் கழலடியாற் காய்ந்து மாணிக், கருளீன்ற ஆரமுதை அமரர் கோனை யள்ளூறி யெம்பெருமான் என்பார்க்

---

* இத்திருப்பதிகத்தில் 10-ம் செய்யுள் மறைந்துபோயிற்று.
**பரம்பைக்குடி—ஊரின் பெயர். ஆலம்பொழில்—கோயிலின் பெயர்.
†உருமூன்று—சிவன், சதாசிவன், மகேசன்.

கென்றும், திருவீன்ற தென்பரம்பைக் குடியின் மேய திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே. 3

பார்முழுதாய் விசும்பாகிப் பாதா ளமாம் பரம்பரனைச் சுரும்பமருங் குழலாள் பாகத், தாரமுதாம் அணிதில்லைக் கூத்தன் தன்னை வாட்போக்கி யம்மானை எம்மா னென்று, வாரம்*தாம் அடியார்க்கு வார மாகி வஞ்சனைசெய் வார்க்கென்றும் வஞ்ச னாகுஞ், சீரரைசத் தென்பரம்பைக் குடியின் மேய திருவாலம் பொழி லானைச் சிந்தி நெஞ்சே. 4

வரையார்ந்த மடமங்கை பங்கன் தன்னை வானவர்க்கும் வானவனை மணியை முத்தை, அரையார்ந்த புலித்தோல்மேல் அரவமார்த்த அம்மானைத் தம்மானை அடியார்க் கென்றும், புரை யார்ந்த கோவணத்தெம் புனிதன் தன்னைப் பூந்துருத்தி மேயா னைப் புகலூரானைத், திரையார்ந்த தென்பரம்பைக் குடியின் மேய திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே. 5

விரிந்தானைக் குவிந்தானை வேத வித்தை வியன்பிறப்போ டிறப்பாகி நின்றான் தன்னை, அரிந்தானை சலந்தரன்றன் உடலம் வேறா ஆழ்கடல்நஞ் சுண்டிமையோ ரெல்லா முய்யப், பரிந் தானைப் பல்லசுரர் புரங்கள் மூன்றும் பாழ்படுப்பான் சிலைமலை நாண் ஏற்றி யம்பு, தெரிந்தானைத் தென்பரம்பைக் குடியின் மேய திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே. 6

பொல்லாத என்னழுக்கிற் புகுவா னென்னைப் புறம்புறமே சோதித்த புனிதன் தன்னை, எல்லாருந் தன்னையே யிகழ அந்நாள் இடுபலியென் றகந்திரியும் எம்பிரானைச், சொல்லாதா ரவர்தம் மைச், சொல்லா தானைத் தொடர்ந்துதன் பொன்னடியே பேணு வாரைச், செல்லாத நெறிசெலுத்த வல்லான் தன்னைத் திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே. 7

ஐந்தலைய நாகவணைக் கிடந்த மாலோ டயன்தேடி நாடரிய அம்மான் தன்னைப், பந்தணவு மெல்விரலாள் பாகத் தானைப் பராய்த்துறையும் வெண்காடும் பயின்றான் தன்னைப், பொந்து டைய வெண்டலையிற் பலிகொள் வானைப் பூவணமும் புறம்பய மும் பொருந்தி னானைச், சிந்தியவெந் தீவினைகள் தீர்ப்பான் தன் னைத்**திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே. 8

---

*வாரம்-அன்பு. **வெந்தீவினைகள் தீர நின்ற என்றும் பாடம்,

கையிலுண் டுழல்வாருஞ் சாக்கி யருங்கல் லாத வன்மூடர்க் கல்லா தானைப், பொய்யிலா தவர்க்கென்றும் பொய்யி லானைப் பூண் நாகம் நாணாகப் பொருப்பு வில்லாக், கையினார் அம்பெரி கால் ஈர்க்குக் கோலாக் கடுந்தவத்தோர் நெடும்புரங்கள் கனல் வாய் வீழ்த்த, செய்யினார் தென்பரம்பைக் குடியின் மேய திரு வாலம் பொழிலானைச் சித்தி நெஞ்சே. 9, 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—ஆன்மநாதேசுரர்; தேவி—ஞானம்பிகை.

---

## 9. திருப்பூந்துருத்தி

### திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கொடிகொள் செல்வ விழாக்குணா லஅருக்
கடிகொள் பூம்பொழிற் கச்சிஏ கம்பனார்
பொடிகள் பூசிய பூந்துருத் திந்நகர்
அடிகள் சேவடிக் கீழ்நா மிருப்பதே. 1

ஆர்த்த தோலுடை கட்டியோர் வேடனாய்ப்
பார்த்த னோடு படைதொடு மாகிலும்
பூத்த நீள்பொழிற் பூந்துருத் திந்நகர்த்
தீர்த்தன் சேவடிக் கீழ்நா மிருப்பதே. 2

மாதி னைமதித் தானொரு பாகமாக்
காத லாற்கரந் தான்சடைக் கங்கையைப்
பூத நாயகன் பூந்துருத் திந்நகர்க்
காதி சேவடிக் கீழ்நா மிருப்பதே. 3

மூவ னாய்முத லாய்இவ் வுலகெலாம்
காவ னாய்க்கடுங் காலனைக் காய்ந்தவன்
பூவின் நாயகன் பூந்துருத் திந்நகர்த்
தேவன் சேவடிக் கீழ்நா மிருப்பதே. 4

செம்பொ னேயொக்கும் மேனியன் தேசத்தில்
உம்ப ரார் அவ ரோடங் கிருக்கிலும்
பொன்பொ னார் செல்வப் பூந்துருத் திந்நகர்
நம்பன் சேவடிக் கீழ்நா மிருப்பதே. 5

வல்லம் பேசி வலிசெய்மூன் றூரினைக்
கொல்லம் பேசிக் கொடுஞ்சரம் நூறினான்
புல்லம் பேசியும் பூந்துருத் திந்நகர்ச்
செல்வன் சேவடிக் கீழ்நா மிருப்பதே. 6

ஒருத்த னாய்உல கேழுந் தொழநின்று
பருத்த பாம்பொடு பால்மதி கங்கையும்
பொருத்த னாகிலும் பூந்துருத் திந்நகர்ச்
திருத்தன் சேவடிக் கீழ்நா மிருப்பதே. 7

அதிரர் தேவர் இயக்கர் விச்சாதரர்
கருத நின்றவர் காண்பரி தாயினான்
பொருத நீர்வரு பூந்துருத் திந்நகர்ச்
சதுரன் சேவடிக் கீழ்நா மிருப்பதே. 8

சேதக ருமனத் தார்புறங் கூறினும்
கோதக ருக்கண்ணி. னோன்பிகள் கூறினும்
பொதுவின் நாயகன் பூந்துருத் திந்நகர்க்
கதிபன் சேவடிக் கீழ்நா மிருப்பதே. 9

துடித்த தோள்வலி வாளரக் கன்தனைப்
பிடித்த கைஞ்ஞெரிந் துற்றன கண்ணெலாம்
பொடிக்க வூன்றிய பூந்துருத் திந்நகர்ப்
படிக்கோள் சேவடிக் கீழ்நா மிருப்பதே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருவிருத்தம் – [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மாலினை மாலுற நின்றான் மலைமகள் தன்னுடைய
பாலனைப் பால்மதி சூடியைப் பண்புண ரார்மதில்மேல்
போலனைப் போர்விடை யேறியைப் பூந்துருத் திம்மகிழும்
ஆலனை ஆதிபு ராணனை நானடி போற்றுவதே. 1

மறியுடை யான்மழு வாளினன் மாமலை மங்கையொர்பால்
குறியுடை யான்குண மொன்றறிந் தாரில்லை கூறிலவன்
பொறியுடை வாளர வத்தவன் பூந்துருத் தியுறையும்
அறிவுடை ஆதி புராணனை நானடி போற்றுவதே. 2

மறுத்தவர் மும்மதில் மாயவொர் வெஞ்சிலை கோத்தொரம்பால்
அறுத்தனை ஆலதன் கீழனை ஆல்விட முண்டதனைப்
பொறுத்தனைப் பூதப் படையனைப் பூந்துருத் தியுறையும்
நிறத்தனை நீல மிடற்றனை யானடி போற்றுவதே. 3

உருவினை ஊழி முதல்வனை ஓதி நிறைந்துநின்ற
திருவினைத் தேசம் படைத்தனைச் சென்றடைந் தேனுடைய
பொருவினை யெல்லாந் துரந்தனைப் பூந்துருத் தியுறையும்
கருவினைக் கண்மூன் றுடையனை யானடி போற்றுவதே, 4

தக்கன்றன் வேள்வி தகர்த்தவன் சார மதுவன்றுகோள்*
மிக்கன மும்மதில் வீயவொர் வெஞ்சிலை கோத்தொரம்பால்
புக்கனன் பொன்திகழ்ந் தன்னதொர் பூந்துருத் தியுறையும்
நக்கனை நங்கள் பிரான்றனை நானடி போற்றுவதே. 5

அருகடை மாலையுந் தானுடை யானழ காலமைந்த
உருவுடை மங்கையுந் தன்னொரு பாலுல காயுநின்றான்
பொருபடை வேலினன் வில்லினன் பூந்துருத் தியுறையும்
திருவுடைத் தேச மதியனை யானடி போற்றுவதே. 6

மன்றியும் நின்ற மதிலரை மாய வகைகெடுக்கக்
கன்றியும் நின்று கடுஞ்சிலை வாங்கிக் கனலம்பினால்
பொன்றியும் போகப் புரட்டினன் பூந்துருத் தியுறையும்
அன்றியுஞ் செய்த பிரான்றனை யானடி போற்றுவதே. 7

மின்னிறம் மிக்க இடையுமை நங்கையொர் பால்மகிழ்ந்தான்
என்னிற மென்றம ரர்பெரி யாரின்னந் தாமறியார்
பொன்னிற மிக்க சடையவன் பூந்துருத் தியுறையும்
என்னிற வெந்தை பிரான்றனை யானடி போற்றுவதே. 8

அந்தியை நல்ல மதியினை யார்க்கும் அறிவரிய
செந்தியைவாட்டுஞ்செம் பொன்னினைச் சென்றடைந்தேனுடைய
புந்தியைப் புக்க அறிவினைப் பூந்துருத் தியுறையும்
நந்தியை நங்கள் பிரான்றனை நானடி போற்றுவதே. 9

பைக்கையும் பாந்தி விழிக்கையும் பாம்பு சடையிடையே
வைக்கையும் வானிழி கங்கையும் மங்கை நடுக்குறவே

* கேள் என்றும் பாடம்.

மொய்க்கை அரக்கனை யூன்றினன் பூந்துருத் தியுறையும்
மிக்கநல் வேத விகிர்தனை நானடி போற்றுவதே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நில்லாத நீர்சடைமேல் நிற்பித் தானை நினையாவென் நெஞ்சை நினைவித் தானைக், கல்லா தனவெல்லாங் கற்பித் தானைக் காணா தனவெல்லாங் காட்டி னானைச், சொல்லா தனவெல்லாஞ் சொல்வி யென்னை தொடர்ந்திங் கடியேனை யாளாக் கொண்டு, பொல்லா வென் நோய்தீர்த்த புனிதன் தன்னைப் புண்ணியனைப் பூந்துருத் திக் கண்டேன் நானே. 1

குற்றாலங் கோகரணம் மேவி னானைக் கொடுங்கைக் கடுங்கூற் றைப் பாய்ந்தான் தன்னை, உற்றால நஞ்சுண் டொடுக்கி னானை உணராவென் நெஞ்சை உணர்வித் தானைப், பற்றாலின் கீழங் கிருந்தான் தன்னைப் பண்ணார்ந்த வீணை பயின்றான் தன்னைப், புற்றா டரவார்த்த புனிதன் தன்னைப் புண்ணியனைப் பூந்துருத்திக் கண்டேன் நானே. 2

எனக்கென்றும் இனியானை யெம்மான் தன்னை யெழிலாரும் ஏகம்பம் மேயான் தன்னை, மனக்கென்றும் வருவானை வஞ்சர் நெஞ்சில் நில்லானை நின்றியூர் மேயான் தன்னைத், தனக்கென்றும் அடியேனை யாளாக் கொண்ட சங்கரனைச் சங்கவார் குழையான் தன்னைப், புனக்கொன்றைத் தாரணிந்த புனிதன் தன்னைப் பொய்யிலி†யைப் பூந்துருத்திக் கண்டேன் நானே. 3

வெறியார் மலர்க்கொன்றை சூடி னானை வெள்ளானை வந் திறைஞ்சும் வெண்காட் டானை, அறியா தடியே னகப்பட் டேனை அல்லற் கடல்நின்று மேற வாங்கி, நெறிதா னிதுவென்று காட்டி னானை நிச்சல் நலிபிணிகள் தீர்ப்பான் தன்னைப், பொறியா டரவார்த்த புனிதன் தன்னைப் பொய்யிலியைப் பூந்துருத்திக் கண்டேன் நானே. 4

---

† பொய்யிலி—சுவாமியின் பெயர்.

மிக்கானை வெண்ணீறு சண்ணித் தானை விண்டார் புரமூன்றும் வேவ நோக்கி, நக்கானை நான்மறைகள் பாடினானை நல்லார்கள் பேணிப் பரவ நின்ற, தக்கானைத் தண்தா மரைமே லண்ணல் தலைகொண்டு மாத்திரைக்கண் உலக மெல்லாம், புக்கானைப் புண்ணியனைப் புனிதன் தன்னைப் பொய்யிலியைப் பூந்துருத்திக் கண்டேன் நானே. 5

ஆர்த்தானை வாசுகியை அரைக்கோர் கச்சா அசைத்தானை அழகாய பொன்னார் மேனிப்,* பூத்தானத் தான்முடியைப் பொருந்தா வண்ணம் புணர்த்தானைப் பூங்கணையா னுடலம் வேவப், பார்த்தானைப் பரிந்தானைப் பனிநீர்க் கங்கை படர்சடைமேற் பயின்றானைப் பதைப்ப யானை, போர்த்தானைப் புண்ணியனைப் புனிதன் தன்னைப் பொய்யிலியைப் பூந்துருத்திக் கண்டேன் நானே. 6

எரித்தானை எண்ணார் புரங்கள் மூன்றும் இமைப்பளவிற் பொடியாக எழிலார் கையால், உரித்தானை மதகரியை யுற்றுப் பற்றி யுமையதனைக் கண்டஞ்சி நடுங்கக் கண்டு, சிரித்தானைச் சீரார்ந்த பூதஞ் சூழத் திருச்சடைமேல் திங்களும் பாம்பும் நீரும், புரித்தானைப் புண்ணியனைப் புனிதன் தன்னைப் பொய்யிலியைப் பூந்துருத்திக் கண்டேன் நானே. 7

வைத்தானை வானோ ருலக மெல்லாம் வந்திறைஞ்சி மலர்கொண்டு நின்று போற்றும், வித்தானை வேண்டிற்றொன் றீவான் தன்னை விண்ணவர்தம் பெருமானை வினைகள் போக, உய்த்தானை ஒலிகங்கை சடைமேற் றங்கி யொளித்தானை ஒருபாகத் துமையோ டாங்கே, பொய்த்தானைப் புண்ணியனைப் புனிதன் தன்னைப் பொய்யிலியைப் பூந்துருத்திக் கண்டேன் நானே. 8

ஆண்டானை வானோ ருலக மெல்லாம் அந்நா ளறியாத. தக்கன் வேள்வி, மீண்டானை விண்ணவர்க ளோடுங் கூடி விரைமலர்மேல் நான்முகனும் மாலுந் தேர,** நீண்டானை நெருப்புருவ மானான் தன்னை நிலையிலார் மும்மதிலும் வேவ வில்லைப், பூண்டானைப் புண்ணியனைப் புனிதன் தன்னைப் பொய்யிலியைப் பூந்துருத்திக் கண்டேன் நானே. 9

---

*பொன்னேர்மேனி என்றும் பாடம். **தேட என்றும் பாடம்.

மறுத்தானை மலைகோத்தங் கெடுத்தான் தன்னை மணிமுடியோ டிருபதுதோள் நெரியக் காலால், இறுத்தானை யெழுநரம்பி னிசை கேட் டானை எண்டிசைக்குங் கண்ணானான் சிரமே லொன்றை, அறுத்தானை அமரர்களுக் கமுதீந்தானை யாவர்க்குந் தாங்கொணா நஞ்சமுண்டு, பொறுத்தானைப் புண்ணியனைப் புனிதன் தன்னைப் பொய்யிலியைப் பூந்துருத்திக் கண்டேன் நானே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—புஷ்பவனநாதர்: தேவி—அழகாலமர்ந்த நாயகி.

---

## 10. திருக்கண்டியூர்

### திருவிருத்தம் [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வானவர் தானவர் வைகல் மலர்கொணர்ந் திட்டிறைஞ்சித்
தானவர் மால்பிர மன்னறி யாத தகைமையினான்
ஆனவ னாதி புராணனன் றேடிய பன்றியெய்த
கானவ னைக்கண்டி யூரண்ட வாணர் தொழுகின்றதே. 1

வான மதியமும் வாளர வும்புன லோடுசடைத்
தான மிதுவென வைத்துழல் வான்தழல் போலுருவன்
கான மறியொன்று கையுடை யான்கண்டி யூரிருந்த
ஊனமில் வேத முடையனை நாமடி உள்குவதே. 2

பண்டங் கறுத்ததொர் கையுடை யான்படைத் தான்தலையை
உண்டங் கறுத்ததும் ஊரோடு நாடவை தானறியும்*
கண்டங் கறுத்த மிடறுடை யான்கண்டி யூரிருந்த
தொண்டர் பிரானைக்கண் டீரண்ட வாணர் தொழுகின்றதே. 3

முடியின்முற் றாதது ஒன் றில்லையெல் லாமுடன் தானுடையான்
கொடியுமுற் றவ்விடை யேறியொர் கூற்றொரு பாலுடையான்
கடியமுற் றவ்வினை நோய்களை வான்கண்டி யூரிருந்தான்
அடியுமுற் றார்தொண்டர் இல்லைகண் டீரண்ட வானவரே. 4

---

* ஊரோடு நாடவை தான் அறியும் — உலகறிந்த செய்தி. தான் — அசை.

**ப**ற்றியொ ரானை யுரித்த பிரான்பவ ளத்திரள்போல்
முற்றும் அணிந்ததொர் நீறுடை யான்முன்ன மேகொடுத்த
கற்றங் குடையவன் தானறி யான்கண்டி யூரிருந்த
குற்றமில் வேத முடையானை யாமண்டர் கூறுவதே. 5

**போ**ர்ப்பனை யானை யுரித்த பிரான்பொறி வாயரவம்
சேர்ப்பது வானத் திரைகடல் சூழுல கம்மிதனைக்
காப்பது காரண மாகக்கொண் டான்கண்டி யூரிருந்த
கூர்ப்புடை ஒள்வாள் மழுவனை யாமண்டர் கூறுவதே. 6

**அ**ட்டது காலனை ஆய்ந்தது வேதமா றங்கமன்று
சுட்டது காமனைக் கண்ணத னாலே தொடர்ந்தெரியக்
கட்டவை மூன்றும்* எரித்தபி ரான்கண்டி யூரிருந்த
குட்டமுன் வேதப் படையனை யாமண்டர் கூறுவதே. 7

**அ**ட்டும் ஒலிநீர் அணிமதி யும்மல ரானவெல்லாம்
இட்டுப் பொதியுஞ் சடைமுடி யான்இண்டை மாலை அங்கைக்
கட்டும் அரவது தானுடை யான்கண்டி யூரிருந்த
கொட்டும் பறையுடைக் கூத்தனை யாமண்டர் கூறுவதே. 8

**மா**ய்ந்தன தீவினை மங்கின நோய்கள் மறுகிவிழத்
தேய்ந்தன பாவஞ் செறுக்ககில் லாநம்மைச் செற்றநங்கைக்
காய்ந்த பிரான்கண்டி யூரெம்பி ரான்அங்கம் ஆறினையும்
ஆய்ந்த பிரானல்ல னோஅடி யேனையாட் கொண்டவனே. 9

**ம**ண்டி மலையை யெடுத்துமத் தாக்கியவ் வாசுகியைத்
தண்டி அமரர் கடைந்த கடல்விடங் கண்டருளி
உண்ட பிரான்நஞ் சொளித்தபி ரான்அஞ்சி யோடிநண்ணக்
கண்ட பிரானல்ல னோகண்டி யூரண்ட வானவனே. 10

திருச்சிற்றம்பலம்

*சுவாமி—வீரட்டானேசுவரர், பிரமசிரக் கண்டீசுவரர்;*
*தேவி—மங்களநாயகி.*

* கட்டு அவை மூன்றும்—கட்டப்பட்ட மூன்று மதில் சூழ்ந்த நகரங்கள்; திரிபுரம்.

## 11. திருச்சோற்றுத்துறை*

### திருநேரிசை [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பொய்விரா மேனி தன்னைப் பொருளெனக் காலம் போக்கி
மெய்விரா மனத்த னல்லேன் வேதியா வேத நாவா
ஐவரால் அலைக்கப் பட்ட ஆக்கைகொண் டயர்த்துப் போனேன்
செய்வரால் உகளுஞ் செம்மைத் திருச்சோற்றுத் துறைய னாரே. 1

கட்டராய் நின்று நீங்கள் காலத்தைக் கழிக்க வேண்டா
எட்டவாங் கைகள் வீசி எல்லிநின் றாடு வானை
அட்டமா மலர்கள் கொண்டே ஆனஞ்சும் ஆட்ட ஆடிச்
சிட்டராய் அருள்கள் செய்வார் திருச்சோற்றுத் துறைய னாரே. 2

கல்லினாற் புரமூன் றெய்த கடவுளைக் காத லாலே
எல்லியும் பகலு முள்ளே யேகாந்த மாக ஏத்தும்
பல்லில்வெண் டலைகை யேந்திப் பல்லிலந்† திரியுஞ் செல்வர்
சொல்லுநன் பொருளு மாவார் திருச்சோற்றுத் துறைய னாரே. 3

கறையராய்க் கண்ட நெற்றிக் கண்ணராய்ப் பெண்ணோர் பாகம்
இறையராய் இனிய ராகித் தனியராய்ப் பனிவெண் திங்கட்
பிறையராய்ச் செய்த வெல்லாம் பீடராய்க் கேடில் சோற்றுத்
துறையராய்ப் புகுந்தென் னுள்ளச் சோர்வுகண் டருளி னாரே. 4

பொந்தையைப் பொருளாவெண்ணிப் பொருக்கெனக் காலம்
போனேன்
எந்தையே ஏக மூர்த்தி யென்றுநின் றேத்த மாட்டேன்
பந்தமாய் வீடு மாகிப் பரம்பர மாகி நின்று
சிந்தையுள் தேறல் போலுந் திருச்சோற்றுத் துறைய னாரே. 5

பேர்த்தினிப் பிறவா வண்ணம் பிதற்றுமின் பேதை பங்கன்
பார்த்தனுக் கருள்கள் செய்த பாசுப தன் திறமே
ஆர்த்துவந் திழிவ தொத்த அலைபுனற் கங்கை யேற்றுத்
தீர்த்தமாய்ப் போத விட்டார் திருச்சோற்றுத் துறைய னாரே. 6

கொந்தார்பூங் குழலி னாரைக் கூறியே காலம் போன
எந்தையெம் பிரானாய் நின்ற இறைவனை ஏத்தா தந்தோ
முந்தரா அல்கு லாளை யுடன்வைத்த ஆதி மூர்த்தி
செந்தாது புடைகள் சூழ்ந்த திருச்சோற்றுத் துறைய னாரே. 7

---

* 'திருச்சற்றுறை' என்று வழங்குவர். †பல் இலம்–பல வீடுகள்.

அங்கதி ரோன**வனை அண்ணலா§க் கருத வேண்டா
வெங்கதி ரோன்வ ழியே போவதற் கமைந்து கொள்மின்
அங்கதி ரோன வனை யுடன்வைத்த ஆதி மூர்த்தி
செங்கதி ரோன்வ ணங்குந் திருச்சோற்றுத் துறைய னாரே. 8

ஓதியே கழிக்கின் றீர்கள் உலகத்தீர் ஒருவன் தன்னை
நீதியால் நினைய மாட்டீர் நின்மலன் என்று சொல்லீர்
சாதியா நான்மு கனுஞ் சக்கரத் தானுங் காணாச்
சோதியாய்ச் சுடர தானார் திருச்சோற்றுத் துறைய னாரே. 9

மற்றுநீர் மனம்வை யாதே மறுமையைக் கழிக்க வேண்டில்
பெற்றதோர் உபாயந் தன்னாற் பிரானையே பிதற்று மின்‡கள்
கற்றுவந் தரக்க னோடிக் கயிலாய மலையெ டுக்கச்
செற்றுகந் தருளிச் செய்தார் திருச்சோற்றுத் துறைய னாரே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருவிருத்தம் [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

காலை யெழுந்து கடிமலர் தூயன தாங்கொணர்ந்து
மேலை யமரர் விரும்பு மிடம்விரை யான்மலிந்த
சோலை மணங்கமழ் சோற்றுத் துறையுறை வார்சடைமேல்
மாலை மதியமன் றோஎம்பி ரானுக் கழகியதே. 1

வண்டணை கொன்றையும் வன்னியும் மத்தமும் வாளரவும்
கொண்டணைந் தேறு முடியுடை யான்குரை சேர்கழற்கே
தொண்டணைந் தாடிய சோற்றுத் துறையுறை வார்சடைமேல்
வெண்டலை மாலையன் றோஎம்பி ரானுக் கழகியதே. 2

அளக்கு நெறியினன் அன்பர்கள் தம்மனத் தாய்ந்துகொள்வான்
விளக்கும் அடியவர் மேல்வினை தீர்த்திடும் விண்ணவர்கோன்
துளக்குங் குழையணி சோற்றுத் துறையுறை வார்சடைமேல்
திளைக்கு மதியமன் றோஎம்பி ரானுக் கழகியதே. 3

ஆய்ந்தகை வாளர வத்தொடு மால்விடை ஏறியெங்கும்
பேர்ந்தகை மானட மாடுவர் பின்னு சடையிடையே

---

** அங்கதிரோன்-சூரியன். §அண்ணல்-தெய்வம். ‡பிதற்றல்-இடைவிடாது பலவாறும் சொல்லுதல்.

சேர்ந்தகைம் மாமலர் துன்னிய சோற்றுத் துறையுறைவார்
ஏந்துகைச் சூல மழுஎம்பி ரானுக் கழகியதே. 4

கூற்றைக் கடந்ததுங் கோளரா வார்த்ததுங் கோளுழுவை
நீற்றில் துதைந்து திரியும் பரிசது நாமறியோம்
ஆற்றிற் கிடந்தங் கலைப்ப அலைப்புண் டசைந்ததொக்கும்
சோற்றுத் துறையுறை வார்சடை மேலதொர் தூமதியே. 5

வல்லாடி நின்று வலிபேசு வார்கோளர்** வல்லசுரர்
கொல்லாடி நின்று குமைக்கிலும் வானவர் வந்திறைஞ்சச்
சொல்லாடி நின்று பயில்கின்ற சோற்றுத் துறையுறைவார்
வில்லாடி நின்ற நிலைஎம் பிரானுக் கழகியதே. 6

ஆய முடையது நாமறி யோம்அர ணத்தவரைக்
காயக் கணைசிலை வாங்கியும் எய்துந் துயக்கறுத்தான்
தூயவெண் ணீற்றினன் சோற்றுத் துறையுறை வார்சடைமேல்
பாயும்வெண் ணீர்த்திரைக் கங்கை*எம் மானுக் கழகியதே. 7

அண்டர் அமரர் கடைந்தெழுந் தோடிய நஞ்சதனை
உண்டும் அதனை ஒடுக்கவல் லான்மிக்க உம்பர்கள்கோன்
தொண்டு பயில்கின்ற சோற்றுத் துறையுறை வார்சடைமேல்
இண்டை மதியம§ன் றேஎம்பி ரானுக் கழகியதே. 8

கடல்மணி வண்ணன் கருதிய நான்முகன் தானறியா‡
விடமணி கண்ட முடையவன் தானென்னை ஆளுடையான்
சுடரணிந் தாடிய சோற்றுத் துறையுறை வார்சடைமேல்
படமணி நாகமன் றேம்எம்பி ரானுக் கழகியதே. 9

இலங்கைக் கிறைவன் இருபது தோளும் முடிநெரியக்
கலங்க விரலினால் ஊன்றி யவனைக் கருத்தழித்த
துலங்கல் மழுவினன் சோற்றுத் துறையுறை வார்சடைமேல்
இலங்கு மதியமன் றேஎம்பி ரானுக் கழகியதே. 10

திருச்சிற்றம்பலம்

---

** கோளர்-தீயர்; தீமையாற் கொள்ளப்பட்டார். *ணீர்த்திரட் கங்கை என்றும் பாடம். §இண்டை மதியம் – இண்டைமாலை போன்ற பிறை. ‡ தானறியான் என்றும் பாடம்.

திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கொல்லை யேற்றினர் கோளர வத்தினர்
தில்லைச் சிற்றம் பலத்துறை செல்வனார்
தொல்லை யூழியர் சோற்றுத் துறையர்க்கே
வல்லை யாய்ப்பணி செய்மட நெஞ்சமே. 1

முத்தி யாக வொருதவஞ் செய்திலை
அத்தி யால்* அடி யார்க்கொன் றளித்திலை
தொத்து நின்றலர் சோற்றுத் துறையர்க்கே
பத்தி யாய்ப்பணி செய்மட நெஞ்சமே. 2

ஒட்டி நின்ற உடலுறு நோய்வினை
கட்டி நின்ற கழிந்தவை போயறத்
தொட்டு நின்றும்அச் சோற்றுத் துறையர்க்கே
பட்டி யாய்**பணி செய்மட நெஞ்சமே. 3

ஆதி யான் அண்ட வாணர்க் கருள்நல்கு
நீதி யானென்றும் நின்மல னேயென்றும்
சோதி யானென்றுஞ் சோற்றுத் துறையர்க்கே
வாதி யாப்பணி செய்மட நெஞ்சமே. 4

ஆட்டி னய்அடி யேன்வினை யாயின
ஓட்டி னய்ஒரு காதில் இலங்குவெண்
தோட்டி னய்என்று சோற்றுத் துறையர்க்கே
நீட்டி நீபணி செய்மட நெஞ்சமே. 5

பொங்கி நின்றெழுந் தகடல் நஞ்சினைப்
பங்கி உண்டதோர் தெய்வமுண் டோசொலாய்
தொங்கி நீயென்றுஞ் சோற்றுத் துறையர்க்குத்
தங்கி நீபணி செய்மட நெஞ்சமே. 6

ஆணி போலநீ ஆற்ற வலியைகாண்
ஏணி போல்இழிந் தேறியும் ஏங்கியும்
தோணி யாகிய சோற்றுத் துறையர்க்கே
பூணி யாய்ப்பணி செய்மட நெஞ்சமே. 7

* அத்தியால் – அருத்தியால் – விருப்பத்துடன். **பட்டியாய் – மீளா அடிமையாகி.

பெற்றம் ஏறிலென் பேய்படை யாகிலென்
புற்றி லாடர வேயது பூணிலென்
சுற்றி நீயென்றுஞ் சோற்றுத் துறையர்க்கே
பற்றி நீபணி செய்மட நெஞ்சமே. 8

அல்லி யான்அர வைந்தலை நாகணைப்
பள்ளி யான்அறி யாத பரிசெலாம்
சொல்லி நீயென்றுஞ் சோற்றுத் துறையர்க்கே
புல்லி நீபணி செய்மட நெஞ்சமே. 9

மிண்ட ரோடு விரவியும் வீறிலாக்
குண்டர் தம்மைக் கழிந்துய்யப் போந்துநீ
தொண்டு செய்தென்றுஞ் சோற்றுத் துறையர்க்கே
உண்டு நீபணி செய்மட நெஞ்சமே. 10

வாழ்ந்த வன்வலி வாளரக் கன்றனை
ஆழ்ந்து போயல றவ்விரல் ஊன்றினான்
சூழ்ந்த பாரிடஞ் சோற்றுத் துறையர்க்குத்
தாழ்ந்து நீபணி செய்மட நெஞ்சமே. 11

திருச்சிற்றம்பலம்

---

## திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மூத்தவனாய் உலகுக்கு முந்தி னானே முறைமையால் எல்லாம் படைக்கின் றானே, ஏத்தவனாய் ஏழுலகு மாயி னானே இன்பனாய்த் துன்பங் களைகின் றானே, காத்தவனாய் எல்லாந்தான் காண்கின் றானே கடுவினையேன் தீவினையைக் கண்டு போகத், தீர்த்தவனே திருச்சோற்றுத் துறையு ளானே திகழொளியே சிவனேயுன் னபயம் நானே. 1

தலையவனாய் உலகுக்கோர் தன்மை யானே தத்துவனாய்ச் சார்ந்தார்க்கின் னமுதா னானே, நிலையவனாய் நின்னொப்பா ரில்லா தானே நின்றுணராக் கூற்றத்தைச் சீறிப் பாய்ந்த, கொலையவனே கொல்யானைத் தோல்மே லிட்ட கூற்றுவனே கொடிமதில்கள் மூன்று மெய்த, சிலையவனே திருச்சோற்றுத் துறையு ளானே திகழொளியே சிவனேயுன் னபயம் நானே. 2

முற்றாத பான்மதியஞ்சூடி னானே முளைத்தெழுந்த கற்பகத்தின் கொழுந்தோப் பானே, உற்றாரேன் றொருவரையு மில்லா தானே உலகோம்பும் ஒண்சுடரே யோதும் வேதங், கற்றானே யெல்லாக் கலைஞானமுங் கல்லாதேன் றீவினைநோய் கண்டு போகச், செற்றானே திருச்சோற்றுத் துறையு ளானே திகழொளியே சிவனேயுன் னபயம் நானே. 3

கண்ணவனாய் உலகெல்லாங் காக்கின் றானே காலங்க ளூழி கண் டிருக்கின் றானே, விண்ணவனாய் விண்ணவர்க்கும் அருள் செய் வானே வேதனாய் வேதம் விரித்திட் டானே, எண்ணவனே யெண்ணார்* புரங்கள் மூன்றும் இமையாமுன் எரிகொளுவ நோக்கி நக்க, திண்ணவனே திருச்சோற்றுத் துறையு ளானே திகழொளியே சிவனேயுன் னபயம் நானே. 4

நம்பனே நான்மறைக ளாயி னானே நடமாட வல்லானே ஞானக் கூத்தா, கம்பனே கச்சிமா நகரு ளானே கடிமதில்கள் மூன்றினையும் பொடியா எய்த, அம்பனே அளவிலாப் பெருமை யானே அடியார்கட் காரமுதே ஆனே றேறுஞ், செம்பொனே திருச்சோற்றுத் துறையு ளானே திகழொளியே சிவனேயுன் னபயம் நானே. 5

ஆர்ந்தவனே உலகெலாம் நீயே**யாகி யமைந்தவனே அளவிலாப் பெருமை யானே, கூர்ந்தவனே குற்றாலம் மேய கூத்தா கொடுமூ விலையதோர் சூல மேந்திப், பேர்ந்தவனே பிரளயங்க ளெல்லா மாய பெம்மானென் றெப்போதும் பேசும் நெஞ்சிற், சேர்ந்தவனே திருச்சோற்றுத் துறையு ளானே திகழொளியே சிவனேயுன் னபயம் நானே. 6

வானவனாய் வண்மை மனத்தி னானே மாமணிசேர் வானோர் பெருமான் நீயே, கானவனாய் ஏனத்தின் பின்சென் றானே கடிய அரணங்கள் மூன்றட் டானே, தானவனாய்த் தண்கயிலை மேவி னானே தன்னொப்பா ரில்லாத மங்கைக் கென்றுந், தேனவனே திருச்சோற்றுத் துறையு ளானே திகழொளியே சிவனேயுன் னபயம் நானே. 7

---

* எண்ணவனா யெண்ணார் என்றும் பாடம். ** உலகேழு நீயே என்றும் பாடம்.

தன்னவனாய் உலகெல்லாந் தானே யாகித் தத்துவனாய்ச் சார்ந்தார்க்கின் னமுதா னானே, என்னவனா யென்னிதயம் மேவி னானே யீசனே பாச வினைகள் தீர்க்கும் மன்னவனே மலைமங்கை பாக மாக வைத்தவனே வானோர் வணங்கும் பொன்னித், தென்னவனே திருச்சோற்றுத் துறையு ளானே திகழொளியே சிவனேயுன் னபயம் நானே. 8

எறிந்தானே எண்டிசைக்குங் கண்ணா னானே ஏழுலக மெல்லாமுன் னாய்நின் றானே, அறிந்தார்தாம் ஓரிருவ ரறியா வண்ணம் ஆதியும் அந்தமு மாகி யங்கே, பிறிந்தானே பிறரொருவர் அறியா வண்ணம் பெம்மானென் றெப்போதும் ஏத்தும் நெஞ்சிற், செறிந்தானே திருச்சோற்றுத் துறையு ளானே திகழொளியே சிவனே யுன் னபயம் நானே. 9

மையனைய கண்டத்தாய் மாலும் மற்றை வானவரு மறியாத வண்ணச் சூலக், கையவனே கடியிலங்கைக் கோனை யன்று கால்விரலாற் கதிர்முடியுந் தோளுஞ் செற்ற, மெய்யவனே யடியார்கள் வேண்டிற் றீயும் விண்ணவனே விண்ணப்பங் கேட்டு நல்குஞ், செய்யவனே திருச்சோற்றுத் துறையு ளானே திகழொளியே சிவனேயுன் னபயம் நானே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி—தொலையாச் செல்வர், ஓதவனேசுவரர்;
தேவி—ஒப்பிலாவம்மை, அன்னபூரணி.

---

## 12. திருவேதிகுடி

### திருவிருத்தம் [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கையது காலெரி நாகங் கனல்விடு சூலமது
வெய்யது வேலைநஞ் சுண்ட விரிசடை விண்ணவர்கோன்
செய்யினில் நீல மணங்கம ழுந்திரு வேதிகுடி*
ஐயனை ஆரா அமுதினை** நாமடைந் தாடுதுமே. 1

---

* வேதிகுடி – வேதங்களைத் தோற்றுவித்த இடம். ** ஆரா அமுது – சுவாமியின் பெயர்.

கைத்தலை மான்மறி யேந்திய கையன் கனல் மழுவன்
பொய்த்தலை யேந்திநற் பூதி யணிந்து பலிதிரிவான்
செய்த்தலை வாளைகள் பாய்ந்துக ளுந்திரு வேதிகுடி
அத்தனை ஆரா அமுதினை நாமடைந் தாடுதுமே. 2

முன்பின் முதல்வன் முனிவனெம் மேலை வினைகழித்தான்
அன்பின் நிலையில் அவுணர் புரம்பொடி யானசெய்யும்
செம்பொனை நன்மலர் மேலவன் சேர்திரு வேதிகுடி
அன்பனை நம்மை யுடையனை நாமடைந் தாடுதுமே. 3

பத்தர்கள் நாளும் மறவார் பிறவியை யொன்றறுப்பான்
முத்தர்கள் முன்னம் பணிசெய்து பாரிட முன்னுயர்த்தான்
கொத்தன கொன்றை மணங்கம ழுந்திரு வேதிகுடி
அத்தனை ஆரா அமுதினை நாமடைந் தாடுதுமே. 4

ஆனணைந் தேறுங் குறிகுண மாரறி வாரவர்கை
மானணைந் தாடு மதியும் புனலுஞ் சடைமுடியன்
தேனணைந் தாடிய வண்டு பயில்திரு வேதிகுடி
ஆனணைந் தாடும் மழுவனை நாமடைந் தாடுதுமே. 5

எண்ணும் எழுத்துங் குறியும் அறிபவர் தாமொழியப்*
பண்ணின் இசைமொழி பாடிய வானவர் தாம்பணிவார்
திண்ணென் வினைகளைத் தீர்க்கும் பிரான்திரு வேதிகுடி
நண்ண அரிய அமுதினை நாமடைந் தாடுதுமே. 6

ஊர்ந்த விடையுகந் தேறிய செல்வனை நாமறியோம்
ஆர்ந்த மடமொழி மங்கையொர் பாகம் மகிழ்ந்துடையான்
சேர்ந்த புனற்சடைச் செல்வப் பிரான்திரு வேதிகுடிச்
சார்ந்த வயலணி தண்ணமு தையடைந் தாடுதுமே. 7

எரியும் மழுவினன் எண்ணியும் மற்றொரு வன்தலையுள்
திரியும் பலியினன் தேயமும் நாடுமெல் லாமுடையான்
விரியும் பொழிலணி சேறு திகழ்திரு வேதிகுடி
அரிய அமுதினை அன்பர்க ளோடடைந் தாடுதுமே. 8

மையணி கண்டன் மறைவிரி நாவன் மதித்துகந்த
மெய்யணி நீற்றன் விழுமிய வெண்மழு வாட்படையான்

---

* இவ்வடியில் எண்–மனம் நினைத்தல்; எழுத்து–வாய் துதித்தல்; குறி–கைதொழுதல் என்ற குறிப்பைக் காட்டி நின்றன.

செய்ய கமல மணங்கம ழுந்திரு வேதிகுடி
ஐயனை ஆரா அமுதினை நாமடைந் தாடுதுமே. 9

வருத்தனை வாளரக் கன்முடி தோளொடு பத்திறுத்த
பொருத்தனைப் பொய்யா அருளனைப் பூதப் படையுடைய
திருத்தனைத் தேவர் பிரான்திரு வேதி குடியுடைய
அருத்தனை ஆரா அமுதினை நாமடைந் தாடுதுமே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி–வேதபுரீசுவரர்: ஆராவமுது நாதர்,
தேவி–மங்கையர்க்கரசி.

## 13. திருக்கருகாவூர்*

### திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

குருகாம் வயிரமாங் கூறு நாளாங் கொள்ளுங் கிழமையாங் கோளே தானும், பருகா அமுதமாம் பாலின் நெய்யாம் பழத்தின் இரதமாம் பாட்டிற் பண்ணும், ஒருகா லுமையாளோர் பாக னுமாம் உள்நின்ற நாவிற் குரையா டியாம், கருவா யுலகுக்கு முன்னே தோன்றுங் கண்ணுங் கருகாவூ ரெந்தை தானே. 1

வித்தாம் முளையாகும் வேரே தானும் வேண்டும் உருவமாம் விரும்பி நின்ற, பத்தாம்** அடியார்க்கோர் பாங்க னுமாம் பால் நிறமுமாம் பரஞ் சோதி தானும், தொத்தாம் அமரர்கணஞ் சூழ்ந்து போற்றத் தோன்றாதென் உள்ளத்தி னுள்ளே நின்ற, கத்தாம்† அடியேற்குக் காணா காட்டுங் கண்ணுங் கருகாவூ ரெந்தை தானே. 2

பூத்தானும் பூவின் நிறத்தா னுமாம் பூக்குளால் வாசமாய் மன்னி நின்ற, கோத்தானுங் கோல்வளையாள் கூற னாகுங் கொண்ட சமயத்தார் தேவனாகி, ஏத்தாதார்க் கென்று மிடரே துன்பம் ஈவானா மென்னெஞ்சத் துள்ளே நின்று, காத்தானுங் காலன் அடையா வண்ணங் கண்ணுங் கருகாவூ ரெந்தை தானே. 3

---

* 'திருக்களாவூர்' என்று வழங்கப்படும். உதவியற்ற ஒரு பெண்ணின் கருப்பத்தைக் காத்த காரணத்தால் கருகாவூர் எனப் படும் என்பர். **பத்தாம் – அடியார் குணம் பத்தும் உடைய. † கத்தாம்–கருத்து, கத்தன்–தலைவனுமாம்.

இரவனும் எல்லி நடமா டியாம் எண்டிசைக்குந் தேவனும் என்னு ளானும், அரவனும் அல்லல் அறுப்பா னுமாம் ஆகாச மூர்த்தியாம் ஆனே றேறும், குரவனுங் கூற்றை யுதைத்தான் தானுங் கூறாத வஞ்சக் குயலர்க்‡ கென்றும், கரவனுங் காட்சிக் கெளியா னுமாங் கண்ணுங் கருகாவூ ரெந்தை தானே. 4

படைத்தானும் பாரை யிடந்தா னு*கும் பரிசொன் றறியாமை நின்றான் தானும், உடைத்தானும் ஒன்னார் புரங்கள் மூன்றும் ஒள்ளழலால் மூட்டி யொருக்கி நின்று, அடைத்தானுஞ் சூலம் மழுவோர் நாக மசைத்தானும் ஆனேறொன் றூர்ந்தா னுகும், கடைத் தானுங் கள்ள மறிவார் நெஞ்சிற் கண்ணுங் கருகாவூ ரெந்தை தானே. 5

மூலனும் மூர்த்தியாம் முன்னே தானும் மூவாத மேனிமுக் கண்ணி னானும், சீலனுஞ் சேர்ந்தா ரிடர்கள் தீர்க்குஞ் செல்வனுஞ் செஞ்சுடர்க்கோர் சோதி தானும், மாலனும் மங்கையோர் பங்கனுகும் மன்றாடி யாம்வானோர் தங்கட் கெல்லாம், காலனுங் காலனைக் காய்ந்தா னுகுங் கண்ணுங் கருகாவூ ரெந்தை தானே. 6

அரைசே ரரவனும் ஆலத் தானும் ஆதிரைநா ளானும் அண்ட வானோர், திரைசேர் திருமுடித் திங்க ளானுந் தீவினை நாசனென் சிந்தை யானும், உரைசே ருலகத்தா ருள்ளா னுமாம் உமையாளோர் பாகனும் ஓத வேலிக், கரைசேர் கடல்நஞ்சை யுண்டா னுகுங் கண்ணுங் கருகாவூ ரெந்தை தானே. 7

துடியாந் துடியின் முழக்கந் தானுஞ் சொல்லுவார் சொல்லெல்லாஞ் சோதிப் பானும், படிதானும் பாவ மறுப்பா னுகும் பால்நீற்ற னும்பரஞ் சோதி தானும், கொடியானுங் கூற்றை யுதைத்தா னுகுங் கூறாத வஞ்சக் குயலர்க் கென்றும், கடியானுங் காட்சிக் கரியா னுகுங் கண்ணுங் கருகாவூ ரெந்தை தானே. 8

விட்டுருவங் கிளர்கின்ற சோதி யானும் விண்ணவர்க்கும் அறியாத சூழ லானும், பட்டுருவ மால்யானைத் தோல்கீண் டானும் பலபலவும் பாணி பயின்றான் தானும், எட்டுருவ மூர்த்தி

‡ வஞ்சக்குயலர்-மிக வஞ்சனையுடையவர். குயலர் - வஞ்சனையுடையவர். குய்யம்-வஞ்சனை. * இடந்தான்-அழித்தவன்.

யாம் எண்தோ ளானும் என்னுச்சி மேலானும் எம்பி ரானும், கட்டுருவங் கடியானைக் காய்ந்தா னாகுங் கண்ணாங் கருகாவூ ரெந்தை தானே. 9

பொறுத்திருந்த புள்ளூர்வான் உள்ளா னாகி உள்ளிருந்தங் குள்நோய் களைவான் தானாய்ச், செறுத்திருந்த மும்மதில்கள் மூன்றும் வேவச் சிலைகுனியத் தீமூட்டுந் திண்மை யானும், அறுத் திருந்த கையானும் அந்தார் அல்லி யிருந்தானை யொருதலையைத் தெரிய நோக்கிக், கறுத்திருந்த கண்ட முடையான் போலுங் கண்ணாங் கருகாவூ ரெந்தை தானே. 10

ஓறுத்தானும் ஒன்னார் புரங்கள் மூன்றும் ஒள்ளழலை மாட்டி யுடனே வைத்து, இறுத்தானும் எண்ணான் முடிகள் பத்தும் இசைந் தானும் இன்னிசைகள் கேட்டா னாகும், அறுத்தானும் அஞ்சும் அடக்கி யங்கே‡ ஆகாய மந்திரமு மானா னாகும், கறுத்தானுங் காலனைக் காலால் வீழக் கண்ணாங் கருகாவூ ரெந்தை தானே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—முல்லைவனேசுவரர்; தேவி—கரும்பனையாளம்மை, கர்ப்ப ரட்சகி.

---

## 14. திருப்பாலைத்துறை*

### திருக்குறுந்தொகை* [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நீல மாமணி கண்டத்தர் நீள்சடைக்
கோல மாமதி கங்கையுங் கூட்டினார்
சூல மான்மழு வேந்திச் சுடர்முடிப்
பால்நெய் யாடுவர் பாலைத் துறையரே. 1

கவள மாகளிற் றின்உரி போர்த்தவர்
தவள வெண்ணகை மங்கையோர் பங்கினர்
திவள வானவர் போற்றித் திசைதொழும்
பவள மேனியர் பாலைத் துறையரே. 2

---

‡ அங்கை என்றும் பாடம். * இது முன்னர் பாலைவனமாக இருந்த காரணத்தால் பெற்ற பெயராகும்.

மின்னின் நுண்ணிடைக் கன்னியர் மிக்கெங்கும்
பொன்னி நீர்மூழ்கிப் போற்றி யடிதொழ
மன்னி நான்மறை யோடுபல் கீதமும்
பன்னி னாரவர் பாலைத் துறையரே. 3

நீடு காடிட மாய்நின்ற பேய்க்கணங்
கூடு பூதங் குழுமிநின் றார்க்கவே
ஆடி னார்அழ காகிய நான்மறை
பாடி னாரவர் பாலைத் துறையரே. 4

சித்தர் கன்னியர் தேவர்கள் தானவர்
பித்தர் நான்மறை வேதியர் பேணிய
அத்த னேநமை யாளுடை யாயெனும்
பத்தர் கட்கன்பர் பாலைத் துறையரே. 5

விண்ணி னார்பணிந் தேத்த வியப்புறும்
மண்ணி னார்மற வாதுசி வாய*வென்(று)
எண்ணி னார்க்கிட மாஎழில் வானகம்
பண்ணி னாரவர் பாலைத் துறையரே. 6

குரவ னார்கொடு கொட்டியுங் கொக்கரை§
விரவி னார்பண் கெழுமிய வீணையும்
மருவு நாண்மலர் மல்லிகை செண்பகம்
பரவு நீர்ப்பொன்னிப் பாலைத் துறையரே. 7

தொடருந் தொண்டரைத் துக்கந் தொடர்ந்துவந்
தடரும் போதர னையருள் செய்பவர்
கடலின் நஞ்சணி கண்டர் கடிபுனல்
படருஞ் செஞ்சடைப் பாலைத் துறையரே. 8

மேகந் தோய்பிறை சூடுவர் மேகலை
நாகந் தோய்ந்த அரையினர் நல்லியல்
போகந் தோய்ந்த புணர்முலை மங்கையோர்
பாகந் தோய்ந்தவர் பாலைத் துறையரே. 9

---

* சிவாய—சுத்த பஞ்சாக்கரம். § கொடுகொட்டி, கொக்கரை—ஆடும்போது முழக்கப்படும் முழவின் வகை.

வெங்கண் வாளர வாட்டி வெருட்டுவர்
அங்க ணாரடி யார்க்கருள் நல்குவர்
செங்கண் மாலயன் தேடற் கரியவர்
பைங்கண் ஏற்றினர் பாலைத் துறையரே. 10

உரத்தி னால்அரக் கன்உயர் மாமலை
நெருக்கி னானை நெரித்தவன் பாடலும்
இரக்க மாஅருள் செய்தபா லைத்துறை
கரத்தி னால்தொழு வார்வினை யோயுமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி–பாலைவனநாதர்; தேவி–தவளவெண்ணகையம்மை.

---

## 15. திருநல்லூர்*

### திருவிருத்தம் [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

அட்டுமின்† இல்பலி யென்றென் றகங்கடை தோறும்வந்து
மட்டவி ழுங்குழ லார்வளை கொள்ளும் வகையென்கொலோ
கொட்டிய பாணி யெடுத்திட்ட பாதமுங் கோளரவும்
நட்டநின் றாடிய நாதர்நல் லூரிடங் கொண்டவரே. 1

பெண்ணிட்டம் பண்டைய தன்றிவை பெய்பலிக் கென்றுழல்வார்
நண்ணிட்டு வந்து மனைபுகுந் தாரும்நல் லூரகத்தே
பண்ணிட்ட பாடலர் ஆடல ராய்ப்பற்றி நோக்கிநின்று
கண்ணிட்டுப் போயிற்றுக் காரண முண்டு கறைக்கண்டரே. 2

படவேர் அரவல்குற் பாவைநல் லீர்பக லேயொருவர்
இடுவார் இடைப்பலி கொள்பவர் போலவந் தில்புகுந்து
நடவார் அடிகள் நடம்பயின் றாடிய கூத்தர்கொலோ
வடபாற் கயிலையுந் தென்பால்நல் லூருந்தம் வாழ்பதியே. 3

செஞ்சுடர்ச் சோதிப் பவளத் திரள்திகழ் முத்தனைய
நஞ்சணி கண்டன்நல் லூருறை நம்பனை நானொருகால்
துஞ்சிடைக் கண்டு கனவின் தலைத்தொழு தேற்கவன்றான்
நெஞ்சிடை நின்றக லான்பல காலமும் நின்றனனே. 4

---

* 'ஆண்டான் கோயில்' என்று வழங்கப்பெறும். †அட்டுமின்–இடுமின்.

வெண்மதி சூடி விளங்கநின் றானைவிண் ணோர்கள்தொழ
நண்ணில யத்தொடு பாடல றாதநல் லூரகத்தே
திண்ணில யங்கொண்டு நின்றான் திரிபுர மூன்றெரித்தான்
கண்ணுளும் நெஞ்சத் தகத்தும் உளகழற் சேவடியே. 5

தேற்றப் படத்திரு நல்லூ ரகத்தே சிவனிருந்தால்
தோற்றப்படச்சென்று கண்டுகொள்ளார் தொண்டர் துன்மதியால்
ஆற்றிற் கெடுத்துக் குளத்தினில் தேடிய ஆதரைப்போல்*
காற்றிற் கடுத்துல கெல்லாந் திரிதர்வர் காண்பதற்கே. 6

நாட்கொண்ட தாமரைப் பூத்தடஞ் சூழ்ந்தநல் லூரகத்தே
கீட்கொண்ட கோவணங் காவென்று சொல்லிக் கிறிபடத்தான்
வாட்கொண்ட நோக்கி மனைவியொடும் அங்கோர் வாணிகனை
ஆட்கொண்ட வார்த்தை யுரைக்குமன் றேஇவ் வகலிடமே.† 7

அறைமல்கு பைங்கழல் ஆர்ப்ப§நின் றன்அணி யார்சடைமேல்
நறைமல்கு கொன்றையந் தாருடை யானும்நல் லூரகத்தே
பறைமல்கு பாடலன் ஆடல னாகிப் பரிசழித்தான்‡
பிறைமல்கு செஞ்சடை தாழநின் றாடிய பிஞ்ஞகனே. 8

மன்னிய மாமறை யோர்மகிழ்ந் தேத்த மருவியெங்கும்
துன்னிய தொண்டர்கள் இன்னிசை பாடித் தொழுதுநல்லூர்க்
கன்னியர் தாமுங் கனவிடை யுன்னிய காதலரை
அன்னியர் அற்றவர் அங்கண னேயருள் நல்கென்பரே. 9

திருவமர் தாமரை சீர்வளர் செங்கழு நீர்கொள்நெய்தல்
குருவமர் கோங்கங் குராமகிழ் சண்பகங் கொன்றைவன்னி
மருவமர் நீள்கொடி மாட மலிமறை யோர்கள்நல்லூர்
உருவமர் பாகத் துமையவள் பாகனை உள்குதுமே. 10

செல்லேர் கொடியன் சிவன்பெருங் கோயில் சிவபுரமும்
வல்லேன் புகவும் மதில்சூழ் இலங்கையர் காவலனைக்
கல்லார் முடியொடு தோளிறச் செற்ற கழலடியான்
நல்லூ ரிருந்த பிரான்அல்ல னேஎம்மை ஆள்பவனே. 11

திருச்சிற்றம்பலம்

---

* இவ்வடி பழமொழி. ஆதர்–அறிவில்லார். † இச்செய்யுள் அமர்நீதிநாயனார் சரிதங்கூறித் துதிப்பது- கிறிபட–பலதிறமாக வன்மைபேசி. வணிகன் – அமர்நீதிநாயனார். § ஆர்க்க என்றும் பாடம். ‡பரிசழித்தான்–பசுத்தன்மையைப் போக்கினான்.

திருத்தாண்டகம்* [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நினைந்துருகும் அடியாரை நைய** வைத்தார் நில்லாமே தீவினைகள் நீங்க வைத்தார், சினந்திருகு களிற்றுரிவைப் போர்வை வைத்தார் செழுமதியின் தளிர்வைத்தார் சிறந்து வானோர், இனந்துருவி மணிமகுடத் தேறத் துற்ற இனமலர்கள் போதவிழ்ந்து மதுவாய்ப் பில்கி, நனைந்தனைய திருவடியென் தலைமேல் வைத்தார் நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 1

பொன்நலத்த நறுங்கொன்றை சடைமேல் வைத்தார் புலியுரியின் அதள்வைத்தார் புனலும் வைத்தார், மன்னலத்த திரள்தோள்மேல் மழுவாள் வைத்தார் வார்காதிற் குழைவைத்தார் மதியும் வைத்தார், மின்நலத்த நுண்ணிடையாள் பாகம் வைத்தார் வேழத்தி னுரிவைத்தார் வெண்ணூல் வைத்தார், நன்னலத்த திருவடியென் தலைமேல் வைத்தார் நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 2

தோடேறும் மலர்க்கொன்றை சடைமேல் வைத்தார் துன்னெருக்கின் வடம்வைத்தார் துவலை சிந்தப், பாடேறு படுதிரைகளெறிய வைத்தார் பனிமத்த மலர்வைத்தார் பாம்பும் வைத்தார், சேடேறு திருநுதல்மேல் நாட்டம் வைத்தார் சிலைவைத்தார் மலைபெற்ற மகளை வைத்தார், நாடேறு திருவடியென் தலைமேல் வைத்தார் நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 3

வில்லருளி வருபுருவத் தொருத்தி பாகம் பொருத்தாகி விரிசடைமேல் அருவி வைத்தார், கல்லருளி வரிசிலையா வைத்தார் ஊராக்கயிலாய மலைவைத்தார் கடவூர் வைத்தார், சொல்லருளியறநால்வர்க் கறிய வைத்தார் சுடுசுடலைப் பொடிவைத்தார் துறவி‡வைத்தார், நல்லருளால் திருவடியென் தலைமேல்வைத்தார் நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 4

விண்ணிரியுந் திரிபுரங்க ளெரிய வைத்தார் வினைதொழுவார்க் கறவைத்தார் துறவி வைத்தார், கண்ணெரியாற் காமனையும்

---

* இத்திருப்பதிகம் இறைவன் தன் திருவடியைச் சிரசில் சூட்டியருளியபோது பாடியதாகும். ** நைய-(அன்பு மேன்மேற் பெருகுதலினால்) மனம் நைய; பாசங்கள்தேய. ‡ துறவி-துறவுநிலை,

பொடியா வைத்தார் கடிக்கமல மலர் ¶ வைத்தார் கயிலை வைத்தார், திண்ணெரியுந் தண்புனலு முடனே வைத்தார் திசை தொழுது மிசையமரர் திகழ்ந்து வாழ்த்தி, நண்ணரிய திருவடியென் தலைமேல் வைத்தார் நல்லூரெம் பெருமானார் நல்லவாறே. 5

உற்றுலவு பிணியுலகத் தெழுமை வைத்தார் உயிர்வைத்தார் உயிர்செல்லுங் கதிகள் வைத்தார், மற்றமரர் கணம் வைத்தார் அமரர் காணா மறைவைத்தார் குறைமதியம் வளர வைத்தார், செற்றமலி யார்வமொடு காம லோபஞ் சிறவாத நெறிவைத்தார் துறவி வைத்தார், நற்றவர்சேர் திருவடியென் தலைமேல் வைத்தார் நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 6

மாறுமலைந் தாரரண மெரிய வைத்தார் மணிமுடிமேல் அரவைத்தா ரணிகொள் மேனி, நீறுமலிந் தெரியாடல் நிலவ வைத்தார் நெற்றிமேற் கண்வைத்தார் நிலயம் வைத்தார், ஆறுமலைந் தறுதிரைக ளெறிய வைத்தார் ஆர்வத்தா லடியமரர் பரவ வைத்தார், நாறுமலர்த் திருவடியென் தலைமேல் வைத்தார் நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 7

குலங்கள்மிகும் அலைகடல்கள் ஞாலம் வைத்தார் குருமணிசேரரவைத்தார் கோலம் வைத்தார், உலங்கிளரும் அரவத்தின் உச்சி வைத்தார் உண்டருளி விடம்வைத்தார் எண்டோள் வைத்தார், நிலங்கிளரும் புனல்கனலுள் அனிலம் வைத்தார் நிமிர்விசும்பின் மிசைவைத்தார் நினைந்தா ரிந்நாள், நலங்கிளருந் திருவடியென் தலைமேல் வைத்தார் நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 8

சென்றுருளுங் கதிரிரண்டும் விசும்பில் வைத்தார்* திசைபத்தும் இருநிலத்தில் திருந்த வைத்தார், நின்றருளி யடியமரர் வணங்க வைத்தார் நிறைதவமும் மறைபொருளும் நிலவ வைத்தார், கொன்றருளிக் கொடுங்கூற்றம் நடுங்கி யோடக் குரைகழற்சே வடிவைத்தார் விடையும் வைத்தார், நன்றருளுந் திருவடியென் தலைமேல் வைத்தார் நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 9

---

¶ கமல மலர்–இருதயகமலம். (தன் இருக்கையாக) * இவ்வடி வான நூல் நுட்பத்தைக் குறிக்கும்.

பாம்புரிஞ்சி மதிகிடந்து திரைக ளேங்கப் பனிக்கொன்றை சடைவைத்தார் பணிசெய் வானோர், ஆம்பரிசு தமக்கெல்லாம் அருளும் வைத்தார் அடுசுடலைப் பொடிவைத்தார் அழகும் வைத்தார், ஓம்பரிய வல்வினைநோய் தீர வைத்தார் உமையையொரு பால்வைத்தார் உகந்து வானோர், நாம்பரவும் திருவடியென்¶ தலைமேல் வைத்தார் நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 10

குலங்கிளரும் வருதிரைக ளேழும்|| வைத்தார் குருமணிசேர் மலைவைத்தார் மலையைக் கையால், உலங்கிளர எடுத்தவன்தோள் முடியும் நோவ ஒருவிரலா லுறவைத்தார் இறைவா என்று, புலம்புதலும் அருளொடுபோர் வாளும் வைத்தார் புகழ்வைத்தார் புரிந்தாளாக் கொள்ள வைத்தார், நலங்கிளருந் திருவடியென் தலைமேல் வைத்தார் நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி–பெரியவாண்டவர், கலியாண சுந்தரேசுவரர்;
தேவி–திரிபுர சுந்தரி, கலியாண சுந்தரி.

---

## 16. திருச்சத்திமுற்றம்*

### திருவிருத்தம் [4–ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கோவாய் முடுகி யடுதிறற் கூற்றங் குமைப்பதன்முன்
பூவா ரடிச்சுவ டென்மேற் பொறித்துவை போகவிடில்
மூவா முழுப்பழி மூடுங்கண் டாய்முழங் குந்தழற்கைத்
தேவா திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. 1

காய்ந்தாய் அனங்கன் உடலம் பொடிபடக் காலனைமுன்
பாய்ந்தாய் உயிர்செகப் பாதம் பணிவார்தம் பல்பிறவி
ஆய்ந்தாய்ந் தறுப்பாய் அடியேற் கருளாயுன் அன்பர்சிந்தை
சேர்ந்தாய் திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. 2

---

¶ பரவுமடியிணையென் என்றும் பாடம். || திரைகள் ஏழும் – அலைகளையுடைய ஏழ்கடல்களும். * இறைவனைச் சத்திபூசித்துத் தழுவி முத்தமிட்ட காரணத்தால் பெற்ற பெயர். முத்தம்–முற்றம் என்றாயிற்று போலும்,

பொத்தார் குரம்பை புகுந்தைவர் நாளும் புகலழிப்ப
மத்தார் தயிர்போல்** மறுகுமென் சிந்தை மறுக்கொழிவி
அத்தா அடியேன் அடைக்கலங் கண்டாய் அமரர்கள்தம்
சித்தா திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. 3

நில்லாக் குரம்பை நிலையாக் கருதிஇந் நீள்நிலத்தொன்
றல்லாக் குழிவீழ்ந் தயர்வுறு வேனைவந் தாண்டுகொண்டாய்†
வில்லேர் புருவத் துமையாள் கணவா விடிற்கெடுவேன்
செல்வா திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. 4

கருவுற் றிருந்துன் கழலே நினைந்தேன் கருப்புவியில்§
தெருவிற் புகுந்தேன் திகைத்தடி யேன்றன் திகைப்பொழிவி¶
உருவிற் றிகழும் உமையாள் கணவா விடிற்கெடுவேன்
திருவிற் பொலிசத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. 5

வெம்மை நமன்தமர் மிக்கு விரவி விழுப்பதன்முன்
இம்மையுன் தாளென்றன் நெஞ்சத் தெழுதிவை ஈங்கி*கழில்
அம்மை** யடியேற் கருளுதி யென்பதிங் காரறிவார்
செம்மை தருசத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. 6

விட்டார் புரங்கள் ஒருநொடி வேவவொர் வெங்கணையால்
சுட்டாயென் பாசத் தொடர்பறுத் தாண்டுகொள் தும்பிபம்பும்
மட்டார் குழலி மலைமகள் பூசை மகிழ்ந்தருளும்
சிட்டா திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. 7

இகழ்ந்தவன் வேள்வி யழித்திட் டிமையோர் பொறையிரப்ப
நிகழ்ந்திட அன்றே விசயமுங் கொண்டது நீலகண்டா
புகழ்ந்த அடியேன்றன் புன்மைகள் தீரப் புரிந்துநல்காய்
திகழ்ந்த திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. 8

தக்கார்வ மெய்திச் சமண்தவிர்ந் துன்றன் சரண்புகுந்தேன்
எக்காதல் எப்பயன் உன்திற மல்லால் எனக்குளதே
மிக்கார் தில்லையுள் விருப்பா மிகவட மேருவென்னும்
திக்கா திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. 9

---

**மத்தார் தயிர்போல்–சுழலுதல் காட்டும் பழமொழி. † வந் தாண்டுகொண்ட என்றும் பாடம். § கருப்புவியில்–கன்மபூமியில் (பிறந்து). ¶திகைத்தடியேனைத் திகைப்பொழிவி என்றும் பாடம். *ஈங்கு–இப்பிறவி. ** அம்மை–மேலைப்பிறவி. தில்லை–தில்லை.

பொறித்தேர் அரக்கன் பொருப்பெடுப் புற்றவன் பொன்முடிதோள்
இறத்தாள் ஒருவிரல் ஊன்றிட் டலற இரங்கி ஒள்வாள்
குறித்தே கொடுத்தாய் கொடியேன் செய்குற்றக் கொடுவினைநோய்
செறுத்தாய் திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி–சிவக்கொழுந்தீசர்; தேவி–பெரியநாயகி.

---

## 17. திருப்பழையாறைவடதளி*

திருக்குறுந்தொகை** [5–ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

தலையெ லாம்பறிக் குஞ்சமண் கையருள்
நிலை||யி னன்மறைத் தான்மறைக் கொண்ணுமே¶
அலையி னார்பொழி லாறை வடதளி
நிலையி னனடி யேநினைந் துய்ம்மினே. 1

மூக்கி னல்முரன் றோதிஅக் குண்டிகை
தூக்கி னார்குலந் தூர றுத் தேதனக்
காக்கி னன்அணி யாறை வடதளி
நோக்கி னார்க்கில்லை யால்அரு நோய்களே. 2

குண்ட ரைக்குண மில்லரைக் கூறையில்
மிண்ட ரைத்துரந் தவிம லன்றனை
அண்ட ரைப்பழை யாறை வடதளிக்
கண்ட ரைத்தொழு துய்ந்தன கைகளே. 3

முடைய ரை§ த்தலை முண்டிக்கும் மொட்டரைக்
கடைய ரைக்கடிந் தார்கனல் வெண்மழுப்
படைய ரைப்பழை யாறை வடதளி
உடைய ரைக்குளிர்ந் துள்குமென் னுள்ளமே. 4

---

*இது பழையாறை என்றும், வடதளி என்றும் இரண்டு தலங்களாக இருக்கிறது. **இப்பதிக முழுமையும் சுவாமிகளின் சரிதப் பகுதிக்கு அகச்சான்றுகளுடன் விளங்குவது. ||உள்நிலை–தங்கள் பொய்மைநிலை, ¶ஒண்ணுமே. ஏ: எதிர்மறை. §முடையர்–முடை நாற்ற முடையவர்.

ஒள்ள ரிக்கணார் முன்னமண் நின்று¶ணும்
கள்ள ரைக்கடிந் தகருப் பூறலை§
அள்ள லம்புன லாறை வடதளி
வள்ள லைப்புக ழத்துயர் வாடுமே. 5

நீதி யைக்கெட நின்றம ணேயுணும்
சாதி யைக்கெடு மாசெய்த சங்கரன்
ஆதி யைப்பழை யாறை வடதளிச்
சோதி யைத்தொழு வார்துயர் தீருமே. 6

திரட்டி ரைக்க வளந்திணிக் குஞ்சமண்
பிரட்ட ரை*ப்பிரித் தபெரு மான்றனை
அருட்டி றத்தணி யாறை வடதளித்
தெருட்ட ரைத்தொழத் தீவினை தீருமே. 7

ஓதி னத்தெழுத் தஞ்சு†ண ராச்சமண்
வேதி**னைப்படுத் தானைவெங் கூற்றுதை
பாத னைப்பழை யாறை வடதளி
நாத னைத்தொழ நம்வினை நாசமே. 8

வாயி ருந்தமி ழேபடித் தாளுரு
ஆயி ரஞ்சம ணும்மழி வாக்கினன்
பாயி ரும்புன லாறை வடதளி
மேய வன்னென வல்வினை வீடுமே. 9

செருத்த னைச்செயுஞ் சேணரக் கன்னுடல்
எருத்தி றவிர லாலிறை யூன்றிய
அருத்த னைப்பழை யாறை வடதளித்
திருத்த னைத்தொழு வார்வினை தேயுமே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—சோமநாதர், வடதளி நாதர்;
தேவி—சோமகலாநாயகி, கௌரியம்மை.

---

¶அமண் நின்று—ஆடையின்றி நின்று. §கருப்பு ஊறல்—கருப்பஞ்சாறு. *பிரட்டர்—வஞ்சகர். †எழுத்து அஞ்சு—பஞ்சாட்சரம். **வேது—பேதம் செய்வது.

## 18. திருவலஞ்சுழி*

### திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

ஓத மார்கட லின்விட முண்டவன்
பூத நாயகன் பொற்கயி லைக்கிறை
மாதொர் பாகன் வலஞ்சுழி யீசனைப்
பாத மேத்தப் பறையும்நம் பாவமே. 1

கயிலை நாதன் கறுத்தவர் முப்புரம்
எயில்கள் தீயெழ வெல்வல வித்தகன்
மயில்க ளாலும் வலஞ்சுழி யீசனைப்
பயில்கி லார்சிலர் பாவித் தொழும்பரே.** 2

இளைய காலமெம் மானை அடைகிலாத்
துளையி லாச்செவித் தொண்டர்காள் நும்முடல்
வளையுங் காலம் வலஞ்சுழி யீசனைக்
களைக ணாகக் கருதிநீர் உய்ம்மினே. 3

நறைகொள் பூம்புனல் கொண்டெழு மாணிக்காய்க்
குறைவி லாக்கொடுங் கூற்றுதைத் திட்டவன்
மறைகொள் நாவன் வலஞ்சுழி மேவிய
இறைவ னைஇனி என்றுகொல் காண்பதே. 4

விண்ட வர்புர மூன்று மெரிகொளத்
திண்டி றற்சிலை யாலெரி செய்தவன்
வண்டு பண்முர லுந்தண் வலஞ்சுழி
அண்ட னுக்கடி மைத்திறத் தாவனே. 5

படங்கொள் பாம்பொடு பான்மதி யஞ்சடை
அடங்க வாழவல் லான்உம்பர் தம்பிரான்
மடந்தை பாகன் வலஞ்சுழி யானடி
அடைந்த வர்க்கடி மைத்திறத் தாவனே. 6

நாக்கொண் டுபர வும்மடி யார்வினை
போக்க வல்ல புரிசடைப் புண்ணியன்

---

*பிலத்துட்புக்க காவிரி மீண்டும் மேலெழுந்து வலஞ்சுழித்து வந்த இடமாகிய காரணத்தால் பெற்றது இப்பெயர். **தொழும்பர்-ஆளானவர்.

மாக்கொள் சோலை வலஞ்சுழி ஈசன்றன்
ஏக்*கொ ளப்புர மூன்றெரி யானவே. 7

தேடு வார்பிர மன்திரு மாலவர்
ஆடு பாதம் அவரும் அறிகிலார்
மாட வீதி வலஞ்சுழி யீசனைத்
தேடு வானுறு கின்றதென் சிந்தையே. 8

கண்ப ணிக்குங்கை கூப்புங்கண் மூன்றுடை
நண்ப னுக்கெனை நான்கொடுப் பேனெனும்
வண்பொ னி**த்தென் வலஞ்சுழி மேவிய
பண்பன் இப்பொனை†ச் செய்த பரிசிதே. 9

இலங்கை வேந்தன் இருபது தோளிற
நலங்கொள் பாதத் தொருவிரல் ஊன்றினன்
மலங்கு பாய்வயல் சூழ்ந்த வலஞ்சுழி
வலங்கொள் வாரடி என்தலை மேலவே. 10

திருச்சிற்றம்பலம்

திருத்தாண்டகம் [6.ந் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

அலையார் புனற்கங்கை நங்கை காண அம்பலத்தில் அருநட்ட மாடி வேடந், தொலையாத வென்றியார் நின்றி யூரும் நெடுங்களமும் மேவிவிடை யைமேல் கொண்டு, இலையார் படைகையி லேந்தி யெங்கும் இமையவரும் உமையவளும் இறைஞ்சி யேத்த, மலையார் திரளருவிப் பொன்னி†† சூழ்ந்த வலஞ்சுழியே புக்கிடமா மருவி னரே.‡ 1

திருச்சிற்றம்பலம்

சுவாமி—கபர்த்தீசர்; தேவி—பெரியநாயகி.

---

* ஏ—அம்பு. ** பொனி—பொன்னி; † பொனை—பொன்னை; தலைவியை. †† பொன்னி—காவிரி; இங்குக் காவிரி மேலைக் காவிரி என்று வழங்கப்படும். ‡ இப்பதிகத்தில் எனைய செய்யுட்கள் சிதைந்துபோயின.

## 19. திருக்குடமூக்கு*

### திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

### திருச்சிற்றம்பலம்

பூவ ணத்தவன் புண்ணியன் நண்ணிஅங்(கு)
ஆவ ண**த்துடை யான்அடி யார்களைத்
தீவ ணத்திரு நீறுமெய் பூசியோர்
கோவ ணத்துடை யான்குட மூக்கிலே. 1

பூத்தா டி§க்கழி யாதேநீர் பூமியீர்
தீத்தா டித்திறஞ் சிந்தையுள் வைம்மினோ
வேர்த்தா டுங்காளி தன்விசை தீர்கென்று
கூத்தா டியுறை யுங்குட மூக்கிலே. 2

நங்கை யாளுமை யாளுறை நாதனார்
அங்கை யாளொ டறுபதந் தாழ்சடைக்
கங்கை யாளவள் கன்னி|| யெனப்படும்
கொங்கை யாள்உறை யுங்குட மூக்கிலே. 3

ஓதா நாவன் திறத்தை யுரைத்திரேல்
ஏதா னும்மினி தாகும் மியமுனே
சேதா ஏறுடை யான்அமர்ந் தவிடம்
கோதா விரியுறை யுங்குட மூக்கிலே. 4

நக்க ரையனை நாடொறும் நன்னெஞ்சே
வக்க ரையுறை வானை வணங்குநீ
அக்க ரையோ டரவரை யார்த்தவன்
கொக்க ரையுடை யான்குட மூக்கிலே. 5

துறவி நெஞ்சின ராகிய தொண்டர்காள்
பிறவி நீங்கப் பிதற்றுமின் பித்தராய்
மறவனைப் பார்த்தன் மேற்கணை தொட்டஎங்
குறவ னார்உறை யுங்குட மூக்கிலே. 6

---

*குடமூக்கு–கும்பகோணம். **ஆவணம்–ஓலை; அடிமையோலை.
§ பூத்து ஆடி–தோன்றி அழிதலாகிய விளையாட்டினைச் செய்து.
|| கன்னி–காவிரி.

தொண்ட ராகித் தொழுது பணிமினோ
பண்டை வல்வினை பற்றற வேண்டுவீர்
விண்ட வர்புரம் மூன்றொரு மாத்திரைக்
கொண்ட வன்உறை யுங்குட மூக்கிலே. 7

காமி யஞ்செய்து காலங் கழியாதே
ஓமியஞ்§ செய்தங் குள்ளத் துணர்மினோ
சாமி யோடு சரச்சு வதியவள்
கோமி யும்உறை யுங்குட மூக்கிலே. 8

சிரமஞ்‡ செய்து சிவனுக்குப் பத்தராய்ப்
பரம னைப்பல நாளும் பயிற்றுமின்
பிரமன் மாலொடு மற்றொழிந் தார்க்கெலாம்
குரவ னுர்உறை யுங்குட மூக்கிலே. 9

அன்று தானரக் கன்கயி லாயத்தைச்
சென்று தானெடுக் கஉமை யஞ்சலும்
நன்று தான்நக்கு நல்விர லூன்றிப்பின்
கொன்று கீதங்கேட் டான்குட மூக்கிலே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி-கும்பேசுவரர்; தேவி—மங்கள நாயகி.

## 20. திருக்குடந்தைக் கீழ்க்கோட்டம்*

### திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

சொன்மலிந்த மறைநான்கா றங்க மாகிச் சொற்பொருளுங் கடந்தசுடர்ச் சோதி போலும், கன்மலிந்த கயிலைமலை வாணர் போலுங் கடல்நஞ்ச முண்டிருண்ட கண்டர் போலும், மன் மலிந்த மணிவரைத்திண் தோளர் போலும் மலையரையன் மடப் பாவை மணாளர் போலுங், கொன்மலிந்த மூவிலைவேற் குழகர் போலுங் குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த னாரே.** 1

§ ஓமியம் – ஓமகாரியம். ‡ சிரமம் – வருந்திச் செய்யும் இயம நியம முதலியன. *இதனைக் கும்பகோணத்தில் உள்ள நாகேசுவர சுவாமி கோயில் என்பர். **கூத்தனார் – இத்தலத்துச் சுவாமியின் சிறப்புப் பெயர்.

கானல்இளங் கலிமறவ னாகிப் பார்த்தன் கருத்தளவு செருத்தொகுதி கண்டார் போலும், ஆன்நல்இளங் கடுவிடையொன் றேறி அண்டத் தப்பாலும் பலிதிரியும் அழகர் போலுந், தேனவிளந் துவலைமலி தென்றல் முன்றிற் செழும்பொழிற்பூம் பாளைவிரி தேறல் நாறுங், கூனல்இளம் பிறைதடவு கொடிகொள் மாடக் குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த னாரே. 2

நீறலைத்த திருவுருவும் நெற்றிக் கண்ணும் நிலாஅலைத்த பாம்பினொடு நிறைநீர்க் கங்கை, ஆறலைத்த சடைமுடியும் அம்பொன் தோளும் அடியவர்க்குக் காட்டியருள் புரிவார் போலும், ஏறலைத்த நிமிர்கொடியொன் றுடையார் போலும் ஏழுலகுந் தொழுகழலெம் மீசர் போலுங், கூறலைத்த மலைமடந்தை கொழுநர் போலுங் குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த னாரே. 3

தக்கனது பெருவேள்வி தகர்த்தார் போலுஞ் சந்திரனைக் கலைகவர்ந்து தரித்தார்§ போலுஞ், செக்கரொளி பவளவொளி மின்னின் சோதி செழுஞ்சுடர்த்தீ ஞாயிறெனச் செய்யர் போலும், மிக்கதிறல் மறையவரால் விளங்கு வேள்வி மிகுபுகை போய் விண்பொழியக் கழனி யெல்லாங், கொக்கி‡னிய கனி சிதறித் தேறல் பாயுங் குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த னாரே. 4

காலன்வலி தொலைத்தகழற் காலர் போலுங் காமனெழில் அழல் விழுங்கக் கண்டார் போலும், ஆலதனில் அறநால்வர்க் களித்தார் போலும் ஆணொடுபெண் ணலியல்ல ரானார் போலும், நீலவுரு வயிரநிரை பச்சை செம்பொன் நெடும்பளிங்கென் றறிவரிய நிறத்தார் போலுங் கோலமணி கொழித்திழியும் பொன்னி நன்னீர்க் குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த னாரே. 5

முடிகொண்ட வளர்மதியும் மூன்றாய்த் தோன்றும் முளைஞாயி றன்னமலர்க் கண்கள் மூன்றும், அடிகொண்ட சிலம்பொலியும் அருளார் சோதி அணிமுறுவற் செவ்வாயும் அழகாய்த் தோன்றத், துடிகொண்ட இடைமடவாள் பாகங்கொண்டு சுடர்ச்சோதிக் கடிச்செம்பொன் மலைபோ லிந்நாள், குடிகொண் டென் மனத்தகத்தே புகுந்தார் போலுங் குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த னாரே. 6

---

§ தவிர்த்தார் என்றும் பாடம். ‡ கொக்கு-மாமரம்.

காரிலங்கு திருவுருவத் தவற்கும் மற்றைக் கமலத்திற் காரணற்குங் காட்சி யொண்ணுச், சீரிலங்கு தழற்பிழம்பிற் சிவந்தார் போலுஞ் சிலைவளைவித் தவுணர்புரஞ் சிதைத்தார் போலும், பாரிலங்கு புனல்அனல்கால் பரமா காசம் பரிதிமதி சுருதியுமாய்ப் பரந்தார்* போலும், கூரிலங்கு வேற்குமரன் தாதை போலுங் குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த னாரே. 7

பூச்சூழ்ந்த பொழில்தழுவு புகலூ ருள்ளார் புறம்பயத்தார் அறம்புரிபூந் துருத்தி புக்கு, மாச்சூழ்ந்த பழனத்தார் நெய்த்தானத்தார் மாதவத்து வளர்சோற்றுத் துறையார் நல்ல, தீச்சூழ்ந்த திகிரிதிரு மாலுக்கீந்து திருவானைக் காவிலோர் சிலந்திக் கந்நாள், கோச்சோழர் குலத்தரசு கொடுத்தார் போலுங் குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த னாரே. 8

பொங்கரவர் புலித்தோலர் புராணர் மார்பிற் பொறிகிளர் வெண் பூணநூல் புனிதர் போலுஞ், சங்கரவக் கடன்முகடு தட்ட விட்டுச் சதுரநடம் ஆட்டுகந்த சைவர் போலும், அங்கரவத் திருவடிக்காட் பிழைப்பத் தந்தை அந்தணனை அறஎறிந்தார்க் கருளப் போதே, கொங்கரவச் சடைக்கொன்றை கொடுத்தார் போலுங் குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த னாரே. 9

ஏவியிடர்க் கடலிடைப்பட் டிளைக்கின் றேனை இப்பிறவி யறுத்தேற வாங்கி**யாங்கே, கூவிஅம ருலகனைத்து முருவிப் போகக் குறியில்‡அறு குணத்தாண்டு கொண்டார் போலுந், தாவிமுதற் காவிரிநல் யமுனை கங்கை சரசுவதிபொற் றாமரைபுட் கரணி தெண்ணீர்க், கோவியொடு குமரிவரு தீர்த்தஞ் சூழ்ந்த குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த னாரே. 10

செறிகொண்ட சிந்தை*தனுள் தெளிந்து தேறித் தித்திக்குஞ் சிவபவனத் தமுதம்**போலும், நெறிகொண்ட குழலியுமை பாகமாக நிறைந்தமரர் கணம்வணங்க நின்றார் போலும், மறி

---

* பார்...பரந்தார்-அட்டமூர்த்தி. ** ஏற வாங்கி-பிறவிக்குழியினின்று ஏறும்படி எடுத்து. ‡அறுகுணம்-முற்றுணர்வு முதலாகிய ஆறு குணங்கள். *செறிகொண்ட சிந்தை-தியான வலிமையுள்ள மனம். **சிவபுவனத்தமுதம் என்றும் பாடம்.

கொண்ட கரதலத்தெம் மைந்தர் போலும் மதிலிலங்கைக் கோன்
மலங்க வரைக்கீ ழிட்டுக் குறிகொண்ட இன்னிசைகேட் டுகந்
தார் போலுங் குடந்தைக்கீழ்க் கோட்டத்தெம் கூத்த னாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—நாகேசுவரர், மடந்தைபாகர்; தேவி—பெரியநாயகி.

---

## 21. திருநாகேச்சரம்*

### திருநேரிசை [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கச்சைசேர் அரவர் போலுங் கறையணி மிடற்றர் போலும்
பிச்சைகொண் டுண்பர் போலும் பேரரு ளாளர் போலும்
இச்சையால் மலர்கள் தூவி இரவோடு பகலுந் தம்மை
நச்சுவார்க் கினியர் போலும் நாகஈச் சரவ னாரே. 1

வேடுறு வேட ராகி விசயனோ டெய்தார் போலும்
காடுறு பதியர் போலுங் கடிபுனற் கங்கை நங்கை
சேடெறி சடையர் போலுந் தீவினை தீர்க்க வல்ல
நாடறி புகழர் போலும் நாகஈச் சரவ னாரே. 2

கற்றுணை வில்ல தாகக் கடியரண் செற்றார் போலும்
பொற்றுணைப் பாதர் போலும் புலியத ளுடையர் போலும்
சொற்றுணை மாலை கொண்டு தொழுதெழு வார்கட் கெல்லாம்
நற்றுணை யாவர் போலும் நாகஈச் சரவ னாரே. 3

கொம்பனாள் பாகர் போலுங் கொடியுடை விடையர் போலும்
செம்பொனா ருருவர் போலுந் திகழ்திரு நீற்றர் போலும்
எம்பிரான் எம்மை யாளும் இறைவனே என்று தம்மை
நம்புவார்க் கன்பர் போலும் நாகஈச் சரவ னாரே. 4

கடகரி யுரியர் போலுங் கனல்மழு வாளர் போலும்
படவர வரையர் போலும் பாரிடம் பலவுங் கூடிக்
குடமுடை முழவம் ஆர்ப்பக் கூளிகள் பாட நாளும்
நடநவில் அடிகள் போலும் நாகஈச் சரவ னாரே. 5

---

* இது சண்பகவனம் எனவும் வழங்கும். திருநாகேச்சுரம் என்றும் பாடம்.

பிறையுறு சடையர் போலும் பெண்ணொரு பாகர் போலும்
மறையுறு மொழியர் போலும் மால்மறை யவன்றன் னோடு
முறைமுறை அமரர் கூடி முடிகளால் வணங்க நின்ற
நறவமர் கழலர் போலும் நாகஈச் சரவ னாரே. 6

வஞ்சகர்க் கரியர் போலும் மருவினோர்க் கெளியர் போலும்
குஞ்சரத் துரியர் போலுங் கூற்றினைக் குமைப்பர் போலும்
விஞ்சையர் இரிய அன்று வேலைவாய் வந்தெ ழுந்த
நஞ்சணி மிடற்றர் போலும் நாகஈச் சரவ னாரே. 7

போகமார் மோடி** கொங்கை புணர்தரு புனிதர் போலும்
வேகமார் விடையர் போலும் வெண்பொடி யாடு மேனிப்
பாகமா லுடையர் போலும் பருப்பத வில்லர் போலும்
நாகநா ணுடையர் போலும் நாகஈச் சரவ னாரே. 8

கொக்கரை தாளம் வீணை பாணிசெய் குழகர் போலும்
அக்கரை யணிவர் போலும் ஐந்தலை யரவர் போலும்
வக்கரை† யமர்வர் போலும் மாதரை மையல் செய்யும்
நக்கரை யுருவர் போலும் நாகஈச் சரவ னாரே. 9

வின்மையாற் புரங்கள் மூன்றும் வெந்தழல் விரித்தார் போலும்
தன்மை‡யால் அமரர் தங்கள் தலைவர்க்குந் தலைவர் போலும்
வன்மையால் மலையெ டுத்தான் வலியினைத் தொலைவித் தாங்கே
நன்மையால் அளிப்பர் போலும் நாகஈச் சரவ னாரே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நல்லர் நல்லதோர் நாகங்கொண் டாட்டுவர்
வல்லர் வல்வினை தீர்க்கும் மருந்துகள்
பல்லில் ஓடுகை யேந்திப் பலிதிரி
செல்வர் போல்திரு நாகேச் சரவரே. 1

நாவ லம்பெருந் தீவினில் வாழ்பவர்
மேவி வந்து வணங்கி வினையொடு

---

** மோடி—துர்க்கை. †வக்கரை—திருவக்கரை என்னும் தலம், ‡ தன்மை—பதித்தன்மை.

பாவ மாயின பற்றறு வித்திடும்
தேவர் போல்திரு நாகேச் சரவரே. 2

ஓத மார்கட லின்விட முண்டவர்
ஆதி யார்அய னேடம ரர்க்கெலாம்
மாதொர் கூறர் மழுவல னேந்திய
நாதர் போல்திரு நாகேச் சரவரே. 3

சந்தி ரன்னொடு சூரியர் தாமுடன்
வந்து சீர்வழி பாடுகள் செய்தபின்
ஐந்த லைஅர வின்பணி கொண்டருள்
மைந்தர் போல்மணி நாகேச் சரவரே. 4

பண்டொர் நாளிகழ் வான்பழித் தக்கனார்
கொண்ட வேள்விக் குமண்டை* யதுகெடத்
தண்ட மாவிதா தா**வின் தலைகொண்ட
செண்டர் போல்திரு நாகேச் சரவரே. 5

வம்பு பூங்குழல் மாது மறுகவோர்
கம்ப யானை யுரித்த கரத்தினர்
செம்பொ னாரித ழிம்மலர்ச் செஞ்சடை
நம்பர் போல்திரு நாகேச் சரவரே. 6

மானை யேந்திய கையினர் மையறு
ஞானச் சோதியர் ஆதியர் நாமந்தான்
ஆன அஞ்செழுத் தோதவந் தண்ணிக்கும்†
தேனர் போல்திரு நாகேச் சரவரே. 7

கழல்கொள் காலினர் காலனைக் காய்ந்தவர்
தழல்கொள் மேனியர் சாந்தவெண் ணீறணி
அழகர் ஆல்நிழற் கீழ்அற மோதிய
குழகர் போல்குளிர் நாகேச் சரவரே. 8

வட்ட மாமதில் மூன்றுடன் வல்லரண்
சுட்ட செய்கைய ராகிலுஞ் சூழ்ந்தவர்
குட்ட‡ வல்வினை தீர்த்துக் குளிர்விக்கும்
சிட்டர் போல்திரு நாகேச் சரவரே. 9

---

* குமண்டை – செருக்குச் செயல். ** விதாதா – பிரமன்.
† அண்ணிக்கும் – இனிக்கும். ‡ குட்டம் – ஆழம்.

தூர்த்தன் தோள்முடி தாளுந் தொலையவே
சேர்த்தி னார்திருப் பாதத் தொருவிரல்
ஆர்த்து வந்தல கத்தவ ராடிடும்
தீர்த்தர் போல்திரு நாகேச் சரவரே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

தாயவனை* வானோர்க்கும் ஏனோ ருக்குந் தலையவனை மலையவனை உலக மெல்லாம், ஆயவனைச் சேயவனை அணியான் தன்னை அழலவனை நிழலவனை அறிய வொண்ணா, மாயவனை மறையவனை மறையோர் தங்கள் மந்திரனைத் தந்திரனை வளராநின்ற, தீயவனைத் திருநாகேச் சரத்து ளானைச் சேராதார் நன்னெறிக்கட் சேரா தாரே. 1

உரித்தானை மதவேழந் தன்னை மின்னா ரொளிமுடியெம் பெருமானை உமையோர் பாகந், தரித்தானைத் தரியலர்தம் புரமெய் தானைத் தன்னடைந்தார் தம்வினைநோய் பாவமெல்லாம், அரித்தானை ஆலதன்கீழ் இருந்து நால்வர்க் கறம்பொருள்வீ டின்பமா றங்கம் வேதந், தெரித்தானை**த் திருநாகேச் சரத்து ளானைச் சேராதார் நன்னெறிக்கட் சேராதாரே. 2

காரானை உரிபோர்த்த கடவுள் தன்னைக் காதலித்து நினையாத கயவர் நெஞ்சில், வாரானை மதிப்பவர்தம் மனத்து ளானை மற்றொருவர் தன்னொப்பா ரொப்பி லாத, ஏரானை இமையவர்தம் பெருமான் தன்னை இயல்பாகி உலகெலாம் நிறைந்து மிக்க, சீரானைத் திருநாகேச் சரத்து ளானைச் சேராதார் நன்னெறிக்கட் சேரா தாரே. 3

தலையானை எவ்வுலகுந் தானா னானைத் தன்னுருவம் யாவர்க்கும் அறிய வொண்ணா, நிலையானை நேசர்க்கு நேசன் தன்னை நீள்வான முகடதனைத் தாங்கி நின்ற, மலையானை வரியரவு நாணாக் கோத்து வல்லரசுரர் புரமூன்றும் மடிய எய்த, சிலையானைத் திருநாகேச் சரத்து ளானைச் சேராதார் நன்னெறிக்கட் சேரா தாரே.

---

* தாயவன்–தாய் போன்றவன். ** தெரித்தான்–அறிவித்தவன்.

மெய்யானைத் தன்பக்கல் விரும்பு வார்க்கு விரும்பாத அரும் பாவி யவர்கட் கென்றும், பொய்யானைப்* புறங்காட்டி லாட லானைப் பொன் பொதிந்த† சடையானைப் பொடிகொள் பூதிப், பையானைப் பையரவ மசைத்தான் தன்னைப் பரந்தானைப் பவள மால் வரைபோல் மேனிச், செய்யானைத் திருநாகேச் சரத்து ளானைச் சேராதார் நன்னெறிக்கட் சேரா தாரே. 5

துறந்தானை அறம்புரியாத் துரிசர் தம்மைத் தோத்திரங்கள் பலசொல்லி வானோ ரேத்த, நிறைந்தானை நீர்நிலந்தீ வெளிகாற் றாகி நிற்பனவும் நடப்பனவு மாயி னானை, மறந்தானைத் தன்னி னையா வஞ்சர்தம்மை அஞ்செழுத்தும் வாய்நவில வல்லோர்க் கென்றுஞ், சிறந்தானைத் திருநாகேச் சரத்து ளானைச் சேராதார் நன்னெறிக்கட் சேரா தாரே. 6

மறையானை மால்விடையொன் றூர்தி யானை மால்கடல்நஞ் சுண்டானை வானோர் தங்கள், இறையானை யென்பிறவித் துயர் தீர்ப் பானை இன்னமுதை மன்னியசீர் ஏகம் பத்தில், உறை வானை ஒருவருமீங் கறியா வண்ணம் என்னுள்ளத் துள்ளே யொளித்து வைத்த, சிறையானைத் திருநாகேச் சரத்து ளானைச் சேராதார் நன்னெறிக்கட் சேரா தாரே. 7

எய்தானைப் புரமூன்றும் இமைக்கும் போதில் இருவிசும்பில் வருபுனலைத் திருவார் சென்னிப், பெய்தானைப் பிறப்பிலியை அறத்தில் நில்லாப் பிரமன்தன் சிரமொன்றைக் கரமொன்றினால், கொய்தானைக் கூத்தாட வல்லான் தன்னைக் குறியிலாக் கொடி யேனை அடியே னாகச், செய்தானைத் திருநாகேச் சரத்து ளானைச் சேராதார் நன்னெறிக்கட் சேரா தாரே. 8

அளியானை அண்ணிக்கும் ஆன்பால் தன்னை வான்பயிரை அப்பயிரின் வாட்டந் தீர்க்குந், துளியானை அயன்மாலுந் தேடிக் காணாச் சுடரானைத் துரிசறத் தொண்டு பட்டார்க், கெளியானை யாவர்க்கும் அரியான் தன்னை இன்கரும்பின் தன்னுள்ளா லிருந்த தேறல், தெளியானைத் திருநாகேச் சரத்து ளானைச் சேரா தார் நன்னெறிக்கட் சேரா தாரே. 9

---

* பொய்யான்—விளங்காதவன். † பொலிந்த என்றும் பாடம்.

சீர்த்தானை யுலகேழுஞ் சிறந்து போற்றச் சிறந்தானை நிறைந் தோங்கு செல்வன் தன்னைப், பார்த்தானை மதனவேள் பொடி யாய் வீழப் பனிமதியஞ் சடையானைப் புனிதன் தன்னை, ஆர்த் தோடி மலையெடுத்த அரக்கன் அஞ்ச அருவிரலால் அடர்த்தானை அடைந்தோர் பாவந், தீர்த்தானைத் திருநாகேச் சரத்து ளானைச் சேராதார் நன்னெறிக்கட் சேரா தாரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி—சண்பகாரணியர், நாகநாதேசுவரர்;
தேவி—குன்றுமுலை நாயகி.

## 22. திருவிடைமருதூர்

### திருநேரிசை [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

காடுடைச் சுடலை நீற்றர் கையில்வெண் டலையர் தையல்
பாடுடைப் பூதஞ் சூழப் பரமனார் மருத வைப்பில்
தோடுடைக் கைதை யோடு சூழ்கிடங் கதனைச் சூழ்ந்த
ஏடுடைக் கமல வேலி இடைமரு திடங்கொண் டாரே. 1

மூந்தையார் முந்தி யுள்ளார் மூவர்க்கு முதல்வ ரானார்
சந்தியார் சந்தி யுள்ளார்* தவநெறி தரித்து நின்றார்
சிந்தையார் சிந்தை யுள்ளார் சிவநெறி யனைத்து மானார்
எந்தையார் எம்பி ரானார் இடைமரு திடங்கொண் டாரே. 2

காருடைக் கொன்றை மாலைக் கதிர்மணி அரவி னோடு
நீருடைச் சடையுள் வைத்த நீதியார் நீதி யாய
போருடை விடையொன் றேற வல்லவர் பொன்னித் தென்பால்
ஏருடைக் கமல மோங்கும் இடைமரு திடங்கொண் டாரே. 3

விண்ணினார் விண்ணின் மிக்கார் வேதங்கள் நான்கும் அங்கம்
பண்ணினார் பண்ணின் மிக்க பாடலார் பாவந் தீர்க்குங்
கண்ணினார் கண்ணின் மிக்க நுதலினார் காமற் காய்ந்த**
எண்ணினார் எண்ணின் மிக்கார் இடைமரு திடங்கொண் டாரே. 4

* சந்தியார் அந்தியுள்ளார் என்றும் பாடம். ** நுதலினாற் காமற் காய்ந்த என்றும் பாடம்.

வேதங்கள் நான்குங் கொண்டு விண்ணவர் பரவி யேத்தப்
பூதங்கள் பாடி யாட லுடையவன் புனிதன் எந்தை
பாதங்கள் பரவி நின்ற பத்தர்கள் தங்கள் மேலை
ஏதங்கள்¶ தீர நின்றார் இடைமரு திடங்கொண் டாரே. 5

பொறியர வரையி லார்த்துப் பூதங்கள் பலவுஞ் சூழ
முறிதரு வன்னி கொன்றை முதிர்சடை முழ்க வைத்து
மறிதரு கங்கை தங்க வைத்தவர் ஏத்தி சையும்
எறிதரு புனல்கொள் வேலி இடைமரு திடங்கொண் டாரே. 6

படரொளி சடையி னுள்ளாற்§ பாய்புனல் அரவி னோடு
சுடரொளி மதியம் வைத்துத் தூவொளி தோன்றும் எந்தை
அடரொளி விடையொன் றேற வல்லவர் அன்பர் தங்கள்
இடர்‡வை கெடவு நின்றார் இடைமரு திடங்கொண் டாரே. 7

கமழ்தரு சடையி னுள்ளாற் கடும்புனல் அரவி னோடு
தவழ்தரு மதியம் வைத்துத் தன்னடி பலரும் ஏத்த
மழுவது வலங்கை யேந்தி மாதொரு பாக மாகி
எழில்தரு பொழில்கள் சூழ்ந்த இடைமரு திடங்கொண் டாரே. 8

பொன்திகழ் கொன்றை மாலை புதுப்புனல் வன்னி மத்தம்
மின்திகழ் சடையில் வைத்து மேதகத் தோன்று கின்ற
அன்றவர் அளக்க லாகா அனலெரி யாகி நீண்டார்
இன்றுட னுலக மேத்த இடைமரு திடங்கொண் டாரே. 9

மலையுடன் விரவி நின்று மதியிலா அரக்கன் நூக்கத்
தலையுட னடர்த்து மீண்டே தலைவனாய் அருள்கள் நல்கிச்
சிலையுடை மலையை வாங்கித் திரிபுர மூன்றும் எய்தார்
இலையுடைக் கமல வேலி இடைமரு திடங்கொண் டாரே. 10

திருச்சிற்றம்பலம்

---

திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பாச மொன்றில ராய்*ப்பல பத்தர்கள்
வாச நாண்மலர் கொண்டடி வைகலும்

---

¶ மேலை ஏதங்கள்—மூலமலங்கள்; பழயவினை. § சடையினுள்ளார் என்றும் பாடம். ‡ இடர்—பிறவித் துன்பம், *பாசம் ஒன்றிலராய்—சீவன் முத்தராயினும்.

ஈச னெம்பெரு மான்இடை மருதினில்
பூச நாம்புகு தும்புன லாடவே.* 1

மறையின் நாண்மலர் கொண்டடி வானவர்
முறையி னால்முனி கள்வழி பாடுசெய்
இறைவன் எம்பெரு மான்இடை மருதினில்
உறையும் ஈசனை உள்குமெம் உள்ளமே. 2

கொன்றை மாலையுங் கூவிள மத்தமும்
சென்று சேரத் திகழ்சடை வைத்தவன்
என்றும் எந்தை பிரான்இடை மருதினை
நன்று கைதொழு வார்வினை நாசமே. 3

இம்மை வானவர் செல்வம் விளைத்திடும்
அம்மை யேற்பிற வித்துயர் நீத்திடும்
எம்மை யாளும் இடைமரு தன்கழல்
செம்மை யேதொழு வார்வினை சிந்துமே. 4

வண்ட ணைந்தன வன்னியுங் கொன்றையும்
கொண்ட ணிந்த சடைமுடிக் கூத்தனார்
எண்டி சைக்கும் இடைமரு தாஎன
விண்டு போய்அறும் மேலை வினைகளே. 5

ஏற தேறும் இடைமரு தீசனார்
கூறு வார்வினை தீர்க்குங் குழகனார்
ஆறு செஞ்சடை வைத்த அழகனார்க்(கு)
ஊறி யூறி உருகுமென் உள்ளமே. 6

விண்ணு ளாரும் விரும்பப் படுபவர்
மண்ணு ளாரும் மதிக்கப் படுபவர்
எண்ணி னார்பொழில் சூழிடை மருதினை
நண்ணி னாரைநண் ணாவினை நாசமே. 7

வெந்த வெண்பொடிப் பூசும் விகிர்தனார்
கந்த மாலைகள் சூடுங் கருத்தனார்
எந்தை யென்னிடை மருதினில் ஈசனைச்
சிந்தை யால்நினை வார்வினை தேயுமே. 8

* பூசம் நாம் புகுதும் புனல் ஆடவே-தைப்பூசத் தீர்த்த விழாவைப் குறிப்பது.

வேத மோதும் விரிசடை அண்ணலார்
பூதம் பாடநின் றாடும் புனிதனார்
ஏதந் தீர்க்கும் இடைமரு தாளென்று
பாத மேத்தப் பறையுநம் பாவமே. 9

கனியி னுங்கட்டி பட்டக ரும்பினும்
பனிம லர்குழற் பாவைநல் லாரினும்
தனிமு டிகவித் தாளு மரசினும்
இனியன் தன்னடைந் தார்க்கிடை மருதனே.‡ 10

முற்றி லாமதி சூடும் முதல்வனார்
ஒற்றி னார்மலை யாலரக் கன்முடி
எற்றி னார்கொடி யாரிடை மருதினைப்
பற்றி னாரைப்பற் றாவினைப் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

---

## திருக்குறுந்தொகை *

திருச்சிற்றம்பலம்

பறையின் ஓசையும் பாடலின் ஓசையும்
மறையின் ஓசையும் வைகும்அ யலெலாம்
இறைவன் எங்கள் பிரான்இடை மருதினில்
உறையும் ஈசனை உள்குமென் உள்ளமே. 1

மனத்துள் மாயனை** மாசறு சோதியைப்
புனிற்றுப் பிள்ளைவெள் ளைம்மதி சூடியை
எனக்குத் தாயைஎம் மான்இடை மருதனை
நினைத்திட் டூறிநி றைந்ததென் உள்ளமே. 2

வண்ட ணைந்தன வன்னியும் மத்தமும்
கொண்ட ணிந்த சடைமுடிக் கூத்தனை
எண்டி சைக்கும் இடைமரு தாளென
விண்டு போயறும் மேலைவி னைகளே. 3

‡இச்செய்யுள் மக்கள் இனியவை என்று நினைக்கும் அனைத்தினும் இறைவர் இனியர் என்பதைக் குறிக்கும். *இப்பதிகத்தில் 7, 8 9, 10, 11-ம் செய்யுட்கள் சிதைந்துபோயின. ** மாயன்—மறைந்துள்ளவன்.

துணையி லாமையில் தூங்கிருட் பேய்களோ
டணைய லாவதெ மக்கரி தேயெனு
இணையி லாஇடை மாமரு தில்லெழு
பணையி லாகமஞ்‡ சொல்லுந்தன் பாங்கிக்கே. 4

மண்ணை யுண்டமால் காணன்ம லரடி
விண்ணை விண்டயன் காணன்வி யன்முடி
மொண்ணை மாமரு தாளென்றென் மொய்குழல்
பண்ணை யாயமுந் தானும் பயிலுமே. 5

மங்கை காணக் கொடார்மண மாலையைக்
கங்கை காணக் கொடார்முடிக் கண்ணியை
நங்கை மீர்இடை மருதர்இந் நங்கைக்கே
எங்கு வாங்கிக் கொடுத்தார் இதழியே ¶ 6-11

திருச்சிற்றம்பலம்

---

## திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

சூலப் படையுடையார் தாமே போலுஞ் சுடர்த்திங்கட் கண்ணி யுடையார் போலும், மாலை மகிழ்ந்தொருபால் வைத்தார் போலும் மந்திரமுந் தந்திரமு மானார் போலும், வேலைக் கடல்நஞ்ச முண்டார் போலும் மேல்வினைகள் தீர்க்கும் விகிர்தர் போலும், ஏலக் கமழ்குழலாள் பாகர் போலும் இருடமருது மேவிய ஈச னாரே. 1

காரார் கமழ்கொன்றைக் கண்ணி போலுங் காரானை யீரு ரிவை போர்த்தார் போலும், பாரார் பரவப் படுவார் போலும் பத்து*ப் பல்லூழி பரந்தார் போலும், சீரால் வணங்கப் படுவார் போலுந் திசையனைத்து மாய்மற்று மானார் போலும், ஏரார் கமழ் குழலாள் பாகர் போலும் இடைமருது மேவிய ஈச னாரே. 2

வேதங்கள் வேள்வி பயந்தார் போலும் விண்ணுலகும் மண் ணுலகு மானார் போலும், பூதங்க ளாய புராணர் போலும் புகழ வளரொளியாய் நின்றார் போலும், பாதம் பரவப் படுவார்

---

‡ ஆகமம்-நீதி. ¶இதழி-இங்குஅடையாளமாலை; பசலை நிறமு மாம். *பத்து-மிகுதி குறித்தது.

போலும் பத்தர்களுக் கின்பம் பயந்தார் போலும், ஏதங்க ளான கடிவார் போலும் இடைமருது மேவிய ஈச னாரே. 3

திண்குணத்தார் தேவர் கணங்க ளேத்தித் திசைவணங்கச் சேவடியை வைத்தார் போலும், விண்குணத்தார் வேள்வி சிதைய நூறி வியன்கொண்டல் மேற்செல் விகிர்தர்போலும், பண்குணத் தார் பாடலோ டாட லோவாப் பரங்குன்றம் மேய பரமர் போலும், எண்குணத்தார் எண்ணுயிரவர் போலும் இடைமருது மேவிய ஈச னாரே. 4

ஊக* முகிலுரிஞ்சு சோலை சூழ்ந்த உயர்பொழி லண்ணாவி லுறைகின் றாரும், பாகம் பணிமொழியாள்§ பாங்க ராகிப் படு வெண் டலையிற் பலிகொள் வாரும், மாகமடை மும்மதிலும் எய் தார் தாமு மணிபொழில்சூழ் ஆரூர் உறைகின் றாரும், ஏகம்பம் மேயாரு மெல்லா மாவர் இடைமருது மேவிய ஈச னாரே. 5

ஐயிரண்டும் ஆறொன்று மானார் போலும் அறுமூன்றும் நான்மூன்று மானார் போலும்,† செய்வினைகள் நல்வினைக ளானார் போலுந் திசையனைத்து மாய்நிறைந்த செல்வர் போலும், கொய் மலராங் கொன்றைச் சடையார் போலுங் கூத்தாட வல்ல குழகர் போலும், எய்யவந்த காமனையுங் காய்ந்தார் போலும் இடை மருது மேவிய ஈச னாரே. 6

பிரியாத குணமுயிர்கட் கஞ்சோ டஞ்சாய்ப் பிரிவுடைய குணம் பேசிற் பத்தோ டொன்றாய், விரியாத குணமொருகால் நான்கே யென்பர் விரிவிலாக் குணநாட்டத் தாறே யென்பர், தெரிவாய குணமஞ்சுஞ் சமிதை யஞ்சும் பதமஞ்சுங் கதியஞ்சுஞ் செப்பி னாரும், எரியாய தாமரை‡மே லியங்கி னாரும் இடைமருது மேவிய ஈச னாரே. 7

தோலிற் பொலிந்த வுடையார் போலுஞ் சுடர்வா யரவசைத்த சோதி போலும், ஆலம் அமுதாக வுண்டார் போலும் அடியார்கட்

* ஊகம்–குரங்கு. § பனிமொழியாள் என்றும் பாடம். † ஐயி ரண்டும் ஆறொன்றும்-16 கலைப்பிரசாத மந்திரம். அறுமூன்று–18 புராணங்கள். நான்மூன்று–12; மூலமந்திரத்துடன் கூடிய சங்கிதா மந்திரம். ‡ எரியாய தாமரை – இருதய தாமரை என்பர்.

காமூத மானார் போலும், காலனையுங் காய்ந்த கழலார் போலுங் கயிலாயந் தம்மிடமாக் கொண்டார் போலும், ஏலங் கமழ்குழலாள் பாகர் போலும் இடைமருது மேவிய ஈச னாரே. 8

பைந்தளிர்க் கொன்றையந் தாரார் போலும் படைக்கணாள் பாக முடையார் போலும், அந்திவாய் வண்ணத் தழகர் போலு மணிநீல கண்ட முடையார் போலும், வந்த வரவுஞ் செலவு§ மாகி மாறாதென் னுள்ளத் திருந்தார் போலும், எந்தம் மிடர்தீர்க்க வல்லார் போலும் இடைமருது மேவிய ஈச னாரே. 8

கொன்றையங் கூவிள மாலை தன்னைக் குளிர்சடைமேல் வைத்துகந்த கொள்கை யாரும், நின்ற அனங்கனை நீறா நோக்கி நெருப்புருவ மாய்நின்ற நிமல னாரும், அன்ற அரக்கன் அலறி வீழ அருவரையைக் காலா லழுத்தி னாரும், என்று மிடுபிச்சை யேற்றுண் பாரும் இடைமருது மேவிய ஈச னாரே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

ஆறு சடைக்கணிவர் அங்கைத் தீயர் அழகர் படையுடைய ரம்பொற் றோள்மேல், நீறு தடவந் திடப மேறி நித்தம் பலிகொள் வர் மொய்த்த பூதம், கூறுங் குணமுடையர் கோவ ணத்தர் கோடால* வேடத்தர் கொள்கை சொல்லின், ஈறும் நடுவும் முதலு மாவார் இடைமருது மேவி யிடங்கொண் டாரே. 1

மங்குல் மதிவைப்பர் வான நாடர் மடமா னிடமுடையர் மாத ரானைப், பங்கில் மிகவைப்பர் பால்போல் நீற்றர் பளிக்கு வடம்புனைவர் பாவ நாசர், சங்கு திரையுகளுஞ் சாய்க்கா டாள் வர் சரிதை பலவுடையர் தன்மை சொல்லின், எங்கும் பலிதிரிவர் என்னுள் நீங்கார் இடைமருது மேவி யிடங்கொண் டாரே. 2

ஆல நிழலிருப்பர் ஆகா யத்தர் அருவரையி னுச்சியர் ஆணர் பெண்ணர், காலம் பலகழித்தார் கறைசேர் கண்டர் கருத்துக்குச் சேயார்தாங் காணா தார்க்குக், கோலம் பலவுடையர் கொல்லை

---

§ வரவு செலவு-பிறப்பு இறப்பு: படைத்தல், அழித்தலுமாம்
* கோடாலம்-எலும்பு மாலை; கங்காளம்.

ஏற்றர் கொடுமழுவர் கோழம்பம் மேய ஈசர், ஏல மணநாறும் ஈங்கோய் நீங்கார் இடைமருது மேவி யிடங்கொண் டாரே. 3

தேசர் திறம்நினைவார் சிந்தை சேருஞ் செல்வர் திருவாரூ ரென்றும் உள்ளார், வாச மலரின்கண் மான்தோல் போர்ப்பர் மருவுங் கரிபுரியர் வஞ்சக் கள்வர், நேசர் அடைந்தார்க் கடை யாதார்க்கு நிட்டுரவர்** கட்டங்கர் நினைவார்க் கென்றும், ஈசர் புனற்பொன்னித் தீர்த்தர் வாய்த்த இடைமருது மேவி யிடங் கொண் டாரே. 4

கரப்பர் கரியமனக் கள்வர்க் குள்ளங் கரவாதே தந்நினைய கிற்பார் பாவம், துரப்பர் தொடுகடலின் நஞ்ச முண்பர் தூய மறைமொழியர் தீயா லொட்டி, நிரப்பர் புரமூன்றும் நீறு செய் வர் நீள்சடையர் பாய் விடைகொண் டெங்கும் ஐயம், இரப்பர் எமையாள்வர் என்னுள் நீங்கார் இடைமருது மேவி யிடங் கொண் டாரே. 5

கொடியார் இடபத்தர் கூத்து மாடிக் குளிர்கொன்றை மேல் வைப்பர் கோல மார்ந்த, பொடியாரு மேனியர் பூதிப் பையர் புலித்தோலர் பொங்கரவர் பூண நூலர், அடியார் குடி யாவர் அந்த ணாளர் ஆகுதியின் மந்திரத்தார் அமரர் போற்ற, இடியார் களிற்றுரியர் எவரும் போற்ற இடைமருது மேவி யிடங்கொண் டாரே. 6

பச்சை நிறமுடையர் பாலர் சாலப் பழையர் பிழையெலாம் நீக்கி யாள்வர், கச்சைக் கதநாகம் பூண்ட தோளர் கலன்ஒன்று கையேந்தி இல்லந் தோறும், பிச்சை கொளநுகர்வர் பெரியர் சாலப் பிறங்கு சடைமுடியர் பேணுந் தொண்டர், இச்சை மிகஅறிவர் என்று முள்ளார் இடைமருது மேவி யிடங்கொண் டாரே. 7

காவார் சடைமுடியர் காரோ ணத்தர் கயிலாயம் மன்னினார் பன்னு மின்சொல், பாவார் பொருளாளர் வாளார் கண்ணி பயிலுந் திருவுருவம் பாகம் மேயார், பூவார் புனலணவு புன்கூர் வாழ்வர் புரமூன்றும் ஒள்ளழலாக் காயத் தொட்ட, ஏவார் சிலை மலையர் எங்குந் தாமே இடைமருது மேவி யிடங்கொண் டாரே. 8

---

**நிட்டுரவர்–நேசமில்லார்,

புரிந்தார் நடத்தின்கட் பூத நாதர் பொழிலாரூர் புக்குறை வர் போந்து தம்மில், பிரிந்தா ரகல்வாய பேயுந் தாமும் பிரியா ரொருநாளும் பேணு காட்டில், எரிந்தா ரனலுகப்பர் ஏழி லோசை† யெவ்விடத்துந் தாமேயென் றேத்து வார்பால், இருந் தார் இமையவர்கள் போற்ற என்றும் இடைமருது மேவி யிடங் கொண் டாரே. 9

விட்டிலங்கு மாமழுவர் வேலை நஞ்சர் விடங்கர் விரிபுனல் சூழ் வெண்காட் டுள்ளார், மட்டிலங்கு தார்மாலை மார்பில் நீற்றர் மழபாடி யுள்ளுறைவர் மாகா ளத்தர், சிட்டிலங்கு வல்லரக்கர் கோனை யன்று செழுமுடியுந் தோளைந்நான் கடரக் காலால், இட் டிரங்கி மற்றவனுக் கீந்தார் வென்றி இடைமருது மேவி யிடங் கொண் டாரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி—மாகாலிங்கேசுவரர், மருதவாணர்;
தேவி—நன்முலை நாயகி.

## 23. திருத்தென்குரங்காடுதுறை*

திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]
திருச்சிற்றம்பலம்

இரங்கா வன்மனத் தார்கள் இயங்குமுப்
புரங்கா வல்அழி யப்பொடி யாக்கினன்
தரங்கா டுங்**தட நீர்ப்பொன்னித் தென்கரைக்
குரங்கா டுதுறைக் கோலக் கபாலியே. 1

முத்தி னைமணி யைப்பவ ளத்தொளிர்
தொத்தி னைச்சுடர்ச் சோதியைச் சோலைசூழ்
கொத்த லர்குரங் காடு துறையுறை
அத்த னென்னஅண் ணித்திட் டிருந்ததே. 2

குளிர்பு னற்குரங் காடுது றையனைத்
தளிர்நி றத்தையல் பங்கனைத் தண்மதி
ஒளிய னைநினைந் தேனுக்கென் னுள்ளமும்
தெளிவி னைத்தெளி யத்தெளிந் திட்டதே. 3

† ஏழில் ஓசை—துத்தம் முதலிய ஏழிசையோசை. *'ஆடுதுறை' என வழங்கப்பெறும். **தரங்கு—தரங்கம்: அலை.

மணவன் காண்மலை யாள்நெடு மங்கலக்
கணவன் காண்கலை ஞானிகள் காதலெண்
குணவன் காண்குரங் காடு துறைதனில்
அணவன் காண்அன்பு செய்யும் அடியர்க்கே. 4

ஞாலத் தார்தொழு தேத்திய நன்மையன்
காலத் தான்உயிர் போக்கிய காலினன்
நீலத் தார்மிடற் றன்வெள்ளை நீறணி
கோலத் தான்குரங் காடு துறையனே. 5

ஆட்டி னான்முன் அமணரோ டென்றனைப்
பாட்டி னான்றன* பொன்னடிக் கின்னிசை
வீட்டி னான்வினை மெய்யடி யாரொடும்
கூட்டி னான்குரங் காடு துறையனே. 6

மாத்தன் தான்மறை யார்முறை யான்மறை
ஓத்தன் தாரகன் தன்னுயி ருண்டபெண்
போத்தன் தானவன் பொங்கு சினந்தணி
கூத்தன் தான்குரங் காடு துறையனே. 7

நாடி நந்தம ராயின தொண்டர்காள்
ஆடு மின்அழு மின்தொழு மின்அடி
பாடு மின்பர மன்பயி லும்மிடம்
கூடு மின்குரங் காடு துறையையே. 8

தென்றல் நன்னெடுந் தேருடை யானுடல்
பொன்ற வெங்கனல் பொங்க விழித்தவன்
அன்ற அந்தக னைஅயிற் சூலத்தால்
கொன்ற வன்குரங் காடு துறையனே. 9

நற்ற வஞ்செய்த நால்வர்க்கு நல்லறம்
உற்ற நன்மொழி** யாலருள் செய்தநல்
கொற்ற வன்குரங் காடு துறைதொழப்
பற்றுந் தீவினை யாயின பாறுமே. 10

கடுத்த தேரரக் கன்கயி லைம்மலை
எடுத்த தோள்தலை யிற்றல றவ்விரல்

* தன—தன்னுடைய. ** உற்றவண் மொழி என்றும் பாடம்.

அடுத்த லும்மவன் இன்னிசை கேட்டருள்
கொடுத்த வன்குரங் காடு துறையனே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—ஆபத்சகாயேசுவரர்; தேவி—பவளக்கொடியம்மை.

## 24. திருநீலக்குடி*

### திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வைத்த மாடும் மனைவியும் மக்கள்நீர்
செத்த போது செறியார் பிறிவதே
நித்த நீலக் குடியர னைநினை
சித்த மாகிற் சிவகதி சேர்திரே. 1

செய்ய மேனியன் தேனொடு பால்தயிர்
நெய்ய தாடிய நீலக் குடியரன்
மைய லாய்மற வாமனத் தார்க்கெலாம்
கையில் ஆமல கக்கனி யொக்குமே. 2

ஆற்ற நீள்சடை ஆயிழை யாளொரு
கூற்றன் மேனியிற் கோலம தாகிய
நீற்றன் நீலக் குடியுடை யானடி
போற்றி னாரிடர் போக்கும் புனிதனே. 3

நாலு வேதியர்க் கின்னருள் நன்னிழல்
ஆலன் ஆலநஞ் சுண்டகண் டத்தமர்
நீலன் நீலக் குடியுறை நின்மலன்
காலன் ஆருயிர் போக்கிய காலனே. 4

நேச நீலக் குடியர னேயெனா
நீச ராய்நெடு மால்செய்த மாயத்தால்
ஈச னோர்சரம் எய்ய எரிந்துபோய்
நாச மானார் திரிபுர நாதரே. 5

கொன்றை சூடியைக் குன்ற மகளொடும்
நின்ற நீலக் குடியர னேயெனீர்
என்றும் வாழ்வுகந் தேயிறு மாக்குநீர்
பொன்றும் போது நுமக்கறி வொண்ணுமே. 6

---

* 'தென்னங் குடி' என வழங்கப்பெறும்.

கல்லி னோடெனைப் பூட்டி அமண்கையர்
ஒல்லை நீர்புக நூக்தஎன் வாக்கினால்
நெல்லு நீள்வயல் நீலக் குடியரன்
நல்ல நாமம் நவிற்றிஉய்ந் தேனன்றே.* 7

அழகி யோம்இளை யோம்என மாசையால்
ஒழுகி ஆவி உடல்விடல் முன்னமே
நிழல தார்பொழில் நீலக் குடியரன்
கழல்கொள் சேவடி கைதொழு துய்ம்மினே. 8

கற்றைச் செஞ்சடைக் காய்கதிர் வெண்திங்கள்
பற்றிப் பாம்புடன் வைத்த பராபரன்
நெற்றிக் கண்ணுடை நீலக் குடியரன்
சுற்றித் தேவர் தொழுங்கழற் சோதியே. 9

தருக்கி வெற்பது தாங்கிய வீங்குதோள்
அரக்க னாருடல் ஆங்கொர் விரலினால்
நெரித்து நீலக் குடியரன் பின்னையும்
இரக்க மாய்அருள் செய்தனன் என்பரே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—நீலகண்டேசுவரர்; தேவி—உமையம்மை.

---

## 25. திருநல்லம்§

திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கொல்லத் தான்நம னார்தமர் வந்தக்கால்
இல்லத் தார்செய்ய லாவதென் ஏழைகாள்
நல்லத் தான்நமை யாளுடை யான்கழல்
சொல்லத் தான்வல்லி ரேல்துயர் தீருமே. 1

பொக்கம்‡ பேசிப் பொழுது கழியாதே
துக்கந் தீர்வகை சொல்லுவன் கேண்மினோ

---

* இச்செய்யுள் சமணர்கள் சுவாமிகளைக் கற்றூணில் பிணைத்துக் கடலில் வீழ்த்தியபோது அக்கல் மிதந்ததைக் குறிக்கும் அகச்சான்று. § 'கோனேரிராஜபுரம்' என வழங்கப்பெறும். ‡பொக்கம்—பொய்.

தக்கன் வேள்வி தகர்த்த தழல்வண்ணன்
நக்கன் சேர்நல்லம் நண்ணுதல் நன்மையே. 2

பிணிகொள் வார்குழற் பேதையர் காதலால்
பணிகள் மேவிப் பயனில்லைப் பாவிகாள்
அணுக வேண்டில் அரன்நெறி யாவது
நணுகு நாதன் நகர்திரு நல்லமே. 3

தமக்கு நல்லது தம்முயிர் போயினல்
இமைக்கும் போதும் இராதிக் குரம்பைதான்
உமைக்கு நல்லவன் தானுறை யும்பதி
உமக்கு நல்லது நல்லம் அடைவதே. 4

உரைத ளர்ந்துட லார்நடுங் காமுனம்
நரைவி டையுடை யானிடம் நல்லமே
பரவு மின்பணி மின்பணி வாரோடே
விரவு மின்விர வாரை விடுமினே. 5

அல்ல லாகஐம் பூதங்க ளாட்டினும்
வல்ல வாறு சிவாய நமவென்று
நல்லம் மேவிய நாத னடிதொழ
வெல்ல வந்த வினைப்பகை வீடுமே.* 6

மாத ராரொடு மக்களுஞ் சுற்றமும்
பேத மாகிப் பிரிவதன் முன்னமே
நாதன் மேவிய நல்லம் நகர்தொழப்
போது மின்எழு மின்புக லாகுமே. 7

வெம்மை யானவி னைக்கடல் நீங்கினீர்
செம்மை யாய சிவகதி சேரலாம்
சும்மை யார்மலர் தூவித் தொழுமினோ
நம்மை யாளுடை யானிடம் நல்லமே. 8

கால மான கழிவதன் முன்னமே
ஏலு மாறு வணங்கிநின் றேத்துமின்
மாலும் மாமல ரானொடு மாமறை
நாலும் வல்லவர் கோனிடம் நல்லமே. 9

* இச்செய்யுள் ஐந்தெழுத்தின் பெருமையினை உணர்த்தும்.

மல்லை மல்கிய தோளரக் கன்வலி
ஒல்லை யில்லொழித் தான்உறை யும்பதி
நல்ல நல்லம் எனும்பெயர் நாவினால்
சொல்ல வல்லவர் தூநெறி சேர்வரே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—உமாமகேசுவரர்; தேவி—மங்களநாயகி.

---

## 26. திருக்கோழம்பம்

### திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வேழம் பத்தைவர்* வேண்டிற்று வேண்டிப்போய்
ஆழம் பற்றிவீழ் வார்பல வாதர்கள்
கோழம் பத்துறை கூத்தன் குரைகழல்
தாழும் பத்தர்கள் சாலச் சதுரரே. 1

கயிலை நன்மலை யாளுங் கபாலியை
மயிலி யல்மலை மாதின் மணாளனைக்
குயில்ப யில்பொழிற் கோழம்ப மேயஎன்
உயிரி னைநினைந் துள்ளம் உருகுமே. 2

வாழும் பான்மைய ராகிய வான்செல்வம்
தாழும் பான்மைய ராகித்தம் வாயினால்
தாழும் பூமணம் நாறிய தாழ்பொழில்
கோழம் பாஎனக் கூடிய செல்வமே. 3

பாட லாக்கிடும் பண்ணொடு பெண்ணிவள்
கூட லாக்கிடுங் குன்றின் மணற்கொடு
கோடல்** பூத்தலர் கோழம்பத் துள்மகிழ்ந்
தாடுங் கூத்தனுக் கன்புபட் டாளன்றே. 4

தளிர்கொள் மேனியள் தான்மிக அஞ்சவோர்
பிளிறு வாரணத் தீருரி போர்த்தவன்
குளிர்கொள் நீர்வயற் கோழம்பம் மேவினான்
நளிர்கொள் நீர்சடை மேலு நயந்ததே. 5

---

* வேழம்பத்து ஐவர் – ஐம்புலங்களாலாகிய யானைகள்.
** கோடல் – வெண்காந்தள்.

நாத ராவர் நமக்கும் பிறர்க்குந்தாம்
வேத நாவர் விடைக்கொடி யார்வெற்பில்
கோதை மாதொடுங் கோழம்பங் கோயில்கொண்
டாதி பாத மடையவல் லார்களே. 6

முன்னை நான்செய்த பாவம் முதலறப்
பின்னை நான்பெரி தும்மருள் பெற்றதும்*
அன்ன மார்வயற் கோழம்பத் துள்ளமர்
பின்னல் வார்சடை யானைப் பிதற்றியே. 7

ஏழை மாரிடம் நின்றிரு கைக்கொடுண்
கோழை மாரொடுங் கூடிய குற்றமாங்
கூழை** பாய்வயற் கோழம்பத் தானடி
ஏழை யேன்முன் மறந்தங் கிருந்ததே. 8

ஆரவ ணைப்பயில் மாலயன் வந்தடி
பரவ னைப்பர மாம்பரஞ் சோதியைக்
குரவ னைக்குர வார்பொழிற் கோழம்பத்
தரவ னையொரு வர்க்குணர் வொண்ணுமே. 9

சமர சூரபன் மாவைத்¶ தடிந்தவேற்
குமரன் தாதைநற் கோழம்பம் மேவிய
அமரர் கோவினுக் கன்புடைத் தொண்டர்கள்
அமர லோகம தாளுடை யார்களே. 10

துட்ட னாகி மலையெடுத் தஃதின்கீழ்ப்
பட்டு வீழ்ந்து படர்ந்துய்யப் போயினான்
கொட்டம்§ நாறிய கோழம்பத் தீசனென்(று)
இட்டகீத மிசைத்த அரக்கனே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—கோகிலேசுவரர்; தேவி—சௌந்தரநாயகி.

---

*பெற்றது என்றும் பாடம். ** கூழை—சேறு. ¶ சூரபன்மா—சூரபன்மன். இவன் 'சூரன்,' 'பதுமன்' என்னும் இரு பெயர்களைக் கொண்ட ஒரு பெரிய வடிவுடைய அரக்கன். சூரவன் மார்பைத் என்றும் பாடம். § கோட்டம்—குராமலர்.

## 27. திருவாவடுதுறை

### திருநேரிசை [4-ம் திருமுறை]

### திருச்சிற்றம்பலம்

மாயிரு ஞால மெல்லாம் மலரடி வணங்கும் போலும்
பாயிருங் கங்கை யாளைப் படர்சடை வைப்பர் போலும்
காயிரும் பொழில்கள் சூழ்ந்த கழுமல வூரர்*க் கம்பொன்
ஆயிரங்** கொடுப்பர் போலும் ஆவடு துறை†ய னாரே. 1

மடந்தைபா கத்தர் போலும் மான்மறிக் கையர் போலும்
குடந்தையிற் குழகர் போலுங் கொல்புலித் தோலர் போலும்
கடைந்தநஞ் சுண்பர் போலுங் காலனைக் காய்வர் போலும்
அடைந்தவர்க் கன்பர் போலும் ஆவடு துறைய னாரே. 2

உற்றநோய் தீர்ப்பர் போலும் உறுதுணை யாவர் போலும்
செற்றவர் புரங்கள் மூன்றுந் தீயெழச் செறுவர் போலும்
கற்றவர் பரவி ஏத்தக் கலந்துலந் தலந்து பாடும்
அற்றவர்க் கன்பர் போலும் ஆவடு துறைய னாரே. 3

மழுவமர் கையர் போலும் மாதவள் பாகர் போலும்
எழுநுனை வேலர் போலும் என்பு கொண்டணிவர் போலும்
தொழுதெழுந் தாடிப் பாடித் தோத்திரம் பலவுஞ் சொல்லி
அழுமவர்க் கன்பர் போலும் ஆவடு துறைய னாரே. 4

பொடியணி மெய்யர் போலும் பொங்கு வெண்ணூலர் போலும்
கடியதோர் விடையர் போலுங் காமனைக் காய்வர் போலும்
வெடிபடு தலையர் போலும் வேட்கையாற் பரவுந் தொண்டர்
அடிமையை அளப்பர்‡ போலும் ஆவடு துறைய னாரே. 5

வக்கரன்* உயிரை வவ்வக் கண்மலர் கொண்டு போற்றச்
சக்கரங் கொடுப்பர் போலுந் தானவர் தலைவர் போலும்

---

*கழுமலவூரர் – திருஞானசம்பந்தர். **அம்பொன் ஆயிரம்– ஆயிரம்பொன் கொண்டதொரு உலவாக் கிழி. †ஆவடுதுறை-பிறவி தீர்ந்து பசுத்தன்மை நீங்க வேண்டுவோர் அடையுமிடம்; காரணப் பெயர். ‡அடிமையை ஆள்வார் என்றும் பாடம். * வக்கரன்-ஓர் அசுரன்.

துக்கமா மூடர் தம்மைத் துயரிலே வீழ்ப்பர் போலும்
அக்கரை ஆர்ப்பர் போலும் ஆவடு துறைய னாரே. 6

விடைதரு கொடியர் போலும் வெண்புரி நூலர் போலும்
படைதரு மழுவர் போலும் பாய்புலித் தோலர் போலும்
உடைதரு கீளர் போலும் உலகமு மாவர் போலும்
அடைபவர் இடர்கள் தீர்க்கும் ஆவடு துறைய னாரே. 7

முந்திவா னோர்கள் வந்து முறைமையால் வணங்கி ஏத்த
நந்திமா காள ரென்பார் நடுவுடை யார்கள்** நிற்பச்
சிந்தியா தேயொ ழிந்தார் திரிபுரம் எரிப்பர் போலும்
அந்திவான் மதியஞ் சூடும் ஆவடு துறைய னாரே. 8

பானமர் ஏன மாகிப் பாரிடந் திட்ட மாலும்
தேனமர்ந் தேறும் அல்லித் திசைமுக முடைய கோவும்
தீனரைத் தியக்க றுத்த திருவுரு வுடையர் போலும்
ஆனரை ஏற்றர் போலும் ஆவடு துறைய னாரே. 9

பார்த்தனுக் கருள்வர் போலும் படர்சடை முடியர் போலும்
ஏத்துவார் இடர்கள் தீர இன்பங்கள் கொடுப்பர் போலும்
கூத்தராய்ப் பாடி யாடிக் கொடுவலி அரக்கன் தன்னை
ஆர்த்தவாய் அலறு விப்பார் ஆவடு துறைய னாரே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

மஞ்சனே மணியு மானாய் மரகதத் திரளு மானாய்
நெஞ்சுளே புகுந்து நின்று நினைதரு* நிகழ்வி னானே
துஞ்சும்போ தாக வந்து துணையெனக் காகிநின்று
அஞ்சலென் றருள வேண்டும் ஆவடு துறையு ளானே. 1

நானுகந் துன்னை நாளும் நணுகுமா கருதி யேயும்
ஊனுகந் தோம்பு நாயேன் உள்ளுற ஐவர் நின்றார்

---

** நடுவுடையார்கள்-துவார பூசையில் நந்திக்கும் மகாகாளர்க்கும் இடையிலுள்ள யமுனை, இலட்சுமி, சரசுவதி, கணபதி, கங்கை முதலியோர். இவர்களைச் சிவபூசையில் காண்க. *நிறைதரு என்றும் பாடம்.

தானுகந் தேயு கந்த தகவிலாத் தொண்ட னேன்நான்
ஆனுகந் தேறு வானே ஆவடு துறையு ளானே. 2

கட்டமே வினைக ளான காத்திவை நோக்கி ஆளாய்
ஒட்டவே ஒட்டி* நாளும் உன்னையுள் வைக்க மாட்டேன்
பட்டவான் தலைகை யேந்திப் பலிதிரிந் தூர்கள் தோறும்
அட்டமா வுருவி னானே ஆவடு துறையு ளானே. 3

பெருமைநன் றுடைய தில்லை யென்றுநான் பேச மாட்டேன்
ஒருமையால் உன்னை உள்கி உகந்துவா னேற மாட்டேன்
கருமையிட் டாய வூனைக் கட்டமே கழிக்கின் றேன்நான்
அருமையா நஞ்ச முண்ட ஆவடு துறையு ளானே. 4

துட்டனாய் வினைய தென்னுஞ் சுழித்தலை அகப்பட் டேனைக்
கட்டனாய் ஐவர் வந்து கலக்காமைக் காத்துக் கொள்வாய்
மட்டவிழ் கோதை தன்னை மகிழ்ந்தொரு பாகம் வைத்து
அட்டமா நாக மாட்டும் ஆவடு துறையு ளானே. 5

காரழல் கண்ட மேயாய் கடிமதிற் புரங்கள் மூன்றும்
ஓரழல் அம்பி னாலே உகைத்துத்தீ எரிய மூட்டி
நீரழற் சடையு ளானே நினைப்பவர் வினைகள் தீர்ப்பாய்
ஆரழல் ஏந்தி யாடும் ஆவடு துறையு ளானே. 6

செறிவிலேன் சிந்தை யுள்ளே சிவனடி தெரிய மாட்டேன்
குறியிலேன் குணமொன் றில்லேன் கூறுமா கூற மாட்டேன்
நெறிபடு மதியொன் றில்லேன் நினையுமா நினைய மாட்டேன்
அறிவிலேன் அயர்த்துப் போனேன் ஆவடு துறையு ளானே. 7

கோலமா மங்கை தன்னைக் கொண்டொரு கோல மாய
சீலமே யறிய மாட்டேன் செய்வினை மூடி நின்று
ஞாலமாம் இதனுள் என்னை நைவியா வண்ணம் நல்காய்
ஆலமா நஞ்ச முண்ட ஆவடு துறையு ளானே. 8

நெடியவன் மலரி னானும் நேர்ந்திரு பாலும் நேடக்
கடியதோர் உருவ மாகிக் கனலெரி யாகி நின்ற
வடிவினை வண்ண மென்றே என்றுதாம் பேசலாகார்
அடியனேன் நெஞ்சி னுள்ளார் ஆவடு துறையு ளானே. 9

* ஒட்டவே யொட்டி—நீ ஒட்டும்படி நான் ஒட்டி; அத்துவித மாகக் கலந்து.

மலைக்குநே ராய ரக்கன் சென்றுற மங்கை அஞ்சத்
தலைக்குமேற் கைக ளாலே தாங்கினான் வலியை மாள
உலப்பிலா விரலால் ஊன்றி ஒறுத்தவற் கருள்கள் செய்து
அலைத்தவான் கங்கை சூடும் ஆவடு துறையு ளானே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருக்குறுந்தொகை [5–ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நிறைக்க வாலியள் அல்லளிந் நேரிழை
மறைக்க வாலியள் அல்லளிம் மாதராள்
பிறைக்க வாலப் பெரும்புனல் ஆவடு
துறைக்க வாலியோ டாடிய சுண்ணமே. 1

தவள மாமதிச் சாயலோர் சந்திரன்
பிளவு சூடிய பிஞ்ஞகன் எம்மிறை
அளவு கண்டிலள் ஆவடு தண்டுறைக்
கள்வு* கண்டனள் ஒத்தனள் கன்னியே. 2

பாதிப் பெண்**ணொரு பாகத்தன் பன்மறை
ஓதி யென்னுளங் கொண்டவன் ஒண்பொருள்
ஆதி ஆவடு தண்டுறை மேவிய
சோதி யேசுட ரேயென்று சொல்லுமே. 3

கார்க்கொள் மாமுகில் போல்வதோர் கண்டத்தன்
வார்க்கொள் மென்முலை சேர்ந்திறு மாந்திவள்
ஆர்க்கொள் கொன்றையன் ஆவடு தண்டுறைத்
தார்க்கு நின்றிவள் தாழுமா காண்மினே. 4

கருகு கண்டத்தன் காய்கதிர்ச் சோதியன்
பருகு பாலமு தேயெனும் பண்பினன்
அருகு சென்றிலள்† ஆவடு தண்டுறை
ஒருவன் என்னை யுடையகோ வென்னுமே. 5

குழலுங் கொன்றையுங் கூவிள மத்தமும்
தழலுந் தையலோர் பாகமாத் தாங்கினான்

---

*களவு – களவொழுக்கம். **பாதிபெண் என்றும் பாடம்.
† சென்றிவள் என்றும் பாடம்.

அழகன் ஆவடு தண்டுறை யாவெனக்
கழலுங் கைவளை காரிகை யாளுக்கே. 6

பஞ்சின் மெல்லடிப் பாவையோர் பங்கனைத்
தஞ்ச மென்றிறு மாந்திவ ளாரையும்
அஞ்சு வாள்அல்லள் ஆவடு தண்டுறை
மஞ்ச னேடிவள் ஆடிய மையலே. 7

பிறையுஞ் சூடிநற் பெண்ணோ டாணாகிய*
நிறையும் நெஞ்சமும் நீர்மையுங் கொண்டவன்
அறையும் பூம்பொழில் ஆவடு தண்டுறை
இறைவன் என்னை யுடையவன் என்னுமே. 8

வையந் தான்அளந் தானும் அயனுமாய்
மெய்யைக் காணலுற் றார்க்கழ லாயினான்
ஐயன் ஆவடு தண்டுறை யாவெனக்
கையில் வெள்வளை யுங்கழல் கின்றதே. 9

பக்கம் பூதங்கள் பாடப் பலிகொள்வான்
மிக்க வாளரக் கன்வலி வீட்டினான்
அக்க ணிந்தவன் ஆவடு தண்டுறை
நக்கன் என்னுமிந் நாணிலி காண்மினே. 10

திருச்சிற்றம்பலம்

---

திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]
திருச்சிற்றம்பலம்

நம்பனை நால்வேதங் கரைகண் டானை ஞானப் பெருங்கடலை நன்மை தன்னைக், கம்பனைக் கல்லா லிருந்தான் தன்னைக் கற் பகமா யடியார்கட் கருள்செய் வானைச், செம்பொன்னைப் பவ ளத்தைத் திரளு முத்தைத் திங்களை ஞாயிற்றைத் தீயை நீரை, அம்பொன்னை ஆவடுதண் டுறையுள் மேய அரனடியே அடி நாயேன் அடைந்துய்ந் தேனே. 1

மின்னானை மின்னிடைச்சே ருருமி னானை வெண்முகிலாய் எழுந்துமழை பொழிவான் தன்னைத், தன்னானைத தன்னொப்பா

---

* டாணாகியென் என்றும் பாடம்.

ரில்லா தானைத் தாயாகிப் பல்லுயிர்க்கோர் தந்தை யாகி, என் ஞானை யெந்தை பெருமான் தன்னை இருநிலமும் அண்டமுமாய்ச் செக்கர் வானே, அன்னுனை ஆவடுதண் டுறையுள் மேய அர னடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 2

பத்தர்கள் சித்தத்தே பாவித் தானைப் பவளக் கொழுந்தினை மாணிக் கத்தின், தொத்தினைத் தூநெறியாய் நின்றான் தன்னைச் சொல்லுவார் சொற்பொருளின் தோற்றமாகி, வித்தினை முளைக் கிளையை வேரைச் சீரை வினைவயத்தின் தன்சார்பை வெய்ய தீர்க்கும், அத்தனை ஆவடுதண் டுறையுள் மேய அரனடியே அடி நாயேன் அடைந்துய்ந் தேனே. 3

பேணிநற் பிறைதவழ்செஞ் சடையி னானைப் பித்தாம் அடியார்க்கு முத்தி காட்டும், ஏணியை இடர்க்கடலுட்* கழிக்கப் பட்டிங் கிளைக்கின்றேற் கக்கரைக்கே யேற வாங்குந், தோணியைத் தொண்டனேன் தூய சோதிச் சுலாவெண் குழையானைச் சுடர் பொற் காசின், ஆணியை** ஆவடுதண் டுறையுள் மேய அர னடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 4

ஒருமணியை உலகுக்கோ ருறுதி தன்னை உதயத்தி னுச்சியை உருமா னானைப், பருமணியைப் பாலோடஞ் சாடி னானைப் பவித் திரனை§ப் பசுபதியைப் பவளக் குன்றைத், திருமணியைத் தித்திப் பைத் தேன தாகித் தீங்கரும்பின் இன்சுவையைத் திகழுஞ்சோதி, அருமணியை ஆவடுதண் டுறையுள்மேய அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 5

ஏற்றானை யெண்டோ ளுடையான் தன்னை எல்லில் நடமாட வல்லான் தன்னைக், கூற்றானைக் கூற்ற முதைத்தான் தன்னைக் குரைகடல்வாய் நஞ்சுண்ட கண்டன் தன்னை, நீற்றானை நீளரவொன் றார்த்தான் தன்னை நீண்ட சடைமுடிமேல் நீரார் கங்கை, ஆற்றானை ஆவடுதண் டுறையுள் மேய அரனடியே அடி நாயேன் அடைந்துய்ந் தேனே. 6

கைம்மான மதகளிற்றை† யுரித்தான் தன்னைக் கடல்வரை வான் ஆகாச மானான் தன்னைச், செம்மானப் பவளத்தைத்

---

* இடர்க்கடல்—துன்பமே நிறைந்த பிறவி: உருவகம். ** ஆணி—உரையாணி. § பவித்திரன்—பரிசுத்தன். † மதக்களிற்றை என்றும் பாடம்.

திகழும் முத்தைத் திங்களை ஞாயிற்றைத் தீயா னானை, எம்மானை யென்மனமே கோயிலாக இருந்தானை என்புருகு மடியார் தங்கள், அம்மானை ஆவடுதண் டுறையுள் மேய அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 7

மெய்யானைப்* பொய்யரோடு விரவா தானை வெள்ளடையைத் தண்ணிழலை வெந்தீ யேந்துங், கையானைக் காமனுடல் வேவக் காய்ந்த கண்ணானைக் கண்மூன் றுடையான் தன்னைப், பையா டரவமதி யுடனே வைத்த சடையானைப் பாய்புலித்தோ லுடையான் தன்னை, ஐயானை ஆவடுதண் டுறையுள் மேய அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 8

வேண்டாமை வேண்டுவது மில்லான்† தன்னை விசயனைமுன் னசைவித்த வேடன் தன்னைத், தூண்டாமைச் சுடர்விடுநற் சோதி தன்னைச் சூலப் படையானைக் காலன் வாழ்நாள், மாண்டோட வுதைசெய்த மைந்தன் தன்னை மண்ணவரும் விண்ணவரும் வணங்கி யேத்தும், ஆண்டானை ஆவடுதண் டுறையுள் மேய அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 9

பந்தணவு மெல்விரலாள் பாகன் தன்னைப் பாடலோ டாடல் பயின்றான் தன்னைக், கொந்தணவு நறுங்கொன்றை மாலை யானைக் கோலமா நீல மிடற்றான் தன்னைச், செந்தமிழோ டாரியனைச் சீரி யானைத் திருமார்பிற் புரிவெண்ணூல் திகழப் பூண்ட, அந்தணனை ஆவடுதண் டுறையுள் மேய அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 10

தரித்தானைத் தண்கடல்நஞ் சுண்டான் தன்னைத் தக்கன்றன் பெருவேள்வி தகர்த்தான் தன்னைப், பிரித்தானைப் பிறைதவழ் செஞ் சடையி னானைப் பெருவலியால் மலையெடுத்த அரக்கன் தன்னை, நெரித்தானை நேரிழையாள் பாகத் தானை நீசனேன் உடலுறு நோயான தீர, அரித்தானை ஆவடுதண் டுறையுள் மேய அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 11

திருச்சிற்றம்பலம்

---

* மெய்யானை-மெய்யினுள் நிற்பானை. † வேண்டாமை வேண்டுவதும் இல்லான்- வேண்டுதல் வேண்டாமை யிலான்' (திருக்குறள்).

## திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

திருவேயென் செல்வமே தேனே வானோர் செழுஞ்சுடரே செழுஞ்சுடர்நற் சோதி மிக்க, உருவேஎன் னுறவேஎன் ஊனே ஊனின் உள்ளமே உள்ளத்தி னுள்ளே நின்ற, கருவேயென் கற்பகமே கண்ணே கண்ணிற் கருமணியே மணியாடு பாவாய் காவாய், அருவாய வல்வினைநோய் அடையா வண்ணம் ஆவடு தண் டுறையுறையும் அமர ரேறே. 1

மாற்றேன் எழுத்தஞ்சும் என்றன் நாவின் மறவேன் திருவருள்கள் வஞ்ச நெஞ்சின், ஏற்றேன் பிறதெய்வம் எண்ணா நாயேன் எம்பெருமான் திருவடியே எண்ணி னல்லால், மேற்றான்நீ செய்வனகள் செய்யக் கண்டு வேதனைக்கே இடங்கொடுத்து நாளு நாளும், ஆற்றேன் அடியேனை அஞ்சே லென்னாய் ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 2

வரையார் மடமங்கை பங்கா கங்கை மணவாளா வார்சடையாய் நின்றன் நாமம், உரையா உயிர்போகப் பெறுவே னாகில் உறுநோய்வந் தெத்தனையு முற்றா லென்னே,* கரையா நினைந்துருகிக் கண்ணீர் மல்கிக் காதலித்து நின்கழலே யேத்து மன்பர்க், கரையா அடியேனை அஞ்சே லென்னாய் ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 3

சிலைத்தார் திரிபுரங்கள் தீயில் வேவச் சிலைவளைவித் துமையவளை யஞ்ச நோக்கிக், கலித்தாங் கிரும்பிடிமேற் கைவைத் தோடுங் களிறுரித்த கங்காளா எங்கள் கோவே, நிலத்தார் அவர் தமக்கே பொறையாய் நாளும் நில்லா வுயிரோம்பு நீத னேனான், அலுத்தேன் அடியேனை அஞ்சே லென்னாய் ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 4

நறுமா மலர்கொய்து நீரின்மூழ்கி நாடோறும் நின்கழலே யேத்தி வாழ்த்தித், துறவாத துன்பந் துறந்தேன் தன்னைச் சூழுலகில் ஊழ்வினைவந் துற்றா லென்னே, உறவாகி வானவர்கள் முற்றும் வேண்ட ஒலிதிரைநீர்க் கடல்நஞ்சுண் டுய்யக் கொண்ட,

* நின்றன் நாமம்......முற்றாலென்னே—இவ்வடிகள் சுவாமிகள் கேட்கும் மிகச் சிலவரங்களுள் ஒன்றைக் குறிப்பன.

அறவா அடியேனை அஞ்சே லென்னும் ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 5

கோனா ரணன் அங்கந் தோளமேற் கொண்டு கொழுமல ரான்றன் சிரத்தைக் கையி லேந்திக், கானார் களிற்றுரிவைப் போர்வை மூடிக் கங்காள வேடராய் எங்குஞ் செல்வீர், நானார் உமக்கோர் வினைக்கேடனேன் நல்வினையுந் தீவினையு மெல்லாம் முன்னே, ஆனாய் அடியேனை அஞ்சே லென்னும் ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 6

உழையுரித்த மானுரிதோ லாடை யானே உமையவள்தம் பெருமானே இமையோர் ஏறே, கழையிறுத்த கருங்கடல்நஞ் சுண்ட கண்டா கயிலாய மலையானே உன்பால் அன்பர், பிழை பொறுத்தி என்பதுவும் பெரியோய் நின்றன் கடனன்றே பேரருளுன் பால தன்றே, அழையுறுத்து மாமயில்கள் ஆலுஞ் சோலை ஆவடு தண்டுறையுறையும் அமர ரேறே. 7

உலந்தார் தலைகலனொன் றேந்தி வானோ ருலகம் பலிதிரி வாய் உன்பால் அன்பு, கலந்தார் மனங்கவருங் காத லானே கனலாடுங் கையவனே ஐயா மெய்யே, மலந்தாங் குயிர்ப்பிறவி மாயக் காயமயக்குளே விழுந்தழுந்தி நாளு நாளும், அலந்தேன்* அடியேனை அஞ்சே லென்னும் ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 8

பல்லார்ந்த வெண்டலை கையி லேந்திப் பசுவேறி யூரூரன் பலிகொள் வானே, கல்லார்ந்த மலைமகளும் நீயுமெல்லாங்** கரி காட்டி லாட்டுகந்தீர் கருதீ ராகில், எல்லாரு மென் தன்னை இகழ் வர் போலும் ஏழையமண் குண்டர்சாக் கியர்க ளொன்றுக், கல்லாதார் திறத்தொழிந்தேன் அஞ்சே லென்னும் ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 9

துறந்தார்தந் தூநெறி†க்கட் சென்றேன் அல்லேன் துணை மாலை‡ சூட்டநான் தூயேன் அல்லேன், பிறந்தேன்நின் திருவருளே

---

* மலம்–ஆணவமும். மாயக்காயம் – மாயாமலமும், நாளும் அலந்தேன்-கன்மமலமும் ஆகும். **நீருமெல்லாம் என்றும் பாடம், † துறந்தார்தம் தூநெறி – ஞானநெறி. ‡ துணைமாலை – அகப்பூசை யிலும் புறப்பூசையிலும் சாத்தும் மாலைகள்.

பேசின் அல்லாற் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே, செறிந்தார் மதிலிலங்கைக் கோமான் தன்னைச் செறுவரைக்கீ ழடர்த்தருளிச் செய்கை யெல்லாம், அறிந்தேன் அடியேனை அஞ்சே லென்னு ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி—மாசிலாமணியீசர், செம்பொற்றியாகர்:
தேவி—ஒப்பிலாமுலையம்மை.

## 28. திருத்துருத்தி*

திருநேரிசை [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பொத்திய குரம்பை** தன்னைப் பொருளெனக் கருத வேண்டா
இருத்திளப் பொழுதும்† நெஞ்சுள் இறைவனை ஏத்து மின்கள்
ஒருத்தியைப் பாகம் வைத்தங் கொருத்தியைச் சடையுள் வைத்த
துருத்தியஞ் சுடரி னானைத் தொண்டனேன் கண்ட வாறே. 1

சவை‡தனைச் செய்து வாழ்வான் சலத்துளே யழுந்து கின்ற
இவையொரு பொருளு மல்ல இறைவனை ஏத்து மின்னோ
அவைபுர மூன்றும் எய்தும் அடியவர்க் கருளிச் செய்த
சுவையினைத் துருத்தி யானைத் தொண்டனேன் கண்ட வாறே. 1

உன்னிளப் போதும் நெஞ்சுள் ஒருவனை ஏத்து மின்னோ
கன்னியை யொருபால் வைத்துக் கங்கையைச் சடையுள் வைத்துப்
பொன்னியின் நடுவு தன்னுட் பூம்புனல் பொலிந்து தோன்றுந்
துன்னிய துருத்தி யானைத் தொண்டனேன் கண்ட வாறே. 3

ஊன்றலை வலிய னாகி உலகத்துள் உயிர்கட் கெல்லாந்
தான்றலைப் பட்டு நின்று சார்கன லகத்து வீழ
வான்றலைத் தேவர் கூடி வானவர்க் கிறைவா வென்னுந்
தோன்றலைத் துருத்தி யானைத் தொண்டனேன் கண்ட வாறே. 4

---

* 'குத்தாலம்' என வழங்கப்படும். ** குரம்பை – உடல். † எப்போதும் என்றும் பாடம். ‡ சவை – பயனற்றவை; (மனைவி மக்களின்) கூட்டமுமாம்.

உடல்தனைக் கழிக்க லுற்ற உலகத்துள் உயிர்கட் கெல்லாம்
இடர்தனைக் கழிக்க வேண்டில்¶ இறைவனை ஏத்து மின்னோ
கடல்தனில் நஞ்ச முண்டு காண்பரி தாகி நின்ற
சுடர்தனைத் துருத்தி யானைத் தொண்டனேன் கண்ட வாறே. 5

அள்ளலை||க் கடக்க வேண்டில் அரனையே நினைமி னீர்கள்
பொள்ளலிக் காயந் தன்னுட் புண்டரீ கத்தி ருந்த
வள்ளலை வான வர்க்குங் காண்பரி தாகி நின்ற
துள்ளலைத் துருத்தி யானைத் தொண்டனேன் கண்ட வாறே. 6

பாதியில் உமையாள் தன்னைப் பாகமா வைத்த பண்பன்
வேதியன் என்று சொல்லி விண்ணவர் விரும்பி ஏத்தச்
சாதியாஞ் சதுர்மு கனுஞ் சக்கரத் தானுங் காணாச்
சோதியைத் துருத்தி யானைத் தொண்டனேன் கண்ட வாறே. 7

சாமனை வாழ்க்கை யான சலத்துளே யழுந்த வேண்டா
தூமநல் அகிலுங் காட்டித் தொழுதடி வணங்கு மின்னோ
சோமனைச் சடையுள் வைத்துத் தொன்னெறி பலவுங் காட்டுந்
தூமனத் துருத்தி யானை*த் தொண்டனேன் கண்ட வாறே. 8

குண்டரே சமணர் புத்தர் குறியறி யாது நின்று
கண்டதே கருது வார்கள் கருத்தெண்ணா தொழுமி னீர்கள்
விண்டவர்** புரங்கள் எய்து விண்ணவர்க் கருள்கள் செய்த
தொண்டர்கள் துணையி னானைத் துருத்திநான் கண்ட வாறே. 9

பிண்டத்தைக் கழிக்க வேண்டிற் பிரானையே பிதற்று மின்கள்
அண்டத்தைக் கழிய நீண்ட அடலரக் கன்றன் ஆண்மை
கண்டொத்துக் கால்வி ரலால் ஊன்றிமீண் டருளிச் செய்த
துண்டத்†துத் துருத்தி யானைத் தொண்டனேன் கண்ட வாறே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—உத்தரவேதீசுவரர்; தேவி—மிருதுமுகிழாம்பிகை.

---

¶கழியவேண்டில் என்றும் பாடம். ||அள்ளல்-பிறவிச்சேறு. *தூமணற் றுருத்தியானை என்றும்பாடம். ** விண்டவர் – (நன்னெறியின்) நீங்கியவர்; திரிபுரர். † துண்டம்–ஆறுசூழ்ந்த அளவுபட்ட நிலம்.

## 29. திருமயிலாடுதுறை*

### திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கொள்ளுங் காதன்மை பெய்துறுங் கோல்வளை
உள்ளம் உள்கி யுரைக்குந் திருப்பெயர்
வள்ளல் மாமயி லாடு துறையுறை
வெள்ளந் தாங்கு சடையனை வேண்டியே. 1

சித்தந் தேறுஞ் செறிவளை சிக்கெனும்
பச்சை தீருமென் பைங்கொடி பால்மதி
வைத்த மாமயி லாடு துறையரன்
கொத்தி னிற்பொலி கொன்றை கொடுக்கிலே. 2

அண்டர் வாழ்வும் அமரர் இருக்கையும்
கண்டு வீற்றிருக் குங்கருத் தோன்றிலோம்
வண்டு சேர்மயி லாடு துறையரன்
தொண்டர் பாதங்கள் சூடித் துதையிலே. ** 3

வெஞ்சி னக்கடுங் காலன் விரைகிலான்
அஞ்சி றப்பும்‡ பிறப்பும் அறுக்கலாம்
மஞ்சன் மாமயி லாடு துறையுறை
அஞ்சொ லாளுமை பங்கன் அருளிலே. 4

குறைவி லோங்கோடு மாநுட வாழ்க்கையால்
கறைநி லாவிய கண்டன்எண் டோளினன்
மறைவ லான்மயி லாடு துறையுறை
இறைவன் நீள்கழல் ஏத்தி யிருக்கிலே. 5

நிலைமை சொல்லுநெஞ் சேதவ மென்செய்தாய்
கலைகள் ஆயவல் லான்கயி லாயநன்
மலையன் மாமயி லாடு துறையன்நம்
தலையின் மேலும் மனத்துளுந் தங்கவே. 6

---

* 'மாயூரம்' (மாயவரம்) என வழங்கப்பெறும். ** இச் செய்யுள் தொண்டர் பெருமையினைக் குறிப்பது. ‡ அஞ்சு இறப்பு— அஞ்சத்தக்கதாகிய இறப்பு.

நீற்றி னன்கிமிர் புன்சடை யான்விடை
ஏற்றி னன்நமை யாளுடை யான்புலன்
மாற்றி னன்மயி லாடு துறையென்று
போற்று வார்க்குமுண் டோபுவி வாழ்க்கையே. 7

கோலும்¶ புல்லும் ஒருகையிற் கூர்ச்சமும்
தோலும் பூண்டு துயரமுற் றென்பயன்
நீல மாமயி லாடு துறையனே
நூலும் வேண்டுமோ நுண்ணுணர்ந் தோர்கட்கே. 8

பணங்கொ ளாடர வல்குற் பகீரதி
மணங்கொ ளச்சடை வைத்த மறையவன்
வணங்கு மாமயி லாடு துறையரன்
அணங்கோர் பால்கொண்ட கோலம் அழகிதே. 9

நீணி லாஅர வச்சடை நேசனைப்
பேணி லாதவர் பேதற வோட்டினேம்
வாணி லாமயி லாடு துறைதனைக்
காணி லார்க்குங் கடுந்துய ரில்லையே. 10

பருத்த தோளும் முடியும் பொடிபட
இருத்தி னானவன் இன்னிசை கேட்டலும்
வரத்தி னன்மயி லாடு துறைதொழும்
கரத்தி னார்‡வினை கட்டறுங் காண்மினே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி-மாயூரநாதேசுவரர்; தேவி-அபயாம்பிகை, அஞ்சநாயகி.

---

## 30. திருச்செம்பொன்பள்ளி*

### திருநேரிசை [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

ஊனினுள் ளுயிரை வாட்டி யுணர்வினார்க் கெளிய ராகி
வானினுள் வான வர்க்கும் அறியலா காத வஞ்சர்
நானெனிற் றானே யென்னு ஞானத்தார்** பத்தர் நெஞ்சுகள்
தேனும்இன் னமுது மானார் திருச்செம்பொன் பள்ளி யாரே. 1

---

¶ கோலும்-யோக தண்டும். ‡ கருத்தினார் என்றும் பாடம். * 'செம்பொனார் கோயில்' என்று வழக்கப்படும். ** நானெனில்... ஞானத்தார்-நான் என்பது ஒழிய இறைவன் உணர்வில் ஒடுங்கியவர்.

நொய்யவர் விழுமி யாரும் நூலினுள் நெறியைக் காட்டும்
மெய்யவர் பொய்யு மில்லார் உடலெனும் இடிஞ்சில்* தன்னில்
நெய்யமர் திரியு மாகி நெஞ்சத்துள் விளக்கு மாகிச்
செய்யவர் கரிய கண்டர் திருச்செம்பொன் பள்ளி யாரே. 2

வெள்ளியர் கரியர் செய்யர் விண்ணவ ரவர்கள் நெஞ்சுள்
ஒள்ளியர் ஊழி யூழி யுலகம தேத்த நின்ற
பள்ளியர்T நெஞ்சத் துள்ளார் பஞ்சமம் பாடி யாடும்
தெள்ளியார் கள்ளந்† தீர்ப்பார் திருச்செம்பொன் பள்ளி யாரே. 3

தந்தையுந் தாயு மாகித் தானவன் ஞான மூர்த்தி
முந்திய தேவர் கூடி முறைமுறை இருக்குச் சொல்லி
எந்தைநீ சரண மென்றங் கிமையவர் பரவி யேத்தச்
சிந்தையுட் சிவம தானார் திருச்செம்பொன் பள்ளி யாரே. 4

ஆறுடைச் சடையர் போலும் அன்பருக் கன்பர் போலும்
கூறுடை மெய்யர் போலுங் கோளர வரையர் போலும்
நீறுடை யழகர் போலும் நெய்தலே கமழு நீர்மைச்
சேறுடைக் கமல வேலித் திருச்செம்பொன் பள்ளி யாரே. 5

ஞாலமும் அறிய வேண்டின் நன்றெனா‡ வாழ லுற்றீர்
காலமுங் கழிய லான கள்ளத்தை ஒழிய கில்லீர்
கோலமும் வேண்டா ஆர்வச் செற்றங்கள் குரோத நீக்கில்
சீலமும் நோன்பு மாவார் திருச்செம்பொன் பள்ளி யாரே. 6

புரிகாலே நேசஞ் செய்ய இருந்தபுண் டரீகத் தாரும்
எரிகாலே மூன்று மாகி இமையவர் தொழநின் றாரும்
தெரிகாலே மூன்று சந்தி தியானித்து வணங்க§ நின்று
திரிகாலங் கண்ட எந்தை திருச்செம்பொன் பள்ளி யாரே. 7

காருடைக் கொன்றை மாலை கதிர்மதி அரவி னோடும்
நீருடைச் சடையுள் வைத்த நீதியார் நீதி யுள்ளார்
பாரொடு விண்ணும் மண்ணும் பதினெட்டுக் கணங்கள் ஏத்தச்
சீரொடு பாட லானார் திருச்செம்பொன் பள்ளி யாரே. 8

---

* இடிஞ்சில்-விளக்குத் தகழி. T பள்ளியர்-இருக்கை கொண்டவர். † கள்ளம்-பாசக் கட்டு. ‡ வேண்டி நன்றென என்றும் பாடம். § வணங்கி என்றும் பாடம்.

ஓவாத மறைவல் லானும் ஓதநீர் வண்ணன் காணு
மூவாத பிறப்பி லாரும் முனிகளா னார்கள் ஏத்தும்
பூவான மூன்றும் முந்நூற் றறுபது மாகும்¶ எந்தை
தேவாதி தேவ ரென்றுந் திருச்செம்பொன் பள்ளி யாரே. 9

அங்கங்க ளாறு நான்கும் அந்தணர்க் கருளிச் செய்து
சங்கங்கள் பாட ஆடுஞ் சங்கரன் மலையெ டுத்தான்
அங்கங்கள் உதிர்ந்து சோர அலறிட அடர்த்து நின்றும்
செங்கண்வெள் ளேற தேறுந் திருச்செம்பொன் பள்ளி யாரே. 10

திருச்சிற்றம்பலம்

---

திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கான றுத கடிபொழில் வண்டினம்
தேன றுத திருச்செம்பொன் பள்ளியான்
ஊன றுததோர் வெண்டலை யிற்பலி
தான றுததோர் கொள்கையன் காண்மினே. 1

என்பும் ஆமையும் பூண்டங் குழிதர்வர்க்(கு)¶
அன்பு மாயிடும் ஆயிழை யீர்இனிச்
செம்பொன் பள்ளியு ளான்சிவ லோகனை
நம்போன் பள்ளியுள் கவினை நாசமே, 2

வேறு கோலத்தர் ஆணலர் பெண்ணலர்
கீறு கோவண வைதுகி லாடையர்
தேற* லாவதொன் றன்றுசெம் பொன்பள்ளி
ஆறு சூடிய அண்ணல் அவனையே. 3

அருவ ராததோர் வெண்டலை யேந்திவந்(து)
இருவ ராயி**டு வார்கடை தேடுவார்
தெருவெ லாம்உழல் வார்செம்பொன் பள்ளியார்
ஒருவர் தாம்பல பேருளர் காண்மினே. 4

---

¶ பூவான மூன்று-சூரியமண்டலம், சந்திரமண்டலம், அக்கினி மண்டலம். முந்நூற்றறுபது-ஞாயிற்றின் கதிர் 116, மதியின் கதிர் 136, தீயின் சுடர் 108 ஆக 360 என்பர். ¶ உழிதர்வர்க்கு-பலிக்கு உழல்பவராயினும். * தேறல்-பசுபோதத்தால் தெளிதல் ** இருவ் ராய்-தாமும் சத்தியுமாய்.

பூவு லாஞ்சடை மேற்புனல் சூடினன்
ஏவ லால்எயில் மூன்றும் எரித்தவன்
தேவர் சென்றிறைஞ் சுஞ்செம்பொன் பள்ளியான்
மூவ ராய்முத லாய்நின்ற மூர்த்தியே. 5

சலவ ரா‡யொரு பாம்பொடு தண்மதி
கலவ ராவதின் காரணம் என்கொலோ
திலக நீண்முடி யார்செம்பொன் பள்ளியார்
குலவி லால்எயில் மூன்றெய்த கூத்தரே. 6

கைகொள் சூலத்தர் கட்டுவாங் கத்தினர்
மைகொள் கண்டத்த ராகி இருசுடர்
செய்ய மேனிவெண் ணீற்றர்செம் பொன்பள்ளி
ஐயர் கையதோர் ஐந்தலை நாகமே. 7

வெங்கண் நாகம் வெருவுற ஆர்த்தவர்
பைங்கண் ஆனையின் ஈருரி போர்த்தவர்
செங்கண் மால்விடை யார்செம்பொன் பள்ளியார்
அங்க ணாய§டைந் தார்வினை தீர்ப்பரே. 8

நன்றி நாரணன் நான்முக னென்றிவர்
நின்ற நீண்முடி யோடடி காண்புற்றுச்
சென்று காண்பரி யான்செம்பொன் பள்ளியான்
நின்ற சூழலில் நீளெரி யாகியே. 9

திரியும் மும்மதில் செங்கணை யொன்றினால்
எரிய வெய்தன லோட்டி இலங்கைக்கோன்
நெரிய வூன்றியிட் டார்செம்பொன் பள்ளியார்
அரிய வானம் அவரருள் செய்வரே.* 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—செம்பொன் பள்ளியார், சொர்ணபுரீசுவரர்;
தேவி—சுகந்தவன நாயகி, மருவார்குழலி.

---

‡ சலவர்-கங்கையைத் தரித்தவர்: § அங்கணாய்-அடைக்கலமாக. *வலியவரை வாட்டினும் அடைந்தார்க்கு அவர் அரியவானம் (சிவலோகம்) அருள்புரிவர் என்பதாம்.

## 31. திருநனிபள்ளி*

திருநேரிசை** [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

முற்றுணை யாயி னானை மூவர்க்கு முதல்வன் தன்னைச்
சொற்றுணை யாயி னானைச் சோதியை ஆத ரித்து
உற்றுணர்ந் துருகி யூறி உள்கசி வுடைய வர்க்கு
நற்றுணை யாவர்‡ போலும் நனிபள்ளி அடிக ளாரே. 1

புலர்ந்தகால் பூவும் நீருங் கொண்டடி போற்ற மாட்டா
வலஞ்செய்து வாயில் நூலால் வட்டணைப் பந்தர் செய்ய
சிலந்தியை அரைய னாக்கிச் சீர்மைகள் அருள வல்லார்
நலந்திகழ் சோலை சூழ்ந்த நனிபள்ளி அடிக ளாரே. 2

எண்பதும் பத்தும் ஆறு§ மென்னுளே இருந்து மன்னிக்
கண்பழக் கொன்று மின்றிக் கலக்கநான் அலக்க ழிந்தேன்
செண்பகந் திகழும் புன்னை செழுந்திரட் குரவம் வேங்கை
நண்புசெய் சோலை சூழ்ந்த நனிபள்ளி அடிக ளாரே. 3

பண்ணினார் பாட லாகிப் பழத்தினில் இரத மாகிக்
கண்ணினார் பார்வை யாகிக் கருத்தொடு கற்ப மாகி
எண்ணினார் எண்ண மாகி ஏழுல கனைத்து மாகி
நண்ணினார் வினைகள் தீர்ப்பார் நனிபள்ளி அடிக ளாரே. 4

துஞ்சிருள் காலை மாலை தொடர்ச்சியை மறந்தி ராதே
அஞ்செழுத் தோதின் நாளும் அரனடிக் கன்ப தாகும்
வஞ்சனைப் பாற்சோ றாக்கி வழக்கிலா அமணர் தந்த
நஞ்சமு தாக்கு வித்தார்† நனிபள்ளி அடிக ளாரே. 5

செம்மலர்க் கமலத் தோனுந் திருமுடி காண மாட்டான்
அம்மலர்ப் பாதங் காண்பான் ஆழியான் அகழ்ந்துங் காணான்

---

* 'புஞ்சை' என வழங்கப்பெறும். ** இத்திருப்பதிகத்தில் 8-ம் செய்யுளின் பன்னிரண்டடியும் 9-ம் செய்யுளும் மறைந்து போயின. ‡ நற்றுணையாவர் – சுவாமியின் பெயர். § எண்பதும் பத்தும் ஆறும் - 96-தத்துவங்கள். † வஞ்சனைப்பாற்சோ......... வித்தார்–இவ்வடிகள் சமணர் நஞ்சுகலந்து தந்த பாற் சோற்றைச் சுவாமிகள் உண்ட சரிதத்தை அறிவிக்கும் அகச்சான்று.

நின்மலன் என்றங் கேத்தும் நினைப்பினை அருளி நாளும்
நம்மலம் அறுப்பர் போலும் நனிபள்ளி அடிக ளாரே. 6

அரவத்தால் வரையைச் சுற்றி அமரரோ டசுரர் கூடி
அரவித்து†க் கடையத் தோன்றும் ஆலநஞ் சமுதா வுண்டார்
விரவித்தம் அடிய ராகி வீடிலாத் தொண்டர் தம்மை
நரகத்தில் வீழ ஒட்டார் நனிபள்ளி அடிக ளாரே. 7

மண்ணுளே திரியும் போது வருவன பலவுங் குற்றம்
புண்ணுளே புரைபு ரையன் புழுப்பொதி பொள்ள லாக்கை. 8-9

பத்துமோர் இரட்டி தோளான் பாரித்து மலையெ டுக்கப்
பத்துமோர் இரட்டி தோள்கள் படருடம் படர வூன்றிப்
பத்துவாய் கீதம் பாடப் பரிந்தவற் கருள்கொ டுத்தார்
பத்தர்தாம் பரவி யேத்தும் நனிபள்ளிப் பரம னாரே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—நற்றுணையப்பர்; தேவி—மலையான் மடந்தை.

---

## 32. திருவலம்புரம்*

### திருநேரிசை [4–ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

தெண்டிரை தேங்கி** ஓதஞ் சென்றடி வீழுங் காலைத்
தொண்டிரைத் தண்டர் கோனைத் தொழுதடி வணங்கி எங்கும்
வண்டுகள் மதுக்கள் மாந்தும் வலம்புரத் தடிகள் தம்மைக்
கொண்டுநற் கீதம் பாடக் குழகர்தாம் இருந்த வாறே. 1

மடுக்களில் வாளை பாய வண்டினம் இரிந்த பொய்கைப்
பிடிக்களி றென்னத் தம்மிற் பிணைபயின் றணைவ ரால்கள்
தொடுத்தநன் மாலை ஏந்தித் தொண்டர்கள் பரவி ஏத்த
வடித்தடங் கண்ணி பாகர் வலம்புரத் திருந்த வாறே. 2

தேனுடை மலர்கள் கொண்டு திருந்தடி பொருந்தச் சாத்தி
ஆனிடை அஞ்சுங் கொண்டே அன்பினால் அமர ஆட்டி
வானிடை மதியஞ் சூடும் வலம்புரத் தடிகள் தம்மை
நானடைந் தேத்தப் பெற்று நல்வினைப் பயனுற் றேனே. 3

---

† அரவித்து-ஒலிப்பித்து. * 'பெரும் பள்ளம்' என வழங்கப் பெறும். ** யோங்கி என்றும் பாடம்.

முளையிற் றிளநல் ஏனம்* பூண்டுமொய் சடைகள் தாழ
வளையிற் றிளைய நாகம் வலித்தரை யிசைய வீக்கிப்
புழை§கைய போர்வை போர்த்துப் புனலொடு மதியஞ் சூடி
வளைபயில் இளைய ரேத்தும் வலம்புரத் தடிகள் தாமே. 4

சுருளுறு வரையின் மேலாற் றுளங்கிளம் பளிங்கு சிந்த
இருளுறு கதிர்நு ழைந்த இளங்கதிர்ப் பசலைத் திங்கள்
அருளுறும் அடிய ரெல்லாம் அங்கையின் மலர்கள் ஏந்த
மருளுறு கீதங் கேட்டார் வலம்புரத் தடிக ளாரே. 5

நினைக்கின்றேன் நெஞ்சு தன்னால் நீண்டபுன் சடையி னானே
அனைத்துடன் கொண்டு வந்தங் கன்பினால் அமைய ஆட்டிப்
புனைக்கின்றேன் பொய்ம்மை தன்னை மெய்ம்மையைப் புணர மாட்டேன்
எனக்குநான்‡ செய்வ தென்னே இனிவலம் புரவ னீரே. 6

செங்கயல் சேல்கள் பாய்ந்து தேம்பழ மினிய நாடித்
தங்கயந் துறந்து போந்து தடம்பொய்கை அடைந்து நின்று
கொங்கையர் குடையுங் காலைக் கொழுங்கனி யழுங்கி னாரம்
மங்கல மனையின் மிக்கார் வலம்புரத் தடிக ளாரே. 7

அருகெலாங் குவளை செந்நெல் அகவிலை யாம்பல் நெய்தல்
தெருவெலாம் தெங்கு மாவும் பழம்விழும் படப்பை**யெல்லாம்
குருகினங் கூடி யாங்கே கும்மலித்§ திறகு லர்த்தி
மருவலா மிடங்கள் காட்டும் வலம்புரத் தடிக ளாரே. 8

கருவரை யனைய மேனிக் கடல்வண்ண னவனுங் காணான்
திருவரை யனைய பூமேல் திசைமுக னவனுங் காணான்
ஒருவரை யுச்சி ஏறி ஓங்கினார் ஓங்கி வந்து
அருமையில் எளிமை யானார் அவர்வலம் புரவ னாரே. 9

வாளெயி றிலங்க நக்கு வளர்கயி லாயந் தன்னை
ஆள்வலி கருதிச் சென்ற அரக்கனை வரைக்கீ ழன்று
தோளொடு பத்து வாயுந் தொலைந்துடன் அழுந்த வூன்றி
ஆண்மையும் வலியுந் தீர்ப்பார் அவர்வலம் புரவ னாரே. 10

திருச்சிற்றம்பலம்

---

* ஏனம்-பன்றி. § புழை-உட்டுளை. ‡ நினைக்குநான் என்றும் பாடம். ** படப்பை - தோட்டம். S கும்மலித்து - அடித்துக் கொண்டு.

## திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மண்ணளந்த மணிவண்ணர் தாமும் மற்றை மறையவனும் வானவருஞ் சூழ நின்று, கண்மலிந்த திருநெற்றி யுடையா ரொற்றைக் கதநாகங் கையுடையார் காணீ ரன்றே, பண்மலிந்த மொழியவரு மியானு மெல்லாம் பணிந்திறைஞ்சித் தம்முடைய பின்பின் செல்ல, மண்மலிந்த வயல்புடைசூழ் மாட வீதி வலம்புரமே புக்க*ங்கே மன்னி னாரே. 1

சிலைநவின்ற தொருகணையாற் புரமூன் றெய்த தீவண்ணர் சிறந்திமையோர் இறைஞ்சி யேத்தக், கொலைநவின்ற களியானை யுரிவை போர்த்துக் கூத்தாடித் திரிதருமக் கூத்தர் நல்ல, கலைநவின்ற மறையவர்கள் காணக் காணக் கடுவிடைமேற் பாரிடங்கள் சூழக் காதல், மலைமகளுங் கங்கையுந் தாமுமெல்லாம் வலம்புரமே புக்கங்கே மன்னி னாரே. 2

தீக்கூருந் திருமேனி யொருபால் மற்றை யொருபாலும் அரியுருவந் திகழ்ந்த செல்வர், ஆக்கூரில் தான்தோன்றி புகுவார் போல அருவினையேன் செல்வதுமே யப்பா லெங்கும், நோக்கா ரொருவிடத்து நூலுந் தோலுந் துதைந்திலங்குந் திருமேனி வெண்ணீறாடி, வாக்கால் மறைவிரித்து மாயம்பேசி வலம்புரமே புக்கங்கே மன்னி னாரே. 3

மூவாத மூக்கப்பாம் பரையிற் சாத்திமூவர் உருவாய முதல்வ ரிந்நாள், கோவாத எரிகணையைச் சிலைமேற் கோத்த குழகனார் குளிர்கொன்றை சூடி யிங்கே, போவாரைக் கண்டடியேன் பின்பின் செல்லப் புறக்கணித்துத் தம்முடைய பூதஞ் சூழ, வாவா வெனவுரைத்து§ மாயம்பேசி வலம்புரமே புக்கங்கே மன்னி னாரே.

அனலொருகை யதுவேந்தி அதளி னோடே ஐந்தலைய மாநாகம் அரையிற் சாத்திப், புனல்பொதிந்த சடைக்கற்றைப் பொன்போல் மேனிப் புனிதனார் புரிந்தமரர் இறைஞ்சி யேத்தச், சினவிடையை மேல்கொண்டு திருவா ரூருஞ் சிரபுரமும் இடைமருதுஞ் சேர்வார் போல, மனமுருக வளைகழல மாயம் பேசி வலம்புரமே புக்கங்கே மன்னி னாரே. 5

* புக்கு-போய். § இறைவர்தாமே அழைத்ததைக் குறிப்பது.

கூறுத்ததொரு கண்டத்தர் காலன் வீழக் காலினாற் காய்ந் துகந்த காபா லியார், முறித்ததொரு தோலுடுத்து முண்டஞ் சாத்தி முனிகணங்கள் புடைசூழ முற்றந் தோறுந், தெறித்த தொரு வீணையராய்ச் செல்வார் தம்வாய்ச் சிறுமுறுவல் வந் தெனது சிந்தை வௌவ, மறித்தொருகால் நோக்காதே மாயம் பேசி வலம்புரமே புக்கங்கே மன்னி னாரே. 6

பட்டுடுத்துப் பவளம்போல் மேனி யெல்லாம் பசுஞ்சாந்தங் கொண்டணிந்து பாதம் நோவ, இட்டெடுத்து நடமாடி யிங்கே வந்தார்க் கெவ்வூரீர் எம்பெருமா னென்றேன் ஆவி, விட்டிடுமா றதுசெய்து விரைந்து நோக்கி வேறோர் பதிபுகப் போவார் போல, வட்டணை*கள் படநடந்து மாயம் பேசி வலம்புரமே புக்கங்கே மன்னி னாரே. 7

பல்லார் பயில்பழனப் பாசூ ரென்றும் பழனம்† பதிபழமை சொல்லி நின்றார், நல்லார் நனிபள்ளி யின்று வைகி நாளைப் போய் நள்ளாறு சேர்தும் என்றார், சொல்லார் ஒருவிடமாத் தோள்கை வீசிச் சுந்தரராய் வெந்தநீ றாடி யெங்கும், மல்லார் வயல்புடைசூழ் மாட வீதி வலம்புரமே புக்கங்கே மன்னி னாரே. 8

பொங்கா டரவொன்று கையிற் கொண்டு போர்வெண் மழுவேந்திப் போகா நிற்பர், தங்கா ரொருவிடத்துந் தம்மேல் ஆர்வந் தவிர்த்தருளார் தத்துவத்தே நின்றே னென்பர், எங்கே யிவர் செய்கை யொன்றொன் றொவ்வா என்கண்ணில் நின்றகலா வேடங் காட்டி, மங்குல் மதிதவழும் மாட வீதி வலம்புரமே புக்கங்கே மன்னி னாரே. 9

செங்கண்மால்‡ சிலைபிடித்துச் சேனை§ யோடுஞ் சேதுபந் தனஞ் செய்து சென்று புக்குப், பொங்குபோர் பலசெய்து புகலால்** வென்ற போரரக்கன் நெடுமுடிகள் பொடியாய் வீழ, அங்கொருதன் திருவிரலால் இறையே யூன்றி யடர்த்தவற்கே அருள்புரிந்த அடிக ளிந்நாள், வங்க¶மலி கடல்புடைசூழ் மாட வீதி வலம்புரமே புக்கங்கே மன்னி னாரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி—வலம்புரிநாதேசுரர்; தேவி—வடுவகிர்க்கண்ணி

* வட்டணை—தாளம்; இங்கு ஓசை. † பழனம் பாசூரென்றும் பழநம் என்றும் பாடம். ‡ செங்கண்மால் – இங்கு இராமபிரான். § சேனை—வானர சேனை. ** புகல்-உபாயம். ¶ வங்கம்-தோணி.

## 33. திருஆக்கூர்த் தான்றோன்றி மாடம்*

### திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

முடித்தா மரையணிந்த மூர்த்தி போலும் மூவுலகுந் தாமாகி நின்றார் போலும், கடித்தா மரையேய்ந்த கண்ணார் போலுங் கல்லலகு பாணி பயின்றார் போலும், கொடித்தா மரைக்காடே நாடுந் தொண்டர்** குற்றேவல் தாம்மகிழ்ந்த குழகர்போலும், அடித்தா மரைமலர்மேல் வைத்தார் போலும் ஆக்கூரில் தான்றோன்றி யப்பனாரே. 1

ஓதிற் றொருநூலு மில்லை போலும் உணரப் படாததோன் றில்லை போலும், காதிற் குழையிலங்கப் பெய்தார்போலுங் கவலைப் பிறப்பிடும்பை காப்பார் போலுங், வேதத்தோ டாறங்கஞ் சொன்னார் போலும் விடஞ்சூழ்ந் திருண்ட மிடற்றார் போலும், ஆதிக் களவாகி நின்றார் போலும் ஆக்கூரில் தான்றோன்றி யப்ப னாரே. 2

மையார் மலர்க்கண்ணாள் பாகர் போலும் மணிநீல கண்ட முடையார் போலும், நெய்யார் திரிசூலங் கையார் போலும் நீறேறு தோளெட் டுடையார் போலும், வையார் மழுவாட் படையார் போலும் வளர்ஞாயி றன்ன வொளியார் போலும், ஐவா யரவமொன் றார்த்தார் போலும் ஆக்கூரில் தான்தோன்றி யப்ப னாரே. 3

வடிவிளங்கு வெண்மழுவாள் வல்லார் போலும் வஞ்சகக் கருங்கடல்நஞ் சுண்டார் போலும், பொடிவிளங்கு முந்நூல்சேர் மார்பர் போலும் பூங்கங்கை தோய்ந்த சடையார் போலும், கடிவிளங்கு கொன்றையந் தாரார் போலும் கட்டங்க மேந்திய கையார் போலும், அடிவிளங்கு செம்பொற் கழலார் போலும் ஆக்கூரில் தான்றோன்றி யப்ப னாரே. 4

---

* ஆக்கூர்-தலத்தின் பெயர். தான்றோன்றி மாடம்-கோயிலின் பெயர். **கொடித்தாமரைக் காடே நாடும் தொண்டர்-மூலாதாரம், இருதயம், கண்டம், நாவினடி, புருவத்தினிடை, பிரமரந்திரம் என்ற ஆறிடங்களில் கீழ்நோக்கியுள்ள தாமரை மொட்டுக்களை மந்திரம், பாவனை, கிரியைகளால் மேனோக்கி மலரச்செய்து அவற்றில் இறைவனை இருத்தி வழிபடும் தொண்டர். இது பூதசுத்தியிலுள்ள சுழுமுனைத் தியானமாகும்.

ஏகாச மா‡ம்புலித்தோல் பாம்பு தாழ இடுவெண் டலைகலனா ஏந்தி நாளும், மேகாசங்§ கட்டழித்த வெள்ளி மாலை புனலார் சடைமுடிமேற் புனைந்தார் போலும், மாகாசT மாயவெண் ணீருந் தீயும் மதியும் மதிபிறந்த விண்ணும் மண்ணும், ஆகாச மென்றி வையு மானார் போலும் ஆக்கூரில் தான்றோன்றி யப்ப னாரே. 5

மாதூரும் வாள்நெடுங்கண் செவ்வாய் மென்தோள் மலை மகளை மார்பத் தணைத்தார் போலும், மூதூர் முதுதிரைக ளானார் போலும் முதலும் இறுதியு மில்லார் போலும், தீதூர¶ நல்வினை யாய் நின்றார் போலுந் திசையெட்டுந் தாமேயாஞ் செல்வர் போலும், ஆதிரை நாளாய் அமர்ந்தார் போலும் ஆக்கூரில் தான் றோன்றி யப்ப னாரே. 6

மால்யானை மத்தகத்தைக் கீண்டார் போலும் மான்தோ லுடையா மகிழ்ந்தார் போலும், கோலானைக்* கோ**வழலாற் காய்ந்தார் போலுங் குழவிப் பிறைசடைமேல் வைத்தார் போ லும், காலனைக் காலாற் கடந்தார் போலுங் கயிலாயந் தம்மிட மாக் கொண்டார் போலும், ஆலானைந் தாடல் உகப்பார் போலும் ஆக்கூரில் தான்றோன்றி யப்ப னாரே. 7

கண்ணார்ந்த நெற்றி யுடையார் போலுங் காமனையுங் கண் ணழலாற் காய்ந்தார் போலும், உண்ணா அருநஞ்ச முண்டார் போலும் ஊழித்தீ யன்ன வொளியார் போலும், எண்‡ணா யிரங் கோடி பேரார் போலும் ஏறேறிச் செல்லும் இறைவர் போலும், அண்ணா!வும் ஆரூரும் மேயார் போலும் ஆக்கூரில் தான்றோன்றி யப்ப னாரே. 8

கடியார் தளிர்கலந்த கொன்றை மாலை கதிர்போது தாத ணிந்த கண்ணி போலும், நெடியானுஞ் சதுர்முகனும் நேட நின்ற நீலநற் கண்டத் திறையார் போலும், படியேல் அழல்வண்ணஞ் செம்பொன் மேனி மணிவண்ணந் தம்வண்ண மாவார் போலும், அடியார் புகலிடம தானார் போலும் ஆக்கூரில் தான்றோன்றி யப்ப னாரே. 9

‡ ஏகாசம்–போர்வை. §மே காசு அம்–மேலுள்ள தோல் கிணம் முதலிய குற்றம். அம்–சாரியை. T மா காசம்–பெரிய பிரகாசம். ¶தீதூரா என்றும் பாடம். * கோலான்–காமன். கோல்–மலரம்பு. ** கோ–கண். ‡எண்–எண்ணத்தக்க. ! அண்ணா–திருவண்ணாமலை.

திரையானுஞ் செந்தா மரைமே லானுந் தேர்ந்தவர்கள் தாந் தேடிக் காணார் நாணும், புரையா னெனப்படுவார் தாமே போலும் போரேறு தாமேறிச் செல்வார் போலும், கரையா வரை வில்லே நாகம் நாணுக் காலத்தீ யன்ன கனலார் போலும், வரை யார் மதிலெய்த வண்ணர் போலும் ஆக்கூரில் தான்றோன்றி யப்ப னாரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி–சுயம்புநாதர், தான்தோன்றியப்பர்;
தேவி–(கட்கநேத்திரி) வாள்நெடுங்கண்ணி.

## 34. திருக்கடவூர் வீரட்டம்*

திருநேரிசை [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பொள்ளத்த காய மாயப் பொருளினைப் போக மாதர்
வெள்ளத்தைக் கழிக்க வேண்டில் விரும்புமின் விளக்குத் தூபம்
உள்ளத்த திரியோன் றேற்றி உணருமா றுணர வல்லார்
கள்ளத்தைக் கழிப்பர் போலும் கடவூர்வீ ரட்ட னாரே. 1

மண்ணிடைக் குரம்பை தன்னை மதித்துநீர் மைய லெய்தில்
விண்ணிடைத் தரும ராசன் வேண்டினால் விலக்கு வாரார்
பண்ணிடைச் சுவைகள் பாடி ஆடிடும் பத்தர்க் கென்றுங்
கண்ணிடை மணியர் போலுங் கடவூர்வீ ரட்ட னாரே. 2

பொருந்திய குரம்பை தன்னுட் பொய்ந்நடை செலுத்து கின்றீர்
ஒருத்தனை யுணர மாட்டீர் உள்ளத்திற் கொடுமை நீக்கீர்
வருத்தின களிறு தன்னை வருத்துமா வருத்த வல்லார்
கருத்தினில் இருப்பர் போலுங் கடவூர்வீ ரட்ட னாரே. 3

பெரும்புலர் காலை மூழ்கிப் பித்தற்குப் பத்த ராகி
அரும்பொடு மலர்கள் கொண்டாங் கார்வத்தை யுள்ளே வைத்து
விரும்பிநல் விளக்குத் தூபம் விதியினால் இடவல் லார்க்குக்
கரும்பினிற் கட்டி போல்வார் கடவூர்வீ ரட்ட னாரே.** 4

---

*'திருக்கடவூர்' என வழங்கப்பெறும். கடவூர்–அமுதகடம் அமுத லிங்கமான இடம்; கடம்–குடம். இயமவாதனையைக் கடத் தற் குதவும் ஊர் எனலுமாம். **இச்செய்யுள் சரியைநெறியைக் கூறுவது.

தலக்கமே† செய்து வாழ்ந்து தக்கவா றொன்று மின்றி
விலக்குவா ரிலாமை யாலே விளக்கத்திற் கோழி¶ போன்றேன்
மலக்குவார் மனத்தி னுள்ளே காலனார் தமர்கள் வந்து
கலக்கநான் கலங்கு கின்றேன் கடவூர்வீ ரட்ட னீரே. 5

பழியுடை யாக்கை தன்னிற் பாழுக்கே நீரி றைத்து
வழியிடை வாழ மாட்டேன் மாயமுந் தெளிய கில்லேன்
அழிவுடைத் தாய வாழ்க்கை ஐவரால் அலைக்கப் பட்டுக்
கழியிடைத் தோணி போன்றேன் கடவூர்வீ ரட்ட னீரே. 6

மாயத்தை அறிய மாட்டேன் மையல்கொள் மனத்த னாகிப்
பேயொத்துக் கூகை யானேன் பிஞ்ஞகா பிறப்பொன் றில்லீ
நேயத்தால் நினைய மாட்டேன் நீதனே நீச னேன்நான்
காயத்தைக் கழிக்க மாட்டேன் கடவூர்வீ ரட்ட னீரே. 7

பற்றிலா வாழ்க்கை வாழ்ந்து பாழுக்கே நீரி றைத்தேன்
உற்றலாற் கயவர் தேறா ரெ*ன்னுங்கட் டுரையோ டொத்தேன்
எற்றுளேன் என்செய் கேன்நான் இடும்பையால் ஞானம் ஏதுங்
கற்றிலேன் களைகண் காணேன் கடவூர்வீ ரட்ட னீரே. 8

சேலின்நேர் அனைய கண்ணார் திறம்விட்டுச் சிவனுக் கன்பாய்ப்
பாலும்நற் றயிர்நெய் யோடு பலபல ஆட்டி யென்றும்
மாலினைத் தவிர நின்ற மார்க்கண்டற் காக அன்று
காலனை உதைப்பர் போலுங் கடவூர்வீ ரட்ட னாரே. 9

மூந்துரு இருவ ரோடு மூவரு மாயி னாரும்
இந்திர னோடு தேவர் இருடிகள் இன்பஞ் செய்ய
வந்திரு பதுகள் தோளால் எடுத்தவன் வலியை வாட்டிக்
கந்திரு வங்கள்** கேட்டார் கடவூர்வீ ரட்ட னாரே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருவிருத்தம் [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மருட்டுயர் தீரஅன் றர்ச்சித்த மாணிமார்க் கண்டேயற்காய்
இருட்டிய மேனி வளைவாள் எயிற்றெரி போலுங் குஞ்சிச்

---

† தலக்கம்–இழிசெயல். ¶ கோழி–இங்கு விட்டில். *உற்றலால் கயவர் தேறார்–பழமொழி. **கந்திருவங்கள்–கீதங்கள்.

சுருட்டிய நாவில்வெங் கூற்றம் பதைப்ப வுதைத்துங்ஙனே
உருட்டிய சேவடி யான்கட வூருறை உத்தமனே. 1

பதத்தெழு மந்திரம்* அஞ்செழுத் தோதிப் பரிவினொடும்
இதத்தெழு மாணிதன் இன்னுயிர் உண்ண வெகுண்டடர்த்த
கதத்தெழு காலனைக் கண்குரு திப்புன லாறொழுக
உதைத்தெழு சேவடி யான்கட வூருறை உத்தமனே. 2

கூரப்புறு சிந்தையர் காண்டற் கரியவன் காமனையும்
நெருப்புமிழ் கண்ணினன் நீள்புனற் கங்கையும் பொங்கரவும்
பரப்பிய செஞ்சடைப் பால்வண்ணன் காலனைப் பண்டொருகால்
உரப்பிய சேவடி யான்கட வூருறை உத்தமனே. 3

மறித்திகழ் கையினன் வானவர் கோனை மனமகிழ்ந்து
குறித்தெழு மாணிதன் ஆருயிர் கொள்வான் கொதித்தசிந்தைக்
கறுத்தெழு மூவிலை வேலுடைக் காலனைத் தானலற
உறுக்கிய சேவடி யான்கட வூருறை உத்தமனே. 4

குழைத்திகழ் காதினன் வானவர் கோனைக் குளிர்ந்தெழுந்து
பழக்கமொ டர்ச்சித்த மாணிதன் ஆருயிர் கொள்ளவந்த
தழற்பொதி மூவிலை வேலுடைக் காலனைத் தானலற
உழக்கிய சேவடி யான்கட வூருறை உத்தமனே. 5

பாலனு**க் காயன்று பாற்கடல் ஈந்து பணைத்தெழுந்த
ஆலினிற் கீழிருந் தாரணம் ஓதி அருமுனிக்காய்ச்
சூலமும் பாசமுங் கொண்டு தொடர்ந்தடந் தோடிவந்த
காலனைக் காய்ந்த பிரான்கட வூருறை உத்தமனே. 6

படர்சடைக் கொன்றையும் பன்னக மாலை பணிகயிறு
உடைதலை கோத்துழல் மேனியன் உண்பலிக் கென்றுழல்வோன்
சுடர்பொதி மூவிலை வேலுடைக் காலனைத் துண்டமதா
உடறிய‡ சேவடி யான்கட வூருறை உத்தமனே. 7

வெண்டலை மாலையுங் கங்கை கரோடி† விரிசடைமேல்
பெண்தனி நாயகன் பேயுகந் தாடும் பெருந்தகையான்
கண்தனி நெற்றியன் காலனைக் காய்ந்து கடலின்விடம்
உண்டருள் செய்தபி ரான்கட வூருறை உத்தமனே. 8

---

* பதத்தெழு மந்திரம்–81 பத மந்திரமும் என்பர். ** பாலன்–உபமன்னியு முனிவர். ‡ உடறிய–அழித்த. † காரோடி–முடிமாலை.

கேழல தாகிக் கிளறிய கேசவன் காண்பரிதாய்
வாழிநன் மாமலர்க் கண்ணிடந் திட்டஅம் மாலவற்கன்(று)
ஆழியும் ஈந்து அடுதிறற் காலனை அன்றடர்த்து
ஊழியும் ஆய பிரான்கட வூருறை உத்தமனே. 9

தேன்திகழ் கொன்றையுங் கூவிள மாலை திருமுடிமேல்
ஆன்திகழ் ஐந்துகந் தாடும் பிரான்மலை ஆர்த்தெடுத்த
கூன்திகழ் வாளரக் கன்முடி பத்துங் குலைந்துவிழ
ஊன்றிய சேவடி யான்கட வூருறை உத்தமனே. 10

திருச்சிற்றம்பலம்

---

திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மலைக்கொ ளானை மயக்கிய வல்வினை
நிலைக்கொ ளானை நினைப்புறு நெஞ்சமே
கொலைக்கை யானையுங் கொன்றிடு மாதலால்
கலைக்கை யானைகண் டீர்கட வூரரே. 1

வெள்ளி மால்வரை போல்வதோ ரானையார்*
உள்ள வாறெனை உள்புகு மானையார்
கொள்ள மாகிய கோயிலு ளானையார்
கள்ள வானைகண் டீர்கட வூரரே. 2

ஞான மாகிய நன்குண ரானையார்
ஊனை வேவ வுருக்கிய வானையார்
வேன லானை** யுரித்துமை அஞ்சவே
கான லானைகண் டீர்கட வூரரே. 3

ஆல முண்டழ காயதொ ரானையார்
நீல மேனி நெடும்பளிங் கானையார்†
கோல மாய கொழுஞ்சுட ரானையார்
கால வானைகண் டீர்கட வூரரே. 4

---

*ஆனையார்—ஆனைபோல்பவர்; பசுவை மேற்கொள்பவர்; பசுபதி. இப்பதிகம் முழுதும் கடவூரரை ஆனையார் என்று கூறப்பட்டுள்ளது. ** வேனல்ஆனை—சினமுடைய யானையை. † இவ்வடி உமையொரு பாகனைக் குறிக்கும். நீலமேனி—திருமாலுமாம்.

அளித்த ஆன்அஞ்சும் ஆடிய வானையார்
வெளுத்த நீள்கொடி யேறுடை யானையார்
எளித்த வேழத்தை எள்குவித் தானையார்
களித்த வானைகண் டீர்கட வூரரே. 5

விடுத்த மால்வரை விண்ணுற வானையார்
தொடுத்த மால்வரை தூயதே ரானையார்
கடுத்த காலனைக் காய்ந்ததோ ரானையார்
கடுத்த வானைகண் டீர்கட வூரரே. 6

மண்ணு ளாரை மயக்குறு மானையார்
எண்ணு ளார்பலர் ஏத்திடு மானையார்
விண்ணு ளார்பல ரும்மறி யானையார்
கண்ணு ளானைக்கண் டீர்கட வூரரே. 7

சினக்குஞ் செம்பவ ளத்திர ளானையார்
மனக்கும் வல்வினை தீர்த்திடு மானையார்
அனைக்கும் அன்புடை யார்மனத் தானையார்
கனைக்கு மானைகண் டீர்கட வூரரே. 8

வேத மாகிய வெஞ்சுட ரானையார்
நீதி யானில னாகிய வானையார்
ஓதி யூழி தெரிந்துண ரானையார்
காத லானைகண் டீர்கட வூரரே. 9

நீண்ட மாலொடு நான்முகன் தானுமாய்க்
காண்டு மென்றுபுக் கார்க ளிருவரும்
மாண்ட வாரழ லாகிய வானையார்
காண்ட லானைகண் டீர்கட வூரரே. 10

அடுத்து வந்த இலங்கையர் மன்னனை
எடுத்த தோள்கள் இறநெரித் தானையார்
கடுத்த காலனைக் காய்ந்ததோ ரானையார்
கடுக்கை யானைகண் டீர்கட வூரரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—அமிர்தகடேசுவரர்; தேவி—அபிராமியம்மை.

---

## 35. திருக்கடவூர்மயானம்*

### திருக்குறுந்தொகை** [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

குழைகொள் காதினர் கோவண ஆடையர்
உழையர் தாங்கட வூரின் மயானத்‡ த்தார்
பழைய தம்மடி யார்செய்த பாவமும்
பிழையும் தீர்ப்பர் பெருமா னடிகளே.§ 1

உன்னி வானவர் ஓதிய சிந்தையில்
கன்னல் தேன்கட வூரின் மயானத்தார்
தன்னை நோக்கித் தொழுதெழு வார்க்கெலாம்
பின்னை என்னார் பெருமா னடிகளே. 2

சூலம் ஏந்துவர் தோலுடை ஆடையர்
ஆலம் உண்டமு தேமிகத் தேக்குவர்
கால காலர் கடவூர் மயானத்தார்
மாலை மார்பர் பெருமா னடிகளே. 3

இறைவ னார்இமை யோர்தொழு பைங்கழல்
மறவ னார்கட வூரின் மயானத்தார்
அறவ னார் அடி யாரடி யார்தங்கள்
பிறவி தீர்ப்பர் பெருமா னடிகளே. 4

கத்து காளி கதந்தணி வித்தவர்
மத்தர் தாங்கட வூரின் மயானத்தார்
ஒத்தொவ் வாதன செய்துழல் வாரொரு
பித்தர் காணும் பெருமா னடிகளே. 5

எரிகொள் மேனி இளம்பிறை வைத்தவர்
கரியர் தாங்கட வூரின் மயானத்தார்
அரியர் அண்டத்து ளோர்அயன் மாலுக்கும்
பெரியர் காணும் பெருமா னடிகளே. 6

---

* 'திருமெய்ஞ்ஞானம்' என வழங்கப்பெறும். **இப்பதிகத்தில் 9. 10-ம் செய்யுட்கள் சிதைந்து போயின. ‡ மயானம்-ஒரு கற்பத்தில் பிரமனை எரித்து, மீளஎழுப்பிப் படைப்புவல்லமை பெற அருளிய இடம். § பெருமானடிகள் – சுவாமியின் பெயர்.

அணங்கு பாகத்தர் ஆரண நான்மறை
கணங்கள் சேர்கட வூரின் மயானத்தார்
வணங்கு வாரிடர் தீர்ப்பர் மயக்குறும்
பிணங்கொள் காடர் பெருமா னடிகளே. 7

அரவு கையினர் ஆதி புராணனூர்
மரவு சேர்கட வூரின் மயானத்தார்
பரவு வாரிடர் தீர்ப்பர் பணிகொள்வர்
பிரமன் மாற்கும் பெருமா னடிகளே. 8-9-10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—பெரிய பெருமானடிகள், பிரமபுரீசுவரர்;
தேவி—அமலக்குய மின்னம்மை.

---

## 36. திருநள்ளாறு†

திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]
திருச்சிற்றம்பலம்

உள்ளா ருத*தோர் புண்டரி கத்திரள்
தெள்**ளா றுச்சிவ சோதித் திரளினைக்
கள்ளா றுதபொற் கொன்றை கமழ்சடை
நள்ளா றுஎன நம்வினை நாசமே. 1

ஆர ணப்பொரு ளாம்அரு ளாளனூர்
வார ணத்துரி போர்த்தம ணாளனூர்
நார ணன் நண்ணி யேத்துநள் ளாறனூர்
கார ணக்கலை ஞானக் கடவுளே. 2

மேகம் பூண்டதோர் மேருவிற் கொண்டெயில்
சோகம் பூண்டழல் சோரத்தொட் டான்அவன்
பாகம் பூண்டமால் பங்கயத் தானெடு
நாகம் பூண்டுகூத் தாடுநள் ளாறனே. 3

---

† இது நளன் பூசித்தமையால் பெற்ற பெயர் ஆகும். நள்ளாறு முசுகுந்தன் தாபித்த விடங்கத் தலங்கள்ஏழனுள் ஒன்று. * ஆருத— ஆருக வழியாகக் கொள்ளாத; **தெள்—தெளிந்த ஞானம்.

மலியுஞ் செஞ்சடை வாளர வம்மொடு
பொலியும் பூம்புனல் வைத்த புனிதனார்
நலியுங் கூற்றை நலிந்தநள் ளாறர்தம்
வலியுங் கண்டிறு மாந்து மகிழ்வனே. 4

உறவ னாய்நிறைந் துள்ளங் குளிர்ப்பவன்
இறைவ னாகிநின் றெண்ணிறைந் தானவன்
நறவ நாறும் பொழிற்றிரு நள்ளாறன்
மறவ னாய்ப்பன்றிப் பின்சென்ற மாயமே. 5

செக்க ரங்கழி செஞ்சுடர்ச் சோதியார்
நக்க ரங்கர வார்த்தநள் ளாறனார்
வக்க ரன்உயிர் வவ்விய மாயற்குச்
சக்க ரம்மருள் செய்த சதுரரே. 6

வஞ்ச நஞ்சிற் பொலிகின்ற கண்டத்தர்
விஞ்சை யிற்செல்வப் பாவைக்கு† வேந்தனார்
வஞ்ச நெஞ்சத் தவர்க்கு வழிகொடார்
நஞ்ச நெஞ்சர்க் கருளுநள் ளாறரே. 7

அல்ல னென்று மலர்க்கரு ளாயின
சொல்ல னென்றுசொல் லாமறைச் சோதியான்
வல்ல னென்றும்வல் லார்வளம் மிக்கவர்
நல்ல னென்றும்நல் லார்க்குநள் ளாறனே. 8

பாம்ப ணைப்பள்ளி கொண்ட பரமனும்
பூம்ப ணைப்பொலி கின்ற புராணனும்
தாம்ப ணிந்தளப் பொண்ணாத் தனித்தழல்
நாம்ப ணிந்தடி போற்றுநள் ளாறனே. 9

இலங்கை மன்னன் இருபது தோளிற
மலங்க மால்வரை மேல்விரல் வைத்தவர்
நலங்கொள் நீற்றர்நள் ளாறரை நாடொறும்
வலங்கொள் வார்வினை யாயின மாயுமே. 10

திருச்சிற்றம்பலம்

† விஞ்சையிற் செல்வப் பாவைக்கு - ஞானத் தாயாகிய சிவசக்தி.

## திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

### திருச்சிற்றம்பலம்

ஆதிக்கண் ணான்*முகத்தி லொன்று சென்று அல்லாத சொல்** லுரைக்கத் தன்கை வாளால், சேதித்த திருவடியைச் செல்ல நல்ல சிவலோக நெறிவகுத்துக் காட்டு வானை, மாதிமைய மாதொருகூ றுயி னானை மாமலர்மே லயனோடு மாலுங் காணா, நாதியை நம்பியை நள்ளாற் றானை நானடியேன் நினைக்க‡ப்பெற் றுய்ந்த வாறே. 1

படையானைப் பாசுபத வேடத் தானைப் பண்டனங்கற் பார்த்தானைப் பாவமெல்லாம், அடையாமைக் காப்பானை யடியார் தங்கள் அருமருந்தை ஆவாவென் றருள்செய் வானைச், சடையானைச் சந்திரனைத் தரித்தான் தன்னைச் சங்கத்த முத்தனைய வெள்ளை யேற்றின், நடையானை நம்பியை நள்ளாற் றானை நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்த வாறே, 2

படஅரவ மொன்றுகொண் டரையி லார்த்த பராபரனைப் பைஞ்ஞீலி மேவி னானை, அடலரவம் பற்றிக் கடைந்த நஞ்சை அமுதாக வுண்டானை ஆதி யானை, மடலரவம் மன்னுபூங் கொன்றை யானை மாமணியை மாணிக்காய்க் காலன் தன்னை, நடலரவஞ் செய்தானை நள்ளாற் றானை நானடியேன் நினைக்கப் பெற் றுய்ந்த வாறே. 3

கூட்டங்க மொன்றுதங் கையி லேந்திக் கங்கணமுங் காதில் விடு தோடு மிட்டுச், சுட்டங்கங் கொண்டு துதையப் பூசிச் சுந்தரனுய்ச் சூலங்கை யேந்தி னானைப், பட்டங்க மாலை நிறையச் சூடிப் பல்கணமுந் தாமும் பரந்த காட்டில், நட்டங்க மாடியை நள்ளாற் றானை நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்த வாறே. 4

உலந்தார்தம் அங்கங்கொண் டுலக மெல்லாம் ஒருநொடியில் உழல்வானை உலப்பில் செல்வம், சிலந்திதனக் கருள்செய்த தேவ தேவைத் திருச்சிராப் பள்ளியெஞ் சிவலோகனைக், கலந்தார்தம் மனத்தென்றுங் காத லானைக் கச்சியே கம்பனைக் க்மழ்பூங்

---

*ஆதிக்கண் ணான்—முதலிற் படைக்கப்பட்டவன்; பிரமதேவன். ** அல்லாத சொல்—தானும் ஐம்முகன் என்ற சொல். ‡ நானடியே நினைக்கப் என்றும் பாடம்; இதனை இப்பதிகம் முழுதுங் கொள்க.

கொன்றை, நலந்தாங்கும் நம்பியை நள்ளாற் றானை நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்த வாறே. 5

குலங்கெடுத்துக் கோள்நீக்க வல்லான் தன்னைக் குலவரையன் மடப்பாவை இடப்பா லானை, மலங்கெடுத்து மாதீர்த்தம் ஆட்டிக் கொண்ட மறையவனைப் பிறைதவழ்செஞ் சடையினானைச், சலங்கெடுத்துத் தயாமூல தன்ம மென்னுந் தத்துவத்தின்§ வழிநின்று தாழ்ந்தோர்க் கெல்லாம், நலங்கொடுக்கும் நம்பியை நள்ளாற் றானை நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்த வாறே 6

பூவிரியும் மலர்க்கொன்றைச் சடையி னானைப் புறம்பயத்தெம் பெருமானைப் புகலூ ரானை, மாவிரியக் களிறுரித்த மைந்தன் தன்னை மறைக்காடும் வலிவலமும் மன்னி னானைத், தேவிரியத் திகழ்தக்கன் வேள்வி யெல்லாஞ் சிதைத்தானை யுதைத்தவன்றன் சிரங்கொண் டானை, நாவிரிய மறைநவின்ற நள்ளாற் றானை நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்த வாறே. 7

சொல்லானைச் சுடர்ப்பவளச் சோதி யானைத் தொல்லவுணர் புரமூன்று மெரியச் செற்ற, வில்லானை யெல்லார்க்கும் மேலா னானை மெல்லியலாள் பாகனை வேதம் நான்கும், கல்லாலின் நீழற்கீழ் அறங்கண் டானைக் காளத்தி யானைக் கயிலை மேய, நல்லானை நம்பியை நள்ளாற் றானை நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்த வாறே. 8

குன்றாத மாமுனிவன் சாபம் நீங்கக் குரைகழலாற் கூற்றுவனைக் குமைத்த கோனை, அன்றாக அவுணர்புரம் மூன்றும் வேவ ஆரழல்வா யோட்டி யடர்வித் தானைச், சென்றாது வேண்டிற் றொன் றீவான் றன்னைச் சிவனேயெம் பெருமானென் றிருப்பார்க் கென்றும், நன்றாகும் நம்பியை நள்ளாற் றானை நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்த வாறே. 9

இறவாமே வரம்பெற்றே னென்று மிக்க இராவணனை இருபதுதோள் நெரிய வூன்றி, உறவாகி யின்னிசைகேட் டிரங்கி

§இதனைத் திருமழபாடி திருத்தாண்டகம் 6-ம் செய்யுளிற் காண்க.

பிணியேயுற்றபிணி தவிர்த்தருள வல்லான் தன்னை, மறவாதார் மனத்தென்றும் மன்னி னானை மாமதியம் மலர்க்கொன்றை வன்னி மத்தம், நறவார்செஞ் சடையானை நள்ளாற் றானை நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்த வாறே. 10

திருச்சிற்றம்பலம்

---

*சுவாமி—தர்ப்பாரண்யேசுவரர்; தேவி—போகமார்ந்த பூண் முலையாள்.*

---

## 37. திருமீயச்சூர் இளங்கோயில்*

### திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**தோ**ற்றுங் கோயிலுந் தோன்றிய கோயிலும்
வேற்றுக் கோயில் பலவுள மீயச்சூர்க்
கூற்றம் பாய்ந்த குளிர்புன் சடையரற்
கேற்றங் கோயில்கண் டீரிளங் கோயிலே. 1

**வ**ந்த னையடைக் கும்மடித் தொண்டர்கள்
பந்த னைசெய்து பாவிக்க நின்றவன்
சிந்த னைதிருத் துந்திரு மீயச்சூர்
எந்த மையுடை யாரிளங் கோயிலே. 2

**ப**ஞ்ச மந்திரம் ஓதும் பரமனார்
அஞ்ச ஆனை யுரித்தன லாடுவார்
நெஞ்சம் வாழி நினைந்திரு மீயச்சூர்
எந்த மையுடை யாரிளங் கோயிலே. 3

**நா**று மல்லிகை கூவிளஞ் செண்பகம்
வேறு வேறு விரித்த சடையிடை
ஆறு கொண்டுகந் தான்திரு மீயச்சூர்
ஏறு கொண்டுகந் தாரிளங் கோயிலே. 4

**வெ**வ்வ வண்ணத்து நாகம் வெருவவே
கவ்வ வண்ணக் கனல்விரித் தாடுவர்

---

* இது மீயச்சூர் ஆலயத்திலுள்ள சுவாமி சந்நிதிக்கு வடபுறம் உள்ள சிறிய ஆலயம்.

செல்வ வண்ணந் திகழ்திரு மீயச்சூர்
எவ்வ வண்ணம் பிரா**னிளங் கோயிலே. 5

பொன்னுங் கொன்றையும் பூவணி மாலையும்
பின்னுஞ் செஞ்சடை மேற்பிறை சூடிற்று
மின்னு மேகலை யாளொடு மீயச்சூர்
இன்ன நாள்அக லாரிளங் கோயிலே. 6

படைகொள் பூதத்தன் பைங்கொன்றைத் தாரினன்
சடைகொள் வெள்ளத்தன் சாந்தவெண் ணீற்றினன்
விடைகொ ளூர்தியி னன்திரு மீயச்சூர்
இடைகொண் டேத்தநின் றாரிளங் கோயிலே. 7

ஆறு கொண்ட சடையினர் தாமுமோர்
வேறு கொண்டதோர் வேடத்த ராகிலும்
கூறு கொண்டுகந் தாளொடு மீயச்சூர்
ஏறு கொண்டுகந் தாரிளங் கோயிலே. 8

வேதத் தானென்பர் வேள்வியு ளானென்பர்
பூதத்தா னென்பர் புண்ணியர் தன்னையே
கீதத் தான்கிள ருந்திரு மீயச்சூர்
ஏதந் தீர்க்கநின் றாரிளங் கோயிலே. 9

கடுக்கண் டன்கயி லாய மலைதனை
எடுக்க லுற்ற இராவணன் ஈடற
விடுக்க ணின்றி வெகுண்டவன் மீயச்சூர்
இடுக்கண் தீர்க்கநின் றாரிளங் கோயிலே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி-சகலபுவனேசுவரர்; தேவி-மேகலாம்பிகை.

## 38. திருவீழிமிழலை

திருநேரிசை [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பூதத்தின் படையர் பாம்பின் பூணினர் பூண நூலர்
சீதத்திற் பொலிந்த திங்கட் கொழுந்தர்நஞ் சழுந்து கண்டர்
கீதத்திற் பொலிந்த வோசைக் கேள்வியர் வேள்வி யாளர்
வேதத்தின் பொருளர் வீழி மிழலையுள் விகிர்த னாரே. 1

** எவ்வ வண்ணப் பிரான் என்றும் பாடம்.

காலையிற் கதிர்செய் மேனி கங்குலிற் கறுத்த கண்டர்
மாலையில்† மதியஞ் சேர்ந்த மகுடத்தர் மதுவும் பாலும்
ஆலையிற் பாகும் போல அண்ணித்திட் டடியார்க் கென்றும்
வேலையின் அமுதர் வீழி மிழலையுள் விகிர்த னாரே. 2

வருந்தின நெருநல் இன்றாய் வழங்கின நாளர் ஆற்கீழ்
இருந்துநன் பொருள்கள் நால்வர்க் கியம்பினர் இருவ ரோடும்
பொருந்தினர் பிரிந்து தம்பாற் பொய்யரா மவர்கட் கென்றும்
விருந்தினர்‡ திருந்து வீழி மிழலையுள் விகிர்த னாரே. 3

நிலையிலா வூர்மூன் றொன்ற நெருப்பரி காற்றம் பாகச்
சிலையுநா ணதுவு நாகங் கொண்டவர் தேவர் தங்கள்
தலையினால்* தரித்த என்புந் தலைமயிர் வடமும் பூண்ட
விலையிலா வேடர் வீழி மிழலையுள் விகிர்த னாரே. 4

மறையிடைப் பொருளர் மொட்டின் மலர்வழி வாசத் தேனர்
கறவிடைப் பாலின் செய்யர் கரும்பினிற் கட்டி யாளர்
பிறையிடைப் பாம்பு கொன்றைப் பிணையல்சேர் சடையுள் நீரர்
விறகிடைத் தீயர்§ வீழி மிழலையுள் விகிர்த னாரே. 5

எண்ணகத் தில்லை அல்லர் உளரல்லர் இமவான் பெற்ற
பெண்ணகத் தரையர் காற்றில் பெருவலி யிருவ ராகி
மண்ணகத் தைவர் நீரில் நால்வர்தீ யதனில் மூவர்
விண்ணகத் தொருவர் வீழி மிழலையுள் விகிர்த னாரே.** 6

சந்தணி கொங்கை யாளோர் பங்கினர் சாம வேதர்
எந்தையும் எந்தை தந்தை தந்தையு மாய ஈசர்
அந்தியோ டுதயம் அந்த ணாளர்ஆன் நெய்யால் வேட்கும்
வெந்தழ லுருவர் வீழி மிழலையுள் விகிர்த னாரே. 7

நீற்றினை நிறையப் பூசி நித்தல்ஆ யிரம்பூக் கொண்டு
ஏற்றுழி யொருநா ளொன்று குறையக்கண் நிறைய விட்ட

---

† மாலையில், இல்: ஏழனுருபு. ‡ விருந்தினர்–புதியர். * தலையினால் – தலையோடு. § விறகிடைத்தீயர் – இறைவன் உயிர்களோடு அத்துவிதமாய்க் கலந்து நிற்றலையும், சிவசாதனத்தால் வெளிப்படுதலையும் குறிப்பது. **இச்செய்யுள் இறைவர் நிலம் முதலிய பூதங்களில் முறையே ஐந்து முதலாகிய குணங்களாய் நிற்பவர் என்பதைக் குறிக்கும்.

ஆற்றலுக் காழி நல்கி யவன்கோணார்ந் திழிச்சுங் கோயில்S
வீற்றிருந் தளிப்பர் வீழி மிழலையுள் விகிர்த ளுரே. 8

சித்திசெய் பவர்கட் கெல்லாஞ் சேர்விடஞ் சென்று கூடப்
பத்திசெய் பவர்கள் பாவம் பறைப்பவர் இறப்பி லாளர்
முத்திசை பவள மேனி முதிரொளி நீல கண்டர்
வித்தினில் முளையர் வீழி மிழலையுள் விகிர்த ளுரே. 9

தருக்கின அரக்கன் தேரூர் சாரதி தடைநி லாது
பொருப்பினை யெடுத்த தோளும் பொன்முடி பத்தும் புண்ணாய்
நெரிப்புண்டங் கலறி மீண்டு நினைந்தடி பரவத் தம்வாள்
விருப்பொடுங் கொடுப்பர் வீழி மிழலையுள் விகிர்த ளுரே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருவிருத்தம் – [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வான்* சொட்டச் சொட்டநின் றட்டும் வளர்மதி யோடயலே
தேன்சொட்டச் சொட்டநின் றட்டுந் திருக்கொன்றை சென்னி வைத்தீர்
மான்பெட்டை நோக்கி மணாளீர் மணிநீர் மிழலையுள்ளீர்
நான் சட்ட வும்மை மறக்கினும் என்னைக் குறிக்கொண்மினே. 1

அந்தமும் ஆதியு மாகிநின் றீரண்டம் எண்டிசையும்
பந்தமும்‡ வீடும் பரப்புகின் றீர்பசு வேற்றுகந்தீர்
வெந்தழல் ஓம்பு மிழலையுள் ளீரென்னைத் தென்திசைக்கே
உந்திடும் போது மறக்கினும் என்னைக் குறிக்கொண்மினே. 2

அலைக்கின்ற நீர்நிலங் காற்றனல் அம்பர மாகிநின்றீர்
கலைக்கன்று சேருங் கரத்தீர் கலைப்பொரு ளாகிநின்றீர்
விலக்கின்றி நல்கும் மிழலையுள் ளீர்மெய்யிற் கையொடுகால்
குலைக்கின்று நும்மை மறக்கினும் என்னைக் குறிக்கொண்மினே. 3

தீத்தொழி லான்†தலை தீயிலிட் டுச்செய்த வேள்விசெற்றீர்
பேய்த்தொழி லாட்டியை**ப் பெற்றுடை யீர்பிடித் துத்திரியும்

---

S இழிச்சுங் கோயில்–விண்ணிழி விமானம். *வான்–அமுதம். ‡ பந்தம்–சண்டு மாயேயம்: அது தனுகரணபுவன போகங்கள். †தீத்தொழிலான்–தக்கன், ** பேய்த்தொழிலாட்டி–பத்திரகாளி.

வேய்த்தொழி லாளர் மிழலையுள் ளீர்விக்கி அஞ்செழுத்தும்
ஓத்தொழிந் தும்மை மறக்கினும் என்னைக் குறிக்கொண்மினே. 4

தோட்பட்ட நாகமுஞ் சூலமுஞ் சுற்றியும் பத்திமையால்
மேற்பட்ட அந்தணர் வீழியும் என்னையும் வேறுடையீர்
நாட்பட்டு வந்து பிறந்தேன் இறக்க* நமன்தமர்தம்
கோட்பட்டு நும்மை மறக்கினும் என்னைக் குறிக்கொண்மினே.5

கண்டி**யிற் பட்ட கழுத்துடை யீர்கரி காட்டிவிட்ட
பண்டி‡யிற் பட்ட பரிகலத் தீர்பதி வீழிகொண்டீர்
உண்டியிற் பட்டினி நோயில் உறக்கத்தில் உம்மைஐவர்
கொண்டி§யிற் பட்டு மறக்கினும் என்னைக் குறிக்கொண்மினே.6

தோற்றங்கண் டான்சிர மொன்றுகொண் டீர்தூய வெள்ளெருதோன்
றேற்றங்கொண் டீர்எழில் வீழி மிழலை இருக்கைகொண்டீர்
சீற்றங்கொண் டென்மேற் சிவந்ததொர் பாசத்தால் வீசியவெங்
கூற்றங்கண் டும்மை மறக்கினும் என்னைக் குறிக்கொண்மினே. 7

சுழிப்பட்ட கங்கையுந் திங்களுஞ் சூடிச்சொக் கம்பயின்றீர்
பழிப்பட்ட பாம்பரைப் பற்றுடை யீர்படர் தீப்பருக
விழிப்பட்ட காமனை விட்டீர் மிழலையுள் ளீர்பிறவிச்
சுழிப்பட்டு நும்மை மறக்கினும் என்னைக் குறிக்கொண்மினே. 8

பிள்ளையிற் பட்ட பிறைமுடி யீர்மறை யோதவல்லீர்
வெள்ளையிற் பட்டதொர் நீற்றீர் விரிநீர் மிழலையுள்ளீர்
நள்ளையிற் பட்டைவர் நக்கரைப் பிக்க நமன்தமர்தம்
கொள்ளையிற் பட்டு மறக்கினும் என்னைக் குறிக்கொண்மினே. 9

கறுக்கொண் டரக்கன் கயிலையைப் பற்றிய கையுமெய்யும்
நெறுக்கென் றிறச்செற்ற சேவடி யாற்கூற்றை நீறுசெய்தீர்
வெறிக்கொன்றை மாலை முடியீர் விரிநீர் மிழலையுள்ளீர்
இறக்கின்று நும்மை மறக்கினும் என்னைக் குறிக்கொண்மினே10

திருச்சிற்றம்பலம்

---

*வந்து பிறந்தேன் நாட்பட்டிறக்க என மாற்றுக. நாட்படுதல்-ஆயுள் முடிவு. **கண்டி-உருத்திராட்சமாலை. ‡பண்டி-உடல். § கொண்டி-கொடுஞ்செயல்.

## திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கரைந்து கைதொழு வாரையுங் காதலன்
வரைந்து வைதெழு வாரை*யும் வாடலன்
நிரந்த பாரிடத் தோடவர் நித்தலும்
விரைந்து போவது வீழி மிழலைக்கே. 1

ஏற்று வெல்கொடி யீசன்ற னாதிரை
நாற்றஞ் சூடுவர் நன்னறுந் திங்களார்
நீற்றுச் சந்தன வெள்ளை விரவலார்
வேற்றுக் கோலங்கொள் வீழி மிழலையே. 2

புனைபொற் சூலத்தன் போர்விடை யூர்தியான்
வினைவெல் நாகத்தன் வெண்மழு வாளினன்
நினைய நின்றவன் ஈசனை யேயெனு
வினையி லார்தொழும் வீழி மிழலையே. 3

மாடத் தாடு மனத்துடன் வைத்தவர்
கோடத் தார்குருக் கேத்திரத்‡ தார்பலர்
பாடத் தார்பழிப் பார்பழிப் பல்தோர்||
வேடத் தார்தொழும் வீழி மிழலையே. 4

எடுத்த வெல்கொடி யேறுடை யான்தமர்
உடுப்பர் கோவணம் உண்பது பிச்சையே
கெடுப்ப தாவது கீழ்நின்ற வல்வினை
விடுத்துப் போவது வீழி மிழலைக்கே. 5

குழலை† யாழ்மொழி யாரிசை வேட்கையால்
உழலை யாக்கையை யூணும் உணர்விலீர்
தழலை நீர்மடிக் கொள்ளன்மின்¶ சாற்றினேம்
மிழலை யானடி சாரவிண் ணாள்வரே. 6

தீரன் தீத்திர ளன்சடைத் தங்கிய
நீரன் ஆடிய நீற்றன்வண் டார்கொன்றைத்

---

* வைதெழுவார்-உலகாயதர் முதலிய புறச்சமயிகள். ‡ குருக்கேத்திரம்-குருக்ஷேத்திரம். ||பழிப்பல்லாத என்றும் பாடம். †மிழலை என்றும் பாடம். ¶தழலைநீர்மடிக் கொள்ளன்மின்-பழமொழி.

தாரன் மாலையன் தண்நறுங் கண்ணியன்
வீரன் வீழி மிழலை விகிர்தனே. 7

எரியி னாரிறை யாரிடு காட்டிடை
நரியி னார்பரி யாமகிழ் கின்றதோர்
பெரிய னார்தம் பிறப்பொடு சாதலை
விரியி னார்தொழும் வீழி மிழலையே. 8

நீண்ட சூழ்சடை மேலொர் நிலாமதி
காண்டு சேவடி மேலொர் கனைகழல்
வேண்டு வாரவர் வீதி புகுந்திலர்
மீண்டும் போவது வீழி மிழலைக்கே. 9

பாலை யாழொடு செவ்வழி பண்கொள
மாலை வானவர் வந்து வழிபடும்
ஆலை யாரழல் அந்தண ராகுதி
வேலை யார்*தொழும் வீழி மிழலையே. 10

மழலை யேற்று மணாளன் திருமலை
சுழல ஆர்த்தெடுத் தான்முடி தோளிறக்
கழல்கொள் காலில் திருவிரல் ஊன்றலும்
மிழலை யானடி வாழ்கென விட்டதே. 11

திருச்சிற்றம்பலம்

---

## திருக்குறுந்தொகை**

திருச்சிற்றம்பலம்

என்பொ னேஇமை யோர்தொழு பைங்கழல்
நன்பொ னேநலந் தீங்கறி வொன்றிலேன்‡
செம்பொ னேதிரு வீழி மிழலையுள்
அன்ப னேஅடி யேனைக் குறிக்கொளே. 1

கண்ணி னாற்களி கூரக்கை யால்தொழு(து)
எண்ணு மாறறி யாதிளைப் பேன்றனை
விண்ணு ளார்தொழும் வீழி மிழிலையுள்
அண்ண லேஅடி யேனைக் குறிக்கொளே. 2

---

*ஆகுதிவேலையார்—ஆகுதித் தொழிலையுடையவர். **இப்பதிகம் இறைவனிடம் செய்துகொள்ளும் பிரார்த்தனையை அடியார்க்கு உணர்த்தியது. ‡ அறிவு ஒன்றிலேன் — அறிதல் சிறிதுமிலேன்.

ஞால மேவிசும் பேநலந் தீமையே
கால மேகருத் தேகருத் தாற்றேழும்
சீல மேதிரு வீழி மிழலையுள்
கோல மேஅடி யேனைக் குறிக்கொளே. 3

மூத்த னேமுதல் வாமுகி ழும்முளை
ஒத்த னேஒரு வாவுரு வாகிய
சித்த னேதிரு வீழி மிழலையுள்
அத்த னேஅடி யேனைக் குறிக்கொளே. 4

கருவ னேகரு வாய்த்தெளி வார்க்கெலாம்
ஒருவ னேஉயிர்ப் பாய்உணர் வாய்நின்ற
திருவ னேதிரு வீழி மிழலையுள்
குருவ னேஅடி யேனைக் குறிக்கொளே. 5

காத்த னேபொழி லேழையுங் காதலால்
ஆர்த்த னேஅம ரர்க்கயன் றன்தலை
சேர்த்த னேதிரு வீழி மிழலையுள்
கூத்த னேஅடி யேனைக் குறிக்கொளே. 6

நீதி வானவர் நித்தல் நியமஞ்செய்(து)
ஓதி வானவ ரும்முண ராததோர்
வேதி யாவிகிர் தாதிரு வீழியுள்
ஆதி யேஅடி யேனைக் குறிக்கொளே. 7

பழகி நின்னடி சூடிய பாலனைக்
கழகின் மேல்வைத்த காலனைச் சாடிய
அழக னேஅணி வீழி மிழலையுள்
குழக னேஅடி யேனைக் குறிக்கொளே. 8

அண்ட வானவர் கூடிக்க டைந்தநஞ்
சுண்ட வானவ னேஉணர் வொன்றிலேன்
விண்ட வான்பொழில் வீழி மிழலையுள்
கொண்ட னேஅடி யேனைக் குறிக்கொளே. 9

ஒருத்தன் ஓங்கலைத் தாங்க லுற்றானுரம்
வருத்தி னைய்வஞ்ச னேன்மனம் மன்னிய
திருத்த னேதிரு வீழி மிழலையுள்
ஒருத்த னேஅடி யேனைக் குறிக்கொளே. 10

திருச்சிற்றம்பலம்

திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

போரானை ஈருரிவைப் போர்வை யானைப் புலியதளே யுடை யாடை போற்றி ஞானைப், பாரானை மதியானைப் பகலா ஞானைப் பல்லுயிராய் நெடுவெளியாய்ப் பரந்து நின்ற, நீரானைக் காற் ருனைத் தீயா ஞானை* நினையாதார் புரமெரிய நினைந்த தெய்வத், தேரானைத் திருவீழி மிழலை யானைச் சேராதார் தீநெறிக்கே சேர்கின் ருரே. 1

சவந்தாங்கு மயானத்துச் சாம்ப லென்பு தலையோடு மயிர்க் கயிறு தரித்தான்§ தன்னைப், பவந்தாங்கு பாசுபத வேடத் தானைப் பண்டமரர் கொண்டுகந்த வேள்வி யெல்லாங், கவர்ந்தானைக் கச்சியே கம்பன் தன்னைக் கழலடைந்தான் மேற்கறுத்த காலன் வீழச், சிவந்தானைத் திருவீழி மிழலை யானைச் சேராதார் தீநெறிக்கே சேர்கின் ருரே. 2

அன்ருலின் கீழிருந்தங் கறஞ்சொன் ஞானை அகத்தியனை யுகப்பானை அயன்மால் தேட, நின்ருனைக் கிடந்தகடல் நஞ்சுண் டானை நேரிழையைக் கலந்திருந்தே புலன்க ளைந்தும், வென்ருனை மீயச்சூர் மேவி ஞானை மெல்லியலாள் தவத்தினிறை யளக்க லுற்றுச், சென்ருனைத் திருவீழி மிழலை யானைச் சேராதார் தீநெறிக்கே சேர்கி ன்ருரே. 3

தூயானைச் சுடர்ப்பவளச் சோதி யானைத் தோன்றிய எவ் வுயிர்க்குந் துணையாய் நின்ற, தாயானைச் சக்கரமாற் கீந்தான் தன்னைச் சங்கரனைச் சந்தோக சாமம்** ஓதும், வாயானை மந்திரிப் பார் மனத்து ளானை வஞ்சனையால் அஞ்செழுத்தும் வழுத்து வார்க்குச், சேயானைத் திருவீழி மிழலை யானைச் சேராதார் தீநெறிக்கே சேர்கின் ருரே. 3

நற்றவத்தின் நல்லானைத் தீதாய் வந்த நஞ்சமுது செய்தானை அமுத முண்ட, மற்றமரர் உலந்தாலும் உலவா தானை வருகாலஞ் செல்காலம் வந்த காலம், உற்றவத்தை யுணர்ந்தாலும் உணர

---

* பாரானை.........தீயானை — சிவனது எட்டுமூர்த்தம். ‡ சவந் தாங்கு......தரித்தான்—மாவிரதியர் கோலம். ** சந்தோகசாமம் — சந்தசுகளின் நிறைவுள்ள சாமவேதம்.

லாகா ஒருசுடரை யிருவிசும்பி னூர்மூன் றொன்றச், செற்றவனைத் திருவீழி மிழலை யானைச் சேராதார் தீநெறிக்கே சேர்கின் றாரே. 5

மைவான மிடற்றானை யவ்வான் மின்போல் வளர்சடைமேல் மதியானை மழையா யெங்கும், பெய்வானைப் பிச்சாட லாடுவானைப் பிலவாய பேய்க்கணங்க ளார்க்கச் சூலம், பொய்வானைப் பொய்யிலா மெய்யன் தன்னைப் பூதலமும் மண்டலமும் பொருந்தும் வாழ்க்கை, செய்வானைத் திருவீழி மிழலை யானைச் சேராதார் தீநெறிக்கே சேர்கின் றாரே. 6

மிக்கானைக் குறைந்தடைந்தார் மேவ லானை வெவ்வேறாய் இருமூன்று சமய மாகிப், புக்கானை எப்பொருட்கும் பொதுவானைப் பொன்னுலகத் தவர்போற்றும் பொருளுக் கெல்லாந், தக்கானைத் தானன்றி வேறொன் றில்லாத் தத்துவனைத் தடவரையை நடுவு செய்த, திக்கானைத் திருவீழி மிழலை யானைச் சேராதார் தீநெறிக்கே சேர்கின் றாரே. 7

வானவர்கோன் தோளிறுத்த மைந்தன் தன்னை வளைகுளமும் மறைக்காடும் மன்னி னானை, ஊனவனை உயிரவனை யொருநாட் பார்த்தன் உயர்தவத்தின் நிலையறிய லுற்றுச் சென்ற, கானவனைக் கயிலாயம் மேவி னானைக் கங்கைசேர் சடையானைக் கலந்தார்க் கென்றுந், தேனவனைத் திருவீழி மிழலை யானைச் சேராதார் தீநெறிக்கே சேர்கின் றாரே. 8

பரத்தானை யிப்பக்கம் பலவா னானைப் பசுபதியைப் பத்தர்க்கு முத்தி காட்டும், வரத்தானை வணங்குவார் மனத்து ளானை மாருதமால் எரிமூன்றும் வாய்அம் பீர்க்காஞ், சரத்*தானைச் சரத்தையுந்தன் தாட்கீழ் வைத்த தபோதனனைச் சடாமகுடத் தணிந்த பைங்கட், சிரத்தானைத் திருவீழி மிழலை யானைச் சேராதார் தீநெறிக்கே சேர்க்கின் றாரே. 9

அறுத்தானை அயன்தலைகள் அஞ்சி லொன்றை அஞ்சாதே வரையெடுத்த அரக்கன் தோள்கள், இறுத்தானை யெழுநரம்பி னிசை கேட்டானை இந்துவினைத் தேய்த்தானை இரவி தன்பல், பறித்தானைப் பகீரதற்காய் வானோர் வேண்டப் பரந்திழியும்

* மாருதம்.........சரம் — காற்று. மால், எரி என்ற மூன்றும் முறையே ஈர்க்கும், அம்பும், அதன் கூர்வாயும் ஆகிய அம்பு.

புனற்கங்கை பனிபோ லாங்குச், செறித்தானைத் திருவீழி மிழலை யானைச் சேராதார் தீநெறிக்கே சேர்கின் றாரே. 10

திருச்சிற்றம்பலம்

## திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

கயிலாய மலையுள்ளார் காரோ ணத்தார் கந்தமா தனத்து ளார் காளத்தியார், மயிலாடு துறையுளார் மாகா ளத்தார் வக் கரையார் சக்கரம் மாற்கீந்தார் வாய்ந்த, அயில்வாய சூலமுங் காபாலமும் அமருந் திருக்கரத்தார் ஆனே றேறி, வெயிலாய சோதி விளங்கு நீற்றார் வீழி மிழலையே மேவி னாரே. 1

பூதியணி பொன்னிறத்தார் பூண நூலர் பொங்கரவர் சங்க ரர்வெண் குழையோர் காதர், கேதிசரம்* மேவினார் கேதாரத் தார் கெடில வடஅதிகை வீரட்டத்தார், மாதுயரந் தீர்த்தென்னை உய்யக் கொண்டார் மழபாடி மேய மழுவா ளனார்,** வேதிகுடி யுள்ளார் மீயச் சூரார் வீழி மிழலையே மேவி னாரே. 2

அண்ணா மலையமர்ந்தார் ஆரூ ருள்ளார் அளப்பூரார் அந் தணர்கள் மாடக் கோயில், உண்ணா ழிகையார் உமையா ளோடும் இமையோர் பெருமானார் ஒற்றி யூரார், பெண்ணா கடத்துப் பெருந் தூங் கானை மாடத்தார் கூடத்தார் பேரா வூரார், விண் ணோர்க ளெல்லாம் விரும்பி யேத்த வீழி மிழலையே மேவி னாரே.3

வெண்காட்டார் செங்காட்டங் குடியார் வெண்ணி நன்ன கரார் வேட்களத்தார் வேத நாவார், பண்காட்டும் வண்டார் பழனத் துள்ளார் பராய்த்துறையார் சிராப்பள்ளி யுள்ளார் பண் டோர், வெண்கோட்டுக் கருங்களிற்றைப் பிளிறப் பற்றி யுரித்து ரிவை போர்த்த விடலை வேடம், விண்காட்டும் பிறைநுதலி அஞ் சக் காட்டி வீழி மிழலையே மேவி னாரே. 4

புடைசூழ்ந்த பூதங்கள் வேதம் பாடப் புலியூர்ச்சிற் றம்ப லத்தே நடமா டுவார், உடைசூழ்ந்த புலித்தோலர் கலிக்கச் சிமேற் றளியுளார் குளிர்சோலை யேகம் பத்தார், கடைசூழ்ந்து பலிதேருங் கங்காளனார் கழுமலத்தார் செழுமலர்த்தார்க் குழலி யோடும், விடைசூழ்ந்த வெல்கொடியார் மல்கு செல்வ வீழி மிழலையே மேவி னாரே. 5

* கேதிசரம்—திருக்கேதீச்சரம்; ஈழநாட்டுத்தலம். ** மணவா ளனார் என்றும் பாடம்.

பெரும்புலியூர் விரும்பினர் பெரும்பா ழியியார் பெரும் பற்றப் புலியூர் மூலட் டானத்தார், இரும்புகலார் இரும்பூளை யுள்ளார் ஏரார் இன்னம்ப ரார்ஈங்கோய் மலையார் இன்சொற், கரும்பனையாள் உமையோடுங் கருகா வூரார் கருப்பறிய லூரார் கரவீரத்தார், விரும்பமரர் இரவுபகல் பரவியேத்த வீழி மிழலையே மேவி னாரே. 6

மறைக்காட்டார் வலிவலத்தார் வாய்மூர் மேயார் வாழ் கொளி புத்தூரார் மாகா ளத்தார், கறைக்காட்டுங் கண்டனார் காபா லியியார் கற்குடியார் விற்குடியார் கானப் பேரார், பறைக் காட்டுங் குழிவிழிகட் பல்பேய் சூழப் பழையனூர் ஆலங்காட் டடிகள் பண்டோர், மிறைக்காட்டுங் கொடுங்காலன் வீடப் பாய்ந்தார் வீழி மிழலையே மேவி னாரே. 7

அஞ்சைக் களத்துள்ளார் ஐயாற் றுள்ளார் ஆரூரார் பேரூ ரார் அழுந்தூ ருள்ளார், தஞ்சைத் தளிக்குளத்தார் தக்க ளூரார் சாந்தை அயவந்தி தங்கி னார்தாம், நஞ்சைத் தமக்கமுதா வுண்ட நம்பர் நாகேச் சரத்துள்ளார் நாரை யூரார், வெஞ்சொற் சமண சிறையி லென்னை மீட்டார் வீழி மிழலையே மேவி னாரே. 8

கொண்ட லுள்ளார் கொண்டீச் சரத்தி னுள்ளார் கோவ லூர் வீரட்டங் கோயில் கொண்டார், தண்டலையார் தலையாலங் காட்டி லுள்ளார் தலைச்சங்கைப் பெருங்கோயில் தங்கி னார்தாம், வண்டலொடு மணற்கொணரும் பொன்னி நன்னீர் வலஞ்சுழி யார் வைகலின்மேல் மாடத் துள்ளார், வெண்டலைமான் கைக் கொண்ட விகிர்த வேடர் வீழி மிழலையே மேவி னாரே. 9

அரிச்சந் திரத்துள்ளார் அம்ப ருள்†ளார் அரிபிரமர் இந்திரர்க்கும் அரிய ரானார், புரிச்சந் திரத்துள்ளார் போகத் துள்ளார் பொருப்பரையன் மகளோடு விருப்ப ராகி, எரிச்சந் திரவேட்கு மிடத்தார் ஏம கூட*த்தார் பாடத்தே னிசையார் கீதர், விரிச்சங்கை யெரிக்கொண்டங் காடும் வேடர் வீழி மிழலையே மேவி னாரே. 10

புன்கூரார் புறம்பயத்தார் புத்தூ ருள்ளார் பூவணத்தார் புலிவலத்தார் வலியின் மிக்க, தன்கூர்மை கருதிவரை யெடுக்க

† அம்பர்-அம்பர்பெருந்திருக்கோயில். *ஏமகூடம்-கதிர்காமம்.

லுற்றான் தலைகளோடு மலைகளன்ன தாளுந் தோளும், பொன் கூருங் கழலடியோர் விரலா லூன்றிப் பொருப்பதன்கீழ் நெரித் தருள்செய் புவன நாதர். மின்கூருஞ் சடைமுடியார் விடையின் பாகர் வீழி மிழலையே மேவி னாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

## திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

கண்ணவன்காண் கண்ணொளிசேர் காட்சி யான்காண்† கந்திருவம் பாட்டிசையிற் காட்டு கின்ற, பண்ணவன்காண் பண்ணவற்றின் திறலானன்காண் பழமாகிச் சுவையாகிப் பயக் கின்றான்காண், மண்ணவன்காண் தீயவன்காண் நீரா னான்காண் வந்தலைக்கும் மாருதன்காண் மழைமே கஞ்சேர், விண்ணவன் காண் விண்ணவர்க்கும் மேலா னான்காண் விண்ணிழி¶தண் வீழி மிழலை யானே. 1

ஆலைப் படுகரும்பின் சாறு போல அண்ணிக்கும் அஞ்செழுத் தின் நாமத் தான்காண், சீல முடையடியார் சிந்தை யான்காண் திரிபுர மூன் றெரிபடுத்த சிலையி னான்காண், பாலினொடு தயிர் நறுநெய் யாடினான்காண் பண்டரங்க வேடன்காண் பலிதேர் வான்காண், வேலை விடமுண்ட மிடற்றி னான்காண் விண்ணிழி தண் வீழி மிழலை யானே, 2

தண்மையொடு வெம்மைதா னாயி னான்காண் சக்கரம் புட்பாகற் கருள்செய் தான்காண், கண்ணுமொரு மூன்றுடைய காபாலிகாண் காமனுடல் வேவித்த கண்ணி னான் காண், எண்ணில்சமண் தீர்த்தென்னை யாட்கொண் டான்காண் இரு வர்க் கெரியா யருளினான்காண், விண்ணவர்கள் போற்ற இருக்கின் றான்காண் விண்ணிழிதண் வீழி மிழலை யானே, 3

காதிசைந்த சங்கக் குழையி னான்காண் கனக மலையனைய காட்சி யான்காண், மாதிசைந்த மாதவமுஞ் சோதித் தான்காண்

---

† கண்ணொளிசேர் காட்சியான்-இறைவன் காண்பவனாகியும், காட்டுபவனாயும், காட்சிப் பொருளாயும் நிற்கும் நிலை. ¶விண்ணிழி -திருமாலால் தேவலோகத்தினின்றும் கொணர்ந்து அமைத்துப் பூசித்த கோயில்.

வல்லேன வெள்ளெயிற்று பரணத் தான்காண், ஆதியன்காண் அண்டத்துக் கப்பா லான்காண் ஐந்தலைமா நாகம்நாண் ஆக்கி னுன்காண், வேதியன்காண் வேதவிதி காட்டினுன்காண் விண் ணிழிதண் வீழி மிழலை யானே. 4

நெய்யினெடு பாலிளநீ ராடி னுன்காண் நித்த*மண வாள† னென நிற்கின் ருன்காண், கையின்மழு வாளொடுமான் ஏந்தி னுன்காண் காலனுயிர் காலாற் கழிவித் தான்காண், செய்யதிரு மேனிவெண் ணீற்றி னுன்காண் செஞ்சடைமேல் வெண்மதியஞ் சேர்த்தி னுன்காண், வெய்யகனல் விளையாட் டாடி னுன்காண் விண்ணிழிதண் வீழி மிழலை யானே. 5

கண்துஞ்சுங் கருநெடுமால் ஆழி வேண்டிக் கண்ணிடந்து சூட்டக்கண் டருளு வான்காண், வண்டுண்ணும் மதுக்கொன் றை‡ வன்னி மத்தம் வான்கங்கை சடைக்கரந்த மாதே வன்காண், பண்தங்கு மொழிமடவாள் பாகத் தான்காண் பரமன்காண் பரமேட்டி யாயி னுன்காண், வெண்திங்கள் அரவொடுசெஞ் சடைவைத் தான்காண் விண்ணிழிதண் வீழி மிழலை யானே. 6

கற்பொலிதோள் சலந்தரனைப் பிளந்த ஆழி கருமாலுக் கருள் செய்த கருணை யான்காண், விற்பொலிதோள் விசயன்வலி தேய்வித் தான்காண் வேடுவனுய்ப் போர்பொருது காட்டி னுன் காண், தற்பரமாந் தற்பரமாய்§ நிற்கின் ருன்காண் சதாசிவன் காண் தன்னெப்பா ரில்லா தான்காண், வெற்பரையன் பாவை விருப்பு ளான்காண் விண்ணிழிதண் வீழி மிழலை யானே. 7

மெய்த்தவன்காண் மெய்த்தவத்தில் நிற்பார்க் கேல்லாம் விருப்பிலா இருப்புமன விளையர்க் கென்றும், பொய்த்தவன்காண் புத்தன்¶ மறவா தோடி எறிசல்லி புதுமலர்க ளாக்கி னுன்காண், உய்த்தவன் காண் உயர்கதிக்கே உள்கி னுரை உலகனைத்தும் ஒளித் தளித்திட் டுய்யச் செய்யும், வித்தகன்காண் வித்தகர்தாம் விரும்பி யேத்தும் விண்ணிழிதண் வீழி மிழலை யானே. 8

---

* நித்தன என்றும் பாடம். † மணவாளன் – மணவாளமூர்த்தி. ‡ மலர்க்கொன்றை என்றும் பாடம். § தற்பரமாய் நற்பரமாய் என்றும் பாடம். ¶ புத்தன் – சாக்கியநாயனுர்.

சந்திரனைத் திருவடியால் தளர்வித் தான்காண் தக்கனையும் முனிந்தெச்சன் தலைகொண் டான்காண், இந்திரனைத் தோள்முறி வித் தருள்செய் தான்காண் ஈசன்காண் நேசன்காண் நினைவோர்க் கெல்லாம், மந்திரமும் மறைப்பொருளு மாயி னான்காண் மாலொ டயன் மேலொடுகீழ் அறியா வண்ணம், வெந்தழலின் விரிசுடராய் ஓங்கி னான்காண் விண்ணிழிதண் வீழி மிழலை யானே. 9

ஈங்கை*ப்பேர் ஈமவனத் திருக்கின் றான்காண் எம்மான்காண் கைம்மாவி னுரிபோர்த் தான்காண், ஓங்குமலைக் கரையன்றன் பாவையோடும் ஒருருவாய் நின்றான்காண் ஓங்கா ரன்காண், கோங்குமலர்க் கொன்றையந்தார்க் கண்ணி யான்காண் கொல் லேறு வெல்கொடிமேற் கூட்டி னான்காண், வேங்கைவரிப் புலித் தோல்மே லாடை யான்காண் விண்ணிழிதன் வீழி மிழலை யானே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

மானேறு கரமுடைய வரதர் போலும் மால்வரைகால் வளை வில்லா வளைத்தார் போலுங், கானேறு கரிகதற வுரித்தார் போலுங் கட்டங்கங் கொடிதுடிகைக் கொண்டார் போலுந், தேனேறு திருஇதழித் தாரார் போலுந் திருவீழி மிழலையமர் செல்வர் போலும், ஆனேற தேறும் அழகர் போலும் அடியேனை ஆளுடைய அடிகள் தாமே. 1

சமரம்மிகு சலந்தரன்போர் வேண்டி னானைச் சக்கரத்தாற் பிளப்பித்த சதுரர் போலும், நமனையொரு கால்§குறைத்த நாதர் போலும் நாரணனை இடப்பாகத் தடைத்தார் போலுங், குமரனை யும் மகனாக வுடையார் போலுங் குளிர்வீழி மிழலையமர் குழகர் போலும், அமரர்கள்பின் அமுதுணநஞ் சுண்டார் போலும் அடி யேனை ஆளுடைய அடிகள் தாமே. 2

நீறணிந்த திருமேனி நிமலர் போலும் நேமிநெடு மாற்கருளிச் செய்தார் போலும், ஏறணிந்த கொடியுடையெம் மிறைவர்

---

* ஈங்கை-இண்டங்கொடி. § ஒருகால்-ஒருகாலால்.

போலும் எயில்மூன்றும் எரிசரத்தா லெய்தார் போலும், வேற ணிந்த கோலமுடை வேடர் போலும் வியன்வீழி மிழலையுறை விகிர்தர் போலும், ஆறணிந்த சடாமகுடத் தழகர் போலும் அடி யேனை ஆளுடைய அடிகள் தாமே. 3

கைவேழ முகத்தவனைப் படைத்தார் போலுங் கயாசுரனை அவனாற்கொல் வித்தார் போலுஞ், செய்வேள்வித் தக்கனைமுன் சிதைத்தார் போலுந் திசைமுகன்றன்¶ சிரமொன்று சிதைத்தார் போலும், மெய்வேள்வி மூர்த்தி§தலை யறுத்தார் போலும் வியன் வீழி மிழலையிடங் கொண்டார் போலும், ஐவேள்வி ஆறங்க மானார் போலும் அடியேனை ஆளுடைய அடிகள் தாமே. 4

துன்னத்தின் கோவணமொன் றுடையார் போலுஞ் சுடர் மூன்றுஞ் சோதியுமாய்த் தூயார் போலும், பொன்னொத்த திரு மேனிப் புனிதர் போலும் பூதகணம் புடைசூழ வருவார் போ லும், மின்னொத்த செஞ்சடைவெண் பிறையார் போலும் வியன் வீழி மிழலைசேர் விமலர் போலும், அன்னத்தேர் அயன்‡முடி சேர் அடிகள் போலும் அடியேனை ஆளுடைய அடிகள் தாமே. 5

மாலாலும் அறிவரிய வரதர் போலும் மறவாதார் பிறப் பறுக்க வல்லார் போலும், நாலாய மறைக்கிறைவ ரானார் போ லும் நாமவெழுத் தஞ்சாய நம்பர் போலும், வேலார்கை வீரி†யை முன்|| படைத்தார் போலும் வியன்வீழி மிழலையமர் விகிர்தர் போலும், ஆலாலம் மிடற்றடக்கி அளித்தார் போலும் அடி யேனை ஆளுடைய அடிகள் தாமே. 6

பஞ்சடுத்த மெல்விரலாள் பங்கர் போலும் பைந்நாகம் அரைக்கசைத்த பரமர் போலும், மஞ்சடுத்த மணிநீல கண்டர் போலும் வடகயிலை மலையுடைய மணாளர் போலுஞ், செஞ்சடைக் கண் வெண்பிறைகொண் டணிந்தார் போலுந் திருவீழி மிழலை யமர் சிவனார் போலும், அஞ்சடக்கும் அடியவர்கட் கணியார் போலும் அடியேனை ஆளுடைய அடிகள் தாமே. 7

---

¶ திசைமுகனார் என்றும் பாடம். §வேள்வி மூர்த்தி–எச்சன். ‡ அன்னத் தேறயன் என்றும் அன்னத் தோடயன் என்றும் பாடம். † வீரி–காளி. || முன்-இங்கே தக்கயாகம்.

சூண்டரொடு பிரித்தெனையாட் கொண்டார் போலுங் குட மூக்கி லிடமாக்கிக் கொண்டார் போலும், புண்டரிகப் புதுமலரா தனத்தார் போலும் புள்ளரசைக் கொன்றுயிர்பின் கொடுத்தார் போலும், வெண்டலையிற் பலிகொண்ட விகிர்தர்போலும் வியன் வீழி மிழலைநக ருடையார் போலும், அண்டத்துப் புறத்தப்பா லானார் போலும் அடியேனை ஆளுடைய அடிகள் தாமே. 8

மூத்தனைய முகிழ்முறுவ லுடையார் போலும் மொய்ப்ப வளக் கொடியனைய சடையார் போலும், எத்தயுனம் பத்திசெய் வார்க் கினியார் போலும் இருநான்கு மூர்த்திகளு† மானார் போலும், மித்திரவச் சிரவணற்கு‡ விருப்பர் போலும் வியன் வீழி மிழலையமர் விகிர்தர் போலும், அத்தனொடும் அம்மையெனக் கானார் போலும் அடியேனை ஆளுடைய அடிகள் தாமே. 9

கரியுரிசெய் துமைவெருவக் கண்டார் போலுங் கங்கையை யுஞ் செஞ்சடைமேற் கரந்தார் போலும், எரியதொரு கைதரித்த இறைவர் போலும் ஏனத்தின் கூனெயிறு பூண்டார் போலும், விரிகதிரோ ரிருவரைமுன் வெகுண்டார் போலும் வியன்வீழி மிழலையமர் விமலர் போலும், அரிபிரமர் துதிசெயநின் றளித்தார் போலும் அடியேனை ஆளுடைய அடிகள் தாமே. 10

கயிலாய மலையெடுத்தான் கதறி வீழக் கால்விரலால் அடர்த் தருளிச் செய்தார் போலுங், குயிலாய மென்மொழியாள்|| குளிர்ந்து நோக்கக் கூத்தாட வல்ல குழகர் போலும், வெயி லாய சோதிவிளக் கானார் போலும் வியன்வீழி மிழலை§யமர் விகிர்தர் போலும், அயிலாய¶ மூவிலைவேற் படையார் போலும் அடியேனை ஆளுடைய அடிகள் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—வீழியழகேசுவரர்; தேவி—சுந்தரகுசாம்பிகை.

---

†இருநான்கு மூர்த்தி – அட்டமூர்த்தம். மூர்த்தி – திருமேனி. ‡ மித்திரவச் சிரவணன் – குபேரன். || குயிலாருமென்மொழியாள் என்றும் பாடம். § ஊரெங்கும் வீழிச் செடிகள் மிகுந்துள்ளமை யால் 'வீழிமிழலை' எனப் பெயர் பெற்றது. ¶ அயிலாரு என்றும் பாடம்.

## 39. திருவன்னியூர்

திருக்குறுந்தொகை* [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

காடு கொண்டரங் காக்கங்குல் வாய்க்கணம்
பாட மாநட மாடும் பரமனார்
வாட மானிறங் கொள்வர் மணங்கமழ்
மாட மாமதில் சூழ்வன்னி யூரரே.** 1

செங்கண் நாகம் அரையது தீத்திரள்
அங்கை யேந்திநின் றார்எரி யாடுவர்
கங்கை வார்சடை மேலிடங் கொண்டவர்
மங்கை பாகம்வைத் தார்வன்னி யூரரே. 2

ஞானங் காட்டுவர் நன்னெறி காட்டுவர்
தானங் காட்டுவர் தம்மடைந் தார்க்கெலாம்
தானங் காட்டித்தன் தாளடைந் தார்கட்கு
வானங் காட்டுவர் போல்வன்னி யூரரே. 3

இம்மை அம்மை யெனஇரண் டும்மிவை
மெய்ம்மை† தானறி யாது விளம்புவர்
மெய்ம்மை யால்நினை வார்கள்தம் வல்வினை
வம்மின் தீர்ப்பர்கண் டீர்வன்னி யூரரே. 4

பிறைகொள் வாணுதற் பெய்வளைத் தோளியர்
நிறையைக் கொள்பவர் நீறணி மேனியர்
கறைகொள் கண்டத்தர் வெண்மழு வாளினர்
மறைகொள் வாய்மொழி யார்வன்னி யூரரே. 5

திளைக்கும் வண்டொடு தேன்படு கொன்றையர்
துளைக்கை வேழத்தர் தோலர் சுடர்மதி
முளைக்கு மூரற் கதிர்கண்டு நாகம்நா
வளைக்கும் வார்சடை யார்வன்னி யூரரே. 6

குணங்கள் தோளெட்டு‡ மூர்த்தி இணையடி
இணங்கு வார்கட் கினியனு மாய்நின்றான்

---

* இப்பதிகத்தில் 9-ம் செய்யுள் சிதைந்து போயிற்று. **வன்னியூர்–அக்கினி பூசித்த ஊர். வன்னி – அக்கினி. † செம்மை என்றும் பாடம். ‡ குணங்கொள் தோளெட்டு என்றும், குணங்கள் கோளெட்டு என்றும் பாடம்.

வணங்கி மாமலர் கொண்டவர் வைகலும்
வணங்கு வார்மனத் தார்வன்னி யூரரே. 7

இயலு மாலொடு நான்முகன் செய்தவம்
முயலிற் காண்பரி தாய்நின்ற மூர்த்திதான்
அயலெ லாம்அன்ன மேயும்அந் தாமரை
வயலெ லாங்கயல் பாய்வன்னி யூரரே. 8, 9

நலங்கொள் பாகனை நன்று முனிந்திடா
விலங்கல் கோத்தெடுத் தானது மிக்கிட
இலங்கை மன்னன் இருபது தோளினை
மலங்க வூன்றிவைத் தார்வன்னி யூரரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி—அக்கினீசுவரர்; தேவி—பார்வதியம்மை.

## 40. திருக்கருவிலிக்கொட்டிட்டை*

திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மட்டிட் டகுழ லார்சுழ லில்வலைப்
பட்டிட் டுமயங் கிப்பரி யாதுநீர்
கட்டிட் டவினை போகக் கருவிலிக்
கொட்டிட் டையுறை வான்கழல் கூடுமே.** 1

ஞாலம் மல்கு மனிதர்காள் நாடொறும்
ஏல மாமல ரோடிலை கொண்டுநீர்
கால னார்வரு தல்முன் கருவிலிக்
கோல வார்பொழிற் கொட்டிட்டை சேர்மினே. 2

பங்க மாயின பேசப் பறைந்துநீர்
மங்கு மாநினை யாதே மலர்கொடு
கங்கை சேர்சடை யான்றன் கருவிலிக்
கொங்கு வார்பொழிற் கொட்டிட்டை சேர்மினே. 3

* கருவிலி–தலத்தின் பெயர். கொட்டிட்டை – ஆலயத்தின் பெயர். இத்தலம் 'கருவேலி' என வழங்கப்பெறும். ** கூறுமே என்றும் பாடம்.

வாடி நீர்வருந் தாதே மனிதர்காள்
வேட னாய்விச யற்கருள் செய்தவெண்
காட னாருறை கின்ற கருவிலிக்
கோடு நீள்பொழிற் கொட்டிட்டை சேர்மினே. 4

உய்யு மாறிது கேண்மின் உலகத்தீர்
பைகொள் பாம்பரை யான்படை யார்மழுக்
கையி னான்உறை கின்ற கருவிலிக்
கொய்கொள் பூம்பொழிற் கொட்டிட்டை சேர்மினே. 5

ஆற்ற வும்மவ லத்தழுந் தாதுநீர்
தோற்றுந் தீயொடு நீர்நிலந் தூவெளி
காற்று மாகிநின் றான்றன் கருவிலிக்
கூற்றங் காய்ந்தவன் கொட்டிட்டை சேர்மினே. 6

நில்லா வாழ்வு நிலைபெறும் என்றெண்ணிப்
பொல்லா வாறு செயப்புரி யாதுநீர்
கல்லா ரும்மதில் சூழ்தண் கருவிலிக்
கொல்லே றூர்பவன் கொட்டிட்டை சேர்மினே. 7

பிணித்த நோய்ப்பிற விப்பிறி வெய்துமா(று)
உணர்த்த லாமிது கேண்மின் உருத்திர
கணத்தி னார்[\$]தொழு தேத்துங் கருவிலிக்
குணத்தி னானுறை கொட்டிட்டை சேர்மினே. 8

நம்பு வீர்இது கேண்மின்கள் நாடொறும்
எம்பி ரானென் றிமையவ ரேத்துமே
கம்ப னாருறை கின்ற கருவிலிக்
கொம்ப னார்பயில் கொட்டிட்டை சேர்மினே. 9

பாரு ளீர்இது கேண்மின் பருவரை
பேரு மாறெடுத் தானை அடர்த்தவன்
கார்கொள் நீர்வயல் சூழ்தண் கருவிலிக்
கூர்கொள் வேலினன் கொட்டிட்டை சேர்மினே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி—சற்குண நாயகர்; தேவி—சர்வாங்கநாயகி.

---

[\$] உருத்திர கணத்தினர்-சிவனடியார்கள் என்றலுமாம்.

## 41. திருஅரிசிற்கரைப்புத்தூர்†

### திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

முத்தூ ரும்புனல் மொய்யரி சிற்கரைப்
புத்தூ ரன்அடி போற்றியென் பாரெலாம்
பொய்த்தூ ரும்புலன் ஐந்தொடு புல்கிய
மைத்தூ ரும்வினை மாற்றவும் வல்லரே. 1

பிறைக்க ணிச்சடை எம்பெரு மானென்று
கறைக்க ணித்தவர் கண்ட வணக்கத்தாய்
உறக்க ணித்துரு காமனத் தார்களைப்
புறக்க ணித்திடும் புத்தூர்ப் புனிதரே. 2

அரிசி லின்கரை மேலணி யார்தரு
புரிசை நந்திருப் புத்தூர்ப் புனிதனைப்
பரிசோ டும்பர விப்பணி வார்க்கெலாம்
துரிசில் நன்னெறி தோன்றிடுங் காண்மினே. 3

வேத னைமிகு வீணையில் மேவிய
கீத னைக்கிள ருந்நறுங் கொன்றையம்
போத னைப்புனல் சூழ்ந்தபுத் தூரனை
நாத னைநினைந் தென்மனம் நையுமே. 4

அருப்புப் போன்முலை யார்அல்லல் வாழ்க்கைமேல்
விருப்புச் சேர்நிலை விட்டுநல் லிட்டமாய்த்
திருப்புத் தூரனைச் சிந்தை செயச்செயக்
கருப்புச்‡ சாற்றிலும் அண்ணிக்குங் காண்மினே. 5

பாம்பொ டுமதி யும்படர் புன்சடைப்
பூம்புன லும்பொ திந்தபுத் தூருளான்
நாம்ப ணிந்தடி போற்றிட நாடொறும்
சாம்பல் என்பு தனக்கணி யாகுமே¶. 6

---

†'அழகார் புத்தூர்' என்றும் 'திருப்புத்தூர்' என்றும் வழங்கப் பெறும். அரிசில்-ஒருநதி. ‡கருப்பு-கரும்பு. ¶தமக்கணி யாகுமே என்றும் பாடம்.

கனல்அங் கைதனில் ஏந்திவெங் காட்டிடை
அனலங் கெய்திநின் றாடுவர் பாடுவர்
பினலஞ்† செஞ்சடை மேற்பிறை யுந்தரு
புனலுஞ் சூடுவர் போலும்புத் தூரரே. 7

காற்றி னுங்கடி தாகி நடப்பதோர்
ஏற்றி னும்மிசைந் தேறுவர் என்பொடு
நீற்றி னையணி வர்நினை வாய்த்தமைப்
போற்றி யென்பவர்க் கன்பர்புத் தூரரே. 8

மூன்னும் முப்புரஞ் செற்றன ராயினும்
அன்ன மொப்பர் அலந்தடைந் தார்க்கெலாம்
மின்னு மொப்பர் விரிசடை மேனிசெம்
பொன்னு மொப்பர்புத் தூர்எம் புனிதரே. 9

செருத்த னல்தன தேர்செல வுய்ந்திடும்
கருத்த னைக்கயி லையெடுத் தான்உடல்
பருத்த தோள்கெடப் பாதத் தொருவிரல்
பொருத்தி னார்பொழி லார்ந்தபுத் தூரரே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—படிக்காசு வைத்தபரமர்; தேவி—அழகாம்பிகை.

---

## 42. திருச்சிவபுரம்

### திருத்தாண்டகம்¶ [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வானவன்காண் வானவர்க்கும் மேலா னான்காண் வட மொழியுந் தென்தமிழும் மறைகள் நான்கும், ஆனவன்காண் ஆனைந் தும் ஆடி னான்காண் ஐயன்காண் கையிலனல் ஏந்தி யாடும், கானவன்காண் கானவனுக் கருள்செய் தான்காண் கருதுவார் இதயத்துக் கமலத் தூறும், தேனவன்காண் சென்றடையாச் செல்வன் றான்காண் சிவனவன்காண் சிவபுரத்தெஞ் செல்வன் தானே.

---

† மினலங் என்றும் பாடம். ¶இப்பதிகத்தில் 8, 9-ம் செய்யுட் கள் மறைந்து போயின.

நக்கன்காண் நக்கரவம் அரையில் ஆர்த்த நாதன்காண் பூத கண மாட ஆடும், சொக்கன்காண் கொக்கிறகு சூடி னான்காண் துடியிடையாள் துணைமுலைக்குச் சேர்வ தாகும், பொக்கன்காண் பொக்கணத்த† வெண்ணீற் றான்காண் புவனங்கள் மூன்றினுக் கும் பொருளாய் நின்ற,‡ திக்கன்காண் செக்கரது திகழு மேனிச் சிவனவன்காண் சிவபுரத்தெஞ் செல்வன் தானே. 2

வம்பின்மலர்க் குழலுமையாள் மணவா ளன்காண் மலர வன்மால் காண்பரிய மைந்தன் தான்காண், கம்பமதக் கரியிளிற வுரிசெய் தோன்காண் கடல்நஞ்ச முண்டிருண்ட கண்டத் தான் காண், அம்பர்நகர்ப் பெருங்கோயில் அமர்கின் றான்காண் அய வந்தி யுள்ளான்காண் ஐயா றன்காண், செம்பொனெனத் திகழ் கின்ற வுருவத் தான்காண் சிவனவன்காண் சிவபுரத்தெஞ் செல் வன் தானே. 3

பித்தன்காண் தக்கன்தன் வேள்வி யெல்லாம் பீடழியச் சாடி யருள்கள் செய்த, முத்தன்காண் முத்தீயு மாயி னான்காண் முனிவர்க்கும் வானவர்க்கும் முதலாய் மிக்க, அத்தன்காண் புத் தூரில் அமர்ந்தான் தான்காண் அரிசிற் பெருந்துறையே ஆட்சி கொண்ட, சித்தன்காண் சித்தீச் சரத்தான் தான்காண் சிவனவன் காண் சிவபுரத்தெஞ் செல்வன் தானே. 4

தூயவன்காண் நீறு துதைந்த மேனித் துளங்கும் பளிங் கனைய சோதி யான்காண், தீயவன்காண் தீயவுணர் புரஞ்செற் றான்காண் சிறுமான்கொள் செங்கைஎம் பெருமான் தான்காண், ஆயவன்காண் ஆரூரி லம்மான் தான்காண் அடியார்கட் காரமுத மாயி னான்காண், சேயவன்காண் சேமநெறி யாயி னான்காண் சிவனவன்காண் சிவபுரத்தெஞ் செல்வன் தானே. 5

பாரவன்காண் பாரதனிற் பயிரா னான்காண் பயிர்வளர்க் குந் துளியவன்காண் துளியில் நின்ற, நீரவன்காண் நீர்சடைமேல் நிகழ்வித் தான்காண் நிலவேந்தர் பரிசாக நினைவுற் றோங்கும், பேரவன்காண் பிறையெயிற்று வெள்ளைப் பன்றிப் பிரியாது பலநாளும் வழிபட் டேத்தும்,T சீரவன்காண் சீருடைய தேவர்க் கெல்லாஞ் சிவனவன்காண் சிவபுரத்தெஞ் செல்வன் தானே. 6

---

†பொக்கணம் - விபூதிப்பை. ‡ பொருவாய் நின்ற என்றும் பாடம். பொருவாய் நிற்றல் – சம நிறைவாய் நிற்றல். Tஇவ்வடி திருமால் வராகமாகப் பூசித்ததை அறிவிக்கும்.

வெய்யவன்காண் வெய்யகனை லேந்தி னான்காண் வியன் கெடில வீரட்டம் மேவி னான்காண், மெய்யவன்காண் பொய்யர் மனம் விரவா தான்காண் வீணையோ டிசைந்துமிகு பாடல் மிக்க, கையவன்காண் கையில்மழு வேந்தி னான்காண் காமரங்கம் பொடிவீழ்த்தS கண்ணி னான்காண், செய்யவன்காண் செய்ய வனை மாலுக் கீந்த சிவனவன்காண் சிவபுரத்தெஞ் செல்வன் தானே. 7, 8, 9

கலையாரு நூலங்க மாயி னான்காண் கலைபயிலுங் கருத்தன் காண் திருத்த மாகி, மலையாகி மறிகடலேழ் சூழ்ந்து நின்ற மண் ணாகி விண்ணாகி நின்றான் தான்காண், தலையாய மலையெடுத்த தகவி லோனைத் தகர்ந்துவிழ வொருவிரலாற் சாதித் தாண்ட, சிலையாரும் மடமகளோர் கூறன் தான்காண் சிவனவன்காண் சிவபுரத்தெஞ் செல்வன் தானே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி—சிவபுரநாதர், பிரமபுரிநாதர்;
தேவி—சிங்காரவல்லி, பெரியநாயகி.

## 43. திருவாஞ்சியம்*

திருக்குறுந்தொகை** [5-ம் திருமுறை]
திருச்சிற்றம்பலம்

படையும் பூதமும் பாம்பும்புல் வாயதள்
உடையுந் தாங்கிய உத்தம னார்க்கிடம்
புடைநி லாவிய பூம்பொழில் வாஞ்சியம்
அடைய வல்லவர்க் கல்லலொன் றில்லையே. 1

பறப்பை‡ யும்பசு வும்படுத் துப்பல
திறத்த வும்முடை யோர்திக ழும்பதி
கறை†ப்பி றைச்சடைக் கண்ணுதல் சேர்தரு
சிறப்பு டைத்திரு வாஞ்சியஞ் சேர்மினே. 2

S பொடி விழித்த என்றும் பாடம். * 'ஸ்ரீ வாஞ்சியம்' என வழங்கப்படும். இது திருமால் இலக்குமியை வாஞ்சித்து இறை வனைப் பூசித்ததால் பெற்ற பெயர். **இப்பதிகத்துள் 7, 8, 9-ம் செய்யுட்கள் மறைந்து போயின. ‡ பறப்பை—சிருக்கு. சிருவம், † கறை—முயற்கறை; களங்கம்.

புற்றில் ஆட ரவோடு புனல்மதி
தெற்றுஞ் செஞ்சடைத் தேவர்பி ரான்பதி
சுற்று மாடங்கள் சூழ்திரு வாஞ்சியம்
பற்றிப் பாடுவார்க் குப்பாவ மில்லையே. 3

அங்க மாறும் அருமறை நான்குடன்
தங்கு வேள்வியர் தாம்பயி லுந்நகர்
செங்கண் மாலிட மார்திரு வாஞ்சியம்
தங்கு வார்நம் அமரர்க் கமரரே. 4

நீறு பூசி நிமிர்சடை மேற்பிறை
ஆறு சூடும் அடிகள் உறைபதி
மாறு தானொருங் கும்வயல் வாஞ்சியம்
தேறி வாழ்பவர்க் குச்செல்வ மாகுமே. 5

அற்றுப்†ப் பற்றின்றி யாரையு மில்லவர்க்
குற்ற நற்றுணை யாவன் உறைபதி
தெற்று மாடங்கள் சூழ்திரு வாஞ்சியம்
கற்றுச் சேர்பவர்க் குக்கருத் தாவதே. 6–9

அருக்கன் அங்கி யமனொடு தேவர்கள்
திருத்துஞ் சேவடி யான்திக ழுந்நகர்
ஒருத்தி பாகம் உகந்தவன் வாஞ்சியம்
அருத்தி* யாலடை வார்க்கில்லை யல்லலே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—வாஞ்சியநாதர்; தேவி—வாழவந்த நாயகி.

---

## 44. திருக்கொண்டீச்சரம்**

திருநேரிசை [4–ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வரைகிலேன் புலன்க ளைந்தும் வரைகிலாப் பிறவி மாயப்
புரையிலே அடங்கி நின்று புறப்படும் வழியுங் காணேன்

---

† அற்று –(பிற பற்றுக்களை) அறுத்து. * அருத்தி – ஆசை.
** 'வில்வாரணியம்' என வழங்கப்பெறும். கொண்டீச்சரம் என்றுங் கூறுவர்.

அரையிலே மிளிரு நாகத் தண்ணலே அஞ்ச லென்னுய்
திரையுலாம் பழன வேலித் திருக்கொண்டீச் சரத்து ளானே. 1

தொண்டனேன் பிறந்து வாளா தொல்வினைக் குழியில் வீழ்ந்து
பிண்டமே சுமந்து நைந்து போவதோர் வழியுங் காணேன்
அண்டனே அண்ட வாணு அறிவனே அஞ்ச லென்னுய்
தெண்டிரைப் பழனஞ் சூழ்ந்த திருக்கொண்டீச் சரத்து ளானே.2

கால்கொடுத் தெலும்பு மூட்டிக் கதிர்நரம் பாக்கை யார்த்துத்
தோலுடுத் துதிர மட்டித் தொகுமயிர் மேய்ந்த கூரை
ஓலெS டுத் துழைஞர் கூடி யொளிப்பதற் கஞ்சு கின்றேன்
சேலுடைப் பழனஞ் சூழ்ந்த திருக்கொண்டீச் சரத்து ளானே.3

கூட்டமாய் ஐவர் வந்து கொடுந்தொழிற் குணத்த ராகி
ஆட்டுவார்க் காற்ற கில்லேன் ஆடர வசைத்த கோவே
காட்டிடை யரங்க மாக ஆடிய கடவு ளேயோ
சேட்டிரும் பழன வேலித் திருக்கொண்டீச் சரத்து ளானே. 4

பொக்க*மாய் நின்றபொல்லாப் புழுமிடை முடைகொள் ஆக்கை
தோக்குநின் றைவர் தோண்ணூற் றறுவருந் துயக்க மெய்த
மிக்குமின் றிவர்கள் செய்யும் வேதனைக் கலந்து போனேன்
செக்கரே திகழும் மேனித் திருக்கொண்டீச் சரத்து ளானே. 5

ஊனுலா முடைகொள் ஆக்கை உடைகல மாவ தென்றும்
மானுலா மழைக்க ணூர்தம் வாழ்க்கையை மெய்யென் றெண்ணி
நானெலா மினைய கால நண்ணிலேன் எண்ண மில்லேன்
தேனுலாம் பொழில்கள் சூழ்ந்த திருக்கொண்டீச் சரத்துளானே6

சாணிரு மடங்கு† நீண்ட சழக்கு‡டைப் பதிக்கு நாதர்
வாணிகர் ஐவர் தொண்ணூற் றறுவரும் மயக்கஞ் செய்து
பேணிய பதியின் நின்று பெயரும்போ தறிய மாட்டேன்
சேணுயர் மாட நீடு திருக்கொண்டீச் சரத்து ளானே. 7

பொய்ம்மறித் தியற்றி வைத்துப் புலால்கமழ் பண்டம் பெய்து
மைம்மறித் தியற்றி யன்ன பாங்கிலாக் குரம்பை நின்று
கைம்மறித் தனைய வாவி கழியும்போ தறிய மாட்டேன்
செந்நெறிச் செலவு¶ காணேன் திருக்கொண்டீச் சரத்து ளானே8

---

S ஒல்–ஒலி. * பொக்கம்–பொய். † சாணிருமருங்கும் என்றும் பாடம். ‡சழக்கு–பொய், ¶சென்னெறிச்செலவு என்றும் பாடம்.

பாலனாய்க் கழிந்த நாளும் பனிமலர்க் கோதை மார்தம்
மேலனாய்க் கழிந்த நாளும் மெலிவொடு மூப்பு வந்து
கோலனாய்க் கழிந்த நாளும் குறிக்கோளி லாது கெட்டேன்
சேலுலாம் பழன வேலித் திருக்கொண்டீச் சரத்து ளானே.† 9

விரைதரு கருமென் கூந்தல் விளங்கிழை வேலொண் கண்ணாள்
வெருவர இலங்கைக் கோமான் விலங்கலை எடுத்த ஞான்று
பருவரை யனைய தோளும் முடிகளும் பாறி வீழத்
திருவிரல் ஊன்றி னானே திருக்கொண்டீச் சரத்து ளானே. 10

திருச்சிற்றம்பலம்

### திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கண்ட பேச்சினிற் காளையர் தங்கள்பால்
மண்டி யேச்சுணும் மாதரைச் சேராதே
சண்டி யீச்சுர வர்க்கருள் செய்தஅக்
கொண்டி யீச்சுர வன்கழல் கூறுமே. 1

சுற்ற முந்துணை நன்மட வாளொடு
பெற்ற மக்களும் பேண லொழிந்தனர்
குற்ற மில்புகழ்க் கொண்டீச் சுரவனார்
பற்ற லாலொரு பற்றுமற் றில்லையே. 2

மாடு தானது வில்லெனின் மானுடர்
பாடு தான்செல்வா ரில்லைபன் மாலையாற்
கூட நீர்சென்று கொண்டீச் சுரவனைப்
பாடு மின்பர லோகத் திருத்துமே. 3

தந்தை தாயொடு தார மெனுந்தளைப்
பந்தம் ஆங்கறுத் துப்பயில் வெய்திய
கொந்த விழ்பொழிற் கொண்டீச் சுரவனைச்
சிந்தை செய்ம்மின் அவனடி சேரவே. 4

கேளு மின்இள மைய்யது கேடுவந்(து)
ஈளை யோடிரு மல்லது எய்தல்முன்
கோள ரவணி‡ கொண்டீச் சுரவனை
நாளு மேத்தித் தொழுமின் நன்காகுமே. 5

---

† இது வரலாற்று அகச்சான்று. ‡ கோளராவணி என்றும் பாடம்.

வெம்பு நோயும் இடரும் வெறுமையும்
துன்ப முந்துய ரும்மெனுஞ் சூழ்வினை
கொம்ப னார்பயில் கொண்டீச் சுரவனை
எம்பி ரானென வல்லவர்க் கில்லையே. 6

அல்ல லோடரு நோயில் அழுந்திநீர்*
செல்லு மாநினை யாதே கனைகுரல்
கொல்லை யேறுடைக் கொண்டீச் சுரவனை
வல்ல வாறு தொழவினை மாயுமே. 7

நாறு சாந்தணி நன்முலை மென்மொழி
மாறி லாமலை மங்கையொர் பாகமாக்
கூற னாருறை கொண்டீச் சுரநினைந்(து)
ஊறு வார்தமக் கூனமொன் றில்லையே. 8

அயிலார் அம்பெரி மேருவில் லாகவே
எயிலா ரும்பொடி யாய்விழ எய்தவன்
குயிலா ரும்பொழிற் கொண்டீச் சுரவனைப்
பயில்வா ரும்பெரு மைபெறும் பாலரே. 9

நிலையி னார்வரை நின்றெடுத் தான்றனை
மலையி னலடர்த் துவிறல் வாட்டினன்
குலையி னார்பொழில் கொண்டீச் சுரவனைத்
தலையி னல்வணங் கத்தவ மாகுமே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—பசுபதிநாதர்; தேவி—சாந்தநாயகி.

---

## 45. திருப்புகலூர்

பண்–இந்தளம் [4–ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

செய்யர் வெண்ணூலர் கருமான் மறிதுள்ளும்
கையர் கனைகழல் கட்டிய காலினர்
மெய்யர் மெய்ந்நின் றவர்க்கல்லா தவர்க்கென்றும்
பொய்யர் புகலூர்ப் புரிசடை யாரே. 1

* அழுந்துநீர் என்றும் பாடம்.

மேகநல் ஊர்தியர் மின்போல் மிளிர்சடைப்
பாக மதிநுத லாளையொர் பாகத்தார்
நாக வளையினர் நாக வுடை‡யினர்
போகர் புகலூர்ப் புரிசடை யாரே. 2

பெருந்தாழ் சடைமுடி மேற்பிறை சூடிக்
கருந்தாழ் குழலி‖யுந் தாமுங் கலந்து
திருந்தா மனமுடை யார்திறத் தென்றும்
பொருந்தார் புகலூர்ப் புரிசடை யாரே. 3

அக்கார் அணிவடம் ஆகத்தர் நாகத்தர்
நக்கார் இளமதிக் கண்ணியர் நாடொறும்
உக்கார் தலைபிடித் துண்பலிக் கூர்தொறும்
புக்கார் புகலூர்ப் புரிசடை யாரே. 4

ஆர்த்தார் உயிரடும் அந்தகன் றன்னுடல்
பேர்த்தார் பிறைநுதற் பெண்ணின்நல் லாள்உட்கக்
கூர்த்தார் மருப்பிற் கொலைக்களிற் றீருரி
போர்த்தார் புகலூர்ப் புரிசடை யாரே. 5

தூமன்† சுறவந் துதைந்த கொடி‡ யுடைக்
காமன் கணைவலங் காய்ந்தமுக் கண்ணினர்
சேம நெறியினர் சீரை§ யுடையவர்
பூமன் புகலூர்ப் புரிசடை யாரே. 6

உதைத்தார் மறலி உருளவொர் காலால்
சிதைத்தார் திகழ்தக்கன் செய்நல் வேள்வி
பதைத்தார் சிரங்கரங் கொண்டுவெய் யோன்கண்
புதைத்தார் புகலூர்ப் புரிசடை யாரே. 7

கரிந்தார் தலையர் கடிமதில் மூன்றுந்
தெரிந்தார் கணைகள் செழுந்தழ லுண்ண
விரிந்தார் சடைமேல் விரிபுனற் கங்கை
புரிந்தார் புகலூர்ப் புரிசடை யாரே 8

---

‡நாகவுடை–யானைத்தோல் உடை. ‖கருந்தாழ் குழலி–தேவியின் பெயர். † தூமன் – புகைபோலக் கரியவன். ‡ சுறவந் துதைந்த கொடி–மீனக்கொடி. § சீரை–மரவுரி.

ஈண்டார் அழலில் இருவருங் கைதொழ
நீண்டார் நெடுந்தடு மாற்ற நிலையஞ்ச
மாண்டார்தம் என்பு மலர்க்கொன்றை மாலையும்
பூண்டார் புகலூர்ப் புரிசடை யாரே. 9

கூறுத்தார் மணிகண்டங் கால்விர லூன்றி
இறுத்தார் இலங்கையர் கோன்முடி பத்தும்
அறுத்தார் புலனைந்தும் ஆயிழை பாகம்
பொறுத்தார் புகலூர்ப் புரிசடை யாரே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருநேரிசை* [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பகைத்திட்டார் புரங்கள் மூன்றும் பாறி**நீறாகி வீழப்
புகைத்திட்ட தேவர் கோவே பொறியிலேன் உடலந் தன்னுள்
அகைத்திட்டங் கதனை நாளும் ஐவர்கொண் டாட்ட வாடித்
திகைத்திட்டேன் செய்வ தென்னே திருப்புக லூர னீரே. 1

மையரி மதர்த்த ஒண்கண் மாதரார் வலையிற் பட்டுக்
கையெரி சூல மேந்துங் கடவுளை நினைய மாட்டேன்
ஐ§நெரிந் தகமி டற்றே அடைக்கும்போ தாவி யார்தாம்
செய்வதொன் றறிய மாட்டேன் திருப்புக லூர னீரே. 2

முப்பதும் முப்பத் தாறும் முப்பதும் இடுகு ரம்பைS
அப்பர்† போல்ஐவர் வந்து அதுதரு கிதுவிடென்று
ஒப்பவே நலிய லுற்றால் உய்யுமா றறிய மாட்டேன்
செப்பமே திகழு மேனித் திருப்புக லூர னீரே. 3

பொறியிலா அழுக்கை யோம்பிப் பொய்யினை மெய்யென் றெண்ணி
நெறியலா நெறிகள் சென்றேன் நீதனே நீதி ஏதும்
அறிவிலேன் அமரர் கோவே அமுதினை மனனில் வைக்குஞ்
செறிவிலேன் செய்வ தென்னே திருப்புக லூர னீரே. 4

---

* இப்பதிகத்தில் 8. 10-ம் பாட்டுக்கள் படர்க்கையிலும் ஏனையவை முன்னிலை விளியிலும் உள்ளன. ** பாறி—அழிந்து, § ஐ—கோழை; கபம். S இவ்வடி 96-தத்துவங்களால் ஆகிய உடம்பைக் குறிக்கும். † அப்பர்—தலைவர்.

அளியினார் குழலி னார்கள் அவர்களுக் கன்ப தாகிக்
களியினார் பாடல் ஓவாக் கடவூர்வீ ரட்ட மென்னுந்
தளி‡யினார் பாத நாளும் நினைவிலாத் தகவில் நெஞ்சந்
தெளிவிலேன் செய்வ தென்னே திருப்புக லூர னீரே. 5

இலவி*னார் மாதர் பாலே இசைந்துநான் இருந்து பின்னும்
நிலவுநாள் பலஎன் றெண்ணி நீதனேன் ஆதி யுன்னை
உலவிநான் உள்க மாட்டேன் உன்னடி பரவு ஞானஞ்
செலவிலேன் செய்வ தென்னே திருப்புக லூர னீரே. 6

காத்திலேன் இரண்டும் மூன்றுங் கல்வியேல் இல்லை யென்பால்
வாய்த்திலேன் அடிமை தன்னுள் வாய்மையால் தூயே னல்லேன்
பார்த்தனுக் கருள்கள் செய்த பரமனே பரவு வார்கள்
தீர்த்தமே திகழும் பொய்கைத் திருப்புக லூர னீரே. 7

நீருமாய்த் தீயு மாகி நிலனுமாய் விசும்பு மாகி
ஏருடைக் கதிர்க ளாகி இமையவர் இறைஞ்ச நின்று
ஆய்வதற் கரிய ராகி அங்கங்கே யாடு கின்ற
தேவர்க்குந் தேவ ராவார் திருப்புக லூர னாரே. 8

மெய்யுளே விளக்கை யேற்றி வேண்டளவு யுயரத் தூண்டி
உய்வதோர் உபாயம் பற்றி உகக்கின்றேன் உகவா வண்ணம்
ஐவரை** அகத்தே வைத்தீர் அவர்களே வலியர் சாலச்
செய்வதொன் றறிய மாட்டேன் திருப்புக லூர னீரே. 9

அருவரை தாங்கி னானும் அருமறை யாதி யானும்
இருவரும் அறிய மாட்டா ஈசனார் இலங்கை வேந்தன்
கருவரை எடுத்த ஞான்று கண்வழி குருதி சோரத்
திருவிரல் சிறிது வைத்தார் திருப்பு லூர னாரே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருவிருத்தம்† [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

தன்னைச் சரணென்று தாளடைந் தேன்றன் அடியடையப்
புன்னை¶ப் பொழில்புக லூரண்ணல் செய்வன கேண்மின்களோ

‡ தளி – கோயில். * இலவு – இலவின் தன்மை. ** ஐவர் – ஐம்புலவாசை. † இத் திருப்பதிகத்தில் ஏனைய செய்யுட்கள் சிதைந்து போயின. ¶ புன்னை–தலமரம்.

என்னைப் பிறப்பறுத் தென்வினை கட்டறுத் தேழ்நாகத்(து)
என்னைக் கிடக்கவொட் டான்சிவ லோகத் திருத்திடுமே* 1

பொன்னை வகுத்தன்ன மேனிய னேபுணர் மென்முலையாள்
தன்னை வகுத்தன்ன பாகத்த னேதமி யேற்கிரங்காய்
புன்னை மலர்த்தலை வண்டுறங் கும்புக லூர்அரசே
என்னை வகுத்திலை யேல்இடும் பைக்கிடம் யாதுசொல்லே. 2-3

பொன்னன வார்சடைக் கொன்றையி னாய்புக லூர் அரசே
மன்னுள தேவர்கள் தேடு மருந்தே வலஞ்சுழியாய்
என்னள வேயுனக் காட்பட் டிடைக்கலத் தேகிடப்பார்
உன்னள வேயெனக் கொன்றுமி ரங்காத உத்தமனே. 4-9

ஓணப்** பிரானும் ஒளிர்மா மலர்மிசை உத்தமனும்
காணப் பராவியுங் காண்கின் றிலர்கர நாலைந்துடைத்
தோணற் பிரானை† வலிதொலைத் தோன்தொல்லை நீர்ப்புகலூர்க்
கோணப் பிரானை††க் குறுகக் குறுகா கொடுவினையே. 10

திருச்சிற்றம்பலம்

திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]
திருச்சிற்றம்பலம்

துன்னக்‡ கோவணச் சுண்ணவெண் ணீறணி
பொன்னக் கன்ன சடைப்புக லூரரோ
மின்னக் கன்னவெண் திங்களைப் பாம்புடன்
என்னுக் கோவுடன் வைத்திட் டிருப்பதே. 1

இரைக்கும் பாம்பும் எறிதரு திங்களும்
நுரைக்குங் கங்கையும் நுண்ணிய செஞ்சடைப்
புரைப்பி லாத பொழிற்புக லூரரை
உரைக்கு மாசொல்லி ஒள்வளை சோருமே. 2

ஊச லாம்அர வல்குலென் சோர்குழல்
ஏச லாம்பழி தந்தெழில் கொண்டனர்

*என்னைப்...இருத்திடும் – இது சுவாமிகளின் உட்குறிப்பாகிய முத்தி விண்ணப்பம். **ஓணப்பிரான்–திருமால். †தோள்நற்பிரான்– தோணற்பிரான் – இராவணன்; இகழ்ச்சிக் குறிப்பு. †† கோணப் பிரான் – சுவாமியின் பெயர். ‡துன்னம்–தைத்தல்.

ஓசொ லாய்மக ளேழுறை யோவென்று
பூசல் நாமிடு தும்புக லூரர்க்கே. 3

மின்னின் நேரிடை யாளுமை பங்கனைத்
தன்னை நேரொப் பிலாத தலைவனைப்
புன்னைக் கானற் பொழிற்புக லூரனை
என்னு ளாகவைத் தின்புற் றிருப்பனே. 4

விண்ணி னார்மதி சூடிய வேந்தனை
எண்ணி நாமங்கள் ஓதி எழுத்தஞ்சுங்
கண்*ணி னாற்கழல் காண்பிட மேதெனில்
புண்ணி யன்புக லூரும்என் நெஞ்சுமே. 5

அண்ட வாணர் அமுதுண நஞ்சுண்டு
பண்டு நான்மறை யோதிய பாடலன்
தொண்ட ராகித் தொழுது மதிப்பவர்
புண்ட ரீகத்து ளார்புக லூரரே. 6

தத்து வந்தலை கண்டறி வாரிலைத்
தத்து வந்தலை கண்டவர் கண்டிலர்
தத்து வந்தலை நின்றவர்க் கல்லது
தத்து வன்†அலன் தண்புக லூரனே. 7

பெருங்கை யாகிப் பிளிறி வருவதோர்
கருங்கை யானைக் களிற்றுரி போர்த்தவர்
வருங்கை யானை மதகளி றஞ்சினைப்
பொருங்கை யானைகண் டார்புக லூரரே. 8

பொன்னொத் தநிறத் தானும் பொருகடல்
தன்னொத் தநிறத் தானும் அறிகிலாப்
புன்னைத் தாது பொழிற்புக லூரரை
என்னத் தாவென என்னிடர் தீருமே. 9

மத்த னாய்மதி யாது மலைதனை
எத்தி னான்திறள் தோள்முடி பத்திற
ஒத்தி னான்விர லாலொருங் கேத்தலும்
பொத்தி னான்**புக லூரைத் தொழுமினே. 10

திருச்சிற்றம்பலம்

*கண்–அகக்கண். புறக்கண். †தத்துவன்–தத்துவங்களின் வழி அருள்புரிபவன். **பொத்தினான்–சேமஞ்செய்தான்.

## திருத்தாண்டகம்* [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

எண்ணுகேன் என்சொல்லி எண்ணு கேனோ எம்பெருமான் திருவடியே எண்ணினன் அல்லால், கண்ணிலேன் மற்றோர் களை கண்** இல்லேன் கழலடியே கைதொழுது காணின் அல்லால், ஒண்ணுளே† ஒன்பது வாசல் வைத்தாய் ஒக்க அடைக்கும்போ துணர மாட்டேன், புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணியனே. 1

அங்கமே பூண்டாய் அனலா டினாய் ஆதிரையாய் ஆல்நிழ லாய் ஆனே றூர்ந்தாய், பங்கமொன் றில்லாத படர்ச டையி னாய் பாம்பொடு திங்கள் பகைதீர்த் தாண்டாய், சங்கையொன் றின்றியே தேவர் வேண்டச் சமுத்திரத்தின் நஞ்சுண்டு சாவா மூவாச், சிங்கமே உன்னடிக்கே போது கின்றேன் திருப்புகலூர் மேவிய தேவ தேவே. 2

பையரவக் கச்சையாய் பால்வெண் ணீற்றாய் பளிக்குக் குழை‡யினாய் பண்ணார் இன்சொல், மைவிரவு கண்ணாளைப் பாகங் கொண்டாய் மான்மறிகை ஏந்தினாய் வஞ்சக் கள்வர், ஐவரையும் என்மேற் றரவ றுத்தாய் அவர்வேண்டுங் காரியமிங் காவ தில்லை. பொய்யுரையா துன்னடிக்கே போது கின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணி யனே. 3

தெருளாதார் மூவெயிலுந் தீயில் வேவச் சிலைவளைத்துச் செங்கணையாற் செற்ற தேவே, மருளாதார் தம்மனத்தில் வாட் டந்தீர்ப்பாய் மருந்தாய்ப் பிணிதீர்ப்பாய் வானோர்க் கென்றும், அருளாகி ஆதியாய் வேத மாகி அலர்மேலான் ஆய்ந்துங் காணாப், பொருளாவாய் உன்னடிக்கே போது கின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணி யனே. 4

நீரேறு செஞ்சடைமேல் நிலாவெண் திங்கள் நீங்காமை வைத்துகந்த நீதி யானே, பாரேறு படுதலையிற் பலிகொள் வானே பண்டநங்கற் காய்ந்தானே பாவ நாசா, காரேறு முகி

---

* இப்பதிகம் திருவடிமுத்தி எய்தியபோது கூறியதாகும். **களை கண்—துணை. † ஒண்ணுளே—ஓர் உடலினுள்ளே. ‡பளிக்குக் குழை—பளிங்குபோல் ஒளி வீசும் சங்கக் குழை.

லனைய கண்டத் தானே கருங்கைக் களிற்றுரிவை கதறப் போர்த்த, போரேறே உன்னடிக்கே போது கின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணி யனே. 5

விரிசடையாய் வேதியனே வேத கீதா விரிபொழில்சூழ் வெண்காட்டாய் மீயச் சூராய், திரிபுரங்கள் எரிசெய்த தேவ தேவே திருவாரூர்த் திருமூலட் டானம் மேயாய், மருவினியார் மனத்துளாய் மாகா ளத்தாய் வலஞ்சுழியாய் மாமறைக்காட் டெந்தா யென்றும், புரிசடையாய் உன்னடிக்கே போது கின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணி யனே. 6

தேவார்ந்த தேவனைத் தேவ ரெல்லாந் திருவடிமேல் அலரிட் டுத் தேடி நின்று, நாவார்ந்த மறைபாடி நட்டம் ஆடி நான்முக னும் இந்திரனும் மாலும் போற்றக், காவார்ந்த பொழிற்சோலைக் கானப் பேராய் கழுக்குன்றத் துச்சியாய் கடவு ளேநின், பூவார்ந்த பொன்னடிக்கே போது கின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணி யனே. 7

நெய்யாடி நின்மலனே நீல கண்டா நிறைவுடையாய் மறை வல்லாய் நீதி யானே, மையாடு கண்மடவாள் பாகத் தானே மான்தோல் உடையாய் மகிழ்ந்து நின்றாய், கொய்யாடு கூவிளங் கொன்றை மாலை கொண்டடியேன் நானிட்டுக் கூறி நின்று, பொய்யாத சேவடிக்கே போது கின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணி யனே. 8

தூன்னஞ்சேர் கோவணத்தாய் தூய நீற்றாய் துதைந்திலங்கு வெண்மழுவாள் கையி லேந்தித், தன்னனையுந் தண்மதியும் பாம் பும் நீருஞ் சடைமுடிமேல் வைத்துகந்த தன்மை யானே, அன்ன நடை மடவாள் பாகத் தானே அக்காரம்e பூண்டானே ஆதி யானே, பொன்னங் கழலடிக்கே போது கின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணி யனே. 9

ஒருவரையும்c அல்லா துsணரா துள்ளம் உணர்ச்சித் தடு மாற்றத் துள்ளே நின்ற, இருவரையும் மூவரையும்p என்மேல்ஏவி

e அக்காரம்–சங்குமணி கோத்த ஆரம். உருத்திராட்சமாலை; எலும்புமாலையுமாம். c ஒருவனையும் என்றும் பாடம். s ஒருவரை யும் அல்லாது – உம்மை ஒருவரையே அன்றி மற்று ஒன்றும். p இரு வரையும் மூவரையும்–ஐம்புலக் கள்வர் ஐவரையும்.

இல்லாத தரவறுத்தாய்க் கில்லேன் ஏலக், கருவரைசூழ் கானல்
இலங்கை வேந்தன் கடுந்தேர்மீ தோடாமைக் காலாற் செற்ற,
பொருவரையாய் உன்னடிக்கே போது கின்றேன் பூம்புகலூர்
மேவிய புண்ணி யனே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி—அக்கினீசுவரர்; கோணப்பிரான்;
தேவி—கருந்தார்க் குழலி.

## 46. திருப்பயற்றூர்*

### திருநேரிசை [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

உரித்திட்டார் ஆனை யின்தோல் உதிரஆ றொழுகி யோட
விரித்திட்டார் உமையா ளஞ்சி விரல்விதிர்த் தலக்கண் நோக்கித்
தரித்திட்டார் சிறிது போது தரிக்கில ராகித் தாமுஞ்
சிரித்திட்டார் எயிறு தோன்றத் திருப்பயற் றூர னாரே. 1

உவந்திட்டங் குமையோர் பாகம் வைத்தவர் ஊழி யூழி
பவந்திட்ட** பரம னார்தாம் மலைச்சிலை நாகம் ஏற்றிக்
கவர்ந்திட்ட புரங்கள் மூன்றும் கனலெரி யாகச் சீறிச்
சிவந்திட்ட கண்ணர் போலுந் திருப்பயற் றூர னாரே. 2

நங்களுக் கருள தென்று நான்மறை யோது வார்கள்
தங்களுக் கருளும் எங்கள் தத்துவன் தழலன் தன்னை
எங்களுக் கருள்செய் என்ன நின்றவன் நாகம் அஞ்சுந்
திங்களுக் கருளிச் செய்தார் திருப்பயற் றூர னாரே. 3

பார்த்தனுக் கருளும் வைத்தார் பாம்பரை யாட வைத்தார்
சாத்தனை மகனா வைத்தார் சாமுண்டி சாம வேதங்
கூத்தொடும் பாட வைத்தார் கோளரா மதியம் நல்ல
தீர்த்தமுஞ் சடைமேல் வைத்தார் திருப்பயற் றூர னாரே. 4

---

* 'திருப்பயற்றங்குடி' என வழங்கப்பெறும். ** ஊழியூழி பவந்திட்ட—ஊழிதோறும் ஊழிதோறும் இறவாமல் தோன்றிய; ஊழி தோறும் ஊழிதோறும் உலகத்தைத் தோற்றுவிக்கின்ற என்றலுமாம்; பவந்திடுதல்—தோன்றுதல்.

மூவகை மூவர் போலும் முற்றுமா நெற்றிக் கண்ணர்
நாவகை நாவர்* போலும் நான்மறை ஞான மெல்லாம்
ஆவகை யாவர் போலும் ஆதிரை நாளர் போலுந்
தேவர்கள் தேவர் போலுந் திருப்பயற் றூர னாரே. 5

ஞாயிறாய் நமனு மாகி வருணனாய்ச் சோம னாகித்
தீயறா நிருதி வாயுத் திப்பிய சாந்த னாகிப்
பேயறாக் காட்டி லாடும் பிஞ்ஞகன் எந்தை பெம்மான்
தீயறாக் கையர் போலுந் திருப்பயற் றூர னாரே. 6

ஆவியாய் அவியு மாகி அருக்கமாய்ப் பெருக்க மாகிப்
பாவியர் பாவங்** தீர்க்கும் பரமனாய்ப் பிரம னாகிக்
காவியங் கண்ண ளாகிக் கடல்வண்ண மாகி நின்ற
தேவியைப் பாகம் வைத்தார் திருப்பயற் றூர னாரே. 7

தந்தையாய்த் தாயு மாகித் தரணி யாய்த்தரணி யுள்ளார்க்(கு)
எந்தையு மென்ன நின்ற ஏழுல குடனு மாகி
எந்தையெம் பிரானே என்றென் றுள்குவார் உள்ளத் தென்றுஞ்
சிந்தையுஞ் சிவமு மாவார் திருப்பயற் றூர னாரே. 8

புலன்களைப் போக நீக்கிப் புந்தியை யொருங்க வைத்து
இலங்களைப் போக நின்று இரண்டை§யும் நீக்கி யொன்றாய்‡
மலங்களை மாற்ற வல்லார் மனத்தினுட் போக மாகிச்
சினங்களைக் களைவர் போலுந் திருப்பயற் றூர னாரே. 9

மூர்த்திதன் மலையின் மீது போகாதால்ട முனிந்து நோக்கிப்
பார்த்துத்தான் பூமி மேலாற் பாய்ந்துடன் மலையைப் பற்றி
ஆர்த்திட்டான் முடிகள் பத்தும் அடர்த்துநல் லரிவை யஞ்சத்
தேத்தெத்தா என்னக் கேட்டார் திருப்பயற் றூர னாரே. 10

திருச்சிற்றம்பலம்

---

*சுவாமி—பயற்றூர்நாதர்; தேவி—காவியங்கண்ணி.*

---

* நால்வகை நால்வர் என்றும் பாடம். ** பாவியர் பாவத் என்றும் பாடம். § இரண்டு—வேண்டுதல் வேண்டாமை. ‡ஒன்றாய்—அத்துவிதமாக. ട போகாதால்—போகாததால். போகாதா என்றும் பாடம். போகாதா—போகாதாக.

## 47. திருச்செங்காட்டங்குடி*

### திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பெருந்தகையைப் பெறற்கரிய மாணிக் கத்தைப் பேணி நினைந் தெழுவார்தம் மனத்தே மன்னி, இருந்தமணி விளக்கதனை நின்ற பூ**மேல் எழுந்தருளி யிருந்தானை எண்டோள் வீசி, அருந் திறல்மா நடமாடும் அம்மான் தன்னை, அங்கனகச் சுடர்க்குன்றை அன்று லின்கீழ்த், திருந்துமறைப் பொருள்நால்வர்க் கருள்செய் தானைச் செங்காட்டங் குடியதனிற் கண்டேன் நானே. 1

துங்கநகத் தாலன்றித் தொலையா வென்றித் தொகுதிறலவ் விரணியனை ஆகங் கீண்ட, அங்கனகத் திருமாலும்† அயனுந் தேடும் ஆழலை அனங்கனுடல் பொடியாய் வீழ்ந்து, மங்கநகை§த் தான்வல்ல மருந்து தன்னை வண்கயிலை மாமலைமேல் மன்னி நின்ற, செங்கனகத் திரள்தோளெஞ் செல்வன் தன்னைச் செங் காட்டங் குடியதனிற் கண்டேன் நானே. 2

உருகுமனத் தடியவர்கட் கூறுந் தேனை உம்பர்மணி முடிக் கணியை உண்மை நின்ற, பெருகுநிலைக் குறியாளர் அறிவு தன் னைப் பேணியஅந் தணர்க்குமறைப் பொருளைப் பின்னும், முருகு விரி நறுமலர்மேல் அயற்கும் மாற்கும் முழுமுதலை மெய்த்தவத் தோர் துணையை வாய்த்த, திருகுகுழல் உமைநங்கை பங்கன் தன் னைச் செங்காட்டங் குடியதனிற் கண்டேன் நானே. 3

குந்தமலர்க் கொன்றையணி சடையான் தன்னைக் கதிர் விடுமா மணிபிறங்கு கனகச் சோதிச், சந்தமலர்த் தெரிவையொரு பாகத் தானைச் சராசரநற் றாயானை நாயேன் முன்னைப், பந்தமறுத் தாளாக்கிப் பணிகொண் டாங்கே பன்னியநூல் தமிழ்மாலை பாடு

---

* விநாயகக் கடவுள் கயமுகாசுரனை அழித்தபோது அவனது இரத்தம் பெருகிச் செங்காடாய் இருந்தமையால் பெற்ற பெயர். கோயிலின் பெயர் 'கணபதீச்சரம்' என்பதாம். ** பூ – இருதய தாமரை. † கனகத்திருமால் – நரசிங்க அவதாரம். § நக – சிரிக்க. தான்–அசை. திருவாரூர் பண்–காந்தாரம் 4-ம் செய்யுளைக் காண்க.

வித்தேன், சிந்தைமயக் கறுத்ததிரு வருளினானை*ச் செங்காட்டங் குடியதனிற் கண்டேன் நானே. 4

நஞ்சடைந்த கண்டத்து நாதன் தன்னை நளிர்மலர்ப்பூங் கணைவேளை நாச மாக, வெஞ்சினத்தீ விழித்ததொரு நயனத் தானை வியன்கெடில வீரட்டம் மேவி னானை, மஞ்சடுத்த நீள்சோலை மாட வீதி மதிலாரூர் இடங்கொண்ட மைந்தன் தன்னைச், செஞ்சினத்த திரிசூலப் படையான் தன்னைச் செங்காட்டங் குடியதனிற் கண்டேன் நானே. 5

கன்னியையங் கோருசடையிற் கரந்தான் தன்னைக் கடவூரில் வீரட்டங் கருதி னானைப், பொன்னிசூழ் ஐயாற்றெம் புனிதன்** தன்னைப் பூந்துருத்தி நெய்த்தானம் பொருந்தி னானைப், பன்னிய நான் மறைவிரிக்கும் பண்பன் தன்னைப் பரிந்திமையோர் தொழுதேத்திப் பரனே யென்று, சென்னிமிசைக் கொண்டணிசே வடியினானைச் செங்காட்டங் குடியதனிற் கண்டேன் நானே. 6

எத்திக்கு மாய்நின்ற இறைவன் தன்னை ஏகம்பம் மேயானை இல்லாத் தெய்வம், பொத்தித்தம் மயிர்பறிக்குஞ் சமணர் பொய்யிற் புக்கழுந்தி வீழாமே போத வாங்கிப், பத்திக்கே வழிகாட்டிப் பாவந் தீர்த்துப் பண்டைவினைப் பயமான எல்லாம் போக்கித், தித்தித்தென் மனத்துள்ளே ஊறுந் தேனைச் செங்காட்டங் குடிய தனிற் கண்டேன் நானே. 7

கல்லாதார் மனத்தணுகாக் கடவுள் தன்னைக் கற்றார்கள் உற்றோருங் காத லானைப், பொல்லாத நெறியுகந்தார் புரங்கள் மூன்றும் பொன்றிவிழ அன்றுபொரு சரந்தொட் டானை, நில்லாத நிணக் குரம்பைப் பிணக்கம் நீங்க நிறைதவத்தை அடியேற்கு நிறைவித் தென்றுஞ், செல்லாத செந்நெறிக்கே செல்விப்பானைச் செங்காட்டங் குடியதனிற் கண்டேன் நானே. 8

அரியபெரும் பொருளாகி நின்றான் தன்னை அலைகடலில் ஆலாலம் அமுது செய்த, கரியதொரு கண்டத்துச் செங்கண் ஏற்றுக் கதிர்விடுமா மணிபிறங்கு காட்சி யானை, உரியபல தொழில்

* நாயேன்...திருவருளினானை – சுவாமிகளின் முன்னைநிலைக் குறிப்பும் சரித அகச்சான்றும் ஆகும். ** புராணன் என்றும் பாடம்.

செய்யும் அடியார் தங்கட் குலகமெல்லாம் முழுதளிக்கும் உலப்பி லானை‡த், தெரிவையொரு பாகத்துச் சேர்த்தி ஞானைச் செங்காட் டங் குடியதனிற் கண்டேன் நானே. 9

போரரவ மால்விடையென் றூர்தி யானைப் புறம்பயமும் புகலூரும் மன்னி னானை, நீரரவச் செஞ்சடைமேல் நிலாவெண் திங்கள் நீங்காமை வைத்தானை நிமலன் தன்னைப், பேரரவப் புட் பகத்தே ருடைய வென்றிப் பிறங்கொளிவாள் அரக்கன்முடி யிடியச் செற்ற, சீரரவக் கழலானைச் செல்வன் தன்னைச் செங் காட்டங் குடியதனிற் கண்டேன் நானே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி–கணபதீச்சுரர்; தேவி–திருக்குழனன் மாது.

---

## 48. திருமருகல்*

திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பெரு லாந்தவம் பேதைமை தீரலாம்
திருக லாகிய சிந்தை திருத்தலாம்
பருக லாம்பர மாயதோ ரானந்தம்
மருக லானடி வாழ்த்தி வணங்கவே. 1

பாடங் கொள்பனு வல்திறங் கற்றுப்போய்
நாடங் குள்ளன தட்டிய நாணிலீர்
மாடஞ் சூழ்மரு கற்பெரு மான்திரு
வேடங் கைதொழ வீடெளி தாகுமே. 2

சினத்தி னல்வருஞ் செய்தொழி லாமவை
அனைத்தும் நீங்கிநின் றுதர வாய்மிக
மனத்தி னல்மரு கற்பெரு மான்திறம்
நினைப்பி னார்க்கில்லை நீள்நில வாழ்க்கையே. 3

ஓது§ பைங்கிளிக் கொண்பால் அமுதூட்டிப்
பாது காத்துப் பலபல கற்பித்து

---

‡ உலப்பிலான் - குறைவு இல்லாதன். *மருகல்–வாழை வகைகளுள் ஒன்று. இங்கு வாழை தலமரம் ஆதலால் இப்பெயர் பெற்றது. § ஓது–சொன்னதைக் கேட்டு ஓதுகின்ற.

மாது தான்மரு கற்பெரு மானுக்குத்
தூது சொல்ல விடத்தான் தொடங்குமே. 4

இன்ன வாறென்ப துண்டறி யேனின்று
துன்னு கைவளை சோரக்கண் நீர்மல்கும்
மன்னு தென்மரு கற்பெரு மான்திறம்
உன்னி யொண்கொடி உள்ளம் உருகுமே.t 5

சங்கு சோரக் கலையுஞ் சரியவே
மங்கை தான்மரு கற்பெரு மான்வரும்
அங்க வீதி அருகணை யாநிற்கும்
நங்கை மீரிதற் கென்செய்கேன் நாளுமே. 6

காட்சி பெற்றிலள் ஆகிலுங் காதலே
மீட்சி யொன்றறி யாது மிகுவதே
மாட்சி யார்மரு கற்பெரு மானுக்குத்
தாழ்ச்சி* சாலவுண் டாகுமென் தையலே. 7

நீடு நெஞ்சுள் நினைந்துகண் நீர்மல்கும்
ஓடு மாலினோ டொண்கொடி மாதராள்
மாடம் நீள்மரு கற்பெரு மான்வரில்
கூடு நீயென்று கூடல் இழைக்குமே.s 8

கந்த வார்குழல் கட்டிலள் காரிகை
அந்தி மால்விடை யோடும்அன் பாய்மிக
வந்தி டாய்மரு கற்பெரு மானென்று
சிந்தை செய்து திகைத்திடுங் காண்மினே. 9

ஆதி மாமலை அன்றெடுத் தான்இற்றுச்
சோதி யென்றலுந் தொல்லருள் செய்திடும்
ஆதி யான்மரு கற்பெரு மான்திறம்
ஓதி வாழ்பவர்e உம்பர்க்கும் உம்பரே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி–மாணிக்க வண்ணர்; தேவி–வண்டுவார் குழலி.

---

t இது தாய் கூற்று என்னும் துறை. * தாழ்ச்சி – விருப்பம். s கூடல் இழைத்தல் – குறிபார்க்கும் வகைகளுள் ஒன்று. e ஓதி யாரவர் என்னும் பாடம்.

## 49. திருநாகைக்காரோணம்*

### திருநேரிசை** [4-ம் திருமுறை]

### திருச்சிற்றம்பலம்

மனைவிதாய் தந்தை மக்கள் மற்றுள சுற்ற மென்னும்
வினையுளே விழுந்த ழுந்தி வேதனைக் கிடமா காதே
கனையுமா கடல்சூழ் நாகை மன்னுகா ரோணத் தானை
நினையுமா வல்லீ ராகில் உய்யலாம் நெஞ்சி னீரே. 1

வையனை வையம் உண்ட மாலங்கந் தோண்மேற் கொண்ட
செய்யனைச் செய்ய போதில் திசைமுகன் சிரமொன் றேந்துங்
கையனைக் கடல்சூழ் நாகைக் காரோணங் கோயில் கொண்ட
ஐயனை நினைந்த நெஞ்சே அம்மநாம் உய்ந்த வாறே. 2

நிருத்தனை நிமலன் தன்னை நீணிலம் விண்ணின் மிக்க
விருத்தனை வேத வித்தை விளைபொருள் மூல மான
கருத்தனைக் கடல்சூழ் நாகைக் காரோணங் கோயில் கொண்ட
ஒருத்தனை உணர்த லால்நாம் உய்ந்தவா நெஞ்சி னீரே. 3

மண்டனை இரந்து கொண்ட மாயனோ டசுரர் வானோர்
தெண்டிரை கடைய வந்த தீவிடந் தன்னை யுண்ட
கண்டனைக் கடல்சூழ் நாகைக் காரோணங் கோயில் கொண்ட
அண்டனை நினைந்த நெஞ்சே அம்மநாம் உய்ந்த வாறே. 4

நிறைபுனல் அணிந்த சென்னி நீணிலா அரவஞ் சூடி
மறையொலி பாடி யாடல் மயானத்து மகிழ்ந்த மைந்தன்
கறைமலி கடல்சூழ் நாகைக் காரோணங் கோயில் கொண்ட
இறைவனை நாளும் ஏத்த இடும்பைபோய் இன்ப மாமே. 5

வெம்பனைக் கருங்கை யானை வெருவஅன் றுரிவை போர்த்த
கம்பனைக் காலற் காய்ந்த காலனை ஞால மேத்தும்

---

* 'நாகப்பட்டினம்' என வழங்கப்படும். ஆதிசேடன் பூசித்தமையால் 'நாகை' எனவும், புண்டரீக மகா முனிவரை இறைவர் தமது திருமேனியுள் ஏற்றுக்கொண்டு அருளியமையால் 'காயாரோணம்' (காயம் – உடல்; ஆரோகணம் – ஏற்றுக்கொள்ளுதல்) எனவும் பெற்று, நாகைக் காயாரோகணம் என்பது நாகைக் காரோணம் என மருவி வழங்குலாயிற்று. **இப்பதிகத்தில் 9-ம் செய்யுள் சிதைந்து போயிற்று.

உம்பனை உம்பர் கோனை நாகைக்கா ரோணம் மேய
செம்பொனை நினைந்த நெஞ்சே திண்ணம்நாம் உய்ந்த வாறே. 6

வெங்கடுங் கானத் தேழை தன்னொடும் வேட னாய்ச்சென்(று)
அங்கமர் மலைந்து பார்த்தற் கடுசரம் அருளி னானை
மங்கைமார் ஆடல் ஓவா மன்னுகா ரோணத் தானைக்
கங்குலும் பகலுங் காணப் பெற்றுநாங் களித்த வாறே. 7

தெற்றினர் புரங்கள் மூன்றுந் தீயினில் விழவோ ரம்பால்
செற்றவெஞ் சிலையர் வஞ்சர் சிந்தையுட் சேர்வி லாதார்
கற்றவர் பயிலும் நாகைக் காரோணங் கருதி யேத்தப்
பெற்றவர் பிறந்தார் மற்றுப் பிறந்தவர் பிறந்தி லாரே.‡ 8–9

கருமலி கடல்சூழ் நாகைக் காரோணர் கமல பாதத்
தொருவிரல் நுதிக்கு நில்லா தொண்டிறல் அரக்க னுக்கான்
இருதிற மங்கை மாரோ டெம்பிரான் செம்பொ னாகந்
திருவடி தரித்து நிற்கத் திண்ணம்நாம் உய்ந்த வாறே. 10

திருச்சிற்றம்பலம்

## திருவிருத்தம்* [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வடிவுடை மாமலை மங்கைபங் காகங்கை வார்சடையாய்
கடிகமழ் சோலை சுலவு கடல்நாகைக் காரோணனே
பிடிமத வாரணம்** பேணுந் துரகநிற் கப்பெரிய
இடிகுரல் வெள்ளெரு தேறுமி தென்னைகொல் எம்மிறையே. 1

கற்றார் பயில்கடல் நாகைக்கா ரோணத்தெங் கண்ணுதலே
விற்றாங் கியகரம் வேல்நெடுங் கண்ணி வியன்கரமே
நற்றாள் நெடுஞ்சிலை நாண்வலித் தகர நின்கரமே
செற்றார் புரஞ்செற்ற சேவகம் என்னைகொல் செப்புமினே. 2

தூமென் மலர்க்கணை கோத்துத்தீ வேள்வி தொழிற்படுத்த
காமன் பொடிபடக் காய்ந்த கடல்நாகைக் காரோணநின்
நாமம் பரவி நமச்சிவா யஎன்னும் அஞ்செழுத்தும்
சாமன் றுரைக்கத் தருதிகண்டாய் எங்கள் சங்கரனே. 3

‡ கருதி......பிறந்திலார் – பேசாத நாளெல்லாம் பிறவா நாளே என்பதாம். பிறந்திலர்–செத்தவர். * இப்பதிகத்தில் 9-ம் செய்யுள் மறைந்து போயிற்று. ** பிடிமடவாரணம் என்றும் பாடம்.

பழிவழி யோடிய பாவிப் பறிதலைக் குண்டர்தங்கள்
மொழிவழி யோடி முடிவேன் முடியாமைக் காத்துக்கொண்டாய்
கழிவழி ஓதம் உலவு கடல்நாகைக் காரோணஎன்
வழிவழி* யாளாகும்** வண்ணம் அருளெங்கள் வானவனே. 4

செந்துவர் வாய்க்கருங் கண்ணிணை வெண்ணகைத் தேன்மொழியார்
வந்து வலஞ்செய்து மாநடம் ஆட மலிந்தசெல்வக்
கந்த மலிபொழில் சூழ்கடல் நாகைக்கா ரோணமென்றும்
சிந்தைசெய் வாரைப் பிரியா திருக்குந் திருமங்கையே.† 5

பனைபுரை கைம்மத யானை யுரித்த பரஞ்சுடரே
கனைகடல் சூழ்தரு நாகைக்கா ரோணத்தெங் கண்ணுதலே
மனைதுறந் தல்லுணா வல்லமண் குண்டர் மயக்கநீக்கி
எனைநினைந் தாட்கொண்டாய்க் கென்னினி யான்செயும் இச்சைகளே.‡ 6

சீர்மலி செல்வம் பெரிதுடை யசெம்பொன் மாமலையே
கார்மலி சோலை சுலவு கடல்நாகைக் காரோணனே
வார்மலி மென்முலை யார்பலி வந்திடச் சென்றிரந்து
ஊர்மலி பிச்சைகொண் டுண்பது மாதிமை யோவுரையே. 7

வங்க மலிகடல் நாகைக்கா ரோணத்தெம் வானவனே
எங்கள் பெருமானோர் விண்ணப்பம் உண்டது கேட்டருளீர்
கங்கை சடையுட் கரந்தாய்அக் கள்ளத்தை மெள்ளவுமை
நங்கை அறியிற்போல் லாதுகண் டாய்எங்கள் நாயகனே. 8-9

கருந்தடங் கண்ணியுந் தானுங் கடல்நாகைக் காரோணத்தான்
இருந்த திருமலை யென்றிறைஞ் சாதன் றெடுக்கலுற்றான்
பெருந்தலை பத்து மிருபது தோளும் பிதிர்ந்தலற
இருந்தரு ளிச்செய்த தேமற்றுச் செய்திலன் எம்மிறையே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருக்குறுந்தொகை [5–ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பாணத் தால்மதில் மூன்றும் எரித்தவன்
பூணத் தானர வாமை பொறுத்தவன்

---

* வழிவழி-இப்பிறவியின் வழியே இனிவரும் பிறவிகளிலும்; வமிச பரம்பரையுமாம். ** வழிவழி யாளாக்கும் என்றும் பாடம். † திருமங்கை - அருட்சத்தி, இலக்குமியுமாம். ‡இச்சை - இங்குக் கைம்மாறு.

காணத் தானினி யான்கடல் நாகைக்கா
ரோணத் தானென நம்வினை ஓயுமே. 1

வண்ட லம்பிய வார்சடை ஈசனை
விண்த லம்பணிந் தேத்தும் விகிர்தனைக்
கண்ட லங்கமழ் நாகைக்கா ரோணனைக்
கண்ட லும்வினை யான கழலுமே. 2

புனையும் மாமலர் கொண்டு புரிசடை
நனையும் மாமலர் சூடிய நம்பனைக்
கனையும் வார்கடல் நாகைக்கா ரோணனை
நினைய வேவினை யாயின நீங்குமே. 3

கொல்லை மால்விடை யேறிய கோவினை
எல்லி மாநட மாடும் இறைவனைக்
கல்லி னார்மதில் நாகைக்கா ரோணனைச்
சொல்ல வேவினை யானவை சோருமே. 4

வெய்ய னைவிடை யூர்தியை வெண்மழுக்
கைய னைக்கடல் நாகைக்கா ரோணனை
மைய னுக்கிய† கண்டனை வானவர்
ஐய னைத்தொழு வார்க்கல்ல லில்லையே. 5

அலங்கல் சேர்சடை ஆதிபு ராணனை
விலங்கல் மெல்லியல் பாகம் விருப்பனைக்
கலங்கள் சேர்கடல் நாகைக்கா ரோணனை
வலங்கொள் வார்வினை யாயின மாயுமே. 6

சினங்கொள் மால்கரி சீறிய ஏறினை
இனங்கொள் வானவ ரேத்திய ஈசனைக்
கனங்கொள் மாமதில் நாகைக்கா ரோணனை
மனங்கொள் வார்வினை யாயின மாயுமே. 7

அந்த மில்புகழ் ஆயிழை யார்‡பணிந்(து)
எந்தை யீசனென் றேத்தும் இறைவனைக்
கந்த வார்பொழில் நாகைக்கா ரோணனைச்
சிந்தை செய்யக் கெடுந்துயர் திண்ணமே. 8

† அனுக்கிய-வருத்திய. ‡ ஆயிழையார்-உமாதேவியார்; காரைக்காலம்மை. மங்கையர்க்கரசியார் முதலியோருமாம்.

கருவ னைக்கடல் நாகைக்கா ரோணனை
இருவ ருக்கறி வொண்ணு இறைவனை
ஒருவ னையுண ரார்புர மூன்றெய்த
செருவ னைத்தொழத் தீவினை தீருமே. 9

கடல்க ழிதழி* நாகைக்கா ரோணன்றன்
வடவ ரையெடுத் தார்த்த அரக்கனை
அடர வூன்றிய பாதம் அணைதரத்
தொடர அஞ்சுந் துயக்கறுங் காலனே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பாரார் பரவும் பழனத் தானைப் பருப்பதத் தானைப்பைஞ் ஞீலி யானைச், சீரார் செழும்பவளக் குன்றொப் பானைத் திகழுந் திருமுடிமேல் திங்கள் சூடிப், பேரா யிரமுடைய பெம்மான் தன் னைப் பிறர்தன்னைக் காட்சிக் கரியான் தன்னைக், காரார் கடல்புடை சூழ் அந்தண் நாகைக் காரோணத் தெஞ்ஞான்றுங் காண லாமே. 1

விண்ணோர் பெருமானை வீரட் டானை** வெண்ணீறு மெய்க் கணிந்த மேனி யானைப், பெண்ணானை ஆணானைப் பேடி யானைப் பெரும்பற்றத் தண்புலியூர் பேணி னானை, அண்ணா மலையானை ஆனைந்தாடும் அணியாரூர் வீற்றிருந்த அம்மான் தன்னைக், கண் ணார் கடல்புடைசூழ் அந்தண் நாகைக் காரோணத் தெஞ்ஞான் றுங் காண லாமே. 2

சிறையார் வரிவண்டு தேனே† பாடுந் திருமறைக்காட் டெந்தை சிவலோ கனை, மறையான்றன்‡ வாய்மூருங் கீழ்வே ளூரும் வலிவலமுந் தேவூரும் மன்னி யங்கே, உறைவானை உத்த மனை ஒற்றி யூரிற் பற்றியாள் கின்ற பரமன் தன்னைக், கறையார் கடல்புடைசூழ் அந்தண் நாகைக் காரோணத் தெஞ்ஞான்றுங் காண லாமே. 3

---

* தழி – தழுவுதலையுடைய. ** வீரட்டானை – வீரட்டத்தானை.
†தேன் – வண்டின்சாதி. ‡ மறையான்ற என்றும் பாடம்.

அன்னமாம் பொய்கைசூழ் அம்பரானை ஆச்சிரா மங்கரும் ஆனைக் காவும், முன்னமே கோயிலாக் கொண்டான் தன்னை மூவுலகுந் தானாய மூர்த்தி தன்னைச், சின்னமாம் பன்மலர்கள்* அன்றே சூடிச் செஞ்சடைமேல் வெண்மதியஞ் சேர்த்தி னானைக், கன்னியம் புன்னைசூழ் அந்தண் நாகைக் காரோணத் தெஞ்ஞான் றுங் காண லாமே 4

நடையுடைய நல்லெருதொன் றூர்வான் தன்னை ஞானப் பெருங்கடலை** நல்லூர் மேய, படையுடைய மழுவாளொன் றேந்தி னானைப் பன்மையே பேசும் படிறன் தன்னை, மடை யிடையே வாளை யுகளும் பொய்கை மருகல்வாய்ச் சோதி மணி கண் டனைச், சடையுடைய நெடுமாட மோங்கு நாகைக் காரோ ணத் தெஞ்ஞான் றுங் காண லாமே. 5

புலங்கள்பூந் தேறல்வாய்ப் புகலிக் கோனைப் பூம்புகார்க் கற்பகத்தைப் புன்கூர் மேய, அலங்கலங் கழனிசூழ் அணிநீர்க் கங்கை அவிர் சடைமேல் ஆதரித்த அம்மான் தன்னை, இலங்கு தலைமாலை பாம்புகொண் டேகாச மிட்டியங்கும் ஈசன் தன்னைக், கலங்கற் கடல்புடைசூழ் அந்தண் நாகைக் காரோணத் தெஞ் ஞான்றுங் காண லாமே. 6

பொன்மணியம் பூங்கொன்றை மாலை யானைப் புண்ணியனை வெண்ணீறு பூசி னானைச், சின்மணிய மூவிலைய சூலத் தானைத் தென்சிராப் பள்ளிச் சிவலோ கனை, மன்மணியை வான்சுடலை யூராப் பேணி வல்லெருதொன் றேறும் மறைவல் லானைக், கன் மணிகள் வெண்திரைசூழ் அந்தண் நாகைக் காரோணத் தெஞ் ஞான்றுங் காண லாமே. 7

வெண்டலையும் வெண்மழுவும் ஏந்தி னானை விரிகோ வண மசைத்த வெண்ணீற் றானைப், புண்டலைய மால்யானை யுரிபோர்த் தானைப் புண்ணியனை வெண்ணீ றணிந்தான் தன்னை, எண்டிசை யும் எரியாட வல்லான் தன்னை யேகம்பம் மேயானை யெம்மான் தன்னைக், கண்டலங் கழனிசூழ் அந்தண் நாகைக் காரோணத் தெஞ்ஞான் றுங் காண லாமே. 8

---

* பன்மலர்கள் — ஊமத்தம், கொக்குமந்தாரை, கொன்றை, தாமரை முதலிய மலர்கள். ** ஞானப்பெருங்கடல்; உருவகம்.

சொல்லார்ந்த சோற்றுத் துறையான் தன்னைத் தொல்நரகம் நன்னெறியால் தூர்ப்பான் தன்னை, வில்லானை மீயச்சூர் மேவி னானை வேதியர்கள் நால்வர்க்கும் வேதஞ் சொல்லிப், பொல்லா தார் தம்அரணம் மூன்றும் பொன்றப் பொறியரவம் மார்பாரப் பூண்டான் தன்னைக், கல்லாலின் கீழானைக் கழிசூழ் நாகைக் காரோணத் தென்ஞான்றுங் காண லாமே. 9

மனைதுறந்த வல்லமணர் தங்கள் பொய்யும் மாண்புரைக்கும் மனக்குண்டர் தங்கள் பொய்யும், சினைபோதிந்த சீவரத்தர் தங்கள் பொய்யும் மெய்யென்று கருதாதே போத நெஞ்சே, பனையுரியைத் தன்னுடலிற் போர்த்த எந்தை அவன்பற்றே பற்றாகக் காணின் அல்லால், கனைகடலின் தென்கழிசூழ் அந்தண் நாகைக் காரோ ணத் தென்ஞான்றுங் காண லாமே. 10

நெடியானும் மலரவனும் நேடி யாங்கே நேருருவங் காணாமே சென்று நின்ற, படியானைப் பாம்புரமே காத லானைப் பாம்பரை யோ டார்த்த படிறன் தன்னைச், செடிநாறும் வெண்டலையிற் பிச்சைக்கென்று சென்றானை நின்றியூர் மேயான் தன்னைக், கடி நாறு பூஞ்சோலை அந்தண் நாகைக் காரோணத் தென்ஞான்றுங் காண லாமே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி–காயாரோகணேசுவரர்; தேவி–நீலாயதாட்சியம்மை.

---

## 50. திருக்கீழ்வேளூர்

### திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

ஆளான அடியவர்கட் கன்பன் தன்னை ஆனஞ்சும் ஆடியை நான் அபயம் புக்க, தாளானைத் தன்னொப்பா ரில்லா தானைச் சந்தனமுங் குங்குமமுஞ் சாந்துந் தோய்ந்த, தோளானைத் தோளாத முத்தொப்பானைத் தூவெளுத்த கோவணத்தை அரையி லார்த்த, கீளானைக் கீழ்வேளூ ராளுங் கோவைக் கேடிலியை நாடுமவர் கேடி லாரே. 1

சொற்பாவும் பொருள்தெரிந்து தூய்மை நோக்கித் தூங்கா தார் மனத்திருளை வாங்கா தானை, நற்பான்மை அறியாத நாயி

னேனை நன்னெறிக்கே செலும்வண்ணம் நல்கி னானைப், பற்பா வும் வாயாரப் பாடி யாடிப் பணிந்தெழுந்து குறைந்தடைந்தார் பாவம் போக்க, கிற்பானைக் கீழ்வேளூ ராளுங் கோவைக் கேடிலியை நாடுமவர் கேடி லாரே. 2

ஆலவாயில் அரவசைத்த அழகன் தன்னை ஆதரிக்கும் அடியவர்கட் கன்பே யென்றுங், விளேவானை மெய்ஞ்ஞானப் பொருளா னானை வித்தகனை எத்தனையும் பத்தர் பத்திக், குளேவானை அல்லாதார்க் குளையா தானை உலப்பிலியை உள்புக்கென் மனத்து மாசு*, கிளேவானைக் கீழ்வாளூ ராளுங் கோவைக் கேடிலியை நாடுமவர் கேடி லாரே. 3

தாட்பாவு கமலமலர் தயங்கு வானைத் தலையறுத்து** மாவிரதந் தரித்தான்‡ றன்னைக். கோட்பாவு நாளெல்லா மானான் தன்னைக் கொடுவினையேன் கொடுநரகக் குழியில் நின்றால், மீட்பானை வித்துருவின் கொத்தொப்பானை வேதியனை வேதத்தின் பொருள்கொள் வீணை, கேட்பானைக் கீழ்வேளூ ராளுங் கோவைக் கேடிலியை நாடுமவர் கேடி லாரே. 4

நல்லானை நரைவிடையொன் றூர்தி யானை நால்வேதத் தாறங்கம் நணுக மாட்டாச், சொல்லானைச் சுடர்மூன்று மானான் தன்னைத் தொண்டாகிப் பணிவார்கட் கினியான்§ தன்னை, வில்லானை மெல்லியலோர் பங்கன் தன்னை மெய்யராய் நினையாதார் வினைகள் தீர்க்க, கில்லானைக் கீழ்வேளூ ராளுங் கோவைக் கேடிலியை நாடுமவர் கேடி லாரே. 5

சுழித்தானைக் கங்கைமலர் வன்னி கொன்றை தூமத்தம் வாளரவஞ் சூடி னானை, அழித்தானை அரணங்கள் மூன்றும் வேவ ஆலால நஞ்சதனை உண்டான் தன்னை, விழித்தானைக் காமனுடல் பொடியாய் விழ மெல்லியலோர் பங்கனைமுன் வேனி லானைக், கிழித்தானைக் கீழ்வேளூ ராளுங் கோவைக் கேடிலியை நாடுமவர் கேடி லாரே. 6

உளரொளியை உள்ளத்தி னுள்ளே நின்ற ஓங்காரத் துட்பொருள்தான் ஆயினானை†, விளரொளியை விடுசுடர்கள் இரண்டும்

---

* மனப்பிசாசு என்றும். மனப்பசாசு என்றும் பாடம். ** தலையறுத்த என்றும் பாடம். ‡தவிர்த்தான் என்றும் பாடம். §கட்கணியான் என்றும் பாடம். † துறுபெருளதாயினானை என்றும் பாடம்.

ஒன்றும் விண்ணொடுமண் ஆகாச மாயி ஞனே, வளரொளியை மரகதத்தி னுருவி ஞனை வானவர்க ளெப்பொழுதும் வாழ்த்தி யேத்தும், கிளரொளியைக் கீழ்வேளூ ராளுங் கோவைக் கேடி லியை நாடுமவர் கேடி லாரே. 7

தடுத்தானைக் காலனைக் காலாற் பொன்றத் தன்னடைந்த மாணிக்கன் றருள்செய் தானை, உடுத்தானைப் புலியதளோ டக்கும் பாம்பும் உள்குவார் உள்ளத்தி னுள்ளான் தன்னை, மடுத்தானை அருநஞ்சம் மிடற்றுள் தங்க வானவர்கள் கூடியஅத் தக்கன் வேள்வி, கெடுத்தானைக் கீழ்வேளூ ராளுங் கோவைக் கேடி லியை நாடுமவர் கேடி லாரே. 8

மாண்டார் எலும்பணிந்த வாழ்க்கை யானை¶ மயானத்திற் கூத்தனைவாள் அரவோ டென்பு, பூண்டானைப் புறங்காட்டி லாடி ஞனைப் போகாதென் னுள்புகுந் திடங்கொண் டென்னை, ஆண் டானை அறிவரிய சிந்தை யானை அசங்கையனை அமரர்கள் தஞ் சங்கை யெல்லாங், கீண்டானைக் கீழ்வேளூ ராளுங் கோவைக் கேடிலியை நாடுமவர் கேடி லாரே. 9

முறிப்பான பேசிமலை யெடுத்தான் தானும் முதுகிறமுன் கைந்நரம்பை யெடுத்துப் பாடப், பறிப்பான்கைச் சிற்றரிவாள் நீட்டி ஞனைꜱப் பாவியேன் நெஞ்சகத்தே பாதப் போது, பொறித் தானைப் புரமூன்றும் எரிசெய் தானைப் பொய்யர்களைப் பொய் செய்து போது போக்கிக், கிறிப்பானைக் கீழ்வேளூ ராளுங் கோவைக் கேடிலியை நாடுமவர் கேடி லாரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி—அட்சயலிங்கமூர்த்தி, கேடிலியப்பர்;
தேவி—வனமுலைநாயகி.

## 51. திருப்பள்ளியின்முக்கூடல்*

### திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

ஆராத இன்னமுதை அம்மான் தன்னை அயனொடுமா லறி யாத ஆதி யானைத், தாராரும் மலர்க்கொன்றைச் சடையான்

¶ வாட்கையானை என்றும் பாடம். ꜱசிற்றரிவாள் நாட்டி ஞனை என்றும் பாடம். *'அரிக்கரியான்பள்ளி' என வழங்கப்பெறும்.

தன்னைச் சங்கரனைத் தன்னொப்பா ரில்லா தானை, நீரானைக் காற்றானைத் தீயா னானை நீள்விசும்பாய் ஆழ்கடல்க ளேழுஞ் சூழ்ந்த, பாரானைப் பள்ளியின்முக்கூட லானைப் பயிலாதே பாழேநான் உழன்ற வாறே. 1

விடையானை விண்ணவர்கள் எண்ணத் தானை வேதியனை வெண்திங்கள் சூடுஞ் சென்னிச், சடையானைச் சாமம்||போற் கண்டத்தானைத் தத்துவனைத் தன்னொப்பா ரில்லா தானை, அடையார்தார் மும்மதிலுந் தீயில்மூழ்க அடுகணைகோத் தெய்தானை அயில்கொள் சூலப், படையானைப் பள்ளியின்முக் கூட லானைப் பயிலாதே பாழேநான் உழன்ற வாறே. 2

பூதியனைப் பொன்வரையே போல்வான் தன்னைப் புரிசடைமேல் புனல்கரந்த புனிதன் தன்னை, வேதியனை வெண்காடு மேயான் தன்னை வெள்ளேற்றின் மேலானை விண்ணோர்க் கெல்லாம், ஆதியனை ஆதிரைநன் னாளான் தன்னை அம்மானை மைம்மேவு கண்ணி யாளோர்,* பாதியனைப் பள்ளியின்முக் கூடலானைப் பயிலாதே பாழேநான் உழன்ற வாறே. 3

போர்த்தானை ஆனையின்தோல் புரங்கள் மூன்றும் பொடியாக எய்தானை‡ப் புனிதன் தன்னை, வார்த்தாங்கு வனமுலையாள் பாகன் தன்னை மறிகடலுள் நஞ்சுண்டு வானோர் அச்சந், தீர்த்தானைத் தென்திசைக்கே காமன் செல்லச் சிறிதளவில் அவனுடலம் பொடியா வங்கே, பார்த்தானைப் பள்ளியின்முக் கூடலானைப் பயிலாதே பாழேநான் உழன்ற வாறே. 4

அடைந்தார்தம் பாவங்கள் அல்லல் நோய்கள் அருவினைகள் நல்குரவு செல்லா வண்ணங், கடிந்தானைக் கார்முகில்போற் கண்டத் தானைக் கடுஞ்சினத்தோன் தன்னுடலை நேமியாலே, தடிந்தானைத் தன்னொப்பா ரில்லா தானைத் தத்துவனை உத்தமனை நினைவார் நெஞ்சில், படிந்தானைப் பள்ளியின்முக் கூட லானைப் பயிலாதே பாழேநான் உழன்ற வாறே. 5

சுரந்தானைச் செஞ்சடைமேல் கங்கை வெள்ளங் கனலாடு திருமேனிக் கமலத் தோன்றன், சிரந்தாங்கு§ கையானைத் தேவ

|| சாமம்–சாமகானம்: இரவு அதாவது கருமையுமாம். * மைமேவு கண்ணியாள் - தேவியின் பெயர். ‡ செய்தானை என்றும் பாடம். § சிரம்–இங்குக் கபாலம்.

தேவைத் திகழொளியைத் தன்னடியே சிந்தை செய்வார், வருந்தா மைக் காப்பானை மண்ணாய் விண்ணாய் மறிகடலாய் மால்விசும் பாய் மற்று மாகிப், பரந்தானைப் பள்ளியின்முக் கூட லானைப் பயிலாதே பாழேநான் உழன்ற வாறே. 9

நதியாருஞ் சடையானை நல்லூ ரானை நள்ளாற் றின் மேயானை நல்லத் தானை, மதுவாரும்* பொழில்புடைசூழ் வாய்மூ ரானை மறைக்காடு மேயானை ஆக்கூ ரானை, நெதியாளன்** தோழனை நீடூ ரானை நெய்த்தான மேயானை ஆரு ரென்னும், பதியானைப் பள்ளியின்முக் கூட லானைப் பயிலாதே பாழேநான் உழன்ற வாறே. 7

நற்றவனை நான்மறைக ளாயி னானை நல்லானை நணுகாதார் புரங்கள் மூன்றுஞ், செற்றவனைச் செஞ்சடைமேல் திங்கள் சூடுந் திருவாரூர்த் திருமூலட் டானம் மேய, கொற்றவனைக் கூரரவம்† பூண்டான் தன்னைக் குறைந் தடைந்து தன்திறமே கொண்டார்க் கென்றும், பற்றவனைப் பள்ளியின்முக் கூட லானைப் பயிலாதே பாழேநான் உழன்ற வாறே. 8

ஊனவனை உடலவனை உயிரா னானை உலகேழு மானானை உம்பர் கோவை, வானவனை மதிசூடும் வளவி†† யானை மலைமகள்முன் வராகத்தின் பின்பே சென்ற, கானவனைக் கயிலாய மலையு ளானைக் கலந்துருகி நைவார்தம்‡ நெஞ்சி னுள்ளே, பானவனை§ப் பள்ளியின்முக் கூட லானைப் பயிலாதே பாழேநான் உழன்ற வாறே. 9

தடுத்தானைத் தான்முனிந்து தன்தோள் கொட்டித் தடவ ரையை இருபதுதோள் தலையி னாலும், எடுத்தானைத் தாள்விர லால் மாள வூன்றி எழுநரம்பின் இசைபாடல் இனிது கேட்டுக், கொடுத்தானைப் பேரோடுங் கூர்வாள் தன்னைக் குரைகழலாற் கூற்றுவனை மாள அன்று, படுத்தானைப் பள்ளியின்முக் கூட லானைப் பயிலாதே பாழேநான் உழன்ற வாறே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி—முக்கோணநாதர்; தேவி—மைமேவு கண்ணியம்மை.

---

* மதிலாரும் என்றும் பாடம். **நெதியாளன் – குபேரன். † கூர் அரவம்-(கோபம்) மிகுந்த பாம்பு- †† வளவி – சிரம். ‡ நினைவார் என்றும் பாடம். §பானவன் – பரவினவன்.

## 52. திருவாரூர்

பண் – காந்தாரம் [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பாடிளம் பூதத்தி னானும் பவளச்செவ் வாய்வண்ணத் தானும்
கூடி*ள மென்முலை யாளைக் கூடிய கோலத்தி னானும்
ஓடி**ள வெண்பிறை யானும் ஒளிதிகழ் சூலத்தி னானும்
ஆடிளம் பாம்பசைத் தானும் ஆரூ ரமர்ந்தஅம் மானே. 1

நரியைக் குதிரைசெய் வானும் p நரகரைத் தேவுசெய் வானும் s
விரதங்கொண் டாடவல் லானும் விச்சின்றி நாறுசெய் வானும் t
முரசதிர்ந் தானைமுன் னோட முன்பணிந் தன்பர்கள் ஏத்த
அரவரைச் சாத்திநின் றானும் ஆரூ ரமர்ந்தஅம் மானே. 2

நீறுமெய் பூசவல் லானும் நினைப்பவர் நெஞ்சத்து ளானும்
ஏறுகந் தேறவல் லானும் எரிபுரை மேனியி னானும்
நாறு கரந்தையி னானும் நான்மறைக் கண்டத்தி னானும்
ஆறு சடைக்கரந் தானும் ஆரூ ரமர்ந்தஅம் மானே. 3

கொம்புநல் வேனி லவனைக் குழைய முறுவல்செய் தானும்†
செம்புனல் கொண்டெயில் மூன்றுந் தீயெழக் கண்சிவந் தானும்‡
வம்புநற் கொன்றையி னானும் வாட்கண்ணி வாட்டம தெய்த
அம்பர ஈருரிn யானும் ஆரூ ரமர்ந்தஅம் மானே. 4

ஊழி யளக்கவல் லானும் உகப்பவர் உச்சியுள் ளானும்
தாழிளஞ் செஞ்சடை யானுந் தண்ணமர் திண்கொடி யானும்
தோழியர் தூதிடை யாடத் தொழுதடி யார்கள் வணங்க
ஆழி வளைக்கையி னானும் ஆரூ ரமர்ந்தஅம் மானே. 5

ஊர்திரை வேலையுள் ளானும் உலகிறந் தொண்பொரு ளானும்
சீர்தரு பாடலுள் ளானுஞ் செங்கண் விடைக்கொடி யானும்

---

* கூடு – ஈக்கிடை போகாமல் செறிந்த. ** ஓடு – தலையோடு. p நரியைக் குதிரை செய்வானும் – இது மாணிக்கவாசகரின் பொருட்டு இறைவன் செய்த திருவிளையாடலைக் குறிப்பது என்பர். s நரகரைத் தேவு செய்தல்–உயிர்களை உயர்த்துதல். t விச்சின்றி நாறு செய்தல்–வித்தின்றி விளைதல். † குழையக் கண்சிவந்தானும் என்றும் பாடம். ‡ தீயெழ முறுவல் செய்தானும் என்றும் பாடம். n ஈர்உரி–தோல்.

வார்தரு பூங்குழ லாளை மருவி யுடன்வைத் தவனும்
ஆதிரை நாளு Sகந் தானும் ஆரூ ரமர்ந்தஅம் மானே. 6

தொழற்கங்கை துன்னிநின் றூர்க்குத் தோன்றி யருளவல் லானும்
கழற்கங்கை பன்மலர் கொண்டு காதல் கனற்றநின் றானும்
குழற்கங்கை யாளையுள் வைத்துக் கோலச் சடைகரந் தானும்
அழற்கங்கை யேந்தவல் லானும் ஆரூ ரமர்ந்தஅம் மானே. 7

ஆயிரந் தாமரை போலும் ஆயிரஞ் சேவடி யானும்
ஆயிரம் பொன்வரை போலும் ஆயிரந் தோளுடை யானும்
ஆயிர ஞாயிறு போலும் ஆயிர நீண்முடி யானும்
ஆயிரம் பேருகந் தானும் ஆரூ ரமர்ந்தஅம் மானே. 8

வீடரங் காநிறுப் பானும் விசும்பினை வேதி தொடர
ஓடரங் காகவைத் தானும் ஓங்கியொ ரூழியுள் ளானும்
காடரங் காமகிழ்ந் தானுங் காரிகை யார்கள் மனத்துள்
ஆடரங் கத்திடை யானும் ஆரூ ரமர்ந்தஅம் மானே. 9

பையஞ் சுடர்விடு நாகப் பள்ளிகொள் வானுள்ளத் தானும்
கையஞ்சு நான்குடை யானைக் கால்விர லாலடர்த் தானும்
பொய்யஞ்சி வாய்மைகள் பேசிப் புகழ்புரிந் தார்க்கருள் செய்யும்
ஐயஞ்சின்t அப்புறத் தானும் ஆரூ ரமர்ந்தஅம் மானே. 10

திருச்சிற்றம்பலம்

---

பழமொழி—பண்—காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த மேனியான் தாள் தொழாதே, உய்யலா மென்றெண்ணி உறிதூக்கி யுழிதந்தென் உள்ளம்* விட்டுக், கொய்யுலா மலர்ச்சோலைக் குயில்கூவ மயிலாலும் ஆரூரரைக், கையினால் தொழாதொழிந்து கனியிருக்கக் காய்கவர்ந்த கள்வ னேனே** 1

என்பிருத்தி நரம்புதோல் புகப்பெய்திட் டென்னையோர் உருவமாக்கி, இன்பிருத்தி முன்பிருந்த வினைதீர்த்திட் டென்னுள்ளங் கோயி

S ஆதிரைநாள் – இது சிவனுக்கு உகந்தநாள். t ஐயஞ்சு – 25: ஆன்ம தத்துவங்கள். *உள்ளம் – உள்ளத்தை அவர்கள் வசமாக விட்டு ** 'கனியிருப்பக் காய் கவர்ந்தற்று' என்பது திருக்குறள் அடி.

லாக்கி, அன்பிருத்தி அடியேனைக் கூழாட்§கோண் டருள்செய்த ஆரூரர் தம், முன்பிருக்கும் விதியின்றி முயல்விட்டுக் காக்கைப்பின் போனே வாறே. 2

பெருகுவித்தென் பாவத்தைப் பண்டெலாங் குண்டர்கள் தஞ்சொல்லே கேட்டு, உருகுவித்தென் உள்ளத்தின் உள்ளிருந்த கள்ளத்தைத்* தள்ளிப் போக்கி, அருகுவித்துப் பிணிகாட்டி† யாட்கொண்டு பிணிதீர்த்த ஆரூரர்தம், அருகிருக்கும் விதியின்றி அறமிருக்க மறம் விலைக்குக் கோண்ட வாறே. 3

குண்டனாய்த் தலைபறித்துக் குவிமுலையார் நகைகாணு துழிதர் வேனைப், பண்டமாப் படுத்தென்னைப் பால்தலையில் தெளித்து‡த் தன் பாதங் காட்டித், தொண்டெலா மிசைபாடத் தூமுறுவல் அருள்செய்யும் ஆரூரரைப், பண்டெலாம் அறியாதே பனிநீராற் பரவைசெயப் பாவித் தேனே. 4

துன்னாகத் தேனாகித் தூர்ச்சனவர் சொற்கேட்டுத் துவர் வாய்க்கொண்டு, என்னாகத் திரிதந்தீங் கிருகையேற் றிடவுண்ட ஏழை யேன்நான், பொன்னாகத் தடியேனைப் புகப்பெய்து பொருட்படுத்த ஆரூரரை, என்னாகத் திருத்தாதே ஏதன்போர்க் காதனாய் அகப்பட் டேனே. 5

பப்போதிப் பவணனாய்ப் பறித்ததொரு தலையோடே திரிதர் வேனை, ஒப்போட வோதுவித்தென் உள்ளத்தின் உள்ளிருந்தங் குறுதி காட்டி, அப்போதைக் கப்போதும் அடியவர்கட் காரமு தாம் ஆரூரரை, எப்போது நினையாதே இருட்டறையின் மலடுகறந் தெய்த்த வாறே. 6

கதியொன்றும் அறியாதே கண்ணழலத் தலைபறித்துக் கையி லுண்டு, பதியொன்று நெடுவீதிப் பலர்காண நகைகாணு துழிதர் வேற்கு, மதிதந்த ஆரூரில் வார்தேனை வாய்மடுத்துப் பருகி உய் யும், விதியின்றி மதியிலியேன் விளக்கிருக்க மின்மினித்தீக் காய்ந்த வாறே. 7

---

§ கூழ்–கூழை: படையுறுப்பு; அடிமை ஆளுமாம். * கள்ளம்–ஆணவக்கறை. † பிணி காட்டி–சூலை நோயை உண்டாக்கி; பணி காட்டி என்றும் பாடம். ‡ பால் தலையில் தெளித்தல் – தூய்மைப் படுத்தி அடிமையாக்கும் பொருட்டுச் செய்யும் கிரியை.

பூவையாய்த் தலைபறித்துப் பொறியற்ற சமண்நீசர் சொல்லே கேட்டுக், காவிசேர் கண்மடவார்க் கண்டோடிக் கதவடைக்குங் கள்வ னேன்றன், ஆவியைப் போகாமே தவிர்த்தென்னை யாட் கொண்ட ஆரூரைப், பாவியேன் அறியாதே பாழூரிற் பயிக்கம்*புக் கெய்த்த வாறே. 8

ஒட்டாத வாளவுணர் புரமூன்றும் ஓரம்பின் வாயில் வீழக், கட்டானைக் காமனையுங் காலனையுங் கண்ணினொடு காலின் வீழ, அட்டானை ஆரூரில் அம்மானை ஆர்வச்செற் றக்கு ரோதம், தட் டானை**ச் சாராதே தவமிருக்க அவஞ்செய்து தருக்கி னேனே. 9

மறுத்தானொர் வல்லரக்கன் ஈரைந்து முடியினொடு தோளுந் தாளும், இறுத்தானை எழில்முளரித் தவிசின்மிசை இருந்தான்றன் தலையி லொன்றை, அறுத்தானை ஆரூரில் அம்மானை ஆலாலம் உண்டு கண்டம், கறுத்தானைக் கருதாதே கரும்பிருக்க இரும்பு கடித் தெய்த்த வாறே. 10

திருச்சிற்றம்பலம்

---

பண் – சீகாமரம் [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

சூலப் படையானைச் சூழாகர் வீழருவிக்
கோலத்தோட் குங்குமஞ்சேர் குன்றெட் டுடையானைப்
பாலொத்த மென்மொழியாள் பங்கனைப் பாங்காய
ஆலத்‡தின் கீழானை நான்கண்ட தாரூரே. 1

பக்கமே பாரிடங்கள் சூழப் படுதலையில்
புக்கவூர்ப் பிச்சையேற் றுண்டு பொலிவுடைத்தாய்க்
கொக்கிறகின் தூவல் கொடியெடுத்த கோவணத்தோ(டு)
அக்கணிந்த அம்மானை நான்கண்ட தாரூரே. 2

சேய உலகமுஞ் செல்சார்வு மானானை
மாயப்போர் வல்லானை மாலைதாழ் மார்பனை
வேயொத்த தோளியர்தம் மென்முலைமேல் தண்சாந்தின்
ஆயத் திடையானை நான் கண்ட தாரூரே. 2

---

* பயிக்கம்–பிச்சை. **தட்டான்–தட்டுப்படாதவன். †சூழாத என்றும் பாடம். ‡ ஆலம்–கல்லாலமரம்.

ஏறேற்ற மாவேறி எண்கணமும் பின்படர
மாறேற்றார் வல்லரணஞ் சீறி மயானத்தில்
நீறேற்ற மேனியனாய் நீள்சடைமேல் நீர்ததும்ப
ஆறேற்ற அந்தணனை நான்கண்ட தாரூரே. 4

தாங்கோல வெள்ளெலும்பு பூண்டுதம் ஏறேறிப்
பாங்கான ஊர்க்கெல்லாஞ் செல்லும் பரமனார்
தேங்காவி* நாறுந் திருவாரூர்த் தொன்னகரில்
பூங்கோயி லுள்**மகிழ்ந்து போகா திருந்தாரே. 5

எம்பட்டம் பட்ட முடையானை யேர்மதியின்
நும்பட்டஞ் சேர்ந்த நுதலானை அந்திவாய்ச்
செம்பட் டுடுத்துச் சிறுமா னுரியாடை
அம்பட் டசைத்தானை நான்கண்ட தாரூரே. 6

போழொத்த வெண்மதியஞ் சூடிப் பொலிந்திலங்கு
வேழத் துரிபோர்த்தான் வெள்வளையாள் தான்வெருவ
ஊழித்தீ யன்னானை ஒங்கொலிமாTப் பூண்டதோர்
ஆழித்தேர்† வித்தகனை நான்கண்ட தாரூரே. 7

வஞ்சனையா ரார்பாடுஞ் சாராத மைந்தனைத்
துஞ்சிருளில் ஆடல் உகந்தானை தன்தொண்டர்
நெஞ்சிருள் கூரும் பொழுது நிலாப்பாரித்
தஞ்சுடராய் நின்றானை நான்கண்ட தாரூரே. 8

காரமுது கொன்றை கடிநாறு தண்ணென்ன
நீரமுது கோதையோ டாடிய நீள்மார்பன்
பேரமுத முண்டார்கள் உய்யப் பெருங்கடல்நஞ்(சு)
ஆரமுதா வுண்டானை நான்கண்ட தாரூரே. 9

தாட††வுடுக் கையன் தாமரைப்பூஞ் சேவடியன்
கோடலா வேடத்தன்‡ கொண்டதோர் வீணையினான்
ஆடரவக் கிண்கிணிக்கால் அன்னானோர் சேடனை‡‡
ஆடுந்தீக் கூத்தனை நான்கண்ட தாரூரே. 10

---

* காவி–கழுநீர். **பூங்கோயில்–திருவாரூர்க் கோயிலின் பெயர், Tஒலிமா – வேதவொலியாகிய குதிரை. †ஆழித்தேர் – உலகமாகிய தேர். ††தாட–அடிக்கும். ‡கோடலாவேடம்–கொள்ளாதவேடம். ‡‡சேடன்–ஒளியுடையவன்; பெருமையன்.

மஞ்சாடு குன்றடர வூன்றி மணிவிரலால்
துஞ்சாப்போர் வாளரக்கன் தோள்நெரியக் கண்குருதிச்
செஞ்சாந் தணிவித்துத் தன்மார்பிற் பால்வெண்ணீற்(று)
அஞ்சாந் தணிந்தானை நான்கண்ட தாரூரே. 11

திருச்சிற்றம்பலம்

பண் – சீகாமரம்

திருச்சிற்றம்பலம்

காண்டலேகருத் தாய் நினைந்திருந் தேன்மனம்புகுந் தாய்கழலடி, பூண்டுகொண் டொழிந்தேன் புறம்போயி னூலறையோ, ஈண்டுமாடங்கள் நீண்டமாளிகை மேலெழுகொடி வானிளம்மதி, தீண்டிவந் துலவுந் திருவாரூ ரம்மானே. 1

கடம்படந்நட மாடினாய்களை கண்ணெனக்கொரு காதல் செய்தடி, ஒடுங்கி வந்தடைந்தேன் ஒழிப்பாய் பிழைப்பவெலாம் முடங்கிறல்முது நீர்‡மலங்கிள வாளைசெங்கயல் சேல்வரால் களி(று).¶ அடைந்த தண்கழனி அணியாரூ ரம்மானே. 2

அருமணித்தடம் பூண்முலை அரம்பையரொ டருளிப்பாடியர்*, உரிமையிற் றொழுவார் உருத்திர பல்கணத்தார், விரிசடைவிர திகளந்தணர் சைவர்பாசுப தர்கபாலிகள்**, தெருவினிற் பொலியுந் திருவாரூ ரம்மானே. 3

பூங்கழல்தொழுதும் பரவியும் புண்ணியாபுனி தாவுன்பொற்கழல், ஈங்கிருக்கப் பெற்றேன் என்னகுறை யுடையேன், ஓங்குதெங்கிலை யார்கமுகிள வாழைமாவொடு மாதுளம்பல, தீங்கனி சிதறுந் திருவாரூ ரம்மானே. 4

நீறுசேர்செழு மார்பினாய்நிரம் பாமதியொடு நீள்சடையிடை, ஆறுபாய வைத்தாய் அடியே அடைந்தொழிந்தேன், ஏறிவண்டொடு தும்பியஞ்சிற கூன்றவிண்ட மலரிதழ்வழி, தேறல் பாய்ந் தொழுகுந் திருவாரூ ரம்மானே. 5

---

‡முடங்குறுமுதுநீர் என்றும் பாடம். ¶களிறு–மீன்வகைகளில் ஒன்று. *அருளிப்பாடியர்–இறைவனது கட்டளைகளை நிறைவேற்றுவோர். அருளிப்பாடு – கட்டளை. **உருத்திர.........கபாலிகள்–இவர்கள் சைவத்துள்ள பலவகை அகப்புறச் சமயத்தவர்கள்.

அளித்துவந்தடி கைதொழுமவர் மேல்வினைகெடு மென்றி வையகம், களித்துவந் துடனே கலந்தாடக் காதலராய்க், குளித்து மூழ்கியுந் தூவியுங்குடைந் தாடுகோதையர் குஞ்சியுள்புகத், தெளிக்குந் தீர்த்தமருத் திருவாரூ ரம்மானே. 6

திரியுமூவெயில் தீயெழச்சிலை வாங்கிநின்றவ னேயென்சிந் தையுள், பிரியுமா றெங்ஙனே பிழைத்தேயும் போகவொட்டேன், பெரியசெந்நெற் பிரம்புரிகெந்த சாலிதிப்பிய மென்றிவையகத், தரியுந் தண்கழனி அணியாரூ ரம்மானே. 7

பிறத்தலும்பிறந் தாற்பிணிப்பட வாய்ந்தசைந்துட லம்புகுந்து நின்(று), இறக்குமா றுளதே இழித்தேன் பிறப்பினைநான், அறத்தை யேபுரிந் தமனத்தனாய் ஆர்வச்செற்றக்கு ரோதநீக்கியுன், திறத்தனாய் ஒழிந்தேன் திருவாரூ ரம்மானே. 8

முளைத்தவெண்பிறை மொய்சடையுடை யாய்எப்போது மென் னெஞ்சிடங்கொள்ள, வளைத்துக் கொண்டிருந்தேன் வலி செய்து போகவொட்டேன், அளைப்பிரிந்த அலவன் போய்ப்புகு தந்தகாலமுங் கண்டு†தன்பெடை, திளைக்குந் தண்கழனித் திரு வாரூ ரம்மானே. 9

நாடினார்கம லம்மலரய னோடிரணியன் ஆகங்கீண்டவன், நாடிக் காணமாட்டாத் தழலாய நம்பானைப், பாடுவார்பணி வார்பல்லாண்டிசை கூறுபத்தர்கள் சித்தத்துள்புக்குத், தேடிக் கண்டுகொண்டேன் திருவாரூ ரம்மானே. 10

திருச்சிற்றம்பலம்

---

### திருவாதிரைத் திருப்பதிகம்* பண்–குறிஞ்சி [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

முத்து விதான மணிப்பொற் கவரி முறையாலே
பத்தர்க ளோடு பாவையர் சூழப் பலிப்**பின்னே
வித்தகக் கோல வெண்டலை மாலை விரதிகள்
அத்தன் ஆரூர் ஆதிரை நாளால் அதுவண்ணம் 1

---

† புகுந்த காலமுங் கண்டு என்றும் பாடம். *இத்திருப்பதிகம் திருவாதிரைத் திருநாளின் திருவிழாச் சிறப்பினையும், அதனைக் காணும் வகையினையும் அறிவிப்பது. **பலி–(எட்டுத்திசைப் பாலகர்க்கு இடும்) அட்டபலி.

நணியார் சேயார் நல்லார் தீயார் நாடோறும்
பிணிதான் தீரும் என்று பிறங்கிக் கிடப்பாரும்*
மணியே பொன்னே மைந்தா மணாளா என்பார்கட்(கு)
அணியான் ஆரூர் ஆதிரை நாளால் அதுவண்ணம் 2

வீதிகள் தோறும் வெண்கொடி யோடுவி தானங்கள்
சோதிகள் விட்டுச் சுடர்மா மணிகள் ஒளிதோன்றச்
சாதிக ளாய பவளமு முத்துத் தாமங்கள்
ஆதி ஆரூர் ஆதிரை நாளால் அதுவண்ணம் 3

குணங்கள் பேசிக் கூடிப் பாடித் தொண்டர்கள்
பிணங்கித் தம்மிற் பித்தரைப் போலப் பிதற்றுவார்
வணங்கி நின்று வானவர் வந்து வைகலும்
அணங்கன் ஆரூர் ஆதிரை நாளால் அதுவண்ணம் 4

நிலவெண் சங்கும் பறையும் ஆர்ப்ப நிற்கில்லாப்
பலரு மிட்ட கல்ல வடங்கள்** பரந்தெங்கும்
கலவ மஞ்ஞை காரென் றெண்ணிக் களித்துவந்
தலம ராரூர் ஆதிரை நாளால் அதுவண்ணம் 5

விம்மா வெருவா விழியாத் தெழியா வெருட்டுவார்
தம்மாண் பிலாராய்த் தரியார் தலையான் முட்டுவார்
எம்மான் ஈசன் எந்தை எனப்பன் என்பார்கட்(கு)
அம்மான் ஆரூர் ஆதிரை நாளால் அதுவண்ணம். 6

செந்துவர் வாயார் செல்வன சேவடி சிந்திப்பார்
மைந்தர்க ளோடு மங்கையர் கூடிம யங்குவார்
இந்திர னாதி வானவர் சித்தர் எடுத்தேத்தும்
அந்திரன் ஆரூர் ஆதிரை நாளால் அதுவண்ணம் 7

முடிகள் வணங்கி மூவா தார்கண் முன்செல்ல
வடிகொள் வேய்த்தோள் வான்அர மங்கையர் பின்செல்லப்
பொடிகள்† பூசிப் பாடுந் தொண்டர் புடைசூழ
அடிகள் ஆரூர் ஆதிரை நாளால் அதுவண்ணம் 8

---

* பிறங்கிக் கிடத்தல்—வரங்கிடத்தல். ** கல்லவடம்—ஒருவகை வாச்சியம். இது கல்லலகு என வழங்கப்பெறும். †பொடிகள்—திருநீறு; கள்—பன்மை மிகுதி. கற்பவிபூதி. அதுகற்பவிபூதி முதலியனவுமாம்.

துன்பம் நும்மைத் தொழாத நாள்கள் என்பாரும்
இன்பம் நும்மை யேத்து நாள்கள் என்பாரும்
நும்பின் எம்மை நுழையப் பணியே என்பாரும்
அன்பன் ஆரூர் ஆதிரை நாளால் அதுவண்ணம். 9

பாரூர் பௌவத் தானைப் பத்தர் பணிந்தேத்தச்
சீரூர் பாடல் ஆடல் அறாத செம்மாப்பார்*ர்ந்(து)
ஓரூர் ஒழியா துலகம் எங்கும் எடுத்தேத்தும்
ஆரூ ரன்றன் ஆதிரை நாளால் அதுவண்ணம். 10

திருச்சிற்றம்பலம்

---

திருநேரிசை** [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

படுகுழிப் பவ்வத் தன்ன பண்டியைப் பெய்த வாற்றால்
கெடுவதிம் மனிதர் வாழ்க்கை காண்டொறுங் கேது கின்றேன்
முடுகுவர் இருந்துள் ஐவர் மூர்க்கரேல் இவர்க ளோடும்†
அடியனேன் வாழ மாட்டேன் ஆரூர்மூ லட்ட னீரே†† 1

புழுப்பெய்த பண்டி தன்னைப் புறமொரு தோலால் மூடி
ஒழுக்கறு ஒன்பதுவாய் ஒற்றுமை யொன்று மில்லை
சழக்குடை இதனுள் ஐவர் சங்கடம் பலவுஞ் செய்ய
அழிப்பனாய் வாழ மாட்டேன் ஆரூர்மூ லட்ட னீரே. 2

பஞ்சின்மெல் லடியி னார்கள் பாங்கரா யவர்கள் நின்று
நெஞ்சில்நோய் பலவுஞ் செய்து நினையினும் நினைய வொட்டார்
நஞ்சணி மிடற்றி னானே நாதனே நம்பனே நான்
அஞ்சினேற் கஞ்ச லென்னீர் ஆரூர்மூ லட்ட னீரே. 3

கெண்டையந் தடங்கண் நல்லார் தம்மையே கெழும வேண்டிக்
குண்டராய்த் திரிதந் தைவர் குலைத்திடர்க் குழியில் நூக்கக்‡
கண்டுநான் தரிக்க கில்லேன் காத்துக்கொள் கறைசேர் கண்டா
அண்டவா னவர்கள் போற்றும் ஆரூர்மூ லட்ட னீரே. 4

---

* செம்மாப்பு—சிறப்பு. ** இப்பதிகம் இறைவனை முன்னிலைப் படுத்திக் கூறுவதாகும். † மூர்க்கரே இவர்களோடும் என்றும் பாடம். †† மூலட்டானம்—திருவாரூர்க் கோயிலின் பெயர். ‡ நூக்க—வலியத்தள்ள.

தாழ்குழல் இன்சொல் நல்லார் தங்களைத் தஞ்ச மென்று
ஏழையே னாகி நாளும் என்செய்கேன் எந்தை பெம்மான்
வாழ்வதேல் அரிது போலும் வைகலும் ஐவர் வந்து
ஆழ்குழிப் படுத்த ஆற்றேன் ஆரூர்மூ லட்ட னீரே. 5

மாற்றமொன் றருள கில்லீர் மதியிலேன் விதியி லாமை
சீற்றமுந் தீர்த்தல் செய்யீர் சிக்கன வுடைய ராகிக்
கூற்றம்போல் ஐவர் வந்து குலைத்திட்டுக் கோகு செய்ய
ஆற்றவுங் கில்லேன் நாயேன் ஆரூர்மூ லட்ட னீரே. 6

உயிர்நிலை யுடம்பே காலா உள்ளமே தாழி யாகத்
துயரமே ஏற்ற மாகத் துன்பக்கோ லதனைப் பற்றிப்
பயிர்தனைச் சுழிய விட்டுப் பாழ்க்குநீர் இறைத்து மிக்க
அயர்வினால் ஐவர்க் காற்றேன் ஆரூர்மூ லட்ட னீரே.§ 7

கற்றதேல் ஒன்று மில்லைக் காரிகை யாரோ டாடிப்
பெற்றதேற் பெரிதுந் துன்பம் பேதையேன் பிழைப்பி னாலே
முற்றினால் ஐவர் வந்து முறைமுறை துயரஞ் செய்ய
அற்று¶நான் அலந்து போனேன் ஆரூர்மூ லட்ட னீரே. 8

பத்தனாய் வாழ மாட்டேன் பாவியேன் பரவி வந்து
சித்தத்துள் ஐவர் தீய செய்வினை பலவுஞ் செய்ய
மத்துறு தயிரே போல மறுகுமென் னுள்ளந் தானும்
அத்தனே அமரர் கோவே ஆரூர்மூ லட்ட னீரே. 9

தடக்கைநா லைந்துங் கொண்டு* தடவரை தன்னைப் பற்றி
எடுத்தவன் பேர்க்க ஓடி இரிந்தன பூத மெல்லாம்
முடித்தலை யனைத்துந்‡ தோளும் முறிதர இறையே யூன்றி
அடர்த்தருள் செய்த தென்னே ஆரூர்மூ லட்ட னீரே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

குழல்வலங் கொண்ட|| சொல்லாள் கோலவேற் கண்ணி தன்னைக்
கழல்வலங் கொண்டு நீங்காக் கணங்களக் கணங்க ளார

---

§ இச்செய்யுள் உருவகம், ¶ அற்று-பயனற்று. * நாலஞ்சுங் கொண்டு என்றும் பாடம். ‡ முடித்தலை பத்துந் என்றும் பாடம். || குழல்வலங்கொண்ட-குழலின் இசையை வென்ற,

அழல்வலங் கொண்ட கையான் அருட்கதிர் எறிக்கும் ஆரூர்
தொழல்வலங் கொண்டல் செய்வான் தோன்றினார்
தோன்றினாரே. 1

நாகத்தை நங்கை அஞ்ச நங்கையை மஞ்ஞை என்று
வேகத்தைத் தவிர நாகம் வேழத்தின் உரிவை போர்த்துப்
பாகத்தின் நிமிர்தல் செய்யாத் திங்களை மின்னேன் றஞ்சி
ஆகத்திற் கிடந்த நாகம் அடங்கும்ஆ ரூர னார்க்கே. 2

தொழுதகங் குழைய மேவித் தோட்டிமை† யுடைய தொண்டர்
அழுதகம் புகுந்து நின்றார் அவரவர் போலும் ஆரூர்
எழிலகை நடுவெண் முத்த மன்றியும் ஏர்கொள் வேலிப்
பொழிலகம் விளங்கு திங்கட் புதுமுகிழ் சூடி னாரே. 3

நஞ்சிருள் மணிகொள் கண்டர் நகையிருள் ஈமக் கங்குல்
வெஞ்சுடர் விளக்கத் தாடி விளங்கினார் போலும் மூவா
வெஞ்சுடர் முகடு தீண்டி வெள்ளிநா ராச‡ மன்ன
அஞ்சுடர் அணிவெண் டிங்கள் அணியும்ஆ ரூர னாரே. 4

எந்தளிர் நீர்மை கோல மேனிஎன் றிமையோ ரேத்தப்
பைந்தளிர்க் கொம்ப ரன்ன படர்கொடி பயிலப் பட்டுத்
தஞ்சடைத் தொத்தி னானுந் தம்மதோர் நீர்மை யாலும்
அந்தளிர் ஆகம் போலும் வடிவர்ஆ ரூர னாரே. 5

வானகம் விளங்க மல்கும் வளங்கெழு மதியஞ் சூடித்
தானக மழிய வந்து தாம்பலி தேர்வர் போலும்
ஊனகங் கழிந்த ஓட்டில் உண்பதும் ஒளிகொள் நஞ்சம்
ஆனகம் அஞ்சும் ஆடும் அடிகள்ஆ ரூர னாரே. 6

அஞ்சணை கணையி னானை அழலுற அன்று நோக்கி
அஞ்சணை குழலி னாளை அமுதமா அணைந்து நக்கு
அஞ்சணை அஞ்சும்¶ ஆடி ஆடர வாட்டு வார்தாம்
அஞ்சணை வேலி ஆரூர்𝔱 ஆதரித் திடங்கொண் டாரே. 7

வணங்கிமுன் அமரர் ஏத்த வல்வினை யான தீரப்
பிணங்குடைச் சடையில் வைத்த பிறையுடைப் பெருமை அண்ணல்

† தோட்டிமை – ஒற்றுமை. ‡ நாராசம்–கம்பி. ¶ அஞ்சணை அஞ்சு–பஞ்ச கௌவியம். 𝔱 அஞ்சணை வேலி ஆரூர் – கமலாலயக் குளமும், பூங்கோயிலும், செங்கழுநீர் ஓடையும் ஒவ்வொன்றும் ஐந்துவேலிப் பரப்புடையவனவாகிய திருவாரூர்.

மணங்கம ழோதி பாகர் மதிநிலா வட்டத் தாடி
அணங்கொடி மாடவீதி ஆரூரெம் அடிக ளாரே. 8

நகலிடம் பிறர்கட் காக நான்மறை யோர்கள் தங்கள்
புகலிட மாகி வாழும் புகலிலி இருவர் கூடி
இகலிட மாக நீண்டங் கீண்டெழில் அழல தாகி
அகலிடம் பரவி ஏத்த அடிகள்ஆ ரூரனாரே. 9

ஆயிரந் திங்கள் மொய்த்த அலைகடல் அமுதம் வாங்கி
ஆயிரம் அசுரர் வாழும் அணிமதில் மூன்றும் வேவ
ஆயிரந் தோளும் மட்டித் தாPடிய அசைவு தீர
ஆயிரம் அடியும் வைத்தS அடிகள்ஆ ரூர னாரே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருவிருத்தம்* [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

குலம்பலம் பாவரு குண்டர்முன் னேநமக் குண்டுகொலோ
அலம்பலம் பாவரு தண்புனல் ஆரூர் அவிர்சடையான்
சிலம்பலம் பாவரு சேவடி யான்திரு மூலட்டானம்
புலம்பலம் பாவரு தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே. 1

மற்றிட மின்றி மனைதுறந் தல்லுணா வல்லமணர்
சொற்றிட மென்று துரிசு**பட் டேனுக்கும் உண்டுகொலோ
விற்றிடம் வாங்கி விசயனொ டன்றொரு வேடுவனாய்ப்
புற்றிடங் கொண்டான்§ றன்தொண்டர்க்குத் தொண்டராம்
புண்ணியமே. 2

ஒருவடி வின்றிநின் றுண்குண்டர் முன்நமக் குண்டுகொலோ
செருவடி வெஞ்சிலை யாற்புரம் அட்டவன் சென்றடையாத்
திருவுடை யான்திரு வாரூர்த் திருமூலட் டானன்செங்கண்
பொருவிடை யானடித் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே.

மாசினை யேறிய மேனியர் வன்கண்ணர் மொண்ணரை‡விட்(டு)
ஈசனை யேநினைந் தேசறு வேனுக்கும் உண்டுகொலோ

---

P மட்டித்து–அசைத்து. S ஆயிரம் வடிவும் வைத்த என்றும் பாடம். * இப்பதிகம் சமணர்களின் பழக்க வழக்கங்களை அறிவிக்கின்றது. ** துரிசு–கெடுதி. § புற்று இடங்கொண்டான் – திருவாரூர்த் திருமூலட்டான நாதர். ‡ மொண்ணர்–கீழோர்கள்.

தேசனை ஆரூர்த் திருமூலட் டானனைச் சிந்தைசெய்து
பூசனைப் பூசுரர்* தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே. 4

அருந்தும் பொழுதுரை யாடா அமணர் திறமகன்று
வருந்தி நினைந்தர னேயென்று வாழ்த்துவேற் குண்டுகொலோ
திருந்திய மாமதில் ஆரூர்த் திருமூலட் டானனுக்குப்
பொருந்துந் தவமுடைத் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே.

வீங்கிய தோள்களுந் தாள்களு மாய்நின்று வெற்றரை¶யே
மூங்கைகள் போலுண்ணு மூடர்முன் னேநமக் குண்டுகொலோ
தேங்கமழ் சோலைத் தென்னாரூர்த் திருமூலட் டானன்செய்ய
பூங்கழ லானடித் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே.6

பண்ணிய சாத்திரப் பேய்கள் பறிதலைக் குண்டரைவிட்(டு)
எண்ணில் புகழீசன் றன்னருள் பெற்றேற்கும் உண்டுகோலோ
திண்ணிய மாமதில் ஆரூர்த் திருமூலட் டானன் எங்கள்
புண்ணியன் தன்னடித் தொண்டர்க்குத் தொண்டராம்புண்ணியமே.7

கரப்பர்கள் மெய்யைத் தலைபறிக் கச்சுகம் என்னுங்pகுண்டர்
உரைப்பன கேளாதிங் குய்யப்போந் தேனுக்கும் உண்டுகொலோ
திருப்பொலி ஆரூர்த் திருமூலட் டானன் திருக்கயிலைப்
பொருப்பன் விருப்பமர் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே8

கையி விடுசோறு நின்றுண்ணுங் காதல் அமணரைவிட்(டு)
உய்யு நெறிகண்டிங் குய்யப்போந் தேனுக்கும் உண்டுகொலோ
ஐயன் அணிவயல் ஆரூர்த் திருமூலட் டானனுக்குப்
பொய்யன் பிலாஅடித் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே9

குற்ற முடைய அமணர் திறமது கையகன்றிட்(டு)
உற்ற கருமஞ்செய் துய்யப்போந் தேனுக்கும் உண்டுகொலோ
மற்பொலி தோளான் இராவணன் தன்வலி வாட்டுவித்த
பொற்கழ லானடித் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே.10

திருச்சிற்றம்பலம்

---

* பூசனைப் பூசுரர் – பூசித்தலையுடைய பூசுரர். ¶வெற்றரை – உடைநீத்தவர். p தலைபறிக்கச் சுகம் என்னும்–தலைமயிரைப் பறிக்கும்போது, 'இப்-துக்; பிற்–சுக்' (இப்போது துக்கம்; பின்னர் சுகம்) என்ற மந்திரத்தைக் கூறிக்கொள்ளும்.

## திருவிருத்தம்*

திருச்சிற்றம்பலம்

வேம்பினைப் பேசி விடக்கினை ஓம்பி வினைபெருக்கித்
தூம்பி**னைத் தூர்த்தங்கோர் சுற்றந் துணையென் றிருத்திர்தொண்டீர்
ஆம்பலம் பூம்பொய்கை ஆரூர் அமர்ந்தான் அடிநிழற்கீழ்ச்
சாம்பலைப் பூசிச் சலமின்றித் தொண்டுபட் டுய்ம்மின்களே. 1

ஆராய்ந் தடித்தொண்டர் ஆணிப்பொன் ஆரூர் அகத்தடக்கிப்
பாரூர் பரிப்ப†த்தம் பங்குனி உத்திரம் பாற்படுத்தான்
ஆரூர் நறுமலர் நாதன்†† அடித்தொண்டன் நம்பிநந்தி‡
நீரால் திருவிளக் கிட்டமை நீணா டறியுமன்றே.‡‡ 2

பூம்படி மக்கலம் பொற்படி மக்கலம் என்றிவற்றால்
ஆம்படி மக்கல மாகிலும் ஆரூர் இனிதமர்ந்தார்
தாம்படி மக்கலம் வேண்டுவ ரேல்தமிழ் மாலைகளால்
நாம்படி மக்கலஞ் செய்து தொழுதுய் மடநெஞ்சமே. 3

துடிக்கின்ற பாம்பரை ஆர்த்துத் துளங்கா மதியணிந்து
முடித்தொண்ட ராகி முனிவர் பணிசெய்வ தேயுமன்றிப்
பொடிக்கொண்டு பூசிப் புகுந்தொண்டர் பாதம் பொறுத்த பொற்பால்
அடித்தொண்டன் நந்தியென் பானுளன் ஆரூர் அமுதினுக்கே. 4

கரும்பு பிடித்தவர் காயப்பட் டாரங்கொர் கோடலியால்
இரும்பு பிடித்தவர்§ இன்புறப் பட்டார் இவர்கள்நிற்க
அரும்பவிழ் தண்பொழில் சூழணி ஆரூர் அமர்ந்தபெம்மான்
விரும்பு மனத்தினை யாதொன்று நானுன்னை வேண்டுவனே. 5

கொடிகொள் விதானங் கவரிபறை சங்கங் கைவிளக்கோ(டு)
இடிவில் பெருஞ்செல்வ மெய்துவர் எய்தியும் ஊனமில்லா
அடிகளும் ஆரூர் அகத்தின ராயினும் அம்தவளப்
பொடிகொண் டணிவார்க் கிருளொக்கு நந்தி§§ புறப்படிலே. 6-9

---

* இப்பதிகத்தில் 7. 8. 9-ம் செய்யுட்கள் சிதைந்து போயின. ** தூம்பு-வயிறு. †பாரூர் பரிப்ப – உலகமெல்லாம் கொண்டாட. †† நறுமலர் நாதன் – செங்கழுநீர் மலரை நாளும் அணியும் வீதிவிடங்கர்: தியாகராசப்பெருமான். ‡ நம்பிநந்தி-நமிநந்தி. ‡‡ இச்செய்யுள் நமிநந்தியடிகள் நாயனுரையும் அவர் செய்த திருத்தொண்டுகளையும் சிறப்பித்துக் கூறுவது. § கோடலியால் இரும்பு பிடித்தவர் — சண்டீசர். §§ நந்தி – நமிநந்தி.

சங்கொலிப் பித்திடு மின்சிறு காலைத் தடவழலில்
குங்குலி யப்புகைக் கூட்டென்றுங் காட்டி இருபதுதோள்
அங்குலம் வைத்தவன் செங்குரு திப்புன லோடஅஞ்ஞான்(று)
அங்குலி வைத்தான் அடித்தா மரையென்னை ஆண்டனவே. 10

திருச்சிற்றம்பலம்

---

**திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

எப்போ தும்மிறை யும்*மற வாதுநீர்
முப்போ தும்பிர மன்தொழ நின்றவன்
செப்போ தும்பொனின் மேனிச் சிவனவன்
அப்போ தைக்கஞ்சல் என்னும் ஆரூரனே. 1

சடையின் மேலுமொர் தையலை வைத்தவர்
அடைகி லாஅர வைஅரை யார்த்தவர்
படையின் நேர்தடங் கண்ணுமை பாகமா
அடைவர் போல்இடு காடர்ஆ ரூரரே. 2

விண்ட வெண்டலை யேகல னாகவே
கொண்ட கம்**பலி தேருங் குழகனார்
துண்ட வெண்பிறை வைத்த இறையவர்†
அண்ட வாணர்க் கருளும்ஆ ரூரரே. 3

விடையும் ஏறுவர் வெண்டலை யிற்பலி
கடைகள் தோறுந் திரியுமெங் கண்ணுதல்
உடையுஞ் சீரை உறைவது காட்டிடை
அடைவர் போல்அரங் காகஆ ரூரரே. 4

துளைக்கை வேழத் துரியுடல் போர்த்தவர்
வளைக்கை யாளையொர் பாக மகிழ்வெய்தித்
திளைக்குந் திங்கட் சடையில் திசைமுழு
தளக்குஞ் சிந்தையர்‡ போலும்ஆ ரூரரே. 5

---

* இறையும்–சிறிதும். ** கம் – தலை. † விடையவர் என்றும் பாடம். ‡திசைமுழு தளக்கும் திந்தையர் – இறைவர் நினைத்த மாத்திரத்தில் உலகைத் தோற்றுவித்தும் அழித்தும் அருளுபவர் என்பதாம்.

பண்ணின் இன்மொழி யாளையோர் பாகமா
விண்ணி னார்விளங் கும்மதி சூடியே
சுண்ண நீறுமெய்ப் பூசிச் சுடலையின்
அண்ணி யாடுவர் போலும்ஆ ரூரரே. 6

மட்டு வார்குழ லாளொடு மால்விடை
இட்ட மாவுகந் தேறும் இறைவனார்
கட்டு வாங்கங் கனல்மழு மான்றனோ(டு)
அட்ட மாம்புய மாகும்*ஆ ரூரரே. 7

தேய்ந்த திங்கள் கமழ்சடை யன்கனல்
ஏந்தி எல்லியுள் ஆடும் இறைவனார்
காய்ந்து காமனை நோக்கின கண்ணினார்
ஆய்ந்த நான்மறை ஓதும்ஆ ரூரரே. 8

உண்டு நஞ்சுகண் டத்துள் அடக்கியங்(கு)
இண்டை செஞ்சடை வைத்த இயல்பினன்
கொண்ட கோவண ஆடையன் கூரெரி
அண்ட வாணர் அடையும்ஆ ரூரரே. 9

மாலும் நான்முக னும்மறி கிற்கிலார்
கால னைய அவனைக் கடந்திட்டுச்
சூல மான்மழு** வேந்திய கையினார்
ஆலம் உண்டழ காயஆ ரூரரே. 10

திருச்சிற்றம்பலம்

---

திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

கொக்க ரைகுழல் வீணை கொடுகொட்டி
பக்க மேபகு வாயன பூதங்கள்
ஒக்க ஆட லுகந்துடன் கூத்தராய்
அக்கி னோடர வார்ப்பர்ஆ ரூரரே. 1

எந்த மாதவஞ் செய்தனை நெஞ்சமே
பந்தம் வீடவை யாய பராபரன்
அந்த மில்புகழ் ஆரூர் அரனெறி
சிந்தை யுள்ளுஞ் சிரத்துளுந் தங்கவே. 2

---

* அட்டமாம்புயம்—எண்டோள். ** மான்மறி என்றும் பாடம்.

வண்டு லாமலர் கொண்டு வளர்சடைக்(கு)
இண்டை யாலே புனைந்தும் இராப்பகல்
தொண்ட ராகித் தொடர்ந்து விடாதவர்க்(கு)
அண்டம் ஆளவும் வைப்பர்ஆ ரூரரே. 3

துன்பெ லாமற நீங்கிச் சுபத்தராய்
என்பெ லாம்நெக் கிராப்பகல் ஏத்திநின்(று)
இன்ப ராய்நினைந் தென்றும் இடையறு
அன்ப ராமவர்க் கன்பர்ஆ ரூரரே. 4

முருட்டு மெத்தை*யில் முன்கிடத் தாமுனம்
அரட்டர் ஐவரை ஆசறுத் திட்டுநீர்
முரட்ட டித்தவத் தக்கன்றன் வேள்வியை
அரட்ட டக்கிதன் ஆரூர் அடைமினே. 5

எம்மை யாரிலை யானுமு ளேனலேன்
எம்மை யாரும் இதுசெய வல்லரே
அம்மை யாரெனக் கென்றென்றற் றேற்றினேற்(கு)
அம்மை யாரைத்தந் தார்ஆரூர் ஐயரே. 6

தண்ட ஆளி**யைத் தக்கன்றன் வேள்வியைச்
செண்ட தாடிய தேவர கண்டனைக்†
கண்டு கண்டிவள் காதலித் தன்பதாய்க்
கொண்டி யாயின வாறென்றன் கோதையே. 7

இவண மைப்பல பேசத் தொடங்கினள்
அவண மன்றெனில் ஆரூர் அரனெனும்
பவனி வீதி விடங்கனைக் கண்டிவள்
தவனி‡ யாயின வாறென்றன் தையலே. 8

நீரைச் செஞ்சடை வைத்த நிமலனார்
காரொத் தமிடற் றர்கனல் வாயரா
ஆரத் தர்உரை யும்மணி ஆரூரைத்
தூரத் தேதொழு வார்வினை தூளியே. 9

---

* முருட்டு மெத்தை — சுடுகாட்டு விறகு. முருடு — விறகு.
** தண்ட ஆளி—தண்டத்தினை உடையவன். † அகண்டன் – வியாபகமானவன். ‡ தவனி – காதலால் உடற் கொதிப்புடையவள்.

உள்ள மேயொன் றுறுதி யுரைப்பன்நான்
வெள்ளந் தாங்கு விரிசடை வேதியன்
அள்ளல் நீர்வயல் ஆரூர் அமர்ந்தஎம்
வள்ளல் சேவடி வாழ்த்தி வணங்கிடே. 10

விண்ட மாமலர் மேலுறை வானெடும்
கொண்டல் வண்ணனுங் கூடி அறிகிலா
அண்ட வாணன்றன் ஆரூர் அடிதொழப்S
பண்டை வல்வினை நில்லா பறையுமே. 11

மையு லாவிய கண்டத்தன் அண்டத்தன்
கையு லாவிய சூலத்தன் கண்ணுதல்
ஐயன் ஆரூர் அடிதொழு வார்க்கெலாம்
உய்ய லாம்அல்லல் ஒன்றிலை காண்மினே. 12

திருச்சிற்றம்பலம்

---

## திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கைம்மான மதகளிற்றி னுரிவை யான்காண் கறைக்கண்டன்
காண்கண்ணார் நெற்றி யான்காண், அம்மான்காண் ஆடரவொன்
றாட்டி னான்காண் அனலாடி காண்அயில்வாய்ச் சூலத்தான்
காண், எம்மான்காண் ஏழுலகு மாயி னான்காண் எரிசுடரோன்
காண்இலங்கு மழுவா ளன்காண், செம்மானத் தொளியன்ன
மேனி யான்காண் திருவாரூ ரான்காண்என் சிந்தை யானே. 1

ஊனேறு படுதலையில் உண்டி யான்காண் ஓங்காரன் காண்
ஊழி முதலா னான்காண், ஆனேறொன் றூர்ந்துழலும் ஐயா றன்
காண் அண்டன்காண் அண்டத்துக் கப்பா லான்காண், மா
னேறு காதலத்தெம் மணிகண் டன்காண் மாதவன்காண் மாத
வத்தின் விளைவா னான்காண், தேனேறும் மலர்க்கொன்றைக்
கண்ணி யான்காண் திருவாரூ ரான்காண்என் சிந்தை யானே. 2

---

S 'ஆரூர் அண்ட வாணன் அடிதொழ' எனமாற்றிப் பொருள் கொள்க.

ஏவணத்த சிலையால்முப் புரமெய் தான்காண் இறையவன்காண் மறையவன்காண் ஈசன் தான்காண், தூவணத்த சுடர்ச்சூலப் படையி னான்காண் சுடர்மூன்றுங் கண்மூன்றாக் கொண்டான் தான்காண், ஆவணத்தால் என்றன்னை ஆட்கொண் டான்காண் அனலாடிகாண் அடியார்க் கமிர்தா னான்காண், தீவணத்த திருவுருவிற் கரியுரு வன்காண் திருவாரூ ரான்காண்என் சிந்தை யானே. 3

கொங்குவார் மலர்க்கண்ணிக் குற்றா லன்காண் கொடுமழுவன்காண் கொல்லைவெள்ளேற் றான்காண், எங்கள்பால் துயர்கெடுக்கும் எம்பிரான்காண் ஏழ்கடலும் ஏழ்மலையு மாயி னான்காண், பொங்குமா கருஞ்கடல்நஞ் சுண்டான்* தான்காண் பொற்றூண்காண் செம்பவளத் திரள்போல் வான்காண், செங்கண்வா ளராமதியோ டுடன்வைத் தான்காண் திருவாரூ ரான்காண்என் சிந்தை யானே. 4

காரேறு நெடுங்குடுமிக் கயிலா யன்காண் கறைக்கண்டன்காண் கண்ணார் நெற்றி யான்காண், போரேறு நெடுங்கொடிமே லுயர்த்தி னான்காண் புண்ணியன்காண் எண்ணரும்பல் குணத்தினான்காண், நீரேறு சுடர்ச்சூலப் படையி னான்காண் நின்மலன்காண் நிகரேது மில்லா தான்காண், சீரேறு திருமாலோர் பாகத்தான்காண் திருவாரூ ரான்காண்என் சிந்தை யானே. 5

பிறையரவக் குறுங்கண்ணிச் சடையி னான்காண் பிறப்பிலிகாண் பெண்ணோடா ணாயி னான்காண், கறையுருவ மணிமிடற்று வெண்ணீற் றான்காண் கழல்தொழுவார் பிறப்பறுக்குங் காபாலிகாண், இறையுருவக் கனவளையாள் இடப்பா கன்காண் இருநிலன்காண் இருநிலத்துக் கியல்பா னான்காண், சிறையுருவக் களிவண்டார் செம்மை யான்காண் திருவாரூ ரான்காண்என் சிந்தை யானே. 6

தலையுருவச் சிரமாலை சூடி னான்காண் தமருலகந் தலைகலனாப் பலிகொள் வான்காண், அலையுருவச் சுடராழி யாக்கி னான்காண் அவ்வாழி நெடுமா லுக் கருளி னான்காண், கொலையுருவக் கூற்றுதைத்த கொள்கை யான்காண் கூரெரிநீர் மண்ணொடுகாற்

* பொங்கு மாகடல் நஞ்சமுண்டான் என்றும் பாடம்.

ருயினன்காண், சிலைபுருவச் சரந்துரந்த திறத்தி னன்காண் திருவாரூ ரான்காண்என் சிந்தை யானே. 7

ஐயன்*காண் குமரன்காண் ஆதி யான்காண் அடல்மழு வாள் தானென்று பியன்மே லேந்து, கையன்காண் கடற்பூதப் படையி னன்காண் கண்ணெரியால் ஐங்கணையோன் உடல்காய்ந் தான்காண், வெய்யன்காண் தண்புனல்சூழ் செஞ்சடை யான் காண் வெண்ணீற்றன் காண்விசயற் கருள்செய் தான்காண், செய்யன்காண் கரியன்காண் வெளியோன் தான்காண் திருவாரூ ரான்காண்என் சிந்தை யானே. 8

மலைவளர்த்த மடமங்கை பாகத் தான்காண் மயானத்தான் காண்மதியஞ் சூடி னன்காண், இலைவளர்த்த மலர்க்கொன்றை மாலை யான்காண் இறையவன்காண் எறிதிரைநீர் நஞ்சுண் டான் காண், கொலைவளர்த்த மூவிலைய சூலத் தான்காண் கொடுங்குன் றன் காண்கொல்லை யேற்றி னன்காண், சிலைவளர்த்த சரந்துரந்த திறத்தி னன்காண் திருவாரூ ரான்காண்என் சிந்தை யானே. 9

பொற்றுது மலர்க்கொன்றை சூடி னன்காண் புரிநூலன் காண் பொடியார் மேனி யான்காண், மற்றாருந் தன்னொப்பா ரில்லா தான்காண் மறையோதி காண்எறிநீர் நஞ்சுண் டான் காண், எற்றாலுங் குறையொன்று மில்லா தான்காண் இறையவன் காண் மறையவன்காண் ஈசன் றன்காண், செற்றார்கள் புரமூன் றுஞ் செற்றான் தான்காண் திருவாரூ ரான்காண்என் சிந்தை யானே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

உயிரா வணமிருந் து**ற்று நோக்கி உள்ளக் கிழியி னுரு வெழுதி, உயிரா வணஞ்†செய்திட் டுன்கைத் தந்தால் உணரப் படுவாரோ டொட்டி‡ வாழ்தி,§ அயிரா வண||மேறு தானே றேறி

---

* ஐயன் – அரிஅரபுத்திரனுமாம். ** உயிரா வணம் இருந்து – இடைகலை பிங்கலைகளில் வரும் மூச்சை விடாதபடி இருந்து. † உயிர் ஆவணம் – ஆன்ம சமர்ப்பணம் செய்து. ‡ ஒட்டி – இரண்டறக்கலந்து. § இவ்வடிகள் யோகநெறியைப் பற்றிக் கூறுவன. || அயிராவணம் – இரண்டாயிரம் கொம்புடைய யானை.

அமரர்நா டாளாதே ஆரூ ராண்ட, அயிரா வணமே*யென் னம்மா னேநின் அருட்கண்ணால் நோக்காதார் அல்லா தாரே. 1

எழுது கொடியிடையார் ஏழை மென்றோள் இளையார்கள் நம்மை இகழா முன்னம், பழுது படநினையேல் பாவி நெஞ்சே பண்டுதான் என்னோடு பகைதா னுண்டோ, முழுதுலகில் வானவர்கள் முற்றுங்கூடி முடியாமல் உறவணங்கி முற்றம் பற்றி, அழுது திருவடிக்கே பூசை செய்ய இருக்கின்றான் ஊர் போலும் ஆரூர் தானே. 2

தேரூரார் மாவூரார் திங்க ளூரார் திகழ்புன் சடைமுடிமேல் திங்கள் சூடிக், காரூரா நின்ற கழனிச் சாயற் கண்ணார்ந்த மாடங் கலந்து தோன்றும், ஓரூரா வுலகெலா மொப்பக் கூடி உமையாள் மணவாளா என்று வாழ்த்தி, ஆரூரா ஆரூரா என்கின் றார்கள் அமரர்கள்தம் பெருமானே எங்குற் றாயே. 3

கோவணமோ தோலோ உடையாவது கொல்லேறோ வேழமோ ஊர்வதுதான், பூவணமோ புறம்பயமோ அன்றா யிற் றான் பொருந்தாதார் வாழ்க்கை திருந்தா மையோ, தீவணத்த செஞ்சடைமேல் திங்கள் சூடித் திசைநான்கும் வைத்துகந்த செந்தீ வண்ணர், ஆவணமோ ஒற்றியோ** அம்மா னார்தாம் அறியேன்மற் றாரமா றூரர் தானே. 4

ஏந்து மழுவாளர் இன்னம்பரார் எரிபவள வண்ணர் குட மூக் கிலார், வாய்ந்த வளைக்கையாள் பாக மாக வார்சடையார் வந்து வலஞ்சு ழியார், போந்தா ரடிகள் புறம்பயத்தே புக லூர்க்கே போயினார் போரே றேறி, ஆய்ந்தே யிருப்பார்போ யாரூர் புக்கார் அண்ணலார் செய்கின்ற கண்மா யமே. 5

கருவாகிக் குழம்பிருந்து கலித்து மூளை கருநரம்பும் வெள்ளெ லும்புஞ் சேர்ந்தொன் றாகி, உருவாகிப் புறப்பட்†டிங் கொருத்தி தன்னால் வளர்க்கப்பட் டுயிராருங் கடைபோ‡ காரால், மருவாகி நின்னடியே மறவே னம்மான் மறித்தொருகாற் பிறப்புண்டேல்

---

* அயிராவணமே – வன்மீகநாதரே. அயிர் – நுண் மணல்.
** ஆவணம் – உரிமைச் சீட்டு. ஒற்றி – முழுஉரிமை பெறாமல் அனு பவிக்கும் உரிமை மட்டும் பெற்றது. † இவ்வடிகள் உடற்கூற்று வளர்ச்சியினை முறைப்படி அறிவிப்பன. ‡ கடைபோதல் – முற்ற நன்மை அடைதல்.

மறவா வண்ணம், திருவாரூர் மணவாளா திருத்தெங் கூராய் செம்பொனே கம்பனே திகைத்திட் டேனே. 6

முன்னம் அவனுடைய நாமங் கேட்டாள் மூர்த்தி யவனிருக் கும் வண்ணங் கேட்டாள், பின்னை யவனுடைய ஆரூர் கேட்டாள் பெயர்த்து மவனுக்கே பிச்சி யானாள்,* அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள் அகன்றாள் அகலிடத்தார் ஆசா ரத்தைத், தன்னை மறந்தாள் தன்னாமங் கேட்டாள் தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே.** 7

ஆடுவாய் நீநட்டம் அளவிற் குன்றா அவியடுவார் அரு மறையோரறிந்தே னுன்னைப், பாடுவார் தும்புருவும் நார தாதி பரவுவார் அமரர்களும் அமரர் கோனும், தேடுவார் திருமாலும் நான்முகனுந் தீண்டுவார் மலைமகளுங் கங்கை யாளும், கூடுமே நாயடியேன் செய்குற் றேவல் குறையுண்டே திருவாரூர் குடி கொண் டீர்க்கே. 8

நீரூருஞ் செஞ்சடையாய் நெற்றிக் கண்ணாய் நிலாத்திங்கள் துண்டத்தாய் நின்னைத் தேடி, ஒரூரு மொழியாமே யொற்றித் தெங்கும் உலகமெலாந் திரிதந்து நின்னைக் காண்பான், தேரூரும் நெடுவீதி பற்றி நின்று திருமாலும் நான்முகனுந் தேர்ந்துங் காண(து), ஆரூரா ஆரூரா என்கின் றார்கள் அமரர்கள்தம் பெரு மானே ஆரூ ராயே. 9

நல்லூரே நன்றாக நட்ட மிட்டு நறையேற்றைப் பழையாறே பாய ஏறிப், பல்லூரும் பலிதிரிந்து சேற்றூர் மீதே பலர் காணத் தலையாலங் காட்டி னூடே, இல்லார்ந்த பெருவேளூர்த் தனியே பேணி இராப்பட்டீச் சரங்கடந்து மணற்கால் புக்கு, எல்லாருந் தளிச்சாத்தங் குடியிற் காண இறைப்பொழுதில் திருவாரூர் புக்கார் தாமே. 10

கருத்துத்திக் கதநாகங் கையி லேந்திக் கருவரைபோற் களி யானைக் கதறக் கையால், உரித்தெடுத்துச் சிவந்ததன்தோல் பொருந்த மூடி உமையவளை அச்சுறுத்தும் ஒளிகொள் மேனித், திருத்துருத்தி திருப்பழனந் திருநெய்த் தானந் திருவையா றிடங் கொண்ட செல்வர் இந்நாள், அரிப்பெருத்த வெள்ளேற்றை அடரவேறி யப்பனூர் இப்பருவ மாரூ ராரே. 11

திருச்சிற்றம்பலம்

---

* பிச்சி—பித்து. ** இஃது அகத்துறைப் பாட்டு.

## திருத்தாண்டகம்*

திருச்சிற்றம்பலம்

பாதித்தன் திருவுருவிற் பெண்கொண் டானைப் பண்டொரு கால் தசமுகனை அழுவித் தானை, வாதித்துத் தடமலரான் சிரங் கொண் டானை வன்கருப்புச் சிலைக்காம னுடல்அட் டானைச், சோதிச்சந் திரன்மேனி மறுச்செய் தானைச் சுடரங்கி தேவனை யோர் கைக்கொண் டானை, ஆதித்தன் பற்கொண்ட அம்மான் தன்னை ஆரூரிற் கண்டடியேன் அயர்த்த வாறே. 1

வெற்புறுத்த திருவடியாற் கூற்றட் டானை விளக்கினொளி மின்னினொளி முத்தின் சோதி, ஒப்புறுத்த திருவுருவத் தொருவன் தன்னை யோதாதே வேத முணர்ந்தான் தன்னை, அப்புறுத்த கடல் நஞ்ச முண்டான் தன்னை அமுதுண்டார் உலந்தாலும் உலவா தானை, அப்புறுத்த நீரகத்தே அழலானானை ஆரூரிற் கண் டடியேன் அயர்த்த வாறே. 2

ஒருகாலத் தொருதேவர்** கண்கொண் டானை ஊழிதோ றூழி யுயர்ந்தான் தன்னை, வருகாலஞ் செல்கால மாயி னானை வன்கருப்புச் சிலைக் காமனுடல்அட் டானைப், பொருவேழக் களிற்றுரிவைப் போர்வை யானைப் புள்ளரைய னுடல்தன்னைப் பொடிசெய் தானை, அருவேள்வி தகர்த்தெச்சன் தலைகொண் டானை ஆரூரிற் கண்டடியேன் அயர்த்த வாறே. 3

மெய்ப்பால்வெண் நீறணிந்த மேனி யானை வெண்பளிங்கிT னுட்பதித்த சோதி யானை, ஒப்பானை யொப்பிலா வொருவன் தன்னை உத்தமனை நித்திலத்தை உலக மெல்லாம், வைப்பானைக் களைவானை வருவிப் பானைP வல்வினையேன் மனத்தகத்தே மன்னி னானை, அப்பாலைக் கப்பாலைக் கப்பா லானை ஆரூரிற் கண்டடி யேன் அயர்த்த வாறே. 4

பிண்டத்திற் பிறந்ததொரு பொருளை மற்றைப் பிண்டத் தைப் படைத்ததனைப் பெரிய வேதத், துண்டத்தில் துணிபொரு

---

* இப்பதிகத்தில் 7. 8. 9. 10-ம் செய்யுட்கள் மறைந்து போயின

** ஒரு தேவர்-திருமால். T வெண்பளிங்கு-ஆன்மா. P வைப்பான் -நிலைபெற வைப்பவன்; களைவான் – அழிப்பவன்; வருவிப்பான் - மீண்டும் உண்டாக்குபவன்.

ளேச் சுடுதீ யாகிச் சுழல்காலாய் நீராகிப் பாரா யிற்றைக், கண்டத்தில் தீதில்நஞ் சமுது செய்து கண்மூன்று படைத்ததொரு கரும்பைப் பாலே, அண்டத்துக் கப்புறத்தார் தமக்கு வித்தை ஆரூரிற் கண்டடியேன் அயர்த்த வாறே. 5

நீதியாய் நிலனாகி நெருப்பாய் நீராய் நிறைகாலாய் இவை யிற்றின் நியம மாகிப், பாதியாய் ஒன்றாகி இரண்டாய் மூன்றாய்ப் பரமாணு வாய்ப்பழுத்த பண்க ளாகிச், சோதியாய் இருளாகிச் சுவைக ளாகிச் சுவைகலந்த அப்பாலாய் வீடாய் வீட்டின், ஆதியாய் அந்தமாய் நின்றான் தன்னை ஆரூரிற் கண்டடியேன் அயர்த்த வாறே. 6-7-8-9-10

திருச்சிற்றம்பலம்

---

## திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

பொய்ம்மாயப் பெருங்கடலிற் புலம்பா நின்ற புண்ணியங்காள் தீவினைகாள் திருவே நீங்கள், இம்மாயப் பெருங்கடலை அரித்துத் தின்பீர்க் கில்லையே கிடந்துதான் யானேல் வானோர், தம்மானைத் தலைமகனைத் தண்ண லாரூர்த் தடங்கடலைத் தொடர்ந்தோரை யடங்கச் செய்யும், எம்மான்ற னடித்தொடர்வா னுழிதர்கின்றேன் இடையிலேன் கெடுவீர்காள் இடறேன் மின்னே. 1

ஐம்பெருமா பூதங்காள் ஒருவீர் வேண்டிற் றொருவீர்வேண்டீர்ஈண்டிவ் வவனி யெல்லாம், உம்பரமே உம்வசமே யாக்க வல்லீர்க் கில்லையே னுகர்போகம்* யானேல் வானோர், உம்பருமா யூழியுமா யுலகே ழாகி யொள்ளாரூர் நள்ளமிர்தாம் வள்ளல் வானோர், தம்பெருமா னாய்நின்ற அரனைக் காண்பேன் தடைப்படுவே னாக்கருதித் தருக்கேன் மின்னே. 2

சில்லுருவிற் குறியிருத்தி நித்தல் பற்றிச் செழுங்கனல்நோக்குமிது ஆக்க மன்று, பல்லுருவில் தொழில்பூண்ட பஞ்சபூதப் பளகீரும் வசமன்றே பாரே லெல்லாம், சொல்லுருவிற் சுடர்மூன்றாய் உருவம் மூன்றாய்த் தூநயனம் மூன்றாகி ஆண்ட ஆரூர், நல்லுருவிற் சிவனடியே அடைவேன் நும்மால் நமைப்புண்ணேன் கமைத்துநீர் நடமின் களே. 3

---

* கில்லையேநுகர் போகம் என்றும் பாடம்.

உன்னுருவிற் சுவையொளியூ றோசை நாற்றத் துறுப்பினது* குறிப்பாகு மைவீர் நுங்கள், மன்னுருவத் தியற்கைகளால் வைப் பீர்க் கையோ வையகமே போதாதே யானேல் வானோர், பொன் னுருவைத் தென்னூரர் மன்னு குன்றைப் புவிக்கெழிலாஞ் சிவக் கொழுந்தைப் புகுந்தென் சிந்தை, தன்னுருவைத் தந்தவனை** எந்தை தன்னைத் தலைப்படுவேன் துலைப்படுப்பான்† தருக்கேன் மின்னே. 4

துப்பினைமுன் பற்றறா விறலே மிக்க சோர்வுபடு சூட்சியமே‡ சுகமே நீங்கள், ஒப்பினையை||ப் பாவித்திவ் வுலக மெல்லா முழறு மிது குறைமுடிப்பீர்க் கரிதே யென்றன், வைப்பினைப்பொன் மதி லாரூர் மணியை வைகல் மணாளனையெம் பெருமானை வானோர் தங்கள், அப்பனைச்செப் பிடவடைவேன் நும்மால் நானும் ஆட் டுணே ணேட்டந்††தீங் கலையேன் மின்னே. 5

பொங்குமத மானமே ஆர்வச் செற்றக் குரோதமே யுலோ பமே பொறையே நீங்கள், உங்கள்பெரு மாநிலத்தின் எல்லை யெல்லா முழறுமிது குறைமுடிப்பீர்க் கரிதே யானேல், அங்க மலத் தயனொடுமா லாகி மற்றும் அதற்கப்பா லொன்றாகி யறிய வொண்ணச், செங்கனகத் தனிக்குன்றைச் சிவனை யாரூர்ச் செல்வனைச்சேர் வேன்நும்மாற் செலுத்து ணேனே. 6

இடர்பாவ மெனமிக்க துக்க வேட்கை வெறுப்பேயென் றனைவிரும் உலகை யோடிக், குடைகின்றீர்க் குலகங்கள் குலுங்கி நுங்கள் குறிநின்ற தமையாதே யானேல் வானோர், அடையார்தம் புரமூன்று மெரிசெய் தானை அமரர்கள்தம் பெருமானை அரனை யாரூர், உடையானைக் கடுகச்சென் றடைவேன் நும்மா லாட்டுணே ணேட்டந்தீங் கலையேன் மின்னே. 7

விரைந்தாளும் நல்குரவே செல்வே பொல்லா வெகுட்சியே மகிழ்ச்சியே வெறுப்பே நீங்கள், நிரைந்தோடி மாநிலத்தை யரித்

---

* உறுப்பினது – பொறிகளினது. ** என் சிந்தை புகுந்து தன் உருவைத் தந்தவனை என்க. தன்உரு – சிவத்துவம். † துலைப் படுப்பான் – தூரமாக்குதற்கு. ‡ சூட்சியம் – பலக் குறைவு. || ஒப்ப னையை என்றும் பாடம். †† ஒட்டந்து – ஓட்டந்தந்து.

துத் தின்பீர்க் கில்லையே நுகர்*போகம் யானேல் வானோர், கரைந் தோட வருநஞ்சை அமுது செய்த கற்பகத்தைத் தற்பரத்தைத் திருவா ரூரில், பரஞ்சோதி தனைக்காண்பேன் படேன்நும் பண் பிற் பரிந்தோடி யோட்டந்து பகட்டன் மின்னே. 8

மூள்வாய தொழிற்பஞ்சேந் திரிய வஞ்ச முகரி** காண் முழுதுமிவ் வுலகை யோடி, நாள்வாயு நும்முடைய மம்ம ராணை நடாத்துகின்றீர்க் கமையாதே யானேல் வானோர், நீள்வான முகடதனைத் தாங்கி நின்ற நெடுந்தூணைப் பாதாளக் கருவை† யாரூர், ஆள்வானைக் கடுகச்சென் றடைவேன் நும்மா லாட்டு ணே னோட்டந்தீங் கலையேன் மின்னே. 9

சுருக்கமொடு பெருக்கநிலை நித்தல் பற்றித்‡ துப்பறை§யென் றனைவீரிவ் வுலகை யோடிச், செருக்கிமிகை செலுத்தியும செய் கை வைகல் செய்கின்றீர்க் கமையாதே யானேன் மிக்க, தருக்கி மிக வரையெடுத்த அரக்கன் ஆகந் தளரவடி யெடுத்தவன்றன் பாடல் கேட்டு, இரக்கமெழுந் தருளியஎம் பெருமான் பாதத் திடையிலேன் கெடுவீர்காள் இடறேன் மின்னே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

நீற்றினையும் நெற்றிமே லிட்டார் போலும் நீங்காமே வெள் ளெலும்பு பூண்டார் போலும், காற்றினையுங் கடிதாக நடந்தார் போலுங் கண்ணின்மேற் கண்ணொன் றுடையார் போலும், கூற்றினையுங் குரைகழலா லுதைத்தார் போலுங் கொல்புலித்தோ லாடைக் குழகர் போலும், ஆற்றினையுஞ் செஞ்சடைமேல் வைத் தார் போலும் அணியாரூர்த் திருமூலட் டான னாரே.* 1

பரியதோர் பாம்பரைமே லார்த்தார் போலும் பாசுபதம் பார்த்தற் களித்தார் போலும், கரியதோர் களிற்றுரிவை போர்த்

---

* கில்லையே னுகர் என்றும் பாடம். ** முகரி-ஆரவாரஞ் செய் வோன். † நீள்வானம்...தூண் - இவ்வடி வான நூல் நுட்பம். நெடுந் தூண்—அண்டங்களை ஒருவழிப்படுத்தி நிறுத்தும் சத்தி. பாதாளக் கரு—கீழுலகங்களைத் தாங்கும் சத்தி. ‡ நிலை நிற்றல் பற்றி என்றும் பாடம். § துப்பறை—அனுபவிக்கப்படும் பொருள். * திருமூலத் தானனாரே என்றும் பாடம்.

தார் போலுங் கபாலங் கட்டங்கக் கொடியார் போலும், பெரிய தோர் மலைவில்லா எய்தார் போலும் பேர்நந்தி யென்னும் பெய ரார் போலும், அரியதோர் அரணங்க ளட்டார்போலும் அணியா ரூர்த் திருமூலட் டான ரே. 2

துணியுடையர் தோலுடைய ரென்பார் போலுந் தூயதிரு மேனிச் செல்வர் போலும், பிணியுடைய அடியாரைத் தீர்ப்பார் போலும் பேசுவார்க் கெல்லாம் பெரியார் போலும், மணியுடைய மாநாகம் ஆர்ப்பார் போலும் வாசுகிமா நாணாக வைத்தார் போலும், அணியுடைய நெடுவீதி நடப்பார் போலும் அணியா ரூர்த் திருமூலட் டான ரே. 3

ஓட்டகத்தே ஊணாக வுகந்தார் போலும் ஒருருவாய்த் தோன்றி உயர்ந்தார் போலும், நாட்டகத்தே நடைபலவும் நவின் ரூர் போலும் ஞானப் பெருங்கடற்கோர் நாதர் போலும், காட்ட கத்தே யாட லுடையார் போலுங் காமரங்கள்* பாடித் திரிவார் போலும், ஆட்டP கத்தில் ஆனைந் துகந்தார் போலும் அணியா ரூர்த் திருமூலட் டான ரே. 4

ஏனத் திளமருப்புப் பூண்டார் போலும் இமையவர்க ளேத்த இருந்தார் போலும், கானக்கல் லாற்கீழ் நிழலார் போலுங் கடல் நஞ்ச முண்டிருண்ட கண்டர் போலும் வானத் திளமதிசேர் சடையார் போலும் வான்கயிலை வெற்பின் மகிழ்ந் தார் போலும், ஆனத்து முன்னெ ழுத்தாய்S நின்றார் போலும் அணியாரூர்த் திருமூலட் டான ரே, 5

காமனையும் கரியாகக் காய்ந்தார் போலுங் கடல்நஞ்ச முண் டிருண்ட கண்டர் போலும், சோமனையுஞ் செஞ்சடைமேல்§ வைத்தார் போலுஞ் சொல்லாகிச் சொற்பொருளாய் நின்றார் போலும், நாமனையும் வேதத்தார் தாமே போலும் நங்கையோர் பால்மகிழ்ந்த நம்பர் போலும், ஆமனையுந் திருமுடியார் தாமே போலும் அணியாரூர்த் திருமூலட் டான ரே. 6

---

* காமரங்கள்–பண்களின் பொதுமை; கீதங்கள். P ஆட்டு – திருமஞ்சனம். S ஆனத்து முன் எழுத்தாய்–ஆ என்னும் பசுக்களைக் குறிக்கும் எழுத்துக்கு முன் எழுத்தாகிய அ க ர எழுத்தாய். § சடைமுடி மேல் என்றும் பாடம்.

முடியார் மதியரவம் வைத்தார் போலும் மூவுலகுந் தாமே யாய் நின்றார் போலும், செடியார் தலைப்பலிகொண் டுழல்வார் போலுஞ் செல்கதிதான் கண்ட சிவனார்போலும், கடியார்நஞ் சுண்டிருண்ட கண்டர் போலுங் கங்காள வேடக் கருத்தர் போலும், அடியா ரடிமை யுகப்பார் போலும் அணியாரூர்த் திருமூலட் டான னாரே. 7

இந்திரத்தைP இனிதாக ஈந்தார் போலும் இமையவர்கள் வந் திறைஞ்சும் இறைவர் போலும், சுந்தரத்த பொடிதன்னைத் துதைந் தார்போலுந் தூத்தூய திருமேனித் தோன்றல் போலும், மந்தி ரத்தை மனத்துள்ளே வைத்தார் போலும் மாநாகம்S நாணாக வளைத்தார் போலும், அந்தரத்தே யணியாநஞ் சுண்டார் போலும் அணியாரூர்த் திருமூலட்டான னாரே. 8

பிண்டத்தைக் காக்கும் பிரானார் போலும் பிறவி யிறவியிலா தார் போலும், முண்டத்துT முக்கண் ணுடையார் போலும் முழு நீறு பூசும் முதல்வர் போலும், கண்டத் திறையே கறுத்தார் போலுங் காளத்தி காரோணம் மேயார் போலும், அண்டத்துக் கப்புறமாய் நின்றார் போலும் அணியாரூர்த் திருமூலட் டான னாரே. 9

ஒருகாலத் தொன்றாகி நின்றார் போலும் ஊழி பலகண் டிருந் தார் போலும், பெருகாமே வெள்ளந் தவிர்த்தார் போலும் பிறப் பிடும்பை சாக்காடொன் றில்லார் போலும், உருகாதார் உள் ளத்து நில்லார் போலும் உகப்பார்தம் மனத்தென்றும் நீங்கார் போலும், அருகாக வந்தென்னை யஞ்சே லென்பார் அணியாரூர்த் திருமூலட் டான னாரே. 10

நன்றாக நடைபலவும் நவின்றார் போலும் ஞானப் பெருங் கடற்கோர் நாதர் போலும், கொன்றாகிக் கொன்றதொன் றுண் டார் போலுங் கோளரக்கர் கோன்தலைகள் குறைத்தார் போலும் சென்றார் திரிபுரங்க ளெய்தார் போலுந் திசையனைத்து மாய னைத்து மானார் போலும், அன்றாகில் ஆயிரம் பேரார் போலும் அணியாரூர்த் திருமூலட் டானனாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

P இந்திரம் – இந்திரலோகம். S மாணகம் என்றும் பாடம். T முண்டம் – நெற்றி.

## தி ரு த் தா ண் ட க ம்

திருச்சிற்றம்பலம்

திருமணியைத் தித்திக்குந் தேனைப் பாலைத் தீங்கரும்பின் இன்சுவையைத் தெளிந்த தேறல், குருமணியைக் குழல்மொந்தை தாளம் வீணை கொக்கரையின் சச்சரியின் பாணி யானைப், பரு மணியைப் பவளத்தைப் பசும்பொன் முத்தைப் பருப்பதத்தில் அருங்கலத்தைப் பாவந் தீர்க்கும், அருமணியை ஆரூரி லம்மான் தன்னை அறியா தடிநாயேன் அயர்த்தவாறே* 1

பொன்னேபோல் திருமேனி யுடையான் தன்னைப் பொங்கு வெண்ணூலானைப் புனிதன் தன்னை, மின்னானை மின்னிடையாள் பாகன் தன்னை வேழத்தி னுரிவிரும்பிப் போர்த்தான் தன்னைத், தன்னானைத் தன்னொப்பா ரில்லா தானைத் தத்துவனை உத்தமனைத் தழல்போல் மேனி, அன்னானை ஆரூரி லம்மான் தன்னை அறியா தடிநாயேன் அயர்த்த வாறே. 2

ஏற்றானை யேழுலகு மானான் தன்னை யேழ்கடலு மேழ்மலையு மானான் தன்னைக், கூற்றானைக் கூற்ற முதைத்தான் தன்னைக் கொடுமழுவாள் கொண்டதோர் கையான் தன்னைக், காற்றானைத் தீயானை நீரு மாகிக் கடிகமழும் புன்சடைமேற் கங்கை வெள்ள, ஆற்றானை ஆரூரி லம்மான் தன்னை அறியா தடிநாயேன் அயர்த்த வாறே. 3

மூந்திய வல்வினைகள் தீர்ப்பான் தன்னை மூவாத மேனிமுக் கண்ணினானைச், சந்திரனும் வெங்கதிரு மாயினானைச் சங்கரனைச் சங்கக் குழையான் தன்னை, மந்திரமும் மறைப்பொருளு மானான் தன்னை, மறுமையும் இம்மையு மானான் தன்னை, அந்திரனை** ஆரூரி லம்மான் தன்னை அறியா தடிநாயேன் அயர்த்த வாறே. 4

பிறநெறி†யாய்ப் பீடாகிப் பிஞ்ஞ கனுமாய்ப் பித்தனாய்ப் பத்தர் மனத்தி னுள்ளே, உறநெறியாய் ஓமமாய் ஈமக் காட்டில் ஓரிபல விடநட்ட மாடி னானைத், துறநெறியாய்த் தூபமாய்த் தோற்ற மாகி நாற்றமாய் நன்மலர்மே லுறையா நின்ற,‡ அற

---

*அயர்த்த—மறந்த. ஆறே—ஆறுதான் என்னே! இரங்கல்-குறிப்பு
** அந்தரனை என்றும் பாடம். † பிற நெறி — வேற்றுச் சமயம்.
‡ லுறைவாய் நின்ற என்றும் பாடம்.

நெறியை ஆரூரி லம்மான் தன்னை அறியா தடிநாயேன் அயர்த்த வாறே. 5

பழகியவல் வினைகள் பாற்று வானைப் பசுபதியைப் பாவக னைப் பாவந் தீர்க்கும், குழகனைக் கோளரவொன் றாட்டு வானைக் கொடுகொட்டி கொண்டதோர் கையான் தன்னை, விழவனை வீரட் டம்மேவி னானை விண்ணவர்க ளேத்தி விரும்புவானை, அழகனை ஆரூரி லம்மான் தன்னை அறியா தடிநாயேன் அயர்த்த வாறே. 6

தூளா மணிசேர் முடியான் தன்னைச் சுண்ணவெண் ணீற ணிந்த சோதி யானைக், கோள்வா யரவ மசைத்தான் தன்னைக் கொல்புலித்தோ லாடைக் குழகன் தன்னை, நாள்வாயும் * பத்தர் மனத்துளானை நம்பனை நக்கனை முக்க ணானை, ஆள்வானை ஆரூரி லம்மான் தன்னை அறியா தடிநாயேன் அயர்த்தவாறே. 6

முத்தினை மணிதன்னை மாணிக் கத்தை மூவாத கற்பகத்தின் கொழுந்து தன்னைக், கொத்தினை வயிரத்தைக் கொல்லே றார்ந்து கோளரவொன் றாட்டுங் குழகன் தன்னைப், பத்தனைப் பத்தர் மனத்து ளானைப் பரிதிபோல் திருமேனி யுடையான் தன்னை, அத்தனை ஆரூரில் அம்மான் தன்னை அறியா தடிநாயேன் அயர்த்த வாறே. 8

பையா டரவங்கை யேந்தி னானைப் பரிதிபோல் திருமேனிப் பால்நீற் றானை, நெய்யாடு திருமேனி நிமலன் தன்னை நெற்றிமேல் மற்றொருகண் நிறைவித் தானைச், செய்யானைச் செழும்பவளத் திரளொப் பானைச் செஞ்சடைமேல் வெண்திங்கள் சேர்த்தி னானை, ஐயாறு மேயானை ஆரூ ரானை அறியா தடிநாயேன் அயர்த்த வாறே. 9

சீரார் முடிபத் துடையான் தன்னைத் தேசழியத் திருவிரலாற் சிதைய நூக்கிப், பேரார் பெருமை கொடுத்தான் தன்னைப்பெண் ணிரண்டும்** ஆணுமாய் நின்றான் தன்னைப், போரார் புரங்கள் புரள நூறும் புண்ணியனை வெண்ணீ றணிந்தான் தன்னை, ஆரானை ஆரூரி லம்மான் தன்னை அறியா தடிநாயேன் அயர்த்த வாறே. 10

திருச்சிற்றம்பலம்

---

* நாள் வாயும் – இறைவனைப்பற்றிப் பேசும் நன்னாட்களாக வாய்க்கச் செய்யும். ** பெண்ணிரண்டு – உமையும் கங்கையும்.

## திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

எம்பந்த வல்வினைநோய் தீர்த்திட் டான்காண் ஏழ்கடலும் ஏழுலகும் ஆயி னான்காண், வம்புந்து கொன்றையந்தார் மாலை யான்காண் வளர்மதிசேர் கண்ணியன்காண் வானோர் வேண்ட, அம்பொன்றால் மூஎயிலு மெரிசெய் தான்காண், அனலாடி யான் அஞ்சு* மாடி னான்காண், செம்பொன்செய் மணிமாடத் திருவா ரூரில் திருமூலட் டானத்தெஞ் செல்வன் தானே, 1

அக்குலாம் அரையினன்காண் அடியார்க் கென்றும் ஆரமு தாய் அண்ணிக்கும் ஐயாற் றான்காண், கொக்குலாம் பீலியொடு கொன்றைமாலை குளிர்மதியுங் கூரரவும் நீருஞ் சென்னித், தொக் குலாஞ் சடையினன்காண் தொண்டர் செல்லுந் தூநெறிகாண் வானவர்கள் துதிசெய் தேத்தும், திக்கெலாம் நிறைந்த புகழ்த் திருவா ரூரில் திருமூலட் டானத்தெஞ் செல்வன் தானே. 2

நீரேறு சடைமுடியெம் நிமலன் தான்காண் நெற்றிமேல் ஒற்றைக்கண் நிறைவித் தான்காண், வாரேறு வனமுலையாள் பாகத் தான்காண் வளர்மதிசேர் சடையான்காண் மாதேவன் காண், காரேறு முகிலனைய கண்டத்தான்காண் கல்லாலின் கீழறங்கள் சொல்லினான்காண், சீரேறு மணிமாடத் திருவாரூரில் திருமூலட் டானத்தெஞ் செல்வன் தானே. 3

கானேறு களிற்றுரிவைப் போர்வை யான்காண் கற்பகங் காண் காலனையன் றுதைசெய் தான்காண், ஊனேறு முடைதலை யிற்** பலிகொள் வான்காண் உத்தமன்காண் ஒற்றியூர் மேவி னான்காண், ஆனேறொன் றதுவேறும் அண்ணல் தான்காண் ஆதித்தன் பல்லிறுத்த ஆதிதான்காண், தேனேறு மலர்ச்சோலைத் திருவா ரூரில் திருமூலட் டானத்தெஞ் செல்வன் தானே. 4

பிறப்போ டிறப்பென்று மில்லா தான்காண் பெண்ணுருவோ டாணுருவ மாயி னான்காண், மறப்படுமென் சிந்தைமருள் நீக்கி னான்காண் வானவரு மறியாத நெறி§தந் தான்காண், நறப்படுபூ

---

* அனலாடிகாண் அஞ்சு என்றும் பாடம். ** படுதலையிற் என்றும் பாடம். § வானவரும் அறியாத நெறி—முத்திநெறி.

மலர்தூபந்தீப நல்ல நறுஞ்சாந்தங் கொண்டேத்தி நாளும் வானோர், சிறப்போடு* பூசிக்குந் திருவாரூரில் திருமூலட்டானத் தெஞ் செல்வன் தானே. 5

சங்கரன்காண் சக்கரம்மாற் கருள்செய் தான்காண் தருணேந்து** சேகரன்காண் தலைவன் தான்காண், அங்கமலத் தயன் சிரங்கள் ஐந்தி லொன்றை அறுத்தவன்காண் அணிபொழில்சூழ் ஐயாற்றான் காண், எங்கள்பெரு மான்காண் என்னிடர்கள் போக அருள்செய்யும் இறைவன்காண் இமையோ ரேத்துஞ், செங்கமல வயல்புடைசூழ் திருவாரூரில் திருமூலட்டானத்தெஞ் செல்வன் தானே, 6

நன்றருளித் தீதகற்றும் நம்பி ரான்காண் நான்மறையோ டாறங்க மாயி னான்காண், மின்திகழுஞ் சோதியன்காண் ஆதி தான்காண் வெள்ளேறு நின்றுலவு கொடியி னான்காண், துன்று பொழிற் கச்சி†யே கம்பன் தான்காண் சோற்றுத் துறையான் காண் சோலை சூழ்ந்த, தென்றலார் மணங்கமழுந் திருவாரூரில் திருமூலட் டானத்தெஞ் செல்வன் தானே. 7

பொன்னலத்த நறுங்கொன்றைச் சடையி னான்காண் புகலூ ரும் பூவணமும் பொருந்தி னான்காண், மின்னலத்த நுண்ணிடை யாள் பாகத் தான்காண் வேதியன்காண் வெண்புரிநூல் மார்பி னான்காண், கொன்னலத்த மூவிலைவேல் ஏந்தி னான்காண் கோல மா நீறணிந்த மேனி யான்காண், செந்நலத்த‡ வயல்புடைசூழ் திருவா ரூரில் திருமூலட் டானத்தெஞ் செல்வன் தானே. 8

விண்டவர்தம் புரமூன்று மெரிசெய் தான்காண் வேலைவிட முண்டிருண்ட கண்டத் தான்காண், மண்டலத்தி லொளிவளர விளங்கி னான்காண் வாய்மூரும் மறைக்காடும் மருவி னான்காண், புண்டரிகக் கண்ணனும் பூவின் மேலைப் புத்தேளுங் காண்பரிய புராணன் தான்காண், தெண்டிரைநீர் வயல்புடைசூழ் திருவா ரூரில் திருமூலட் டானத்தெஞ் செல்வன் தானே. 9

செருவளருஞ் செங்கண்மா லேற்றி னான்காண் தென்னனைக் காவன்காண் தீயில் வீழ, மருவலர்தம் புரமூன்று மெரிசெய்

---

* சிறப்பு–திருவிழா. ** தருணேந்து–பாலசந்திரன். தருண+இந்து=தருணேந்து. † புகழ்க்கச்சி என்றும் பாடம். ‡ சென்னலத்த என்றும் பாடம். செல்+நலத்த. செல்–மேகம். இங்கு நீர்.

தான்காண் வஞ்சகர்பால் அணுகாத மைந்தன் தான்காண், அருவ ரையை யெடுத்தவன்தன் சிரங்கள் பத்தும் ஐந்நான்கு தோளு நெரிந் தலற அன்று, திருவிரலால் அடர்த்தவன்காண் திருவா ரூரில் திருமூலட் டானத்தெஞ் செல்வன் தானே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

இடர்கெடுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா ஈண்டொளிசேர் கங்கைச் சடையா யென்றும், சுடரொளியா யுள்விளங்கு சோதீ யென்றுந் தூநீறு சேர்ந்திலங்கு தோளா வென்றும், கடல்விடம தூண்டிருண்ட கண்டா வென்றுங் கலைமான் மறியேந்து கையா வென்றும், அடல்விடையாய் ஆரமுதே ஆதீ யென்றும் ஆரூரா என்றென்றே அலறா நில்லே. 1

செடியேறு தீவினைகள் தீரும் வண்ணஞ் சிந்தித்தே* நெஞ் சமே திண்ணமாகப், பொடியேறு திருமேனி யுடையா யென்றும் புரந்தரன்றன் தோள்துணித்த புனிதா வென்றும், அடியேனை யாளாகக் கொண்டா யென்றும் அம்மானே ஆரூரெம் மரசே யென்றும், கடிநாறு பொழிற்கச்சிக் கம்பா வென்றுங் கற்பகமே யென்றென்றே கதறா நில்லே.** 2

நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா நித்தலுமெம் பிரானுடைய கோயில் புக்குப், புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கு மிட்டுப் பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித், தலை யாரக் கும்பிட்டுக்† கூத்து மாடிச் சங்கரா சயபோற்றி போற்றி யென்றும், அலைபுனல்சேர் செஞ்சடையெம் ஆதீ யென்றும் ஆரூரா என்றென்றே அலறா நில்லே‡. 3

புண்ணியமும் நன்னெறியும் ஆவதெல்லாம் நெஞ்சமே இதுகண் டாய் பொருந்தக் கேள்நீ, நுண்ணியவெண் ணூல்கிடந்த மார்பா என்றும் நுந்தாத§ வொண்சுடரே யென்று நாளும், விண்ணியங்கு

---

* சிந்தித்தேன் என்றும் பாடம். ** கழறா நில்லே என்றும் பாடம் † தலையினாற் கும்பிட்டுக் என்றும் பாடம். ‡ இச்செய்யுள் சிவநெறியின் முதலாம்படியாகிய சரியையினை விளக்குவது. § நூந் தாத—கெடுதலில்லாத.

தேவர்களும் வேதம் நான்கும் விரைமலர்மேல் நான்முகனும் மாலுங் கூடி, எண்ணரிய திருநாம முடையா யென்றும் எழிலாரூ ராவென்றே ஏத்தா நில்லே. 4

இழைத்தநாள்¶ எல்லை கடப்ப தென்றால் இரவினொடு நண் பகலு மேத்தி வாழ்த்திப், பிழைத்ததெலாம் பொறுத்தருள்செய் பெரி யோய் என்றும் பிஞ்ஞகனே மைஞ்ஞவிலுங் கண்டா என்றும், அழைத்தலறி அடியேனுன் னரணங் கண்டாய் அணியாரூர் இடங் கொண்ட அழகா என்றும், குழற்சடையெங் கோனென்றுங் கூறுநெஞ்சே குற்றமில்லை யென்மேல்நான் கூறி னேனே. 5

நீப்பரிய பல்பிறவி நீக்கும் வண்ணம் நினைந்திருந்தேன் காண்நெஞ்சே நித்த மாகச், சேPப்பிரியா வெல்கொடியி னானே யென்றுஞ் சிவலோக நெறிதந்த சிவனே யென்றும், பூப்பிரியா நான்முகனும் புள்ளின் மேலைப் புண்டரிகக் கண்ணனும் போற்றி யென்னத், தீப்பிழம்பாய் நின்றவனே செல்வ மல்குந் திருவாரூ ராவென்றே சிந்தி நெஞ்சே. 6

பற்றிநின்ற பாவங்கள் பாற்றஸ வேண்டில் பரகதிக்குச் செல்வ தொரு பரிசு வேண்டில், சுற்றிநின்ற சூழ்வினைகள் வீழ்க்க வேண்டில் சொல்லுகேன் கேள்நெஞ்சே துஞ்சா வண்ணம், உற்றவரும் உறு துணையும் நீயே யென்றும் உன்னையல்லால் ஒருதெய்வம் உள்கே னென்றும், புற்றரவக் கச்சார்த்த புனிதா வென்றும் பொழிலாரூ ராவென்றே போற்றா நில்லே. 7

மதிதருவன் நெஞ்சமே உஞ்சு போக வழியாவ திதுகண் டாய் வானோர்க் கெல்லாம், அதிபதியே ஆரமுதே ஆதீ யென்றும் அம்மானே ஆரூரெம் ஐயா வென்றும், துதிசெய்து துன்றுமலர் கொண்டு தூவிச் சூழும்வலஞ் செய்து தொண்டு பாடிக், கதிர் மதிசேர் சென்னியனே கால காலா கற்பகமே* யென்றென்றே கதறா நில்லே 8

பாசத்தைப் பற்றறுக்க லாகு நெஞ்சே பரஞ்சோதி பண் டரங்கா பாவ நாசா, தேசத் தொளிவிளக்கே தேவ தேவே திருவா ரூர்த் திருமூலட் டானா வென்றும், நேசத்தை நீபெருக்கி நேர்நின்

¶ இழைத்தநாள்–குறிப்பிட்ட ஆயுள். P சே–இடபம். S பாற் றல்–அழித்தல். * கண்ணுதலே என்றும் பாடம்.

றுள்கி நித்தலுஞ் சென்றடிமேல் வீழ்ந்து நின்று, ஏசற்று நின்றி மையோ ரேறே யென்றும் எம்பெருமா னென்றென்றே ஏத்தா நில்லே. 9

புலன்கள் ஐந்தால் ஆட்டுண்டு போதுபோக்கிப் புறம் புறமே திரியாதே போது நெஞ்சே, சலங்கொள்சடை முடியு டைய தலைவா என்றுந் தக்கன்செய் பெருவேள்வி தகர்த்தா யென்றும், இலங்கையர் கோன் சிரநெரித்த இறைவா வென்றும் எழிலாரூ ரிடங் கொண்ட எந்தாய் என்றும், நலங்கொள்அடி என்தலைமேல் வைத்தாய்* என்றும் நாடோறும் நவின்றேத்தாய் நன்மை யாமே. 10

திருச்சிற்றம்பலம்

**போற்றித் திருத்தாண்டகம்**

திருச்சிற்றம்பலம்

கற்றவர்க ளுண்ணுங் கனியே போற்றி கழலடைந்தார் செல் லுங்கதியே போற்றி, அற்றவர்கட் காரமுத மானாய் போற்றி அல்லலறுத் தடியேனை ஆண்டாய் போற்றி, மற்றொருவ ரொப் பில்லா மைந்தா போற்றி வானவர்கள் போற்றும் மருந்தே போற்றி, செற்றவர்தம் புரமெரித்த சிவனே போற்றி திருமூலட் டானனே போற்றி போற்றி. 1

வங்கமலி கடல்நஞ்ச முண்டாய் போற்றி மதயானை யீருரி வை போர்த்தாய் போற்றி, கொங்கலரும் நறுங்கொன்றைத் தாராய் போற்றி கொல்புலித்தோ லாடைக் குழகா போற்றி, அங்கணனே அமரர்கள்தம் இறைவா போற்றி ஆலமர நீழலறஞ் சொன்னாய் போற்றி, செங்கனகத் தனிக்குன்றே சிவனே போற்றி திருமூலட் டானனே போற்றி போற்றி. 2

மலையான் மடந்தை மணாளா போற்றி மழவிடையாய் நின் பாதம் போற்றி போற்றி, நிலையாக என்னெஞ்சில் நின்றாய் போற்றி நெற்றிமே லொற்றைக்கண் ணுடையாய் போற்றி, இலையார்ந்த மூவிலைவே லேந்தீ போற்றி ஏழ்கடலு மேழ்பொழிலு

* அடி என்தலைமேல் வைத்தாய்—இது சுவாமிகளுக்குத் திருநல் லூரில் இறைவன் திருவடி சூட்டிய நிகழ்ச்சியைக் குறிக்கும் அகச் சான்று.

மானாய் போற்றி, சிலையாலன் றெயிலெரித்த சிவனே போற்றி திருமூலட் டானனே போற்றி போற்றி. 3

பொன்னியலும் மேனியனே போற்றி போற்றி பூதப் படையுடையாய் போற்றி போற்றி, மன்னியசீர் மறைநான்கு மானாய் போற்றி மறியேந்து* கையானே போற்றி போற்றி, உன்னுமவர்க் குண்மையனே போற்றி போற்றி உலகுக் கொருவனே போற்றி போற்றி, சென்னிமிசை வெண்பிறையாய் போற்றி போற்றி திருமூலட் டானனே போற்றி போற்றி. 4

நஞ்சுடைய கண்டனே போற்றி போற்றி நற்றவனே நின் பாதம் போற்றி போற்றி, வெஞ்சுடரோன் பல்லிறுத்த வேந்தே போற்றி வெண்மதியங் கண்ணி விகிர்தா போற்றி, துஞ்சிருளி லாட லுகந்தாய் போற்றி தூநீறு மெய்க்கணிந்த சோதீ போற்றி, செஞ்சடையாய் நின்பாதம் போற்றி போற்றி திருமூலட் டானனே போற்றி போற்றி. 5

சங்கரனே நின்பாதம் போற்றி போற்றி சதாசிவனே** நின் பாதம் போற்றி போற்றி, பொங்கரவா நின்பாதம் போற்றி போற்றி புண்ணியனே நின்பாதம் போற்றி போற்றி, அங்கமலத் தயனோடு மாலுங் காணா அனலுருவா நின்பாதம் போற்றி போற்றி, செங்கமலத் திருப்பாதம் போற்றி போற்றி திருமூலட் டானனே போற்றி போற்றி. 6

வம்புலவு கொன்றைச் சடையாய் போற்றி வான்பிறையும் வாளரவும் வைத்தாய் போற்றி, கொம்பனைய நுண்ணிடையாள் கூறா போற்றி குரைகழலாற் கூற்றுதைத்த கோவே போற்றி, நம்புமவர்க் கரும்பொருளே போற்றி போற்றி நால்வேதம் ஆறங்க மானாய் போற்றி, செம்பொனே மரகதமே மணியே போற்றி திருமூலட் டானனே போற்றி போற்றி. 7

உள்ளமா யுள்ளத்தே நின்றாய் போற்றி உகப்பார் மனத் தென்றும் நீங்காய் போற்றி, வள்ளலே போற்றி மணாளா போற்றி வானவர்கோன் தோள்துணித்த மைந்தா போற்றி, வெள்ளையே

---

* மறியேறு என்றும் பாடம். ** சதாசிவன் – இறைவனது அருவுருவமாகிய திருமேனி. சிவலிங்கமுமாம்.

றேறும் விகிர்தா போற்றி மேலோர்க்கு மேலோர்க்கும் மேலாய் போற்றி, தெள்ளுநீர்க் கங்கைச் சடையாய் போற்றி திருமூலட் டானனே போற்றி போற்றி. 8

பூவார்ந்த சென்னிப் புனிதா போற்றி புத்தேளிர் போற்றும் பொருளே போற்றி, தேவார்ந்த தேவர்க்குந் தேவே போற்றி திருமாலுக் காழி யளித்தாய் போற்றி, சாவாமே காத்தென்னை யாண்டாய் போற்றி சங்கொத்த நீற்றெஞ் சதுரா போற்றி, சேவார்ந்த வெல்கொடியாய் போற்றி போற்றி திருமூலட் டானனே போற்றி போற்றி. 9

பிரமன்தன் சிரமரிந்த பெரியோய் போற்றி பெண்ணுருவோ டாணுருவாய் நின்றாய் போற்றி, கரநான்கும் முக்கண்ணும் உடையாய் போற்றி காதலிப்பார்க் காற்ற எளியாய் போற்றி, அருமந்த தேவர்க் கரசே போற்றி அன்றரக்கன் ஐந்நான்கு தோளுந் தாளுஞ், சிரம்நெரித்த சேவடியாய் போற்றி போற்றி திருமூலட் டானனே போற்றி போற்றி. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

ஒருவனாய் உலகேத்த நின்ற நாளோ ஓருருவே மூவுருவ மான நாளோ, கருவனாய்க்* காலனைமுன் காய்ந்த நாளோ காமனையுங் கண்ணழலால் விழித்த நாளோ, மருவனாய் மண்ணும் விண்ணுந் தெரித்த நாளோ மான்மறிக்கை யேந்தியோர் மாதோர் பாகந், திருவினாள் சேர்வதற்கு முன்னோ பின்னோ** திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே. 1

மலையார்பொற் பாவையொடு மகிழ்ந்த நாளோ வானவரை வலியமுத மூட்டி யந்நாள், நிலைபேறு பெறுவித்து நின்ற நாளோ நினைப்பரிய தழற்பிழம்பாய் நிமிர்ந்த நாளோ, அலைசாமே அலைகடல்நஞ் சுண்ட நாளோ அமரர்கணம் புடைசூழ இருந்த நாளோ, சிலையால்முப் புரமெரித்த முன்னோ பின்னோ திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே. 2

---

* கருவன் – சங்காரமூர்த்தி. ** முன்னோ பின்னோ – இது, திருவாரூரின் பழமையைக் குறிப்பது.

பாடகஞ்சேர் மெல்லடிநற் பாவை யாளும் நீயும் போய்ப் பார்த்தனது† பலத்தைக் காண்பான், வேடனாய் வில்வாங்கி யெய்த நாளோ விண்ணவர்க்குங் கண்ணவனாய் நின்ற நாளோ, மாடமொடு மாளிகைகள் மல்கு தில்லை மணிதிகழும் அம்பலத்தே மன்னிக் கூத்தை, ஆடுவான் புகுவதற்கு முன்னோ பின்னோ அணி யாரூர் கோயிலாக் கொண்ட நாளே. 3

ஓங்கி உயர்ந்தெழுந்து நின்ற நாளோ ஓருகம்போல் ஏழுக மாய் நின்ற நாளோ, தாங்கியசீர்த் தலையான வானோர் செய்த தக்கன்தன் பெருவேள்வி தகர்த்த நாளோ, நீங்கியநீர்த் தாமரை யான் நெடுமா லோடு நில்லாயெம் பெருமானே யென்றங் கேத்தி, வாங்கிமதி வைப்பதற்கு முன்னோ பின்னோ வளராரூர் கோயிலாக் கொண்ட நாளே. 4

பாலனாய் வளர்ந்திலாப் பான்மை யானே பணிவார்கட் கங் கங்கே பற்றா னானே, நீலமா மணிகண்டத் தெண்டோ ளானே நெருநலையாய்‡ இன்றாகி நாளை யாகுஞ், சீலமே சிவலோக நெறி யே யாகுஞ் சீர்மையே கூர்மையே குணமே நல்ல, கோலம்நீ கொள்வதற்கு முன்னோ பின்னோ குளிராரூர் கோயிலாக் கொண்ட நாளே. 5

திறம்பலவும் வழிகாட்டிச் செய்கை காட்டிச் சிறியையாய்ப் பெரியையாய் நின்ற நாளோ, மறம்பலவு முடையாரை மயக்கந் தீர்த்து மாமுனிவர்க் கருள்செய்தங் கிருந்த நாளோ, பிறங்கிய சீர்ப் பிரமன்தன் தலைகை யேந்திப் பிச்சையேற் றுண்டுழன்று§ நின்ற நாளோ, அறம் பலவும் உரைப்பதற்கு முன்னோ பின்னோ அணியாரூர் கோயிலாக் கொண்ட நாளே. 6

நிலந்தரத்து நீண்டுருவ மான நாளோ நிற்பனவும் நடப்ப னவும் நீயே யாகிக், கலந்துரைக்கக் கற்பகமாய் நின்ற நாளோ காரணத்தால் நாரணனைக் கற்பித் தன்று, வலஞ்சுருக்கி வல்ல சுரர் மாண்டு வீழ வாசுகியை வாய்மடுத்து வானோ ருய்யச், சலந்தரனைக் கொல்வதற்கு முன்னோ பின்னோ தண்ணாரூர் கோயி லாக் கொண்ட நாளே. 7

---

† பார்த்தன்றன் என்றும் பாடம். ‡ நெருநலாய் என்றும் பாடம். § றுண்டுகந்து என்றும் பாடம்.

பாதத்தால் முயலகனைப் பாது காத்துப் பாரகத்தே பரஞ் சுடராய் நின்ற நாளோ, கீதத்தை மிகப்பாடும் அடியார்க் கென் றுங் கேடிலா வானுலகங் கொடுத்த நாளோ, பூதத்தான் பொரு நீலி புனிதன் மேவிப் பொய்யுரையா மறைநால்வர் விண்ணோர்க் கென்றும், வேதத்தை விரிப்பதற்கு முன்னோ பின்னோ விழவாரூர் கோயிலாக் கொண்ட நாளே. 8

புகையெட்டும் போக்கெட்டும் புலன்க ளெட்டும் பூதலங்க ளவை யெட்டும் பொழில்க ளெட்டும், கலையெட்டுங் காப்பெட் டுங் காட்சி யெட்டுங் கழற்சே வடியடைந்தார் களைகணெட்டும், நகையெட்டும் நாளெட்டும் நன்மை யெட்டும் நலஞ்சிறந்தார் மனத்தகத்து மலர்க ளெட்டும், திகையெட்டுந் தெரிப்பதற்கு முன்னோ பின்னோ திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே. 9

ஈசனு யுலகேழும் மலையு மாகி இராவணனை ஈடழித்திட் டிருந்த நாளோ, வாசமலர் மகிழ்தென்ற லான நாளோ மத யானை யுரிபோர்த்து மகிழ்ந்த நாளோ, தாதுமலர் சண்டிக்குக் கொடுத்த நாளோ, சகரர்களை மறித்திட்டாட் கொண்ட நாளோ, தேசமுமை யறிவதற்கு முன்னோ பின்னோ திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—வன்மீகநாதர் (புற்றிடங்கொண்ட நாதர்), வீதிவிடங்கர்; தேவி—அல்லியங்கோதை.

---

## 53. திருவாரூர் அரநெறி*

பண்—இந்தளம் [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

எத்தீ** புகினும்† எமக்கொரு தீதிலை
தெத்தே யெனமுரன் றெம்முள் உழிதர்வர்
முத்தீ யனையதோர் மூவிலை வேல்பிடித்(து)
அத்தீ நிறத்தார் அரநெறி யாரே. 1

---

* இது திருவாரூர் ஆலயத்தின் இரண்டாம் பிரகாரத்தில் மேற்கு முகமாய் உள்ளது. ** தீ—தீமை. † எத்திசை புகினும் என்றும் பாடம்.

வீரமும் பூண்பர் விசயனொ டாயதோர்
தாரமும் பூண்பர் தமக்கன்பு பட்டவர்
பாரமும் பூண்பர்நற் பைங்கண் மிளிர்அர(வு)
ஆரமும் பூண்பர் அரநெறி யாரே. 2

தஞ்ச வண்ணத்தர் சடையினர் தாமுமோர்
வஞ்ச வண்ணத்தர்வண் டார்குழ லாளொடும்
துஞ்ச வண்ணத்தர் துஞ்சாதகண் ணார்*தொழும்
அஞ்ச வண்ணத்தர் அரநெறி யாரே. 3

விழித்தனர் காமனை வீழ்தர விண்ணின்(று)
இழித்தனர் கங்கையை யேத்தினர் பாவம்
கழித்தனர் கல்சூழ் கடியரண் மூன்றும்
அழித்தனர் ஆரூர் அரநெறி யாரே. 4

தூற்றவர்** வெண்டலை யிற்சுருள் கோவணம்
தற்றவர் தம்வினை யானவெல் லாமற
அற்றவர் ஆரூர் அரநெறி கைதொழ
உற்றவர் தாமொளி பெற்றனர்† தாமே. 5

கூடர வத்தர் குராற்கிண் கிணியடி
நீடர வத்தர்முன் மாலை யிடையிருள்
பாடர வத்தர் பணமஞ்சு பைவிரித்(து)
ஆடர வத்தர் அரநெறி யாரே. 6

கூடவல் லார்குறிப் பில்லுமை யாளொடும்
பாடவல் லார்பயின் றந்தியுஞ் சந்தியும்
ஆடவல் லார்திரு வாரூர் அரநெறி
நாடவல் லார்வினை வீடவல் லாரே. 7

பாலை நகுபனி வெண்மதி பைங்கொன்றை
மாலையுங் கண்ணியு மாவன சேவடி
காலையு மாலையுங் கைதொழு வார்மனம்
ஆலயம் ஆரூர் அரநெறி யார்க்கே. 8

முடிவண்ணம் வானமின் வண்ணந்தம் மார்பின்
பொடிவண்ணந் தம்புக ழூர்தியின் வண்ணம்

* துஞ்சாத கண்ணார்–தேவர்கள். கண்ணர் என்றும் பாடம்.
** துற்றவர்–ஊன் உண்பவர். † பெற்றவர் என்றும் பாடம்.

படிவண்ணம் பாற்கடல் வண்ணஞ்செஞ் ஞாயி(று)
அடிவண்ணம் ஆரூர் அரநெறி யார்க்கே.* 9

பொன்னவில் புன்சடை யானடி யின்னிழல்
இன்னருள் சூடியெள் காதுமி ராப்பகல்
மன்னவர் கின்னரர் வானவர் தாந்தொழும்
அன்னவர் ஆரூர் அரனெறி யாரே. 10

பொருள்மன் னனைப்§பற்றிப் புட்பகங் கொண்ட
மருள்மன் னனையெற்றி வாளுட னீந்து
கருள்மன் னுகண்டங் கறுக்கநஞ் சுண்ட
அருள்மன்னர் ஆரூர் அரநெறி யாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பொருங்கைமதக் கரியுரிவைப் போர்வை யானைப் பூவணமும் வலஞ்சுழியும் பொருந்தி னானைக், கரும்புதரு கட்டியைஇன் னமிர்தைத் தேனைக் காண்பரிய செழுஞ்சுடரைக் கனகக் குன்றை, இருங்கனக மதிலாரூர் மூலட் டானத் தெழுந்தருளி யிருந்தானை இமையோ ரேத்தும், அருந்தவனை அரநெறியி லப்பன் தன்னை அடைந்தடியேன் அருவினைநோய் அறுத்த வாறே. 1

கற்பகமும் இருசுடரு** மாயி னானைக் காளத்தி கயிலாய மலையுளானை, விற்பயிலும் மதனழிய விழித்தான் தன்னை விசய னுக்கு வேடுவனாய் நின்றான் தன்னைப், பொற்பமரும் பொழி லாரூர் மூலட் டானம் பொருந்திய எம்பெருமானைப் பொருந்தார் சிந்தை, அற்புதனை அரநெறியி லப்பன் தன்னை அடைந்தடியேன் அருவினைநோய் அறுத்த வாறே. 2

பாதியொரு பெண்முடிமேற் கங்கை யானைப் பாசூரும் பரங் குன்றும் மேயான் தன்னை, வேதியனைத் தன்னடியார்க் கெளி யான் தன்னை மெய்ஞ்ஞான விளக்கானை விரையே நாறும், போதியலும் பொழிலாரூர் மூலட் டானம் புற்றிடங்கொண் டிருந்

---

* இச்செய்யுளைப் 'பொன்வண்ண மெவ்வண்ண' எனவரும் பொன்வண்ணத் தந்தாதிச் செய்யுளோடு ஒப்புநோக்குக. §பொருள் மன்னன்–குபேரன். ** கற்பகமும் விரிசுடரும் என்றும் பாடம்.

தானைப் போற்று வார்கள், ஆதியனை அரநெறியி லப்பன் தன்னை அடைந்தடியேன் அருவினைநோய் அறுத்த வாறே. 3

நந்திபணி கொண்டருளும் நம்பன் தன்னை* நாகேச் சரமிடமா நண்ணி னானைச், சந்திமல ரிட்டணிந்து வானோ ரேத்துந் தத்துவனைச் சக்கரமாற் கீந்தான் தன்னை, இந்துநுழை பொழி லாரூர் மூலட் டான மிடங்கொண்ட பெருமானை இமையோர் போற்றும், அந்தணனை அரநெறியி லப்பன் தன்னை அடைந் தடியேன் அருவினைநோய் அறுத்த வாறே. 4

சுடர்ப்பவளத் திருமேனி வெண்ணீற் றானைச் சோதிலிங்கத்† தூங்கானை மாடத் தானை, விடக்கிடு‡கா டிடமாக வுடையான் தன்னை மிக்கரண மெரியூட்ட வல்லான் தன்னை, மடற்குலவு பொழிலாரூர் மூலட் டானம் மன்னியஎம் பெருமானை மதியார் வேள்வி, அடர்த்தவனை அரநெறியி லப்பன் தன்னை அடைந் தடியேன் அருவினை நோய் அறுத்த வாறே. 5

தாயவனை யெவ்வுயிர்க்குந் தன்னொப் பில்லாத் தகுதில்லை நடம்பயிலுந் தலைவன் தன்னை, மாயவனும் மலரவனும் வானோ ரேத்த மறிகடல்நஞ் சுண்டுகந்த மைந்தன் தன்னை, மேயவனைப் பொழிலாரூர் மூலட் டானம் விரும்பியவெம் பெருமானை யெல்லாம் முன்னே, ஆயவனை அரநெறியி லப்பன் தன்னை அடைந் தடியேன் அருவினை நோய் அறுத்த வாறே. 6

பொருளியல்நற் சொற்பதங்க ளாயி னானைப் புகலூரும் புறம் பயமும் மேயான் தன்னை, மருளியலுஞ் சிந்தையர்க்கு மருந்து தன்னை மறைக்காடுஞ் சாய்க்காடும் மன்னி னானை, இருளியல்நற் பொழிலாரூர் மூலட் டானத் தினிதமரும் பெருமானை இமையோ ரேத்த, அருளியனை அரநெறியி லப்பன் தன்னை அடைந்தடியேன் அருவினைநோய் அறுத்த வாறே. 7

காலனைக்கா லாற்காய்ந்த கடவுள் தன்னைக் காரோணங் கழிப்பாலை மேயான் தன்னைப், பாலனுக்§குப் பாற்கடலன்

---

*இவ்வடி நமிநந்தியடிகள் நாயனார் தண்ணீரால் விளக்கேற்றித் தொண்டுபுரிந்ததனைக் குறிப்பது. நந்தி – நமிநந்தி. † சோதிலங்கு என்றும் பாடம். ‡ விடக்கு – மாமிசம். § பாலன் – உபமன்னியு முனிவர்.

றீந்தான் தன்னைப் பணியுகந்த அடியார்கட் கினியான் தன்னைச், சேலுகளும் வயலாரூர் மூலட் டானஞ் சேர்ந்திருந்த பெருமானைப் பவள மீன்ற, ஆலவனை அரநெறியி லப்பன் தன்னை அடைந்தடியேன் அருவினைநோய் அறுத்த வாறே. 8

ஒப்பொருவ ரில்லாத ஒருவன் தன்னை ஓத்தூரும் உறையூரும் மேவி னானை, வைப்பவனை மாணிக்கச் சோதி யானை மாருதமுந் தீவெளிநீர் மண்ணு னானைப் பொ.......¶ 9

பகலவன்தன் பல்லுகுத்த படிறன் தன்னைப் பராய்த்துறை பைஞ் ஞீலியிடம் பாவித் தானை, இகலவனை இராவணனை இடர் செய் தானை ஏத்தாதார் மனத்தகத்துள் இருளா னானைப், புகழ்நிலவு பொழிலாரூர் மூலட் டானம் பொருந்தியஎம் பெருமானைப் போற்றார் சிந்தை, அகலவனை அரநெறியி லப்பன் தன்னை அடைந்தடியேன் அருவினைநோய் அறுத்த வாறே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி–அகிலேசுவரர், அரநெறியப்பர்; தேவி–புவனேசுவரி.

## 54. திருப்பெருவேளூர்*

### திருநேரிசை [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மறையணி நாவி னானை மறப்பிலார் மனத்து ளானைக்
கறையணி கண்டன் தன்னைக் கனலெரி யாடி னானைப்
பிறையணி சடையி னானைப் பெருவேளூர் பேணி னானை**
நறையணி மலர்கள் தூவி நாடொறும் வணங்கு வேனே. 1

நாதனாய் உலக மெல்லாம் நம்பிரான் எனவும் நின்ற
பாதனும் பரம யோகி பலபல திறத்தி னாலும்
பேதனாய்த் தோன்றி னானைப் பெருவேளூர் பேணி னானை
ஓதநா வுடைய னாகி உரைக்குமா றுரைக்கின் றேனே. 2

குறவிதோள் மணந்த செல்வக் குமரவேள் தாதை என்றும்
நறவிள நறுமென் கூந்தல் நங்கையோர் பாகத் தானைப்

---

¶இச்செய்யுளில் ஏனைய அடிகள் சிதைந்துபோயின. *'காட்டூர் ஐயன்பேட்டை' என வழங்கப்பெறும். **பேணினான்–சுவாமியின் பெயர்.

பிறவியை மாற்று வானைப் பெருவேளூர் பேணி னானை
உறவினால் வல்ல னாகி உணருமா றுணர்த்து வேனே. 3

மைஞ்ஞவில் கண்டன் தன்னை வலங்கையின் மழுவொன் றேந்திக்
கைஞ்ஞவில் மானி னோடுங் கனலெரி யாடி னானைப்
பிஞ்ஞகன் தன்னை அந்தண் பெருவேளூர் பேணி னானைப்
பொய்ஞ்ஞெக நினைய மாட்டாப் பொறியிலா அறிவி லேனே. 4

ஓடைசேர் நெற்றி யானை உரிவையை மூடி னானை
வீடதே காட்டு வானை வேதநான் காயி னானைப்
பேடைசேர் புறவ நீங்காப்C பெருவேளூர் பேணி னானைக்
கூடநான் வல்ல மாற்றங் குறுகுமா றறிகி லேனே. 5

கச்சைசேர் நாகத் தானைக் கடல்விடங் கண்டத் தானைக்
கச்சியே கம்பன் தன்னைக் கனலெரி யாடி னானைப்
பிச்சைசேர்ந் துழல்வி னானைப் பெருவேளூர் பேணி னானை
இச்சைசேர்ந் தமர நானும் இறைஞ்சுமா றிறைஞ்சு வேனே. 6

சித்தராய் வந்து தன்னைத் திருவடி வணங்கு வார்கள்
முத்தனை மூர்த்தி யாய முதல்வனை முழுது மாய
பித்தனைப் பிறரும்L ஏத்தப் பெருவேளூர் பேணி னானை
மெத்தநே யவனைN நாளும் விரும்புமா றறிகி லேனே. 7

முண்டமே தாங்கி னானை முற்றிய ஞானத் தானை
வண்டுலாங் கொன்றை மாலை வளர்மதிக் கண்ணி யானைப்
பிண்டமேR ஆயி னானைப் பெருவேளூர் பேணி னானை
அண்டமாம் ஆதி யானை அறியுமா றறிகி லேனே. 8

விரிவிலா அறிவி னார்கள் வேறொரு சமயஞ் செய்து
எரிவினாற்S சொன்னா ரேனும் எம்பிராற் கேற்ற தாகும்
பரிவினாற் பெரியோ ரேத்தும் பெருவேளூர் பற்றி னானை
மருவிநான் வாழ்த்தி உய்யும் வகையது நினைக்கின் றேனே.T 9

பொருகடல் இலங்கை மன்னன் உடல்கெடப் பொருத்தி நல்ல
கருகிய கண்டத் தானைக் கதிரிளங் கொழுந்து சூடும்

---

C புறவு நீங்கா என்றும் பாடம். L பிறர்–புறம், அகப்புறம் என்ற சமயத்தவர். N மெத்தனேயவனை என்றும் பாடம். R பிண்டம்–உலகமாகிய உடல். S எரிவினால் – கோபம் முதலியவற்றால். T இச்செய்யுள் சைவத்தின் நிறைந்த நிலையை அறிவிப்பது.

பெருகிய சடையி னானைப் பெருவேளூர் பேணி னானை
உருகிய அடிய ரேத்தும் உள்ளத்தால் உள்கு வேனே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி—பிரியாத நாதர், பேணினார்; தேவி—ஏலவார் குழலி.

## 55. திருத்தலையாலங்காடு

### திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

தொண்டர்க்குத் தூநெறியாய் நின்றான் தன்னைச் சூழ்நரகில் வீழாமே காப்பான் தன்னை, அண்டத்துக் கப்பாலைக் கப்பா லானை ஆதிரைநா ளாதரித்த அம்மான் தன்னை, முண்டத்தின் முளைத்தெ ழுந்த தீயா னானை,* மூவுருவத் தோருருவாய்** முதலாய் நின்ற, தண்டத்தில் தலையாலங் காடன் தன்னைச் சாராதே சாலநாள் போக்கி னேனே. 1

அக்கிருந்த அரையானை அம்மான் தன்னை அவுணர்புர மொருநொடியி லெரிசெய் தானைக், கொக்கிருந்த மகுடத்தெங் கூத்தன் தன்னைக் குண்டலஞ்சேர் காதானைக் குழைவார் சிந்தை, புக்கிருந்து போகாத புனிதன் தன்னைப் புண்ணியனை யெண்ணருஞ் சீர்ப் போக மெல்லாந், தக்கிருந்த தலையாலங் காடன் தன்னைச் சாராதே சாலநாள் போக்கி னேனே. 2

மெய்த்தவத்தை வேதத்தை வேத வித்தை விளங்கிளமா மதி சூடும் விகிர்தன் தன்னை, எய்த்தவமே உழிதந்த ஏழை யேனை இடர்க்கடலில் வீழாமே யேற வாங்கிப், பொய்த்தவத்தா ரறியாத நெறிநின் றானைப் புனல்கரந்திட் டுமையொடொரு பாகம் நின்ற, தத்துவனைத் தலையாலங் காடன் தன்னைச் சாராதே சாலநாள் போக்கி னேனே. 3

சிவனாகித் திசைமுகனாய்த் திருமா லாகிச் செழுஞ்சுடராய்த் தீயாகி நீரு மாகிப், புவனாகிப் புவனங்க ளனைத்து மாகிப் பொன்

---

* முண்டத்தின் முளைத்தெழுந்த தீயானன்—நெற்றிக்கு நேரே புருவ மத்தியின் வெளியில் உற்று நோக்க ஒளிவிடும் சோதியன். ** மூவுருவம்—அயன். அரி. அரன். ஒருருவம்—எல்லாவற்றையும் கடந்த முதலுருவம்; 4-ம் பாட்டைக் காண்க.

ளுகி மணியாகி முத்துமாகிப், பவனாகிப் பவனங்க ளனைத்து மாகிப் பசுவேறித் திரிவானோர் பவனாய் நின்ற, தவனாய தலையாலங் காடன் தன்னைச் சாராதே சாலநாள் போக்கி னேனே. 4

கங்கையெனுங் கடும்புனலைக் கரந்தான் தன்னைக் காமரு பூம் பொழிற்கச்சிக் கம்பன் தன்னை, அங்கையினில் மான்மறி யொன் றேந்தி னானை ஐயாறு மேயானை ஆரூ ரானைப், பங்கமிலா அடியார்க்குப் பரிந்தான் தன்னைப் பரிதிநிய மத்தானைப் பாரூ ரானைச், சங்கரனைத் தலையாலங் காடன் தன்னைச் சாராதே சால நாள் போக்கி னேனே. 5

விடந்திகழும் அரவரைமேல் வீக்கி னானை விண்ணவர்க்கு மெண்ணரிய அளவி லானை, அடைந்தவரை அமருலகம் ஆள்விப் பானை அம்பொன்னைக் கம்பமா களிறட் டானை, மடந்தை‡யொரு பாகனை மகுடந் தன்மேல் வார்புனலும் வாளரவும் மதியும் வைத்த, தடங்கடலைத் தலையாலங் காடன் தன்னைச் சாராதே சாலநாள் போக்கி னேனே. 6

விடையேறிக் கடைதோறும் பலிகொள் வானை வீரட்டம் மேயானை வெண்ணீற் றானை, முடைநாறு முதுகாட்டி லாடலானை முன்னானைப் பின்னானை அந்நா ளானை, உடையாடை யுரிதோலே உகந்தான் தன்னை, உமையிருந்த பாகத்து ளொருவன் தன்னைச், சடையானைத் தலையாலங் காடன் தன்னைச் சாராதே சாலநாள் போக்கி னேனே. 7

கரும்பிருந்த கட்டிதனைக் கனியைத் தேனைக் கன்றாப்பின் நடுதறிPயைக் காறை யானை, இரும்பமர்ந்தS மூவிலைவேல் ஏந்தி னானை யென்னானைத் தென்னானைக் காவான் தன்னைச், சுரும்பமரும் மலர்க் கொன்றை சூடி னானைத் தூயானைத் தாயாகி உலகுக் கெல்லாந், தரும்பொருளைத் தலையாலங் காடன் தன்னைச் சாராதே சாலநாள் போக்கி னேனே. 8

பண்டளவு நரம்போசைப் பயனைப் பாலைப் படுபயனைக் கடு வெளியைக் கனலைக் காற்றைக், கண்டளவிற் களிகூர்வார்க் கெளியான் தன்னைக் காரணனை நாரணனைக் கமலத் தோனை,

---

‡ மடந்தை-தேவியின் பெயர். P நடுதறி-கன்றாப்பூர் சுவாமி யின் பெயர். S இரும்பார்ந்த என்றும் பாடம்.

எண்டளவி லென்னெஞ்சத் துள்ளே நின்ற எம்மானைக் கைம்மாவி
னுரிவை பேணுந், தண்டாளைத் தலையாலங் காடன் தன்னைச்
சாராதே சாலநாள் போக்கி னேனே. 9

கைத்தலங்கள் இருபதுடை அரக்கர் கோமான் கயிலைமலை
அதுதன்னைக் கருதா தோடி, முத்திலங்கு முடிதுளங்க வளைக
ளொற்றி முடுகுதலுந் திருவிரலொன் றவன்மேல் வைப்பப், பத்தி
லங்கு வாயாலும் பாடல் கேட்டுப் பரிந்தவனுக் கிராவணனென்
றீந்த நாமத், தத்துவனைத் தலையாலங் காடன் தன்னைச் சாராதே
சாலநாள் போக்கி னேனே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—ஆடவல்ல வரதர்; தேவி—திருமடந்தை.

---

## 56. திருச்சேறை*

திருநேரிசை** [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பெருந்திரு இமவான் பெற்ற பெண்கொடி பிரிந்த பின்னை
வருந்துவான் தவங்கள் செய்ய மாமணம் புணர்ந்து மன்னும்
அருந்திரு மேனி தன்பால் அங்கொரு பாக மாகத்
திருந்திட வைத்தார் சேறைச் செந்நெறிச் செல்வ னாரே. 1

ஓர்த்துள வாறு நோக்கி உண்மையை உணராக் குண்டர்
வார்த்தையை மெய்யென் றெண்ணி மயக்கில்வீழ்ந் தழுந்து வேனைப்‡
பேர்த்தெனை யாளாக் கொண்டு பிறவிவான் பிணிக ளெல்லாம்
தீர்த்தருள் செய்தார் சேறைச் செந்நெறிச் செல் வனாரே. 2

ஒன்றிய தவத்து மன்னி உடையனாய் உலப்பில் காலம்
நின்றுதங் கழல்கள் ஏத்தும் நீள்சிலை விசய னுக்கு
வென்றிகொள் வேட னாகி விரும்பிவெங் கான கத்துச்
சென்றருள் செய்தார் சேறைச் செந்நெறிச் செல்வ னாரே. 3

அஞ்சையும் அடக்கி ஆற்ற லுடையனாய் அநேக காலம்
வஞ்சமில் தவத்துள் நின்று மன்னிய பகீர தற்கு

---

* 'உடையார் கோயில்' என வழங்கப்பெறும். ** இப்பதிகத்தில் 9-ம் செய்யுள் சிதைந்துபோயிற்று. ‡ இவ்வடிகள் சுவாமிகள் சமணர் கூட்டுறவில் ஈடுபட்டதைக் குறிக்கும் அகச்சான்று.

வெஞ்சின முகங்க ளாகி விசையொடு பாயுங் கங்கை
செஞ்சடை யேற்றார் சேறைச் செந்நெறிச் செல்வ னாரே. 4

நிறைந்தமா மணலைக் கூப்பி நேசமோ டாவின் பாலைக்
கறந்துகொண் டாட்டக் கண்டு கறுத்ததன் தாதை தாளை
எறிந்தமா ணிக்கப் போதே எழில்கொள் சண்டீச னென்னச்
சிறந்தபே ரளித்தார் சேறைச் செந்நெறிச் செல்வ னாரே. 5

விரித்தபல் கதிர்கொள் சூலம் வெடிபடு தமரு கங்கை
தரித்ததோர் கோல கால பயிரவ னாகி வேழம்
உரித்துமை அஞ்சக் கண்டு ஒண்திரு மணிவாய் விள்ளச்
சிரித்தருள் செய்தார் சேறைச் செந்நெறிச் செல்வ னாரே. 6

சுற்றுமுன் னிமையோர் நின்று தொழுதுதூ மலர்கள் தூவி
மற்றெமை உயக்கொள் என்ன மன்னுவான் புரங்கள் மூன்றும்
உற்றொரு நொடியின் முன்னம் ஒள்ளழல் வாயின் வீழச்
செற்றருள் செய்தார் சேறைச் செந்நெறிச் செல்வ னாரே. 7

முந்திஇவ் வுலக மெல்லாம் படைத்தவன் மாலி னோடும்
எந்தனி நாத னேஎன் றிறைஞ்சிநின் றேத்தல் செய்ய
அந்தமில் சோதி தன்னை அடிமுடி அறியா வண்ணஞ்
செந்தழ லானார் சேறைச் செந்நெறிச் செல்வ னாரே. 8-9

ஒருவரும் நிகரி லாத ஒண்டிறல் அரக்கன் ஓடிப்
பெருவரை எடுத்த திண்தோள் பிறங்கிய முடிகள் இற்று
மருவிஎம் பெருமா னென்ன மலரடி மெள்ள வாங்கித்
திருவருள் செய்தார் சேறைச் செந்நெறிச் செல்வ னாரே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பூரி யாவரும் புண்ணியம் பொய்கெடும்
கூரி தாய அறிவுகை கூடிடும்
சீரி யார்பயில் சேறையுட் செந்நெறி*
நாரி பாகன்றன் நாமம் நவிலவே. 1

---

* செந்நெறி-சேறையின் திருக்கோயிலின் பெயர். இது செம்மை (முத்தி) தரும் நெறியை அளித்தருளும் இறைவன் வெளிப்பட வீற்றிருக்கும் இடம்.

என்ன மாதவஞ் செய்தனை நெஞ்சமே
மின்னு வார்சடை வேத விழுப்பொருள்
செந்நெ லார்வயற் சேறையுட் செந்நெறி
மன்னு சோதிநம் பால்வந்து வைகவே. 2

பிறப்பு மூப்புப் பெரும்பசி வான்பிணி
இறப்பு நீங்கியிங் கின்பம்*வந் தெய்திடும்
சிறப்பர் சேறையுட் செந்நெறி யான்கழல்
மறப்ப தின்றி மனத்தினுள் வைக்கவே. 3

மாடு தேடி மயக்கினில் வீழ்ந்துநீர்
ஓடி யெய்த்தும் பயனிலை ஊமர்காள்A
சேடர்B வாழ்சேறைச் செந்நெறி மேவிய
ஆட லான்தன் அடியடைந் துய்ம்மினே. 4

எண்ணி நாளும் எரியயிற் கூற்றுவன்
துண்ணெண் தோன்றில் துரக்கும் வழிகண்டேன்
திண்ணன் சேறைத் திருச்செந் நெறியுறை
அண்ண லாருளர் அஞ்சுவ தென்னுக்கே. 5

தப்பி வானங் Cதரணிகம் பிக்கிலென்D
ஒப்பில் வேந்தர் ஒருங்குடன் சீறிலென்
செப்ப மாEஞ்சேறைச் செந்நெறி மேவிய
அப்ப னாருளர் அஞ்சுவ தென்னுக்கே. 6

வைத்த மாடும் மடந்தைநல் லார்களும்
ஒத்தொவ் வாதவுற் றார்களு மென்செய்வார்
சித்தர் சேறைத் திருச்செந் நெறியுறை
அத்தர் தாமுளர் அஞ்சுவ தென்னுக்கே. 7

குலங்க ளென்செய்வ குற்றங்க ளென்செய்வ
துலங்கி நீநின்று சோர்ந்திடல் நெஞ்சமே
இலங்கு சேறையிற் செந்நெறி மேவிய
அலங்க னாருFளர் அஞ்சுவ தென்னுக்கே. 8

---

* இறப்பு நீங்கிடு மின்பம் என்றும் பாடம். A ஊமர்–சொல்லும் கருவியிருந்தும் சொல்லாதவர். B சேடர்–அறிவுடையோர். சேடு – ஒளி. C தப்பில் வானம் என்றும் பாடம். D கம்பித்தல்–அசைதல். E செப்பம் – பாதுகாவல். F அலங்கனார் – மாலையையுடையவர்; (எல்லாப் பொருளிலும்) விளங்குதலை யுடையவருமாம்.

பழகி ஞல்வரும் பண்டுள சுற்றமும்
விழவி டாவிடில் வேண்டிய எய்தொணு
திகழ்கொள் சேறையிற் செந்நெறி மேவிய
அழக ஞருளர் அஞ்சுவ தென்னுக்கே. 9

பொருந்து நீள்மலை யைப்பிடித் தேந்திஞன்
வருந்த வூன்றி மலரடி வாங்கிஞன்
திருந்து சேறையிற்† செந்நெறி மேவியங்(கு)
இருந்த சோதியென் பார்க்கிட ரில்லையே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி—செந்நெறியப்பர்; தேவி—ஞானவல்லி.

## 57. திருக்கடுவாய்க்கரைப்புத்தூர்*

திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

ஒருத்த னைமூ வுலகொடு தேவர்க்கும்
அருத்த னைஅடி யேன்மனத் துள்ளமர்
கருத்த னைக்கடு வாய்**ப்புன லாடிய
திருத்த னைப்புத்தூர்ச் சென்று||கண் டுய்ந்தெனே. 1

யாவ ருமறி தற்கரி யான்றனை
மூவ ரின்முத லாகிய மூர்த்தியை
நாவின் நல்லுரை யாகிய நாதனைத்
தேவனைப் புத்தூர்ச் சென்றுகண் டுய்ந்தெனே. 2

அன்ப னைஅடி யாரிடர் நீக்கியைச்
செம்பொ னைத்திக ழுந்திருக் கச்சியே
கம்ப னைக்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
நம்ப னைக்கண்டு நானுய்யப் பெற்றெனே. 3

மாத னத்தைமா தேவனை மாறிலாக்
கோத னத்தில்ஐந்P தாடியை வெண்குழைக்

† சேறையுட் என்றும் பாடம். *'ஆண்டார் கோயில்' எனவும் 'ஆண்டாங் கோயில்' எனவும் வழங்கப்பெறும்' **கடுவாய்-ஒரு நதி. ||புத்தூர் சென்று என்றும் பாடம். P கோதனத்தில் ஐந்து-பால், தயிர், நெய், கோமயம், கோசலம் என்னும் ஐந்து; பஞ்ச கௌவியம்.

காத னைக்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
நாத னைக்கண்டு நானுய்யப் பெற்றெனே. 4

குண்டு பட்டகுற் றந்தவிர்த் தென்னையாட்
கொண்டு நற்றிறங் காட்டிய கூத்தனைக்
கண்ட னைக்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
அண்ட னைக்கண் டருவினை யற்றெனே. 5

பந்த பாச மறுத்தெனை ஆட்கொண்ட
மைந்த னைம்*மண வாளனை மாமலர்க்
கந்த** நீர்க்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
எந்தை யீசனைக் கண்டினி தாயிற்றே. 6

உம்ப ரானை உருத்திர மூர்த்தியை
அம்ப ரானை அமலனை ஆதியைக்
கம்பு நீர்க்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
எம்பி ரானைக்கண் டின்பம தாயிற்றே. 7

மாசார் பாச மயக்கறு வித்தெனுள்
நேச மாகிய நித்த மணாளனைப்†
பூச நீர்க்‡கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
ஈச னேயென இன்பம தாயிற்றே. 8

இடுவா ரிட்ட கவளங் கவர்ந்திரு
கடுவாய் இட்டவர் கட்டுரை கொள்ளாதே
கடுவாய்த் தென்கரைப் புத்தூர் அடிகட்காட்
படவே பெற்றுநான் பாக்கியஞ் செய்தெனே. 9

அரக்கன் ஆற்றல் அழித்தவன் பாடல்கேட்(டு)
இரக்க மாகி அருள்புரி யீசனைத்
திரைக்கொள் நீர்க்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
இருக்கு நாதனைக் காணப்பெற் றுய்ந்தெனே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—சொர்ணபுரீசுவரர்; தேவி—சிவாம்பிகை.

---

* மைந்தன்-வலிமையுடையவன். ** கந்தம்-வாசனை. †நித்தன் மணாளனைப் என்றும் பாடம். ‡ பூசுநீர்க் என்றும் பாடம்.

## 58. திருஅவளிவணல்லூர்

### திருநேரிசை [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

தோற்றினன் எயிறு கவ்வித் தொழிலுடை அரக்கன் றன்னைத்
தேற்றுவான் சென்று சொல்லச் சிக்கெனத் தவிரு மென்று
வீற்றினை யுடைய னாகி வெடுவெடுத் தெழுந்த வன்றன்
ஆற்றலை அழிக்க வல்லார் அவளிவ ணல்லூ ராரே. 1

வெம்பினார் அரக்க ரெல்லாம் மிகச்சழக் காயிற் றென்று
செம்பினா லெடுத்த கோயில் சிக்கெனச் சிதையு மென்ன
நம்பினா ரென்று சொல்லி நன்மையான் மிக்கு நோக்கி
அம்பினால் அழிய எய்தார் அவளிவ ணல்லூ ராரே. 2

கீழ்ப்படக் கருத லாமோ கீர்த்திமை யுள்ள தாகில்
தோட்பெரு வலியி னாலே தொலைப்பன்யான் மலையை யென்று
வேட்பட வைத்த வாறே விதிர்விதிர்த் தரக்கன் வீழ்ந்து
ஆட்படக் கருதிப் புக்கார் அவளிவ ணல்லூ ராரே. 3

நிலைவலம் வல்ல னல்லன் நேர்மையை நினைய மாட்டான்
சிலைவலங் கொண்ட செல்வன் சீரிய கயிலை தன்னைத்
தலைவலங் கருதிப் புக்குத் தாக்கினான்* தன்னை யன்று
அலைகுலை யாக்கு வித்தார் அவளிவ ணல்லூ ராரே. 4

தவ்வலி யொன்ற னாகித் தனதொரு பெருமை யாலே
மெய்வ்வலி யுடைய னென்று மிகப்பெருந் தேரை யூர்ந்து
செவ்வலி கூர்வி ழியாற் சிரமத்தால்** எடுக்குற் றானை
அவ்வலி தீர்க்க வல்லார் அவளிவ ணல்லூ ராரே. 5

நன்மைதான் அறிய மாட்டான் நடுவிலா அரக்கர் கோமான்
வன்மையே கருதிச் சென்று வலிதனைச் செலுத்த லுற்றுக்
கன்மையான் மலையை யோடிக் கருதித்தான் எடுத்து வாயால்
அம்மையோ வென்ன வைத்தார் அவளிவ ணல்லூ ராரே. 6

கதம்படப் போது வார்கள் போதும்அக் கருத்தி னாலே
சிதம்பட நின்ற நீர்கள் சிக்கெனத் தவிரு மென்று
மதம்படு மனத்த னாகி வன்மையான் மிக்கு நோக்க
அதம்பழத்† துருவு செய்தார் அவளிவ ணல்லூ ராரே. 7

---

*தாங்கினான் என்றும் பாடம். **சிரம் பத்தால் என்றும் பாடம்.
†அதம்பழம்—அத்திப்பழம்.

நாடுமிக் குழிதர் கின்ற நடுவிலா அரக்கர் கோனை
ஓடுமிக் கென்று சொல்லி ஊன்றினன் உகிரி னாலே
பாடுமிக் குய்வ னென்று பணியநற் றிறங்கள் காட்டி
ஆடுமிக் கரவம் பூண்டார் அவளிவ ணல்லூ ராரே. 8

ஏனமாய் இடந்த மாலும் எழில்தரு முளரி யானும்
ஞானந்தா னுடைய ராகி நன்மையை அறிய மாட்டார்
சேனந்தான் இலா*அ ரக்கன் செழுவரை எடுக்க வூன்றி
ஆனந்த அருள்கள் செய்தார் அவளிவ ணல்லூ ராரே. 9

ஊக்கினன் மலையை யோடி உணர்விலா அரக்கன் தன்னைத்
தாக்கினன் விரலி னாலே தலைபத்தும் தகர வூன்றி
நோக்கினன் அஞ்சத் தன்னை நோன்பிற வூன்று சொல்லி
ஆக்கினன் அமுத மாக அவளிவ ணல்லூ ராரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி—சாட்சிநாயகேசுவரர்; தேவி—சௌந்தரநாயகி.

## 59. திருவெண்ணியூர்**

திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

முத்தி னைப்பவ ளத்தை முனைத்தவெம்
தொத்தி னைச்சுட ரைச்சுடர் போலொளிப்
பித்த னைக்†கொலும் நஞ்சினை வானவர்
நித்த னைநெரு நற்கண்ட வெண்ணியே. 1

வெண்ணித் தொல்நகர் மேயவெண் திங்களார்
கண்ணித் தொத்த சடையர் கபாலியார்
எண்ணித் தம்மை நினைந்திருந் தேனுக்கு
அண்ணித் திட்டமு தூறுமென் நாவுக்கே. 2

காற்றி னைக்கன லைக்கதிர் மாமணி
நீற்றி னைநினைப் பார்வினை நீக்கிடும்
கூற்றி னையுதைத் திட்டகு ணமுடை
வீற்றி னைநெரு நற்கண்ட வெண்ணியே. 3

* சேனந்தான் இலாத-பிறப்பில் உயர்வு இல்லாத. ** 'கோயில் வெண்ணி' என வழங்கப்பெறும். † பித்தினைக் என்றும் பாடம்,

நல்ல னைத்திகழ் நான்மறை யோதியைச்
சொல்ல னைச்சுட ரைச்சுடர் போலொளிர்*
கல்ல னைக்கடி மாமதில் மூன்றெய்த
வில்ல னைநெரு நற்கண்ட வெண்ணியே. 4

சுடரைப் போலொளிர்** சுண்ணவெண் ணீற்றனை
அடருஞ் சென்னியில் வைத்தஅ முதினைப்
படருஞ் செஞ்சடைப் பால்மதி சூடியை
இடரை நீக்கியை யான்கண்ட வெண்ணியே. 5

பூத நாதனைப் பூம்புக லூரனைத்
தாத னைத்தவ ழும்மதி சூடியை
நாதனை நல்ல நான்மறை யோதியை
வேத னைநெரு நற்கண்ட வெண்ணியே. 6

ஒருத்தி யையொரு பாகத் தடக்கியும்
பொருத்தி யபுனி தன்புரி புன்சடைக்
கருத்த னைக்கறைக் கண்டனைக் கண்ணுதல்
நிருத்த னைநெரு நற்கண்ட வெண்ணியே. 7

சடைய னைச்சரி கோவண ஆடைகொண்
டுடைய னையுணர் வார்வினை தீர்த்திடும்
படைய னைமழு வாளொடு பாய்தரும்
விடைய னைநெரு நற்கண்ட வெண்ணியே. 8

பொருப்ப னைப்புன லாளொடு புன்சடை
அருப்ப னைஇளந் திங்களங் கண்ணியான்
பருப்ப தம்பர வித்தொழுந் தொண்டர்கள்
விருப்ப னைநெரு நற்கண்ட வெண்ணியே. 9

சூல வஞ்சனை வெல்லவெஞ் சுந்தரன்
கோல மாஅருள் செய்ததோர் கோள்கையான்
காலன் அஞ்சவு தைத்திருள் கண்டமாம்
வேலை நஞ்சனைக் கண்டது வெண்ணியே. 10

இலையி னார்கொன்றை சூடிய ஈசனார்
மலையி னால்அரக் கன்திறல் வாட்டினார்
சிலையி னால்மதில் எய்தவன் வெண்ணியைத்
தலையி னால்தொழு வார்வினை தாவுமே. 11

---

* லொளிக் என்றும் பாடம். ** லொளிச் என்றும் பாடம்.

திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]
திருச்சிற்றம்பலம்

தொண்டிலங்கும் அடியவர்க்கோர் நெறியி னாருந் தூநீறு துதைந்திலங்கு மார்பி னாரும், புண்டரிகத் தயனெடுமால் காணா வண்ணம் பொங்குதழற் பிழம்பாய புராண னாரும், வண்டமரும் மலர்க்கொன்றை மாலை யாரும் வானவர்க்காய் நஞ்சுண்ட மைந்தனாரும், விண்டவர்தம் புரமூன்றும் எரிசெய் தாரும் வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்த னாரே. 1

நெருப்பனைய மேனிமேல் வெண்ணீற் றாரும் நெற்றிமே லொற்றைக்கண் நிறைவித் தாரும், பொருப்பரையன் மடப்பாவை இடப்பா லாரும் பூந்துருத்தி நகர்மேய புராண னாரும், மருப்பனைய வெண்மதியக் கண்ணியாரும் வளைகுளமும் மறைக்காடும் மன்னி னாரும், விருப்புடைய அடியவர்தம் முள்ளத் தாரும் வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்த னாரே. 2

கையுலாம் மூவிலைவே லேந்தி னாருங் கரிகாட்டில் எரியாடுங் கடவுளாரும், பையுலாம் நாகங்கொண் டாட்டு வாரும் பரவுவார் பாவங்கள் பாற்று வாரும், செய்யுலாங் கயல்பாய வயல்கள்* சூழ்ந்த திருப்புன்கூர் மேவிய செல்வ னாரும், மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித் தாரும் வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்த னாரே. 3

சடையேறு புனல்வைத்த சதுர னாருந் தக்கன்றன் பெருவேள்வி தடைசெய் தாரும், உடையேறு புலியதள்மேல் நாகங் கட்டி உண்பலிக்கென் றூரூரி னுழிதர் வாரும், மடையேறிக் கயல்பாய வயல்கள் சூழ்ந்த மயிலாடு துறையுறையும் மணாளனாரும், விடையேறு வெல்கொடியெம் விமல னாரும் வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்த னாரே. 4

மண்ணிலங்கு நீரனல்கால் வானு மாகி மற்றவற்றின் குணமெலா மாய்நின் றாரும், பண்ணிலங்கு பாடலோ டாட லாரும் பருப்பதமும் பாசூரும் மன்னி னாரும், கண்ணிலங்கு நுதலாருங் கபால மேந்திக் கடைதோறும் பலிகொள்ளுங் காட்சி யாரும், விண்ணிலங்கு வெண்மதியக் கண்ணி யாரும் வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்த னாரே. 5

* கயல்பாயும் வயல்கள் என்றும் பாடம்.

வீடுதனை மெய்யடியார்க் கருள்செய் வாரும்* வேலைவிட முண்டிருண்ட கண்டத் தாருங், கூடலர்தம் மூவெயிலும் எரிசெய் தாருங் குரைகழலாற் கூற்றுவனைக் குமைசெய் தாரும், ஆடுமர வரைக்கசைத்தங் காடு வாரும் ஆலமர நீழலிருந் தறஞ் சொன்னாரும், வேடுவனாய் மேல்விசயற் கருள்செய் தாரும் வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்த னாரே. 6

மட்டிலங்கு கொன்றையந்தார் மாலை சூடி மடவா ளவளோடு மானொன் றேந்திச், சிட்டிலங்கு வேடத்த ராகி நாளுஞ் சில்பலிக்கென் றாரூர் திரிதர் வாருங், கட்டிலங்கு பாசத்தால் வீச வந்த காலன்றன் கால மறுப்பார் தாமும், வீட்டிலங்கு வெண்குழைசேர் காதி னாரும் வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்த னாரே. 7

செஞ்சடைக்கோர் வெண்திங்கள் சூடி னாருந் திருவாலவாயுறையுஞ் செல்வ னாரும், அஞ்சனக்கண் அரிவையொரு பாகத் தாரும் ஆறங்கம் நால்வேத மாய்நின் றாரும், மஞ்சடுத்த நீள்சோலை மாடவீதி மதிலாரூர் புக்கங்கே மன்னி னாரும், வெஞ்சினத்த வேழமது வுரிசெய் தாரும் வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்த னாரே. 8

வளங்கிளர்மா மதிசூடும் வேணி யாரும் வானவர்க்காய் நஞ்சுண்ட மைந்த னாருங், களங்கொளவென் சிந்தை யுள்ளே மன்னி னாருங் கச்சியே கம்பத்தெங் கடவு ளாரும், உளங்குளிர அமுதூறி அண்ணிப் பாரும் உத்தமராய் எத்திசையும் மன்னி னாரும், விளங்கிளரும் வெண்மழுவொன் றேந்தி னாரும் வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்த னாரே. 9

பொன்னிலங்கு கொன்றையந்தார் மாலை சூடிப் புகலூரும் பூவணமும் பொருந்தி னாருங், கொன்னிலங்கு மூவிலைவே லேந்தி னாருங் குளிரார்ந்த செஞ்சடையெங் குழக னாருந், தென்னிலங்கை மன்னவர்கோன் சிரங்கள் பத்துந் திருவிரலால் அடர்த்தவனுக் கருள்செய் தாரும், மின்னிலங்கு நுண்ணிடையாள் பாகத் தாரும் வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்த னாரே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி-வெண்ணிக்கரும்பர்; தேவி-அழகிய நாயகி.

---

* செய்தாரும் என்றும் பாடம்.

## 60. திருப்பூவனூர்

### திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பூவ னூர்ப்புனி தன்திரு நாமந்தான்
நாவில் நூறுநூ றுயிரம்T நண்ணினர்
பாவ மாயின பாறிப் பறையவே
தேவர் கோவினுஞ் செல்வர்க ளாவரே. 1

என்ன னென்மனை எந்தையெ னருயிர்
தன்னன் தன்னடி யேன்தன மாகிய
பொன்னன் பூவனூர் மேவிய புண்ணியன்
இன்னன் என்றறி வொண்ணுன் இயற்கையே. 2

குற்றங் கூடிக் குணம்பல கூடாதீர்
மற்றுந் தீவினை செய்தன மாய்க்கலாம்
புற்ற ராவினன் பூவனூர் ஈசன்பேர்
கற்று வாழ்த்தும் கழிவதன் முன்னமே. 3

ஆவின் மேவிய ஐந்தமர்ந் தாடுவான்*
தூவெண் ணீறு துதைந்தசெம் மேனியான்
மேவ நூல்Pவிரி வெண்ணியின் தென்கரைப்
பூவ னூர்புகு வார்வினை போகுமே. 4

புல்ல மூர்தி**யூர் பூவனூர் பூம்புனல்
நல்ல மூர்தி†நல் லூர்நனி பள்ளியூர்
தில்லை யூர்திரு வாரூர்சீர் காழிநல்
வல்ல மூரென வல்வினை மாயுமே. 5

அனுச யப்Sபட் டதுஇது வென்னுதே
கனிம னத்தொடு கண்களும் நீர்மல்கிப்
புனித னைப்பூவ னூரனைப் போற்றுவார்
மனித ரில்தலை யான மனிதரே. 6

---

T நூறு நூருயிரம்-கோடி. * ஐந்தமைத் தாடுவான் என்றும் பாடம். ஐந்து-பஞ்சகௌவியம். P மேவநூல் என்றும் பாடம். ** புல்ல மூர்த்தி என்றும் பாடம். புல்லம் ஊர்தி–புல்லம்–இடபம். † நல்லமூர்த்தி என்றும் பாடம். S அனுசயம்-பற்று; வைராக்கியமுமாம்.

ஆதி நாதன் அமரர்க ளர்ச்சிதன்
வேத நாவன்வெற் பின்மடப் பாவையோர்
பாதி யானுன் பரந்த பெரும்படைப்
பூத நாதன்தென் பூவனூர் நாதனே. 7

பூவ னூர்தண் புறம்பயம் பூம்பொழில்
நாவ லூர்நள் ளாறொடு நன்னிலங்
கோவ லூர்குட வாயில் கொடுமுடி*
மூவ லூருமுக் கண்ணனூர் காண்மினே. 8

ஏவம் ஏது மிலாஅம ணேதலர்
பாவ காரிகள் சொல்வலைப் பட்டுநான்
தேவ தேவன் திருநெறி† யாகிய
பூவ னூர்புகு தப்பெற்ற நாளின்றே.‡ 9

நார ணன்னொடு நான்முகன் இந்திரன்
வார ணன்கும ரன்வணங் குங்கழற்
பூர ணன்திருப் பூவனூர் மேவிய
கார ணன்னெனை யாளுடைக் காளையே. 10

மைக்க டுத்த நிறத்தரக் கன்வரை
புக்கெ டுத்தலும் பூவனூ ரன்னடி
மிக்க டுத்த விரல்சிறி தூன்றலும்
பக்க டுத்தபின் பாடிஉய்ந் தானன்றே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—புட்பவனேசுவரர்; தேவி—கற்பகவல்லி.

---

## 61. திருப்பேரெயில்**

### திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மறையும் ஓதுவர் மான்மறிக் கையினர்
கறைகொள் கண்டமு டையக பாலியார்

---

* கொடுமுடி – பாண்டிக்கொடுமுடி. † திறநெறி என்றும் பாடம் ‡ இச்செய்யுள் சுவாமிகள் சமண சமயத்தினின்று நீங்கிய தன்மையைக் குறிக்கும் அகச்சான்று. ** வங்காரம் பேரையூர் என்றும்; ஓகைப் பேரையூர் என்றும் வழங்கப் பெறும்.

துறையும் போகுவர் தூயவெண் ணீற்றினர்
பிறையுஞ் சூடுவர் பேரெயி லாளரே. 1

கணக்கி லாரையுங் கற்றுவல் லாரையும்
வணக்கி லாநெறி கண்டுகொண் டாரையும்
தணக்கு வார்தணிப் பாரெப்பொ ருளேயும்
பிணக்கு வாரவர் பேரெயி லாளரே. 2

சொரிவிப் பார்மழை சூழ்கதிர்த் திங்களே
விரிவிப் பார்வெயிற் பட்டவி ளங்கொளி
எரிவிப் பார்தணிப் பாரெப் பொருளேயும்
பிரிவிப் பாரவர் பேரெயி லாளரே. 3

செறுவிப் பார்சிலை யால்மதில் தீர்த்தங்கள்
உறுவிப் பார்பல பத்தர்கள் ஊழ்வினை
அறுவிப் பாரது அன்றியும் நல்வினை
பெறுவிப் பாரவர் பேரெயி லாளரே. 4

மற்றை யாரறி யார்மழு வாளினர்
பற்றி யாட்டியோர் ஐந்தலைப் பாம்பரைச்
சுற்றி யாரவர் தூநெறி யால்மிகு
பெற்றி யாரவர் பேரெயி லாளரே. 5

திருக்கு வார்குழற் செல்வன சேவடி
இருக்கு வாய்மொழி யால்தனே ஏத்துவார்
சுருக்கு வார்துயர் தோற்றங்க ளாற்றறப்
பெருக்கு வாரவர் பேரெயி லாளரே. 6

முன்னே யார்மயி லூர்தி முருகவேள்
தன்னே யாரெனில் வானோர் தலைமகன்
என்னே யாளும்இ றையவ னெம்பிரான்
பின்னே யாரவர் பேரெயி லாளரே. 7

உழைத்துந் துள்ளியும் உள்ளத்து ளேஉரு
இழைத்தும் எந்தை பிரானென் றிராப்பகல்
அழைக்கும் அன்பின ராய அடியவர்
பிழைப்பு நீக்குவர் பேரெயி லாளரே. 8

நீரு லாநிமிர் புன்சடை யாவெனு
ஏரு லாஅநங் கன்திறல் வாட்டிய

வாரு லாவன மென்முலை யாளொடும்
பேரு ளாரவர் பேரெயி லாளரே. 9

பாணி யார்படு தம்பெயர்ந் தாடுவர்
தூணி யார்விச யற்கருள் செய்தவர்
மாணி** யாய்மண் ணளந்தவன் நான்முகன்
பேணி யாரவர் பேரெயி லாளரே. 10

மதத்த வாளரக் கன்மணிப் புட்பகம்
சிதைக்க வேதிரு மாமலைக் கீழ்ப்புக்குப்
பதைத்தங் கார்த்தெடுத் தான்பத்து நீண்முடி
பிதக்க வூன்றிய பேரெயி லாளரே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—ஜகதீசுவரர்; தேவி—பெண்ணமிர்த நாயகி.

---

## 62. திருக்கன்றுப்பூர்*

### திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மாதினையோர் கூறுகந்தாய் மறைகொள் நாவா மதிசூடி வானவர்கள் தங்கட் கெல்லாம், நாதனே யென்றென்று பரவி நாளும் நைந்துருகி வஞ்சகமற் றன்பு கூர்ந்து, வாதனையால் முப்பொழுதும் பூநீர் கொண்டு வைகல் மறவாது வாழ்த்தி யேத்திக், காதன்மையால் தொழுமடியார் நெஞ்சி னுள்ளே கன்றுப்பூர் நடுதறியைக் காண லாமே. 1

விடிவதுமே வெண்ணீற்றை மெய்யிற் பூசி வெளுத்தமைந்த கீளொடுகோ வணமுந் தற்றுச், செடி§யுடைய வல்வினைநோய் தீர்ப்பாய் என்றுஞ் செல்கதிக்கு வழிகாட்டுஞ் சிவனே யென்றுந், துடியனைய இடைமடவாள் பங்கா வென்றுஞ் சுடலைதனில் நடமாடுஞ் சோதீ யென்றுங், கடிமலர்தூய்த் தொழுமடியார் நெஞ்சி னுள்ளே கன்றுப்பூர் நடுதறியைக் காண லாமே. 2

---

** மாணி–வாமனன். * 'கோயில் கன்றுப்பூர்' என வழங்கப் பெறும். வைணவர் வீட்டில் வாழ்க்கைப்பட்ட ஒரு சைவப் பெண்ணின் பொருட்டுச் சிவபெருமான் பசுவின் கன்றுக்குட்டிக் காக நட்ட தறியிலிருந்து வெளிப்பட்ட காரணத்தால் பெற்ற பெயர். § செடி–துன்பம்.

எவரேனுந் தாமாக விலாடத் திட்ட திருநீறுஞ் சாதனமுங் கண்டா லுள்கி, உவராதே யவரவரைக் கண்ட போது உகந்தடிமைத் திறநினைந்தங் குவந்து நோக்கி, இவர்தேவர் அவர்தேவ ரென்று சொல்லி இரண்டாட்டா தொழிந்தீசன் திறமே பேணிக், கவராதே தொழுமடியார் நெஞ்சி னுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே. 3

இலங்காலஞ் செல்லாநா ளென்று நெஞ்சத் திடையாதே யாவர்க்கும் பிச்சை யிட்டு, விலங்காதே நெறிநின்றங் கறிவே மிக்கு மெய்யன்பு புகப்பெய்து பொய்யை நீக்கித், துலங்காமெய் வான வரைக் காத்துநஞ்சம் உண்டபிரா னடியிணைக்கே சித்தம் வைத்துக், கலங்காதே தொழுமடியார் நெஞ்சி னுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே. 4

விருத்தனே வேலைவிட முண்ட கண்டா விரிசடைமேல் வெண் திங்கள் விளங்கச் சூடும், ஒருத்தனே உமைகணவா வுலக மூர்த்தீ நுந்தாத வொண்சுடரே அடியார் தங்கள், பொருத்தனே யென்றென்று புலம்பி நாளும் புலனைந்தும அகத்தடக்கிப் புலம்பி நோக்கிக், கருத்தினால் தொழுமடியார் நெஞ்சி னுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே. 5

பொசியினால் மிடைந்துபுழுப் பொதிந்த போர்வைப் பொல் லாத புலா லுடம்பை நிலாசு மென்று, பசியினால் மீதூரப் பட்டே யீட்டிப் பலர்க்குதவ லதுவொழிந்து பவள வாயார், வசியினா லகப்பட்டு வீழா முன்னம் வானவர்கோன் திருநாமம் அஞ்சுஞ்** சொல்லிக், கசிவினால் தொழுமடியார் நெஞ்சி னுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே. 6

ஐ†யினால் மிடறடைப்புண் டாக்கை விட்டு ஆவியார் போவ துமே அகத்தார் கூடி, மையினாற் கண்ணெழுதி மாலை சூட்டி மயா னத்தி லிடுவதன்முன் மதியஞ் சூடும், ஐயனார்க் காளாகி அன்பு மிக்கு அகங் குழைந்து மெய்யரும்பி அடிகள் பாதங், கையினால் தொழு மடியார் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே.

திருதிமையால் ஐவரையுங் காவ லேவித் திகையாதே சிவாய நம என்னுஞ் சிந்தைச், சுருதிதனைத் துயக்கறுத்துத் துன்ப

---

** அஞ்சு–ஐந்து எழுத்து; பஞ்சாட்சரம். † ஐ–கபம்.

வெள்ளக் கடல்நீந்திக் கரையேறுங் கருத்தே மிக்குப், பரிதிதனைப் பற்பறித்த பாவ நாசா பரஞ்சுடரே யென்றென்று பரவி நாளுங், கருதிமிகத் தொழுமடியார் நெஞ்சி னுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே. 8

குனிந்தசிலை யாற்புரமூன் றெரித்தாய் என்றுங் கூற்றுதைத்த குரைகழற்சே வடியாய் என்றுந்,தனஞ்சயற்குப் பாசுபதமீந்தாய் என்றுந் தசக்கிரிவன் மலையெடுக்க விரலா லூன்றி, முனிந்தவன்தன் சிரம்பத்துந் தாளுந்தோளும் முரணழித்திட் டருள்கொடுத்த மூர்த்தி யென்றுங், கனிந்துமிகத் தொழுமடியார் நெஞ்சி னுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே. 9-10

திருச்சிற்றம்பலம்

சுவாமி—நடுதறியப்பர்; தேவி—மாதுமையம்மை.

## 63. திருவலிவலம்

### திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**நல்லான்**காண் நான்மறைக ளாயி னான்காண் நம்பன்காண் நணுகாதார் புரமூன் றெய்த, வில்லான்காண் விண்ணவர்க்கு† மேலா னான்காண் மெல்லியலாள் பாகன்காண் வேத வேள்விச், சொல்லான்காண் சுடர்மூன்று மாயி னான்காண் தொண்டாகிப் பணிவார்க்குத் தொல்வான் ஈய, வல்லான் காண் வானவர்கள் வணங்கியேத்தும் வலிவலத்தான் காணவனென் மனத்து ளானே.

**ஊன**வன்காண் உடல்தனக்கோர் உயிரா னான்காண் உள்ளவன்காண் இல்லவன்காண்‡ உமையாட் கென்றுந், தேனவன்காண் திருவவன்காண் திசையா னான்காண் தீர்த்தன்காண் பார்த்தன்றன் பணியைக் கண்ட, கானவன்காண் கடலவன்காண் மலையா னான்காண் களியானை ஈருரிவை கதறப் போர்த்த, வானவன்காண் வானவர்கள் வணங்கி யேத்தும் வலிவலத்தான் காணவனென் மனத்து ளானே. 2

---

† மேலவர்க்கு என்றும் பாடம். ‡ உள்ளவன்-சிவஞானிகளுக்கு அறியப்படுவன்; இல்லவன்-அஞ்ஞானிகளுக்கு அறியப்படாதவன்.

ஏயவன்காண் எல்லார்க்கு மியல்பா னான்காண் இன்பன் காண் துன்பங்க ளில்லா தான்காண், தாயவன்காண் உலகுக்கோர் தன்னொப் பில்லாத் தத்துவன்காண் உத்தமன்காண் தானே யெங் கும், ஆயவன்காண் அண்டத்துக் கப்பா லான்காண் அகங்கு ழைந்து மெய்வருந்தி* அழுவார் தங்கள், வாயவன்காண் வானவர் கள் வணங்கி யேத்தும் வலிவலத்தான் காணவனென் மனத்து ளானே. 3

உய்த்தவன்காண் உடல்தனக்கோர் உயிரா னான்காண் ஓங் காரத் தொருவன்காண் உலகுக் கெல்லாம், வித்தவன்காண் விண் பொழியும் மழையா னான்காண் வினைவவன்காண் விரும்பாதார் நெஞ்சத் தென்றும், போய்த்தவன்காண் பொழிலேழுந் தாங்கி னான் காண் புனலோடு வளர்மதியும் பாம்புஞ் சென்னி, வைத்தவன் காண் வானவர்கள் வணங்கி யேத்தும் வலிவலத்தான் காணவ னென் மனத்து ளானே. 4

கூற்றவன்காண் குணமவன்காண் குறி†யா னான்காண் குன்றங்க ளனைத்துங்காண் கோல மாய, நீற்றவன்காண் நிழல வன்காண் நெருப்பா னான்காண் நிமிர்புன் சடைமுடிமேல் நீரார் கங்கை, ஏற்றவன்காண் எழுலகு மாயி னான்காண் இமைப்பள விற் காமனைமுன் பொடியாய் வீழ, மாற்றவன்காண் வானவர் கள் வணங்கி யேத்தும் வலிவலத்தான் காணவனென் மனத்து ளானே. 5

நிலையவன்காண் தோற்றவன்காண் நிறையா னான்காண் நீர வன்காண் பாரவன்காண் ஊர்மூன் றெய்த, சிலையவன்காண் செய்யவாய்க் கரிய கூந்தல் தேன்மொழியை ஒருபாகஞ் சேர்த்தி னான்காண், கலையவன்காண் காற்றவன்காண் காலன் வீழக் கறுத்தவன்காண் கயிலாய மென்னுந் தெய்வ, மலையவன்காண் வானவர்கள் வணங்கி யேத்தும் வலிவலத்தான் காணவனென் மனத்து ளானே. 6

பெண்ணவன்காண் ஆணவன்காண் பெரியோர்க் கென்றும் பெரியவன்காண் அரியவன்காண் அயனா னான்காண், எண்ணவன் காண் எழுத்தவன்காண் இன்பக் கேள்வி இசையவன்காண் இயல

* மெய்யரும்பி என்றும் பாடம். † குறி—இலிங்கமுமாம்.

வன்காண் எல்லாங் காணுங், கண்ணவன்காண் கருத்தவன்காண் கழிந்தோர் செல்லுங் கதியவன்காண் மதியவன்காண் கடலேழ் சூழ்ந்த, மண்ணவன்காண் வானவர்கள் வணங்கி யேத்தும் வலி வலத்தான் காணவனென் மனத்து ளானே. 7

முன்னவன்காண் பின்னவன்காண் மூவாமேனி முதலவன்* காண் முடிவவன்காண் மூன்று சோதி, அன்னவன்காண் அடியார்க்கும் அண்டத் தார்க்கும் அணியவன்காண் சேயவன்காண் அளவில் சோதி, மின்னவன்காண் உருமவன்காண் திருமால் பாகம் வேண்டினன்காண் ஈண்டுபுனற் கங்கைக் கென்றும், மன்னவன்காண் வானவர்கள் வணங்கி யேத்தும் வலிவலத்தான் காணவனென் மனத்து ளானே. 8

நேதியவன்காண் யாவர்க்கும் நினைய வொண்ணா நீதியன் காண் வேதியன்காண் நினைவார்க் கென்றுங், கதியவன்காண் காரவன்காண் கனலா ளுன்காண் காலங்கள் ஊழியாய்க் கலந்து நின்ற, பதியவன்காண் பழமவன்காண் இரதந் தான்காண் பாம் போடு திங்கள் பயில வைத்த, மதியவன்காண் வானவர்கள் வணங்கி யேத்தும் வலிவலத்தான் காணவனென் மனத்து ளானே. 9

பங்கயத்தின் மேலானும் பால கனாய் உலகளந்த படியானும் பரவிக் காணா, தங்கைவைத்த சென்னியரா யளக்க மாட்டா அனலவன்காண் அலைகடல்சூழ் இலங்கை வேந்தன், கொங்கலர்த்த§ முடிநெரிய விரலா லூன்றுங் குழகன்காண் அழகன்காண் கோல மாய, மங்கையர்க்கோர் கூறன்காண் வானோ ரேத்தும் வலிவலத் தான் காணவனென் மனத்து ளானே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி—மனத்துணைநாதர்; தேவி—மாழையங்கண்ணி.

## 64. திருக்கோளிலி**

திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மைக்கொள் கண்ணுமை பங்கினன் மான்மழுத்
தொக்க கையினன் செய்யதோர் சோதியன்

* முதல்வன் என்றும் பாடம். † உரும்-இடி. § கொங்கலர்ந்த என்றும் பாடம். ** 'திருக்குவளை' என வழங்கப்பெறும். இஃது ஏழுவிடங்கத் தலங்களில் ஒன்று.

கொக்க மர்பொழில்* சூழ்தரு கோளிலி
நக்க னைத்தொழ நம்வினை நாசமே. 1

முத்தி னைமுத லாகிய மூர்த்தியை
வித்தி னைவிளை வாய விகிர்தனைக்
கொத்த லர்பொழில் சூழ்தரு கோளிலி
அத்த னைத்தொழ நீங்கும்நம் அல்லலே. 2

வெண்டி ரைப்பர வைவிட முண்டதோர்
கண்ட னைக்கலந் தார்தமக் கன்பனைக்
கொண்ட லம்பொழிற் கோளிலி மேவிய
அண்ட னைத்தொழு வார்க்கல்ல லில்லையே. 3

பலவும் வல்வினை பாறும் பரிசினல்
உலவுங் கங்கையுந் திங்களும் ஒண்சடை
குலவி னன்குளி ரும்பொழிற் கோளிலி
நிலவி னன்றனை நித்தல் நினைமினே. 4

அல்ல லாயின தீரும் அழகிய
முல்லை வெண்முறு வல்உமை அஞ்சவே
கொல்லை யானை யுரித்தவன் கோளிலிச்
செல்வன் சேவடி சென்று தொழுமினே. 5

ஆவின் பால்கண் டளவில் அருந்தஅப்
பாலன் வேண்டலுஞ் செல்லென்று பாற்கடல்
கூவி னன்†குளி ரும்பொழிற் கோளிலி
மேவி னனைத் தொழவினை வீடுமே. 6

சீர்த்த நன்மனை யாளுஞ் சிறுவரும்
ஆர்த்த சுற்றமும் பற்றிலை ஆதலால்
கூத்த னார்உறை யுந்திருக் கோளிலி
ஏத்தி நீர்தொழு மின்இடர் தீருமே.‡ 7

மால தாகி மயங்கும் மனிதர்காள்
காலம் வந்து கடைமுடி யாமுனம்

* தொக்கமர் பொழில் என்றும் பாடம். †'பாலுக்குப் பாலகன் வேண்டியழுதிடப் பாற்கடலீந்த பிரான்' என்பது திருப்பல்லாண்டு அடி. ‡ தீரவே என்றும் பாடம்.

கோல வார்பொழிற் கோளிலி மேவிய
நீல கண்டனை நின்று நினைமினே. 8

கேடு மூடிக் கிடந்துண்ணும் நாடது
தேடி நீர்திரி யாதே சிவகதி
கூட லாந்திருக் கோளிலி ஈசனைப்
பாடு மின்இர வோடு பகலுமே. 9

மடுத்து மாமலை யேந்தலுற் றான்றனை
அடர்த்துப் பின்னும் இரங்கி அவற்கருள்
கொடுத்த வன்உறை கோளிலி யேதொழ
விடுத்து நீங்கிடும் மேலை வினைகளே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

முன்ன மேநினை யாதொழிந் தேனுனை
இன்னம் நானுன சேவடி ஏத்திலேன்
செந்நெ லார்வயல் சூழ்திருக் கோளிலி
மன்ன னேஅடி யேனை மறவலே. 1

விண்ணு ளார்தொழு தேத்தும் விளக்கினை
மண்ணு ளார்வினை தீர்க்கும் மருந்தினைப்
பண்ணு ளார்பயி லுந்திருக் கோளிலி
அண்ண லாரடி யேதொழு துய்ம்மினே. 2

நாளும் நம்முடை நாள்கள் அறிகிலோம்
ஆளும் நோய்களோ ரைம்பதோ டாறெட்டும்*
ஏழை மைப்பட் டிருந்துநீர் நையாதே
கோளி லிஅரன் பாதமே கூறுமே. 3

விழவி னோசை ஒலியறாத் தண்பொழில்
பழகி னார்வினை தீர்க்கும் பழம்பதி
அழல்கை யான்அம ருந்திருக் கோளிலிக்
குழக னார்திருப் பாதமே கூறுமே. 4

மூல மாகிய மூவர்க்கும் மூர்த்தியை
கால னாகிய காலற்குங் காலனைக்

---

* ஐம்பதோடு ஆறெட்டு – தொண்ணூற்றெட்டு.

கோல மாம்பொழில் சூழ்திருக் கோளிலிச்
சூல பாணிதன் பாதந் தொழுமினே. 5

காற்ற னைக்கடல் நஞ்சமு துண்டவெண்
நீற்ற னைநிமிர் புன்சடை அண்ணலை
ஆற்ற னைஅம ருந்திருக் கோளிலி
ஏற்ற னாரடி யேதொழு தேத்துமே. 6

வேத மாயவிண் ணோர்கள் தலைவனை
ஓதி மன்னுயி ரேத்தும் ஒருவனைக்
கோதி வண்டறை யுந்திருக் கோளிலி
வேத நாயகன் பாதம் விரும்புமே. 7

நீதி யாற்றொழு வார்கள் தலைவனை
வாதை யான விடுக்கும் மணியினைக்
கோதி வண்டறை யுந்திருக் கோளிலி
வேத நாயகன் பாதம் விரும்புமே. 8

மாலும் நான்முக னாலும் அறிவொணாப்
பாலின் மென்மொழி யாளொரு பங்கனைக்
கோல மாம்பொழில் சூழ்திருக் கோளிலி
நீல கண்டனை நித்தல் நினைமினே. 9

அரக்க னாய இலங்கையர் மன்னனை
நெருக்கி யம்முடி பத்திறுத் தானவற்(கு)
இரக்க மாகிய வன்திருக் கோளிலி
அருத்தி யாயடி யேதொழு துய்ம்மினே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி—கோளிலிநாதர்; தேவி— வண்டமர் பூங்குழலி.

---

## 65. திருவாய்மூர்*

### திருக்குறுந்தொகை**

திருச்சிற்றம்பலம்

எங்கே யென்னை இருந்திடந் தேடிக்கொண்(டு)
அங்கே வந்தடை யாளம் அருளினார்

---

* தென் திருவாய்மூர் என்று வழங்கப்படும். இஃது ஏழுவிடங்கத் தலங்களில் ஒன்று. ** இப்பதிகம் முழுமையும் சுவாமிகளின் சரிதப்பகுதியை விளக்கும் அகச்சான்று.

தெங்கே தோன்றுந் திருவாய்மூர்ச் செல்வனர்
அங்கே வாவென்று போன ரதேன்கோலோ. 1

மன்னு மாமறைக் காட்டு மணாளனர்
உன்னி யுன்னி உறங்குகின் றேனுக்குத்
தன்னை வாய்மூர்த் தலைவன மாசொல்லி
என்னை வாKவென்று போன ரதேன்கோலோ. 2

தஞ்சே கண்டேன் தரிக்கிலா தாரென்றேன்
அஞ்சேல் உன்னை அழைக்கவந் தேனென்றார்
உஞ்சே னென்றுகந் தேயெழுந் தோட்டந்தேன்
வஞ்சே வல்லரே வாய்மூர் அடிகளே. 3

கழியக் கண்டிலேன் கண்ணெதி ரேகண்டேன்
ஒழியப் போந்திலேன் ஒக்கவே ஓட்டந்தேன்T
வழியிற் கண்டிலேன் வாய்மூர் அடிகள்தம்
சுழியிற் பட்டுச் சுழல்கின்ற தென்கொலோ. 4

ஒள்ளி யாரிவர் அன்றிமற் றில்லையென்(று)
உள்கி யுள்கி உகந்திருந் தேனுக்குத்
தெள்ளி யாரிவர் போலத் திருவாய்மூர்க்
கள்ளி யாரPவர் போலக் கரந்ததே. 5

யாதே செய்துமி யாமலோ நீயென்னில்
ஆதேS யேயும் அளவில் பெருமையான்
மாதே வாகிய வாய்மூர் மருவினர்
போதே யென்றும் புகுந்ததும் பொய்கொலோ. 6

பாடிப் பெற்ற பரிசில் பழங்காசு
வாடி வாட்டந் தவிர்ப்பார் அவரைப்போல்*
தேடிக் கொண்டு திருவாய்மூர்க் கேயென
ஓடிப் போந்திங் கொளித்தவா றென்கொலோ. 7

---

K "வாய்மூரிலிருப்போம் தொடரவா" என்பது பெரியபுராண அடி. Tஓட்டந்தேன்-(விரைவாக) ஓடினேன். P கள்ளியார்-கள்ளர். S ஆதே-அதே. அ-சுட்டு நீண்டது. * இவ்வடிகள் திருஞான சம்பந்தருக்குத் திருவீழிமிழலையில் வாசி பெறும் காசு அளித்த வரலாற்றைக் குறிப்பன. வாடி-வாட.

திறக்கப் பாடிய என்னினுஞ்* செந்தமிழ்
உறைப்புப்‡ பாடி அடைப்பித்தார்¶ உந்நின்றார்T
மறைக்க வல்லரோ தம்மைத் திருவாய்மூர்ப்
பிறைக்கொள் செஞ்சடை யார்இவர் பித்தரே. 8

தனக்கே ருமை தவிர்க்கென்று வேண்டினும்
நினைத்தேன் பொய்க்கPருள் செய்திடு நின்மலன்
எனக்கே வந்தெதிர் வாய்மூருக் கேயெனப்
புனற்கே பொற்கோயில்S புக்கதும் பொய்கோலோ. 9

தீண்டற் கரிய திருவடி யொன்றினால்
மீண்டற் கும்மிதித் தார்அரக் கன்றனை
வேண்டிக்கொண் டேன்திரு வாய்மூர் விளக்கினைத்
தூண்டிக் கொள்வன்நா னென்றலுந் தோன்றுமே. 10

திருச்சிற்றம்பலம்

---

திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பாட வடியார் பரவக் கண்டேன் பத்தர்கணங் கண்டேன் மொய்த்த பூதம், ஆடல்முழவம் அதிரக் கண்டேன் அங்கைஅனல் கண்டேன் கங்கை யாளைக், கோட லரவார் சடையிற் கண்டேன் கொக்கினிதழ் கண்டேன் கொன்றை கண்டேன், வாடல் தலை யொன்று கையிற் கண்டேன் வாய்மூர் அடிகளைநான் கண்ட வாறே. 1

பாலின் மொழியாளோர் பாகங் கண்டேன் பதினெண் கணமும் பயிலக் கண்டேன், நீல நிறமுண்ட கண்டங் கண்டேன் நெற்றிநுதல் கண்டேன் பெற்றங் கண்டேன், காலைக் கதிர்செய் மதியங் கண்டேன் கரந்தை திருமுடிமேல் தோன்றக் கண்டேன்,

---

* என்னினும் – கதவைத் திறப்பித்தேனுக்கே அல்லாமல். ‡உறைப்பு–திருத்தொண்டின் உறைப்பு விளங்க. ¶அடைப்பித்தார்- கதவை மூடச் செய்த திருஞான சம்பந்தர். T உந் நின்றார் – உங்கு (பக்கத்தில்) நிற்கின்றார். P பொய்க்கு - பொய்யுடையேனாகிய எனக்கும். S பொற்கோயில்– (தன் எதிரே ஒன்று காட்டி மறைத்த) அற்புதப் பொற்கோயில்,

மாலைச் சடையும் முடியுங் கண்டேன் வாய்மூர் அடிகளைநான் கண்ட வாறே. 2

மண்ணைத் திகழ நடம தாடும் வரைசிலம் பார்க்கின்ற பாதங் கண்டேன், விண்ணில் திகழும் முடியுங் கண்டேன் வேடம் பல வாஞ் சரிதை கண்டேன், நண்ணிப் பிரியா மழுவுங் கண்டேன் நாலுமறை யங்கம் ஓதக்கண்டேன், வண்ணப் பொலிந்திலங்கு† கோலங் கண்டேன் வாய்மூர் அடிகளைநான் கண்ட வாறே. 3

விளைத்த பெரும்பத்தி கூர நின்று மெய்யடியார் தம்மை விரும்பக் கண்டேன், இளைக்குங் கதநாக மேனி கண்டேன் என்பின் கலந் திகழ்ந்து தோன்றக் கண்டேன், திளைக்குந் திருமார்பில் நீறு கண் டேன் சேணார் மதில்மூன்றும் பொன்ற அன்று, வளைத்த வரிசிலை யுங் கையிற் கண்டேன் வாய்மூர் அடிகளைநான் கண்ட வாறே. 4

கார்மலி மறையும் போதகத்தி னுரிவை கண்டேன் காலிற் கழல் கண்டேன் கரியின் தோல்கொண், டூன்மறையப் போர்த்த வடி வுங் கண்டேன் உள்கமனம் வைத்த உணர்வுங் கண்டேன், நான் மறை யானோடு நெடிய மாலும் நண்ணி வரக்கண்டேன் திண்ண மாக, மான்மறிதங் கையின் மருவக் கண்டேன் வாய்மூர் அடிகளை நான் கண்ட வாறே. 5

அடியார்‡ சிலம்பொலிகள் ஆர்ப்பக் கண்டேன் அவ் வவர்க்கே ஈந்த கருணை கண்டேன், முடியார் சடைமேல் அரவ மூழ்கமூரிப் பிறைபோய் மறையக் கண்டேன், கொடியா ரதன் மேல் இடபங் கண்டேன் கோவணமுங் கீளுங் குலாவக் கண் டேன், வடியாரும் மூவிலைவேல் கையில் கண்டேன் வாய்மூர் அடிகளைநான் கண்ட வாறே. 6

குழையார் திருத்தோடு காதிற் கண்டேன் கொக்கரையுஞ் சச்சரியுங் கொள்கை கண்டேன், இழையார் புரிநூல் வலத்தே கண்டேன் எழிசை யாழ்வீணை மூலக் கண்டேன், தழையார் சடைகண்டேன் தன்மை கண்டேன் தக்கையொடு தாளங் கறங்கக் கண்டேன், மழையார் திருமிடறும் மற்றுங் கண்டேன் வாய்மூர் அடிகளைநான் கண்ட வாறே. 7

---

† வண்ணம் பொலிந்திலங்கு என்றும் பாடம். ‡ அடி ஆர் - திருஅடியிற் பொலிந்த.

பொருந்தாத செய்கை பொலியக்† கண்டேன் போற்றி சைத்து விண்ணோர் புகழக் கண்டேன், பரிந்தார்க் கருளும் பரிசுங் கண்டேன் பாராகிப் புனலாகி நிற்கை கண்டேன், விருந்தாய்ப் பரந்த தொகுதி கண்டேன் மெல்லியலும் விநாயகனுந் தோன்றக் கண்டேன், மருந்தாய்ப் பிணிதீர்க்கு மாறு கண்டேன் வாய்மூர் அடிகளைநான் கண்ட வாறே. 8

மெய்யன்ப ரானார்க் கருளுங் கண்டேன் வேடுவனாய் நின்ற நிலையுங் கண்டேன், கையம் பரணெரித்த காட்சி கண்டேன் கங் கணமும் அங்கைக்‡ கனலுங் கண்டேன், ஐயம் பலவூர் திரியக் கண்டேன் அன்றவன்றன்§ வேள்வி யழித்து கந்து, வையம் பரவ இருத்தல் கண்டேன் வாய்மூர் அடிகளைநான் கண்ட வாறே. 9

கூலங்க இருவர்க் கழலாய் நீண்ட காரணமுங் கண்டேன் கருவாய் நின்று, பலங்கள் தரித்துகந்த பண்புங் கண்டேன் பாடல் ஒலியெலாங் கூடக் கண்டேன், இலங்கைத் தலைவன் சிரங்கள் பத்தும் இறுத்தவனுக் கீந்த பெருமை கண்டேன், வலங்கைத் தலத்துள் அனலுங் கண்டேன் வாய்மூர் அடிகளை நான் கண்ட வாறே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—வாய்மூர்நாதர்; தேவி—பாலினு நன்மொழியாள்.

---

## 66. திருமறைக்காடு||

### திருநேரிசை [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

இந்திர னோடு தேவர் இருடிகள் ஏத்து கின்ற
சுந்தர மானார் போலுந் துதிக்கலாஞ் சோதி போலுஞ்
சந்திர னோடுங் கங்கை அரவையுஞ் சடையுள் வைத்து
மந்திர மானார்போலும் மாமறைக் காட னாரே. 1

---

† பொருந்தக் என்றும் பாடம். ‡ முன்கைக் என்றும் பாடம். § அன்றவன்–இங்குத் தக்கன். || 'வேதாரண்யம்' என வழங்கப் பெறும். இது வேதங்கள் பூசித்த காரணத்தால் பெற்ற பெயர். இஃது ஏழு விடங்கத் தலங்களில் ஒன்று.

தேயன நாட ரா*கித் தேவர்கள் தேவர் போலும்
பாயன நாடP றுக்கும் பத்தர்கள் பணிய வம்மின்
காயன நாடு§ கண்டங் கதனுளார் காள கண்டர்
மாயன நாடர் போலும் மாமறைக் காட னாரே. 2

அறுமையிவ் வுலகு தன்னை யாமெனக் கருதி நின்று
வெறுமையின் மனைகள் வாழ்ந்து வினைகளால் நலிவு ணாதே
சிறுமதி அரவு கொன்றை திகழ்தரு சடையுள் வைத்து
மறுமையும் இம்மை யாவார் மாமறைக் காட னாரே. 3

கால்கொடுத் திருகை ஏற்றிக் கழிநிரைத் திறைச்சி மேய்ந்து
தோல்படுத் துதிர நீராற் சுவரெடுத் திரண்டு வாசல்
ஏல்வுடைத் தாவ மைத்தங் கேழுசா லேகம் பண்ணி
மால்†கொடுத் தாவி வைத்தார் மாமறைக் காட னாரே.T 4

விண்ணினார் விண்ணின் மிக்கார் வேதங்கள் விரும்பி யோதப்
பண்ணினார் கின்ன ரங்கள் பத்தர்கள் பாடி யாடக்
கண்ணினார் கண்ணி னுள்ளே சோதியாய் நின்ற எந்தை
மண்ணினார் வலங்கொண் டேத்தும் மாமறைக் காட னாரே. 5

அங்கையுள் அனலும் வைத்தார் அறுவகைச் சமயம் வைத்தார்S
தங்கையில் வீணை வைத்தார் தம்மடி பரவ வைத்தார்
திங்களைக் கங்கை யோடு திகழ்தரு சடையுள் வைத்தார்
மங்கையைப் பாகம் வைத்தார் மரமறைக் காட னாரே. 6

கீதராய்க் கீதங் கேட்டுக் கின்னரந் தன்னை வைத்தார்
வேதராய் வேத மோதி விளங்கிய சோதி வைத்தார்
ஏதராய்‡ நட்ட மாடி இட்டமாய்க் கங்கை யோடு
மாதையோர் பாகம் வைத்தார் மாமறைக் காட னாரே. 7

கனத்தினார் வலியு டைய கடிமதில் அரணம் மூன்றுஞ்
சினத்தினுட் சினமாய் நின்று தீயெழச் செற்றார் போலும்

---

* தேயு அன நாடர்-பேரொளியாகிய பிழம்பு. P பாயன நாடு-பரந்த பிறவியாகிய கட்டு. § காயன நாடு - உடலாகிய கோயில். † மால்-மயக்கம். T இச்செய்யுள் உடலைப்பற்றிக் கூறுவது. S அறுவகைச் சமயம் வைத்தார்-உயிர்களின் பக்குவம் நோக்கிப் படிப்படியாய் ஈடேற பல சமயங்களை உண்டு பண்ணினார். ‡ ஏதர்-மூல காரணர்.

தனத்தினைத் தவிர்ந்து நின்று தம்மடி பரவு வார்க்கு
மனத்தினுள் மாசு தீர்ப்பார் மாமறைக் காட னாரே. 8

தேசனைத் தேசன் தன்னைத் தேவர்கள் போற்றி சைப்பார்
வாசனை செய்து நின்று§ வைகலும் வணங்கு மின்கள்
காசினைக் கனலை என்றுங் கருத்தினில் வைத்த வர்க்கு
மாசினைத் தீர்ப்பர் போலும் மாமறைக் காட னாரே. 9

பிணியுடை யாக்கை தன்னைப் பிறப்பறுத் துய்ய வேண்டில்
பணியுடைத் தொழில்கள் பூண்டு பத்தர்கள் பற்றி னாலே
துணிவுடை அரக்க னோடி எடுத்தலுந் தோகை அஞ்ச
மணிமுடி பத்தி றுத்தார் மாமறைக் காட னாரே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

தேரையு மேல்க டாவித் திண்ணமாத் தெழித்து* நோக்கி
யாரையும் மேலு ணரா ஆண்மையான் மிக்கான் தன்னைப்
பாரையும் விண்ணும் அஞ்சப் பரந்ததோள் முடிய டர்த்துக்
காரிகை அஞ்ச லென்பார் கலிமறைக் காட னாரே. 1

முக்கிமுன் வெகுண்டெ டுத்த முடியுடை அரக்கர் கோனை
நக்கிருந் தூன்றிச் சென்னி நாண்மதி வைத்த எந்தை
அக்கர வாமை பூண்ட அழகனார் கருத்தி னாலே
தெக்கு†நீர்த் திரைகள் மோதுந் திருமறைக் காட னாரே. 2

மிகப்பெருத் துலாவ மிக்கா னக்கொரு தேர்க டாவி
அகப்படுத் தென்று தானும் ஆண்மையால் மிக்க ரக்கன்
உகைத்தெடுத் தான்ம லையை ஊன்றலும் அவனை யாங்கே
நகைப்படுத் தருளி னானூர் நான்மறைக் காடு தானே. 3

அந்தரந் தேர்க டாவி யாரிவ னென்று சொல்லி
உந்தினான் மாம லையை ஊன்றலும் ஒள்ள ரக்கன்
பந்தமாந் தலைகள் பத்தும் வாய்கள்விட் டலறி வீழச்
சிந்தனை செய்து விட்டார் திருமறைக் காட னாரே. 4

---

§ வாசனை செய்து நின்று – அகப்பூசையிலும் புறப்பூசையிலும் இறைவனை நிறுவி வசிக்கச்செய்து. வாசனை – மணமுமாம்.
* தெழித்து–அதட்டி. † தெக்கு–மிகுந்த.

தடுக்கவுந் தாங்க வொண்ணுத் தன்வலி யுடைய ஞகிக்
கடுக்கவோர் தேர்க டாவிக் கையிரு பதுக ளாலும்
எடுப்பன் நானென்ன பண்ட மென்றெடுத் தானை ஏங்க
அடுக்கவே வல்ல னூராம் அணிமறைக் காடு தானே. 5

நாள்முடிக் கின்ற சீரான் நடுங்கியே மீது போகான்
கோள்பிடித் தார்த்த கையான் கொடியன்மா வலிய னென்று
நீள்முடிச் சடையர் சேரும் நீள்வரை யெடுக்க லுற்ருன்
தோள்முடி நெரிய வைத்தார் தொன்மறைக் காட ஞரே. 6

பத்துவாய் இரட்டிக் கைக ளுடையன்மா வலிய னென்று
பொத்திவாய் தீமை செய்த பொருவலி அரக்கர் கோனைக்
கத்திவாய் கதற அன்று கால்விர லூன்றி யிட்டார்
முத்துவாய்த் திரைகள் மோதும் முதுமறைக் காட ஞரே. 7

பக்கமே விட்ட கையான்T பாங்கிலா மதிய ஞகிப்
புக்கனன் மாம லைக்கீழ்ப் போதுமா றறிய மாட்டான்
மிக்கமா மதிகள் கெட்டு வீரமும் இழந்த வாறே
நக்கன பூத மெல்லாம் நான்மறைக் காட ஞரே. 8

நாணஞ்சு* கைய ஞகி நன்முடி பத்தி ஞேடு
பாண‡ஞ்சு முன்னி ழந்து பாங்கிலா மதிய ஞகி
நீணஞ்சு§ தானு ணரா நின்றெடுத் தானை அன்று
ஏணஞ்சு கை¶கள் செய்தார் எழில்மறைக் காட ஞரே. 9

கங்கைநீர் சடையுள் வைக்கக் காண்டலும் மங்கை யூடத்
தெங்கையான் தேர்க டாவிச் சென்றெடுத் தான்ம லையை
முன்கைமா நரம்பு வெட்டி முன்னிருக் கிசைகள் பாட
அங்கைவாள் அருளி ஞனூர் அணிமறைக் காடு தானே. 10

திருச்சிற்றம்பலம்

---

T பக்க மேலிட்ட கையான்–பக்கங்களில் முளைத்த பலகைகளை யுடையவன். * நாலஞ்சு என்பது நாணஞ்சு எனமரீஇயிற்று. ‡ பாண்–தாழ்ச்சி. § நீள் அஞ்சு – வேண்டுமாறு நீண்டு சென்று வீழ்த்தும் ஐம்பொறிகளின் சேட்டை. நீள்+அஞ்சு=நீணஞ்சு என மருவி நின்றது. ¶ ஏண் நஞ்சுகை–கர்வம் நைந்து போதலை. ஏண்–கர்வம்.

திருக்குறுந்தொகை* [5-ம் திருமுறை]
திருச்சிற்றம்பலம்

ஓத மால்கடல் பாவி** உலகெலாம்
மாத ரார்வலங் கொள்மறைக் காடரைக்
காதல் செய்து கருதப் படுமவர்
பாத மேத்தப் பறையுநம் பாவமே. 1

பூக்குந் தாழை புறணி அருகெலாம்
ஆக்கந் தானுடை மாமறைக் காடரோ
ஆர்க்குங் காண்பரி யீர்அடி யார்தமை
நோக்கிக் காண்பது நும்பணி செய்யிலே. 2

புன்னை ஞாழல் புறணி அருகெலாம்
மன்னி னார்வலங் கொள்மறைக் காடரோ
அன்ன மெல்நடை யாளையோர் பாகமாச்
சின்ன வேடம்T உகப்பது செல்வமே. 3

அட்ட மாமலர் சூடி அடம்பொடுP
வட்டப் புன்சடை மாமறைக் காடரோ
நட்ட மாடியும் நான்மறை பாடியும்
இட்ட மாக இருக்கும் இடமிதே.S 4

நெய்த லாம்பல் நிறைவயல் சூழ்தரும்
மெய்யி னார்வலங் கொள்மறைக் காடரோ
தையல் பாகங்கொண் டீர்கவர்D புன்சடைப்
பைதல்H வெண்பிறை பாம்புடன் வைப்பதே. 5

துஞ்சும் போதுந் துயிலின்றி ஏத்துவார்
வஞ்சின் றிவலங் கொள்மறைக் காடரோ
பஞ்சின் மெல்லடிப் பாவை பலிகொணர்ந்(து)
அஞ்சி நிற்பதும் ஐந்தலை நாகமே. 6

---

* இப்பதிகத்தில் 5, 6, 7, 8-ம் பாட்டுக்கள் அகப்பொருட் சுவையுடையன. ** கடல் பரவி என்றும், கடல்வாவி என்றும் பாடம். T சின்ன வேடம்–கூறிட்ட வேடம். P அடம்பு – ஒரு வகை மலர். S 'இடம் இதே' என்ற குறிப்பினால் இப்பதிகம் கதவம் திறந்தபின் இறைவன் திருமுன்பு பாடப்பட்டது என்பர். D கவர்–நுனிபிளந்த. H பைதல்–இளைத்தல்.

திருவி னார்செல்வ மல்கு விழிவணி
மருவி னார்வலங் கொள்மறைக் காடரோ
உருவி னாளுமை மங்கையொர் பாகமாய்
மருவி னாய்கங்கை யைச்சென்னி தன்னிலே. 7

சங்கு வந்தலைக் குந்தடங் கானல்வாய்
வங்க மார்வலங் கொள்மறைக் காடரோ
கங்கை செஞ்சடை வைப்பது மன்றியே
அங்கை யில்அனல் ஏந்தல் அழகிதே. 8

சூறைக்காட் டான்விட்ட தேர்குத்த மாமலை
இறைக்காட் டியெடுத் தான்தலை ஈரைந்தும்
மறைக்காட் டான்இறை யூன்றலும் வாய்விட்டான்
இறைக்காட் டாயெம் பிரானுனை ஏத்தவே. 9

திருச்சிற்றம்பலம்

---

திருக்குறுந்தொகை* [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பண்ணின் நேர்மொழி யாளுமை பங்கரோ
மண்ணி னார்வலஞ் செய்ம்மறைக் காடரோ
கண்ணி னாலுமைக் காணக் கதவினைத்
திண்ண மாகத் திறந்தருள் செய்ம்மினே. 1

ஈண்டு செஞ்சடை யாகத்துள் ஈசரோ
மூண்ட கார்முகி லின்முறிக் கண்டரோ
ஆண்டு கொண்டநீ ரேஅருள் செய்திடும்
நீண்ட மாக்கத வின்வலி நீக்குமே. 2

அட்ட மூர்த்திய தாகிய அப்பரோ
துட்டர் வான்புரஞ் சுட்ட சுவண்ட**ரோ
பட்டங்† கட்டிய சென்னிப் பரமரோ
சட்ட இக்கத வந்திறப் பிம்மினே. 3

அரிய நான்மறை யோதிய நாவரோ
பெரிய வான்புரஞ் சுட்ட சுவண்டரோ

---

* இப்பதிகம் மறைகளால் பூசிக்கப்பட்டுக் காப்பிட்ட கதவினைத் திறக்கும்படி பாடியதாகும். **சுவண்டு—சிறந்த அடையாளம் † பட்டம் – தலைவர் என்ற அடையாளம்,

விரிகொள் கோவண ஆடை விருத்தரோ
பெரிய வான்கத வம்பிரி விக்கவே. 4

மலையில் நீடிருக் கும்மறைக் காடரோ
கலைகள் வந்திறைஞ் சுங்கழல் ஏத்தரோ
விலையில் மாமணி வண்ண வுருவரோ
தொலைவி லாக்கத வந்துணை நீக்குமே. 5

பூக்குந் தாழை புறணி* அருகெலாம்
ஆக்குந் தண்பொழில் சூழ்மறைக் காடரோ
ஆர்க்குங் காண்பரி யீர்அடி கேள்உமை
நோக்கி**க் காணக் கதவைத் திறவுமே. 6

வெந்த வெண்பொடிப் பூசும் விகிர்தரோ
அந்த மில்லி அணிமறைக் காடரோ
எந்தை நீஅடி யார்வந் திறைஞ்சிட†
இந்த‡ மாக்கத வம்பிணி நீக்குமே. 7

ஆறு சூடும் அணிமறைக் காடரோ
கூறு மாதுமைக் கீந்த குழகரோ
ஏற தேறிய எம்பெரு மான்இந்த
மாறி லாக்கத வம்வலி நீக்குமே. 8

சுண்ண வெண்பொடிப் பூசுஞ் சுவண்டரோ
பண்ணி யேறுகந் தேறும் பரமரோ
அண்ண லாதிஅ ணிமறைக் காடரோ
திண்ண மாக்கத வந்திறப் பிம்மினே. 9

விண்ணு ளார்விரும் பியெதிர் கொள்ளவே
மண்ணு ளார்வணங் கும்§மறைக் காடரோ
கண்ணி னாலுமைக் காணக் கதவினைத்
திண்ண மாகத் திறந்தருள் செய்ம்மினே.|| 10

---

* புறணி – கடற்கரையின் சுற்றிடம். ** நோக்கி – நேர்நோக்கி. † வந்து இறைஞ்சிட – (வேறு வழியாலன்றி) நேர்வழியில் வந்து வணங்க. ‡ சுவாமிகள் கதவின் முன்பு நின்று பாடியதால் இந்த என்ற அணிமைச் சுட்டைக் கூறினர். §வலங்கொள் என்றும் பாடம். || இது சில பிரதிகளில் 'ஓதமால்' என்ற பதிகத்தின் 7-ம் செய்யுளாக உள்ளது.

அரக்க னைவிர லால்அடர்த் திட்டநீர்
இரக்க மொன்றிலீர்* எம்பெரு மானிரே
சுரக்கும் புன்னைகள் சூழ்மறைக் காடரோ
சரக்க இக்கத வந்திறப் பிம்மினே. 11

திருச்சிற்றம்பலம்

திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]
திருச்சிற்றம்பலம்

தூண்டு சுடரனைய சோதி கண்டாய் தொல்லமரர் சூளா மணிதான் கண்டாய், காண்டற் கரிய கடவுள் கண்டாய் கருதுவார்க் காற்ற எளியான் கண்டாய், வேண்டுவார்** வேண்டுவதே† ஈவான் கண்டாய் மெய்ந்நெறி கண்டாய் விரத மெல்லாம், மாண்ட மனத்தார் மனத்தான் கண்டாய் மறைக்காட் டுறையும் மணாளன் தானே. 1

கைகிளரும் வீணை வலவன் கண்டாய் காபாலி கண்டாய் திகழுஞ் சோதி, மெய்கிளரும் ஞான விளக்குக் கண்டாய் மெய்யடியரர் உள்ளத்து வித்துக் கண்டாய், பைகிளரும் நாக மசைத்தான் கண்டாய் பராபரன் கண்டாய் பாசூரான் கண்டாய், வைகிளருங் கூர்வாட் படையான் கண்டாய் மறைக்காட் டுறையும் மணாளன் தானே, 2

சிலந்திக் கருள்முன்னஞ் செய்தான் கண்டாய் திரிபுரங்கள் தீவாய்ப் படுத்தான் கண்டாய், நிலந்துக்க நீர்வளிதீ யானான் கண்டாய் நிரூபியாய் ரூபியுமாய்‡ நின்றான் கண்டாய், சலந்துக்க சென்னிச் சடையான் கண்டாய் தாமரையான் செங்கண்மால் தானே கண்டாய், மலந்துக்க மால்விடையொன் றூர்ந்தான் கண்டாய் மறைக்காட் டுறையுங் மணாளன் தானே. 3

கள்ளி முதுகாட்டி லாடி கண்டாய் காலனையுங் காலாற் கடந்தான் கண்டாய், புள்ளி யுழைமானின் தோலான் கண்டாய் புலியுரிசே ராடைப் புனிதன் கண்டாய், வெள்ளிமிளிர் பிறைமுடி

---

* இரக்கம் ஒன்றிலீர் – இது கதவம் திறப்பிக்கும்படி விண்ணப்பம் செய்தும் அருள் செய்யாமையைக் கண்டு கூறிய உட்குறிப்பு, ** வேண்டுவார் – தம்மை அடைந்தோர் – அடைய விரும்புவோர். † வேண்டினர் வேண்டியதே என்றும் பாடம். ‡ நிரூபி – உருவமில்லாதவர்; ரூபி – உருவமுள்ளவர்.

மேற் சூடி கண்டாய் வெண்ணீற்றான் கண்டாய் நஞ்சேந்தின் மேய, வள்ளி மணாளற்குத் தாதை கண்டாய் மறைக்காட் டுறையும் மணாளன் தானே. 4

மூரி முழங்கொலிநீ ரானான் கண்டாய் முழுத்தழல் போல் மேனி முதல்வன் கண்டாய், ஏரி* நிறைந்தனைய செல்வன் கண் டாய் இன்னடியார்க் கின்பம் விளைப்பான் கண்டாய், ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய் அண்ணா மலையுறையெம் அண்ணல் கண்டாய், வாரி மதகளிறே போல்வான் கண்டாய் மறைக்காட் டுறையும் மணாளன் தானே. 5

ஆடல்மால் யானை யுரித்தான் கண்டாய் அகத்தியான் பள்ளி யமர்ந்தான் கண்டாய், கோடியான் கண்டாய் குழகன்** கண் டாய் குளிராரூர் கோயிலாக் கொண்டான் கண்டாய், நாடிய நன்பொருள்க ளானான் கண்டாய் நன்மையோ டிம்மைமற் றம்மை யெல்லாம், வாடிய வாட்டந் தவிர்ப்பான் கண்டாய் மறைக்காட் டுறையும் மணாளன் தானே. 6

வேலைசேர் நஞ்சம் மிடற்றான் கண்டாய் விண்தடவு பூங்கயிலை வெற்பன் கண்டாய், ஆலை†சேர் வேள்வி யழித்தான் கண்டாய் அமரர்கள் தாமேத்தும் அண்ணல் கண்டாய், பால்நெய்சேர் ஆனஞ்சும் ஆடி கண்டாய் பருப்பதத்தான் கண்டாய் பரவை மேனி, மாலையோர் கூறுடைய மைந்தன் கண்டாய் மறைக்காட் டுறையும் மணாளன் தானே. 7

அம்மை பயக்கும் அமிர்து கண்டாய் அந்தேன் தெளிகண் டாய் ஆக்கஞ் செய்திட்(டு), இம்மை பயக்கும் இறைவன் கண் டாய் என்னெஞ்சே உன்னில் இனியான் கண்டாய், மெய்ம் மையே ஞான விளக்குக் கண்டாய் வெண்காடன் கண்டாய் வினைகள் போக, மம்மர் அறுக்கும் மருந்து கண்டாய் மறைக்காட் டுறையும் மணாளன் தானே. 8

மூலநோய்§ தீர்க்கும் முதல்வன் கண்டாய் முத்தமிழும் நான் மறையும் ஆனான் கண்டாய், ஆலின்கீழ் நால்வர்க் கறத்தான் கண் டாய் ஆதியும் அந்தமு மானான் கண்டாய், பால விருத்தனு மானான்

---

* ஏரி – உள்ளூர்க்குளம்; ஊருணி. ** கோடியான்–குழகன்– கோடிக்குழகர். † ஆலை – சாலை. § மூலநோய் – ஆணவ மல நோய்.

கண்டாய் பவளத் தடவரையே போல்வான் கண்டாய், மாலேசேர் கொன்றை மலிந்தான் கண்டாய் மறைக்காட் டுறையும் மணாளன் தானே. 9

அயனவனும் மாலவனும் அறியா வண்ணம் ஆரழலாய் நீண்டுகந்த அண்ணல் கண்டாய், துயரிலங்கை வேந்தன் துளங்க† அன்று சோதிவிர லாலுற வைத்தான் கண்டாய், பெயரவற்குப் பேரருள்கள் செய்தான் கண்டாய் பேரும்¶ பெரும்படையோ டீந்தான் கண்டாய், மயருறுT வல்வினைநோய் தீர்ப்பான் கண்டாய் மறைக்காட் டுறையும் மணாளன் தானே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி–மறைக்காட்டு மணாளர், வேதாரண்யேசுவரர்;
தேவி–யாழைப்பழித்த மொழியாள்.

---

## பாண்டி நாட்டில் உள்ள தலங்கள்

### 1. திருவாலவாய்*

**திருநேரிசை [4-ம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

வேதியா வேத கீதா விண்ணவர் அண்ணா என்றென்(று)
ஓதியே மலர்கள் தூவி ஒருங்கிநின் கழல்கள் காணப்
பாதியோர் பெண்ணை வைத்தாய் படர்சடை மதியஞ் சூடும்
ஆதியே ஆல வாயில்S அப்பனே அருள்செ யாயே. 1

நம்பனே நான்மு கத்தாய் நாதனே ஞான மூர்த்தி
என்பொனே ஈசா என்றென் றேத்திநான் ஏசற் றென்றும்
பின்பினே திரிந்து நாயேன் பேர்த்தினிப் பிறவா வண்ணம்
அன்பனே ஆல வாயில் அப்பனே அருள்செ யாயே. 2

ஒருமருந் தாகி‡ யுள்ளாய் உம்பரோ டுலகுக் கெல்லாம்
பெருமருந் தாகி நின்றாய் பேரமு தின்சு வையாய்க்

---

† துளங்க–கலங்க. ¶ பேரும்–இராவணன் (அழுபவன்) என்ற பெயரும். T மயர்உறு – மயக்கத்தால் வரும். *'மதுரை' என வழங்கப்பெறும். Sஆலவாய்–கோயிலின் பெயர். ‡மருந்து–(பிறவி நோயைத் தீர்க்கும்) மருந்து.

கருமருந் தாகி யுள்ளாய் ஆளும்வல் வினைகள் தீர்க்கும்
அருமருந் தால வாயில் அப்பனே அருள்செ யாயே. 3

செய்யநின் கமல பாதஞ் சேருமா தேவர் தேவே
மையணி கண்டத் தானே மான்மறி மழுவொன் றேந்துஞ்
சைவனே[S] சால ஞானங் கற்றறி விலாத நாயேன்
ஐயனே ஆல வாயில் அப்பனே அருள்செ யாயே. 4

வெண்டலை கையில் ஏந்தி மிகவுமூர் பலிகொண் டென்றும்
உண்டது மில்லை சொல்லில் உண்டது நஞ்சு தன்னைப்
பண்டுனை நினைய மாட்டாப் பளகனேன்[¶] உளம தார
அண்டனே ஆல வாயில் அப்பனே அருள்செ யாயே. 5

எஞ்சலில் புகலி தென்றென் றேத்திநான் ஏசற் றென்றும்
வஞ்சக மொன்று மின்றி மலரடி காணும் வண்ணம்
நஞ்சினை மிடற்றில் வைத்த நற்பொருட் பதமே நாயேற்(கு)
அஞ்சலென் றால வாயில் அப்பனே அருள்செ யாயே. 6

வழுவிலா துன்னை வாழ்த்தி வழிபடுந் தொண்ட னேன்உன்
செழுமலர்ப் பாதங் காணத் தெண்டிரை நஞ்ச முண்ட
குழகனே கோல வில்லி கூத்தனே மாத்தா[T] யுள்ள
அழகனே ஆல வாயில் அப்பனே அருள்செ யாயே. 7

நறுமலர் நீருங் கொண்டு நாடோறு மேத்தி வாழ்த்திச்
செறிவன சித்தம் வைத்துத்[N] திருவடி சேரும் வண்ணம்
மறிகடல் வண்ணன் பாகா மாமறை யங்க மாறும்
அறிவனே ஆல வாயில் அப்பனே அருள்செ யாயே. 8

நலந்திகழ் வாயின் நூலாற் சருகிலைப் பந்தர் செய்த
சிலந்தியை அரச தாள அருளினாய் என்று திண்ணங்
கலந்துடன் வந்து நின்தாள் கருதிநான் காண்ப தாக
அலந்தனன் ஆல வாயில் அப்பனே அருள்செ யாயே. 9

பொடிக்கொடு பூசிப் பொல்லாக் குரம்பையிற் புந்தி யொன்றிப்
பிடித்துநின் தாள்க ளென்றும் பிதற்றிநா னிருக்க மாட்டேன்

---

S சைவனே - சிவத்துவமுடைய தலைவனே. ¶ பளகன் – குற்றமுடையவன். T மாத்து – மகத்து. N இவை ஆன்மார்த்தமாகிய நித்திய சிவபூசை செய்வதைக் குறிப்பன.

எடுப்பனென் றிலங்கைக் கோன்வந் தெடுத்தலும் இருபது தோள்
அட்டர்த்தனே ஆல வாயில் அப்பனே அருள்செ யாயே. 10

திருச்சிற்றம்பலம்

---

திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

முளைத்தானை எல்லார்க்கும் முன்னே தோன்றி முதிருஞ் சடைமுடிமேல் முகிழ்வெண் திங்கள், வளைத்தானை வல்லசுரர் புரங்கள் மூன்றும் வரைசிலையா வாசுகிமா நாணுக் கோத்துத், துளைத்தானைச் சுடுசரத்தால் துவள நீறுத் தூமுத்த வெண்முறுவல் உமையோ டாடித், திளைத்தானைத் தென்கூடல் திருவா லவாய்ச் சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 1

விண்ணுலகின் மேலார்கள் மேலான் தன்னை மேலாடு புர மூன்றும் பொடிசெய் தானைப், பண்ணிலவு பைம்பொழில்சூழ் பழனத் தானைப் பசும்பொன்னின் நிறத்தானைப் பால்நீற் றானை, உண்ணிலவு சடைக்கற்றைக் கங்கை யாளைக் கரந்துமையோ டுடனாகி இருந்தான் தன்னைத், தெண்ணிலவு தென்கூடல் திருவா லவாய்ச் சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 2

நீர்த்திரளை நீள்சடைமேல் நிறைவித் தானை நிலமருவி நீரோடக் கண்டான் தன்னைப், பாற்றிரளைப் பயின்றாட வல்லான் தன்னைப் பகைத்தெழுந்த வெங்கூற்றைப் பாய்ந்தான் தன்னைக், காற்றிரளாய் மேகத்தி னுள்ளே நின்று கடுங்குரலாய் இடிப்பானைக் கண்ணோர் நெற்றித், தீத்திரளைத் தென்கூடல் திருவா லவாய்ச் சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 3

வானமிது வெல்லா முடையான் தன்னை வரியரவக் கச்சானை வன்பேய் சூழக், கானமதில் நடமாட வல்லான் தன்னைக் கடைக் கண்ணால் மங்கையுமை நோக்கா வென்மேல், ஊன மதுவெல்லா மொழித்தான் தன்னை உணர்வாகி யடியேன துள்ளே நின்ற, தேன முதைத் தென்கூடல் திருவா லவாய்ச் சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 4

ஊரானை யுலகேழாய் நின்றான் தன்னை ஒற்றைவெண் பிறையானை உமையோ டென்றும், பேரானைப் பிறர்க்கென்று

மரியான் தன்னைப் பிணக்காட்டில் நடமாடல் பேயோ டென்றும், ஆரானை அமரர்களுக் கமுதீந் தானை அருமறையால் நான்முகனும் மாலும் போற்றும், சீரானைத் தென்கூடல் திருவா லவாய்ச் சிவ னடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 5

மூவனை* மூர்த்தியை மூவா மேனி யுடையானை மூவுலகுந் தானே யெங்கும், பாவனைப்** பாவ மறுப்பான் தன்னைப் படி யெழுத லாகாத மங்கை யோடும்†, மேவனை விண்ணோர் நடுங்கக் கண்டு விரிகடலின் நஞ்சுண் டமுத மீந்த, தேவனைத் தென்கூடல் திருவா லவாய்ச் சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 6

துறந்தார்க்குத்‡ தூநெறியாய் நின்றான் தன்னைத் துன்பந் துடைத்தாள வல்லான் தன்னை, இறந்தார்க ளென்பே அணிந் தான் தன்னை எல்லி நடமாட வல்லான் தன்னை, மறந்தார் மதில் மூன்றும் மாய்த்தான் தன்னை மற்றொருபற் றில்லா அடியேற் கென்றும், சிறந்தானைத் தென்கூடல் திருவா லவாய்ச் சிவ னடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 7

வாயானை மனத்தானை மனத்துள் நின்ற கருத்தானைக் கருத் தறிந்து முடிப்பான் தன்னைத், தூயானைத் தூவெள்ளை யேற்றான் தன்னைச் சுடர்த்திங்கட் சடையானைத் தொடர்ந்து நின்றென், தாயானைத் தவமாய தன்மை யானைத் தலையாய தேவாதி தேவர்க் கென்றும், சேயானைத் தென்கூடல் திருவா லவாய்ச் சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 8

பகைச்சுடராய்ப் பாவ மறுப்பான் தன்னைப் பழியிலியாய் நஞ்சுண் டமுதீந் தானை, வகைச்சுடராய் வல்லசுரர் புரமட் டானை வளைவிலி§யா யெல்லார்க்கும் அருள்செய் வானை, மிகைச்சுடரை விண்ணவர்கள் மேலப் பாலை மேலாய தேவாதி தேவர்க் கென் றும், திகைச்சுடரைத் தென்கூடல் திருவா லவாய்ச் சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 9

---

* மூவன்-பிரமன், திருமால், சிவன் என்ற மூவர். ** பாவன்-நிறைந்தவன். † படியெழுதலாகாத மங்கை - மீனாட்சியம்மை. ‡ துறந்தார்க்குந் என்றும் பாடம். § வளைவிலி-வேறு ஒன்றாலும் வளைக்கப்பட மாட்டாதவன்.

மலையானை மாமேரு மன்னி ஞானை வளர்புன் சடையானை வானோர் தங்கள், தலையானை யென்தலையி னுச்சிA யென்றுந் தாபித் திருந்தானைத் தானே யெங்கும், துலையாக வொருவரையு மில்லா தானைத் தோன்றாதார் மதில்மூன்றுந் துவள எய்த, சிலையானைத் தென்கூடல் திருவா லவாய்ச் சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 10

தூர்த்தனைத் தோள்முடிபத் திறுத்தான் தன்னைத் தொன்னரம்பின் இன்னிசைகேட் டருள்செய் தானைப், பார்த்தனைப் பணிகண்டு பரிந்தான் தன்னைப் பரிந்தவற்குப் பாசுபதம் ஈந்தான் தன்னை, ஆத்தனைB அடியேனுக் கன்பன் தன்னை அளவிலாப் பல்லூழி கண்டு நின்ற, தீர்த்தனைC தென்கூடல் திருவா லவாய்ச் சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி-சொக்கலிங்கப்பெருமான்; தேவி-மீனாட்சியம்மை.

---

## 2. திருப்புத்தூர்

### திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

புரிந்தமரர் தொழுதேத்தும் புகழ்தக் கோன்காண் போர் விடையின் பாகன்காண் புவன மேழும், விரிந்துபல வுயிராகி விளங்கி னான்காண் விரைக்கொன்றைக் கண்ணியன்காண் வேத நான்குந், தெரிந்துமுதல் படைத்தோனைச் சிரங்கொண் டோன்காண் தீர்த்தன்காண் திருமாலோர் பங்கத் தான்Dகாண், திருந்து வயல் புடைதழுவு திருப்புத் தூரில் திருத்தளிEயான் காண்அவனென் சிந்தை யானே. 1

வாராரும் முலைமங்கை பாகத் தான்காண் மாமறைக ளாயவன்காண் மண்ணும் விண்ணுங், கூரார்வெந் தழலவனுங் காற்றும் நீருங் குலவரையும் ஆயவன்காண் கொடுநஞ் சுண்ட, காராருங்

A தலையின் உச்சி-துவாதசாந்தத்தலம். B ஆர்த்தனை என்றும் பாடம். C இவ்வடி காலங்கடந்தவன் என்பதைக் குறிக்கும். D பாகத்தான் என்றும் பாடம். E திருத்தளி-கோயிலின் பெயர், சுவாமியின் பெயர் திருத்தளி நாதர் (ஸ்ரீ தளிநாதர்.)

கண்டன்காண் எண்தோ ளன்காண் கயிலைமலைப் பொருப்பன் காண் விருப்போ டென்றுந், தோரும் நெடுவீதித் திருப்புத் தூரில் திருத்தளியான் காண்அவனென் சிந்தை யானே. 2

மின்காட்டுங் கொடிமருங்குல் உமையாட் கென்றும் விருப்ப வன்காண் பொருப்புவலிச் சிலைக்கை யோன்காண், நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கமேறி நற்கனகக் கிழிதருமிக் கருளி னோன்காண்,A பொன்காட்டக் கடிக்கொன்றைB மருங்கே நின்ற புனக்காந்தள் கைகாட்டக் கண்டு வண்டு, தென்Cகோட்டுஞ் செழும்புறவில் திருப்புத் தூரில் திருத்தளியான் காண்அவனென் சிந்தை யானே. 3

ஏடேறு மலர்க்கமலத் தயனும் மாலும் இந்திரனும் பணிந் தேத்த இருக்கின் றான்காண், தோடேறு மலர்க்கடுக்கை வன்னி மத்தந் துன்னியசெஞ் சடையான்காண் துகள்தீர் சங்கம், நூடேறி முத்தீனுங் கானல் வேலி மறைக்காட்டு மாமணிகாண் வளங்கொள் மேதி, சேடேறி மடுப்படியுந் திருப்புத் தூரில் திருத் தளியான் காண்அவனென் சிந்தை யானே. 4

கருமருவு வல்வினைநோய் அகற்றி னான்காண் காமருபூங் கச்சியே கம்பத் தான்காண், பெருமருவு பேருலகில் பிணிகள் தீர்க்கும் பெரும்பற்றத் தண்புலியூர் மன்றாடி காண், தருமருவு கொடைத்தடக்கை அளகைக் கோன்றன் சங்காத்திD ஆரூரில் தனியா னைகாண், திருமருவு பொழில்புடைசூழ் திருப்புத் தூரில் திருத்தளியான் காண்அவனென் சிந்தை யானே. 5

காம்பாடுE தோளுமையாள் காண நட்டங் கலந்தாடல் புரிந்தவன்காண் கையில் வெய்ய, பாம்பாடப் படுதலையிற் பலி கொள் வோன்காண் பவளத்தின் பருவரைபோல் படிமத் தான் காண், தாம்பாடு சினவிடையே பகடாக் கொண்ட சங்கரன் காண் பொங்கரவக் கச்சை யோன்காண், சேம்பாடு வயல்புடை சூழ் திருப்புத் தூரில் திருத்தளியான் காண்அவனென் சிந்தை யானே. 6

---

A இவ்வடி மதுரையில் நிகழ்ந்த கடைச்சங்கத்தில் தருமிக்குப் பொற்கிளி யளித்த திருவிளையாடலைக் குறிப்பது. B கொன்றை — திருப்புத்தூரின் தலமரம். C தென்—இசை. D சங்காத்தி—தோழன். E காம்பாடு—மூங்கில் போன்ற. ஆடு—உவமவுருபு.

வெறிவிரவு மலர்க்கொன்றை விளங்கு திங்கள் வன்னியொடு விரிசடைமேல் மிலேச்சி னான்காண், பொறிவிரவு கதநாகம் அக்கி னோடு பூண்டவன்காண் பொருபுலித்தோ லாடை யான்காண், அறிவரிய நுண்பொருள்க ளாயி னான்காண் ஆயிரம்பே ருடைய வன்காண் அந்தண் கானல், செறிபொழில்சூழ் மணிமாடத் திருப்புத் தூரில் திருத்தளியான் காண்அவனென் சிந்தை யானே. 7

புக்கடைந்த வேதியற்காய்க்* காலற் காய்ந்த புண்ணியன் காண் வெண்ணகைவெள் வளையாள் அஞ்ச, மிக்கெதிர்ந்த கரிவெருவ உரித்த கோன்காண் வெண்மதியைக் கலைசேர்த்த திண்மை யோன்**காண், அக்கரும்பு பெரும்புன்னை நெருங்கு சோலை ஆரூருக் கதிபதிகாண் அந்தண் தென்றல், திக்கணைந்து வருமருங்கில் திருப்புத் தூரில் திருத்தளியான் காண்அவனென் சிந்தை யானே. 8

பற்றவன்காண் ஏனோர்க்கும் வானோ ருக்கும் பராபரன் காண் தக்கன்றன் வேள்வி செற்ற, கொற்றவன்காண் கொடுஞ் சினத்தை† யடங்கச் செற்று ஞானத்தை மேன்மிகுத்தல் கோளா‡க் கொண்ட, பெற்றியன்காண் பிறங்கருவிக் கழுக்குன் றத்தெம் பிஞ்ஞகன்காண் பேரெழிலார் காம வேளைச், செற்ற வன்காண் சீர்மருவு திருப்புத் தூரில் திருத்தளியான் காண்அவ னென் சிந்தை யானே. 9

உரமதித்த சலந்தரன்தன் ஆகங் கீண்ட வோராழி படைத் தவன்காண் உலகு சூழும், வரமதித்த கதிரவனைப் பற்கொண் டான்காண் வானவர்கோன் புயம்நெரித்த வல்லா ளன்காண், அரமதித்துச் செம்பொன்னி னாரம் பூணா அணிந்தவன்காண் அலை கடல்சூழ் இலங்கைவேந்தன், சிரம்நெரித்த சேவடிகாண் திருப்புத் தூரில் திருத்தளியான் காண்அவனென் சிந்தை யானே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—புத்தூரீசர்; திருத்தளிநாதர்; தேவி—சிவகாமியம்மை.

---

* வேதியர்க்காய்க் என்றும் பாடம். ** வெண்மதியைத் தலை சேர்த்த தண்மையோன் என்றும் பாடம். † கொடுஞ்சினம்—இங்கு ஆணவ மலம். ‡ கோள் – கொள்கை.

## 3. திரு இராமேச்சுரம்

### திருநேரிசை [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பாசமுங்* கழிக்க கில்லா அரக்கரைப் படுத்துத் தக்க
வாசமிக் கலர்கள் கொண்டு மதியினால்** மால்செய் கோயில்
நேசமிக் கன்பி னாலே நினைமின்நீர் நின்று நாளுந்
தேசமி†க் கான்இ ருந்த திருஇரா மேச்சு ரமே. 1

முற்றின நாள்கள் என்று முடிப்பதே கார ணமாய்
உற்றவன் போர்க ளாலே உணர்விலா அரக்கர் தம்மைச்
செற்றமால் செய்த கோயில் திருஇரா மேச்சு ரத்தைப்
பற்றிநீ பரவு நெஞ்சே படர்சடை ஈசன் பாலே. 2

கடலிடை மலைகள் தம்மால் அடைத்துமால் கருமம் முற்றி††
திடலி‡டைச் செய்த கோயில் திருஇரா மேச்சு ரத்தைத்
தொடலி§டை வைத்து நாவிற் சுழல்கின்றேன் தூய்மை யின்றி
உடலிடை நின்றும் பேரா ஐவர்ஆட் டுண்டு நானே. 3

குன்றுபோல் தோளு டைய குணமிலா அரக்கர் தம்மைக்
கொன்றுபோ ராழி யம்மால் வேட்கையாற் செய்த கோயில்
நன்றுபோல் நெஞ்ச மே‖நீ நன்மையை அறிதி யாயில்
சென்றுநீ தொழுதுய் கண்டாய் திருஇரா மேச்சு ரமே. 4

வீரமிக் கெயிறு காட்டி விண்ணுற நீண்ட ரக்கன்
கூரமிக் கவனைச் சென்று கொன்றுடன் கடற்ப டுத்துத்
தீரமிக் கானி ருந்த திருஇரா மேச்சு ரத்தைக்
கோரமிக் கார்த வத்தாற் கூடுவார் குறிப்பு ளாரே. 5

ஆர்வலம்¶ நம்மின் மிக்கார் என்றஅவ் வரக்கர் கூடிப்
போர்வலஞ் செய்து மிக்குப் பொருதவர் தம்மை வீட்டித்
தேர்வலஞ் செற்ற மால்செய் திருஇரா மேச்சு ரத்தைச்
சேர்மட நெஞ்ச மேநீ செஞ்சடை எந்தை பாலே. 6

---

* பாசம் – வினை. ** மதியினால் – நூலறிவினால். † தேசம் – தேசு – சிவவொளி. அம் – சாரியை. †† இவ்வடி சேதுக்கரை (சேதுபந்தனம்) செய்த வரலாற்றைக் குறிப்பது. ‡ திடல் – தீவு; கட்டிய கரையுமாம். § தொடல்–மனத்தால் எண்ணுதல். ‖ நன்று பேர் நெஞ்சமே என்றும் பாடம். ¶ ஆர்வலர் என்றும் பாடம்.

வாக்கினால் இன்பு ரைத்து வாழ்கிலார் தம்மை யெல்லாம்
போக்கினாற் புடைத்த வர்கள் உயிர்தனை யுண்டு மால்தான்
தேக்குநீர் செய்த கோயில் திருஇரா மேச்சு ரத்தை
நோக்கினால் வணங்கு வார்க்கு நோய்வினை நுணுகு மன்றே. 7

பலவுநாள் தீமை செய்து பார்தன்மேற் குழுமி வந்து
கொலைவிலார் கொடிய ராய அரக்கரைக் கொன்று வீழ்த்த
சிலையினான் செய்த கோயில் திருஇரா மேச்சு ரத்தைத்
தலையினால் வணங்கு வார்கள் தாழ்வராந் தவம தாமே. 8

கோடிமா தவங்கள் செய்து குன்றினார் தம்மை யெல்லாம்
வீடவே ச்க்க ரத்தால் எறிந்துபின் அன்பு கொண்டு
தேடிமால் செய்த கோயில் திருஇரா மேச்சு ரத்தை
நாடிவாழ் நெஞ்ச மேநீ நன்னெறி யாகு மன்றே. 9

வன்கண்ணர் வாள ரக்கர் வாழ்வினை யொன்ற றியார்
புன்கண்ண ராகி நின்று போர்கள்செய் தாரை மாட்டிச்
செங்கண்மால் செய்த கோயில் திருஇரா மேச்சு ரத்தைத்
தங்கணால் எய்த வல்லார் தாழ்வராந் தலைவன் பாலே. 10

வரைகளொத் தேயு யர்ந்த மணிமுடி அரக்கர் கோனை
விரையமுற்(று) அறவொ டுக்கி மீண்டுமால் செய்த கோயில்
திரைகள்முத் தால்வ ணங்குந்* திருஇரா மேச்சு ரத்தை
உரைகள்பத் தா**லு ரைப்பார் உள்குவார் அன்பினாலே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி – இராமநாதர்; தேவி – மலைவளர்காதலி (பர்வதவர்த்தனி).

---

## 4. திருப்பூவணம்

### திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வடிவேறு† திரிசூலந் தோன்றுந் தோன்றும் வளர்சடைமேல் இளமதியந் தோன்றுந் தோன்றும், கடியேறு கமழ்கொன்

---

* திரைகள் முத்தால் வணங்கும் – கடலரசன் அலைகளாகிய கைகளால் முத்துக்களைத் தூவி இராமேச்சுரத்தை வணங்குகிறான் என்பதாகும். ** உரைகள் பத்து-பதிகப்பாடல் பத்து. † வடியேறு என்றும் பாடம். வடிவுஏறு-ஒளி பொருந்திய; இச்சாஞானக் கிரியை வடிவுகொண்ட எனினுமாம்.

றைக் கண்ணி தோன்றுங் காதில்வெண் குழைதோடு கலந்து தோன்றும், இடியேறு களிற்றுரிவைப் போர்வை தோன்றும் எழில்திகழுந் திருமுடியு மிலங்கித் தோன்றும், பொடியேறு திருமேனி பொலிந்து தோன்றும் பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 1

ஆணாகிப் பெண்ணாய வடிவு தோன்றும் அடியவர்கட் கார முத மாகித் தோன்றும், ஊனாகி யூர்திரிவா னாகித் தோன்றும் ஒற்றைவெண் பிறைதோன்றும் பற்றார் தம்மேல், சேனாக வரை வில்லா லெரித்தல் தோன்றும் செத்தவர்தம் எலும்பினாற் செறியச் செய்த, பூணாணும் அரைஞாணும் பொலிந்து தோன்றும் பொழில் திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 2

கல்லாலின் நீழற் கலந்து தோன்றுங் கவின்மறையோர் நால்வர்க்கு நெறிக ளன்று, சொல்லாகச் சொல்லியவா தோன் றுந் தோன்றும் சூழரவும் மான்மறியுந் தோன்றுந் தோன்றும், அல்லாத காலனைமுன் அடர்த்தல் தோன்றும் ஐவகையால்* நினைவார்பால் அமர்ந்து தோன்றும், பொல்லாத புலாலெலும்பு பூணாய்த் தோன்றும் பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 3

படைமலிந்த மழுவாளும் மானுந் தோன்றும் பன்னிரண்டு கண்ணுடைய பிள்ளை** தோன்றும், நடைமலிந்த விடையோடு கொடியுந் தோன்றும் நான்மறையின் ஒலிதோன்றும் நயனந் தோன்றும், உடைமலிந்த கோவணமுங் கீளுந் தோன்று மூரல் வெண் சிரமாலை உலாவித் தோன்றும், புடைமலிந்த பூதத்தின் பொலிவு தோன்றும் பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 4

மயலாகுந் தன்னடியார்க் கருளுந் தோன்றும் மாசிலாப் புன் சடைமேல் மதியந் தோன்றும், இயல்பாக இடுபிச்சை ஏற்றல் தோன்றும் இருங்கடல்நஞ் சுண்டிருண்ட கண்டந் தோன்றும், கயல்பாயக் கடுங்கலுழிக் கங்கை நங்கை ஆயிரமா முகத்தினொடு வானில் தோன்றும், புயல்பாயச் சடைவிரித்த பொற்புத் தோன் றும் பொழில்திகழும பூவணத்தெம் புனித னார்க்கே. 5

---

* ஐவகையால் – ஐந்து முகங்களையுடைய சதாசிவமூர்த்தியாக.

** பன்னிரண்டு கண்ணுடைய பிள்ளை – முருகக்கடவுள்.

பாராழி வட்டத்தார் பரவி யிட்ட பன்மலரும் நறும்புகையும் பரந்து தோன்றும், சீராழித் தாமரையின் மலர்க ளன்ன திருந்தி யமா நிறத்தசே வடிகள் தோன்றும், ஓராழித் தேருடைய இலங்கை வேந்தன் உடல்துணித்த இடர்பாவங் கெடுப்பித் தன்று, போராழி முன்ஈந்த பொற்புத் தோன்றும் பொழில்திகழும் பூவ ணத்தெம் புனித னார்க்கே. 6

தன்னடியார்க் கருள்புரிந்த தகவு தோன்றுஞ் சதுர்முகனைத் தலையரிந்த தன்மை தோன்றும், மின்னனைய நுண்ணிடையாள் பாகந் தோன்றும் வேழத்தி னுரிவிரும்பிப் போர்த்தல் தோன் றும், துன்னியசெஞ் சடைமேலோர் புனலும் பாம்புந் தூயமா மதியுடனே வைத்தல் தோன்றும், பொன்னனைய திருமேனி‡ பொலிந்து தோன்றும் பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 7

செறிகழலுந் திருவடியுந் தோன்றுந் தோன்றுந் திரிபுரத்தை யெரிசெய்த சிலையுந் தோன்றும், நெறியதனை விரித்துரைத்த நேர்மை தோன்றும் நெற்றிமேல் கண்தோன்றும் பெற்றந் தோன் றும், மறுபிறவி யறுத்தருளும் வகையுந் தோன்றும் மலைமகளுஞ் சலமகளும் மலிந்து தோன்றும், பொறியரவும் இளமதியும் பொலிந்து தோன்றும் பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 8

அருப்போட்டு முலைமடவாள் பாகந் தோன்றும் அணி கிளரும் உருமென்ன அடர்க்குங் கேழல், மருப்போட்டு மணி வயிரக் கோவை தோன்றும் மணமலிந்த நடந்தோன்றும் மணி யார் வைகைத், திருக்கோட்டி நின்றதோர் திறமுந் தோன்றுஞ்§ செக்கர்வா னொளிமிக்குத் திகழ்ந்த சோதிப், பொருப்போட்டி நின்றதிண் புயமுந் தோன்றும் பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 9

ஆங்கணைந்த சண்டிக்கும் அருளி யன்று தன்முடிமேல் அலர் மாலை யளித்தல் தோன்றும், பாங்கணைந்து பணிசெய்வார்க் கருளி யன்று பலபிறவி அறுத்தருளும் பரிசுந் தோன்றும், கோங்கணைந்த

‡ இஃது இரசவாதம் செய்த திருவிளையாடலைக் குறிப்பது.
§ இது வையைக்கரையில் இறைவன் மண் சுமந்த வரலாற்றைக் குறிப்பது என்பர். கோடு–கரை.

கூவிளமும் மதமத் தம்முங் குழற்கணிந்த கொள்கையொடு கோலந் தோன்றும், பூங்கணைவேள் உருவழித்த பொற்புத் தோன்றும் பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 10

ஆரொருவர் உள்குவார் உள்ளத் துள்ளே அவ்வுருவாய் நிற்கின்ற அருளுந் தோன்றும்,¶ வாருருவப் பூண்முலைநன் மங்கை தன்னை மகிழ்ந்தொருபால் வைத்துகந்த வடிவுந் தோன்றும், நீருருவக் கடலிலங்கை அரக்கர் கோனை நெறுநெறென அடர்த்திட்ட நிலையுந் தோன்றும், போருருவக் கூற்றுதைத்த பொற்புத் தோன்றும் பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—பூவணநாதர்; தேவி—மின்னம்மை.

---

## கொங்குநாட்டில் உள்ள தலம்

### 1. திருப்பாண்டிக்கொடுமுடி*

திருக்குறுந்தொகை** [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

சிட்ட னைச்சிவ னைச்செழுஞ் சோதியை
அட்ட மூர்த்தியை ஆல நிழலமர்
பட்ட னைத்திருப் பாண்டிக் கொடுமுடி
நட்ட னைத்தொழ நம்வினை நாசமே. 1

பிரமன் மாலறி யாத பெருமையன்
தரும மாகிய தத்துவன் எம்பிரான்
பரம னுறை பாண்டிக் கொடுமுடி
கரும மாகத் தொழுமட நெஞ்சமே. 2

ஊச லாள்அல்லள் ஒண்கழ லாள்அல்லள்
தேச மாந்திருப் பாண்டிக் கொடுமுடி

---

¶ இவ்வடியோடு "யாதொரு தெய்வங்கண்டீர் அத்தெய்வமாகி யாங்கே, மாதொரு பாகனார்தாம் வருவர்" என்ற சிவஞான சித்தியார் அடிகளை ஒப்பு நோக்குக. * 'கொடுமுடி' என வழங்கப் பெறும், ** இப்பதிகத்தில் 6, 7, 8, 9, 10-ம் செய்யுட்கள் சிதைந்து போயின.

ஈச னேயெனும் இத்தனை யல்லது
பேசு மா(று)அறி யாளொரு பேதையே. 3.

தூண்டி யசுடர் போலொக்குஞ் சோதியான்
காண்ட லும்எளி யன்அடி யார்கட்குப்*
பாண்டிக் கொடுமுடி மேய பரமனைக்
காண்டும் என்பவர்க் கேதுங் கருத்தொணுன்.** 4

நெருக்கி யம்முடி நின்றிசை வானவர்
இருக்கொ டும்பணிந் தேத்த இருந்தவன்
திருக்கொ டும்முடி என்றலுந் தீவினைக்
கருக்கெ டும்இது கைகண்ட யோகமே. 5-10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—கொடுமுடிநாதர்; தேவி—பண்மொழிநாயகி,

---

நடுநாட்டில் உள்ள தலங்கள்

---

## 1. திருநெல்வாயில் அரத்துறை †

### திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கடவு ளைக்கட லுள்ளெழு நஞ்சுண்ட
உடலு ளானை‡ யொப் பாரி§யி லாதவெம்
அடலு ளானை அரத்துறை மேவிய
சுடரு ளானைக்கண் டீர்நாந் தொழுவதே. 1

கரும்பொப் பானைக் கரும்பினிற் கட்டியை
விரும்பொப் பானைவிண் ணோரும் அறிகிலா
அரும்பொப் பானை அரத்துறை மேவிய
சுரும்பொப் பானைக்கண் டீர்நாந் தொழுவதே. 2

---

* எளியானடியார்கட்குப் என்றும் பாடம். ** கெய்துங் கருத்திஞன் என்றும் பாடம். † 'திருவரத்துறை' எனவும் வழங்கப் பெறும். ‡ உடலுளானை – (அடையாளமாக) உடலுடையவர். § ஒப்பாரி – ஒப்பு; இகரத்தை அசையாக்கி ஒப்பார் எனினுமாம்,

ஏறொப் பானைஎல் லாவுயிர்க் கும்இறை
வேறொப் பானைவிண் ணோரும் அறிகிலா
ஆறொப் பானை அரத்துறை மேவிய
ஊறொப் பானைக்கண் டீர்நாந் தொழுவதே. 3

பரப்பொப் பானைப் பகலிருள் நன்னிலா
இரப்பொப் பானை இளமதி சூடிய
அரப்பொப் பானை அரத்துறை மேவிய
சுரப்பொப்* பானைக்கண் டீர்நாந் தொழுவதே. 4

நெய்யொப் பானைநெய் யிற்சுடர் போல்வதோர்
மெய்யொப் பானைவிண் ணோரும் அறிகிலார்
ஐ**யொப் பானை அரத்துறை மேவிய
கையொப் பானைக்கண் டீர்நாந் தொழுவதே. 5

நிதியொப் பானை நிதியிற் கிழவனை
விதியொப் பானைவிண் ணோரும் அறிகிலார்
அதியொப் பானை அரத்துறை மேவிய
கதியொப் பானைக்கண் டீர்நாந் தொழுவதே. 6

புனலொப் பானைப் பொருந்தலர் தம்மையே
மினலொப் பானைவிண் ணோரும் அறிகிலார்
அனலொப் பானை அரத்துறை மேவிய
கனலொப் பானைக்கண் டீர்நாந் தொழுவதே. 7

பொன்னொப் பானைப்பொன் னிற்சுடர் போல்வதோர்
மின்னொப் பானைவிண் ணோரும் அறிகிலார்
அன்னொப் பானை அரத்துறை மேவிய
தன்னொப் பானைக்கண் டீர்நாந் தொழுவதே. 8

காழி யானைக் கனவிடை ஊரும்மெய்
வாழி யானைவல் லோரும்என் றின்னவர்
ஆழி யான்பிர மற்கும் அரத்துறை
ஊழி யானைக்கண் டீர்நாந் தொழுவதே. 9

கலையொப் பானைக் கற்றார்க்கோ ரமுதினை
மலையொப் பானை மணிமுடி யூன்றிய

* சுரப்பு – சுரக்குமிடம்; ஊற்று. ** ஐ – தலைவன்.

*அலையொப் பானை அரத்துறை மேவிய*
*நிலையொப் பானைக்கண் டீர்நாந் தொழுவதே.* 10

திருச்சிற்றம்பலம்

---

*சுவாமி–அரத்துறைநாதர்; தேவி–ஆனந்தநாயகி.*

---

## 2. திருத்தூங்கானைமாடம்*

### திருவிருத்தம்** [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பொன்னார் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம் போற்றிசெய்யும்
என்னாவி காப்பதற் கிச்சையுண் டேலிருங் கூற்ற†கல
மின்னாரு மூவிலைச் சூலமென் மேற்பொறி மேவுகொண்டல்
துன்னார் கடந்தை‡யுள் தூங்கானை மாடச் சுடர்க்கொழுந்தே.§ 1

ஆவா சிறுதொண்ட னெAன்னினைந் தானென் றரும்பிணிநோய்
காவா தொழியிற் கலக்குமுன் மேற்பழி காதல்செய்வார்
தேவாB திருவடி நீறென்னைப் பூசுCசெந் தாமரையின்
பூவார் கடந்தையுள் தூங்கானை மாடத்தெம் புண்ணியனே. 2–9

கடவுந் திகிரி கடவா தொழியக் கயிலையுற்றான்
படவுந் திருவிரல் ஒன்றுவைத் தாய்பனி மால்வரைபோல்
இடபம் பொறித்தென்னை என்றுகொள் ளாய்இருஞ் சோலைதிங்கள்
தடவுங் கடந்தையுள் தூங்கானை மாடத்தெந் தத்துவனே. 10

திருச்சிற்றம்பலம்

---

*சுவாமி–சுடர்க்கொழுந்து நாதர்; தேவி–கடந்தைநாயகி.*

---

* இது பெண்ணாகடத்திலுள்ள சிவாலயத்தின் பெயர். **இப் பதிகத்தில் 3, 4, 5, 6, 7, 8, 9-ம் செய்யுட்கள் சிதைந்து போயின. இப்பதிகம் சூலமும் இடபமும் தன் தோள்களில் பொறிக்க வேண்டுமென வேண்டியதாகும். † கூற்று – (சமணர் தொடர்பு கொண்டவன் என்ற) சொல். ‡ கடந்தை – பெண்ணாகடத்தின் மரூஉப் பெயர். § சுடர்க் கொழுந்து – சுவாமியின் பெயர். A சிறு தொண்டன்–தொண்டருள் சிறுவன்; கடையவன். B தேவே என்றும் பாடம். C பூசு–பூசும்படி செய்.

## 3. திருஅதிகை வீரட்டானம்

**பண் – கொல்லி*** [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கூற்றாயின வாறு விலக்ககிலீர்** கொடுமைபல செய்தன நானறியேன், ஏற்றாய்அடிக்‡ கேஇர வும்பகலும் பிரியாது வணங் குவன் எப்போழுதும், தோற்றாதென் வயிற்றின் அகம்படியே குடரோடு துடக்கி முடக்கியிட, ஆற்றேன்அடி யேன்அதி கைக்கெடில வீரட்டா னத்துறை அம்மானே. 1

நெஞ்சம்உமக் கேயிட மாகவைத்தேன் நினையாதொரு போதும் இருந்தறியேன், வஞ்சம்இது வொப்பது கண்டறியேன் வயிற்றோடு துடக்கி முடக்கியிட, நஞ்சாகி வந்தென்னை நலிவதனை நணுகாமல் துரந்து கரந்துமிடீர்,¶ அஞ்சேலுமென் னீர்அதி கைக்கெடில வீரட்டா னத்துறை அம்மானே. 2

பணிந்தாரன பாவங்கள் பாற்றவல்லீர் படுவெண்டலை யிற்பலி கொண்டுழல்வீர், துணிந்தேயுமக் காட்செய்து வாழலுற்றால் சுடு கின்றது சூலை தவிர்த்தருளீர், பிணிந்தார்பொடி கொண்டுமெய் பூசவல்லீர் பெற்றமேற்றுகந் தீர்சுற்றும் வெண்டலைகொண்(டு), அணிந்தீர்அடி கேள்அதி கைக்கெடில வீரட்டா னத்துறை அம்மானே. 3

முன்னம்P அடி யேன்அறி யாமையினால் முனிந்தென்னை நலிந்து முடக்கியிடப், பின்னையடி யேனுமக் காளும்பட்டேன் சுடுகின்றது சூலை தவிர்த்தருளீர், தன்னையடைந் தார்வினை தீர்ப்ப தன்றோ தலையாயவர் தங்கட னாவதுதான், அன்னநடை யார்அதி கைக்கெடில வீரட்டா னத்துறை அம்மானே. 4

காத்தாள்பவர் காவல் இகழ்ந்தமையாற் கரைநின்றவர் கண்டுகோ ளென்றுசொல்லி, நீத்தாய கயம்புக நூக்கியிட நிலைக்கொள்ளும்

---

* இத்திருப்பதிகம் சூலைநோய் தீரும் பொருட்டு ஓதியருளிய தாகும். ** விலக்ககிலீர்–நீக்கியருளுகின்றீர் இல்லை. † ஏற்றாய் –(என்னை) ஏற்றுக்கொண்ட (உமது); இடபவாகனரே! எனினுமாம். ‡ ஏற்றுவடிக் என்றும் பாடம். ¶ கரந்தும் விடீர் என்றும் பாடம். § பாற்றுதல்–போக்குதல். P முன்னம்-முற்பிறவியிலும், இப்பிறவி யில் இதற்கு முன்னும்

வழித்துறை யொன்றறியேன், வார்த்தைஇது வொப்பது கேட் டறியேன் வயிற்றோடு துடக்கி முடக்கியிட, ஆர்த்தார்புன லார் அதி கைக்கெடில வீரட்டா னத்துறை அம்மானே. 5

சலம்பூவொடு தூபம் மறந்தறியேன் தமிழோடிசை பாடல் மறந் தறியேன், நலந்தீங்கிலும் உன்னை மறந்தறியேன் உன்னாமம் என் நாவில் மறந்தறியேன், உலந்தார்தலை யிற்பலி கொண்டுழல்வாய் உடலு*ள்ளுறு சூலை தவிர்த்தருளாய், அலந்தேன் அடி யேன் அதி கைக்கெடில வீரட்டா னத்துறை அம்மானே. 6

உயர்ந்தேன்மனை வாழ்க்கையும் ஒண்பொருளும் ஒருவர்தலை காவ லி**லாமையினால், வயந்தேயுமக் காட்செய்து வாழலுற்றால் வலிக்கின்றது சூலை தவிர்த்தருளீர், பயந்தேஎன் வயிற்றி னகம் படியே பறித்துப்புரட் டியறுத் தீர்த்திட நான், அயர்ந்தேன் அடி யேன் அதி கைக்கெடில வீரட்டா னத்துறை அம்மானே. 7

வலித்தேன்மனை வாழ்க்கை மகிழ்ந்தடியேன் வஞ்சம்மன மொன்று மிலாமையினால், சலித்தாலொரு வர்துணை யாருமில்லைச் சங்கவெண்குழைக் காதுடை எம்பெருமான், கலித்தேஎன் வயிற் றி னகம்படியே கலக்கிமலக் கிட்டு†க் கவர்ந்துதின்ன, அலுத்தேன் அடி யேன் அதி கைக்கெடில வீரட்டா னத்துறை அம்மானே. 8

பொன்போல மிளிர்வதோர் மேனியினீர் புரிபுன்சடை யீர்மெலி யும்பிறையீர், துன்பேகவ லைபிணி யென்றிவற்றை நணு காமல் துரந்து கரந்துமிடீர்,‡ என்போலிக ளும்மை இனித்தேளி யார் அடியார்படு வதிது வேயாகில், அன்பேஅமை யும்அதி கைக் கெடில வீரட்டா னத்துறை அம்மானே. 9

போர்த்தாயங்கொ ரானையின் ஈருரிதோல் புறங்காடரங் காநட மாடவல்லாய், ஆர்த்தானரக் கன்றனை மால்வரைக்கீழ் அடர்த்திட் டருள் செய்த வதுகருதாய், வேர்த்தும்புரண்டும் விழுந்தும் எழுந்தால்என் வேதனை யான விலக்கியிடாய், ஆர்த்தார் புனல் சூழ்அதி கைக்கெடில வீரட்டா னத்துறை அம்மானே. 10

திருச்சிற்றம்பலம்

---

* உடல் – இங்குக் குடர். ** தலைகாவல் – மேலிருந்து காக்கும் ஒருவர். † மலக்கிட்டு – முருக்கி உழக்கி. ‡ கரந்தும்விடீர் என்றும் பாடம்.

பண்–கொல்லி* [4-ம் திருமுறை]

திருக்கெடிலப்புனல்

திருச்சிற்றம்பலம்

சுண்ணவெண் சந்தனச் சாந்துஞ்** சுடர்த்திங்கட் சூளா மணியும்
வண்ண உரிவை யுடையும் வளரும் பவள நிறமும்
அண்ணல் அரண்முர ணேறும் அகலம் வளாய அரவும்
திண்ணன்† கெடிலப் புனலும் உடையா ரொருவர்†† தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை. 1

பூண்டதொர் கேழல்‡ எயிறும் பொன்திகழ் ஆமை புரள
நீண்டதிண் தோள்வலஞ் சூழ்ந்து நிலாக்கதிர் போலவெண் ணூலும்
காண்டகு புள்ளின் சிறகும்‡‡ கலந்த கட்டங்கக் கொடியும்
ஈண்டு கெடிலப் புனலும் உடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை. 2

ஒத்த வடத்திள நாகம் உருத்திர பட்ட§ மிரண்டும்
முத்து வடக்கண் டிகையும் முளைத்தெழு மூவிலை வேலும்
சித்த வடமும்§§ அதிகைச்|| சேணுயர் வீரட்டஞ் சூழ்ந்து
தத்துங் கெடிலப் புனலும் உடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை. 3

மடமான் மறிபொற் கலையும் மழுப்பாம் பொருகையில் வீணை
குடமால் வரையதிண் தோளுங் குனிசிலைக் கூத்தின் பயில்வும்
இடமால் தழுவிய பாகம் இருநில னேற்ற சுவடும்
தடமார் கெடிலப் புனலும் உடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை. 4

பலபல காமத்த ராகிப்|||| பதைத்தெழு வார்மனத் துள்ளே
கலமலக் கிட்டுத்¶ திரியுங் கணபதி யென்னுங் களிறும்

---

* இப்பதிகம் சமணர்கள் ஏவிய யானை அஞ்சிப் பணியும்படி ஓதியதாகும். ** சுண்ணவெண்சாந்து – திருநீறு. சந்தனச்சாந்து – சந்தனக் குழம்பு. † திண்ணென் என்றும் பாடம். †† ஒருவர் – ஒப்பற்றவர். ‡ கேழல் – பன்றி. ‡‡ புள்ளின் சிறகு – கொக்கிறகு; மலருமாம்; § உருத்திரபட்டம் – யோகபட்டம். §§ சித்தவடம் – திருவதிகையின் புறத்திலுள்ள ஒரு திருமடம். || வடமுந்திகழச் என்றும் பாடம். |||| பலபல காமத்தர் – பற்பல தீய எண்ணங்களை யுடையவர். ¶கலக்கிடுதல் – உழக்கிவிடுதல்.

வலமேந் திரண்டு சுடரும் வான்கயி லாய மலையும்
நலமார் கெடிலப் புனலும் உடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை. 5

கரந்தன கொள்ளி விளக்குங் கறங்கு துடியின் முழக்கும்
பரந்த பதினெண் கணமும் பயின்றறி யாதன பாட்டும்
அரங்கிடை நூலறி வாளர் அறியப் படாததோர் கூத்தும்
நிரந்த கெடிலப் புனலும் உடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை. 6

கொலைவரி வேங்கை அதளுங் குலவோ டிலங்குபொற் றோடும்
விலைபெறு சங்கக் குழையும் விலையில் கபாலக் கலனும்
மலைமகள் கைக்கொண்ட மார்பும் மணியார்ந் திலங்கு மிடறும்
உலவு கெடிலப் புனலும் உடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை. 7

ஆடல் புரிந்த நிலையும் அரையில் அசைத்த அரவும்
பாடல் பயின்றபல் பூதம் பல்லா யிரங்கொள் கருவி
நாடற் கரியதொர் கூத்தும் நன்குயர் வீரட்டஞ் சூழ்ந்து
ஓடுங் கெடிலப் புனலும் உடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை. 8

சூழு மரவத் துகிலுந்† துகில்கிழி கோவணக் கீளும்
யாழின் மொழியவள் அஞ்ச அஞ்சா தருவரை போன்ற
வேழ முரித்த நிலையும் விரிபொழில் வீரட்டஞ் சூழ்ந்து
தாழுங் கெடிலப் புனலும் உடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை. 9

நரம்பெழு கைகள் பிடித்து நங்கை நடுங்க மலையை
உரங்களெல் லாங்கொண் டெடுத்தான் ஒன்பதும் ஒன்றும் அலற
வரங்கள்‡ கொடுத்தருள் செய்வான் வளர்பொழில் வீரட்டஞ் சூழ்ந்து
நிரம்பு கெடிலப் புனலும் உடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை. 10

திருச்சிற்றம்பலம்

---

† மரவத்துகில்-மரவுரியாடை. ‡ வரங்கள் – நாளும் வாளும் கொடுத்தமை

**பண்–காந்தார பஞ்சமம்* [4-ம் திருமுறை]**

**திருக்கெடிலவாணர்**

திருச்சிற்றம்பலம்

முளைக்கதிர் இளம்பிறை மூழ்க வெள்ளநீர்
வளைத்தெழு சடையினர் மழலை வீணையர்
திளைத்ததோர் மான்பழுக் கையர் செய்யபொன்
கிளைத்துழித் தோன்றிடுங் கெடில வாணரே.** 1

ஏறினர் ஏறினை ஏழை தன்னொரு
கூறினர் கூறினர் வேதம் அங்கமும்
ஆறினர் ஆறிடு சடையர் பக்கமும்
கீறின வுடையினர் கெடில வாணரே. 2

விடந்திகழ் கெழுதரு மிடற்றர் வெள்ளைநீ(று)
உடம்பழ கெழுதுவர் முழுதும் வெண்ணிலாப்
படர்ந்தழ கெழுதரு சடையிற் பாய்புனல்
கிடந்தழ கெழுதிய கெடில வாணரே. 3

விழுமணி அயிலெயிற் றம்பு வெய்யதோர்
கொழுமணி நெடுவரை கொளுவிக் கோட்டினர்
செழுமணி மிடற்றினர் செய்யர் வெய்யதோர்
கெழுமணி அரவினர் கெடில வாணரே. 4

குழுவினர் தொழுதெழும் அடியர் மேல்வினை
தழுவின கழுவுவர் பவள மேனியர்
மழுவினர் மான்மறிக் கையர் மங்கையைக்
கெழுவின† யோகினர்‡ கெடில வாணரே. 5

அங்கையில் அனலெரி ஏந்தி யாறெனும்
மங்கையைச் சடையிடை மணப்பர் மால்வரை

---

* இப்பதிகத்தின் ஒவ்வொரு செய்யுளிலும் 'கெடிலவாணரே' என்று முடிவதால், இப்பதிகம் திருக்கெடிலவாணர் எனப் பெயர் பெற்றது. **செய்யபொன்..........கெடிலவாணர்–மண் நினைத்த விடத்துப் பொன் தோன்றுமாறு போலப் பாசத்தை நீக்கியவிடத்து வெளிப்படும் கெடிலவாணர் என்பதாம். † கெழுவின–பொருந்திய. ‡ மங்கையைக் கெழுவின யோகினர்–'மங்கையோ டிருந்தே யோகு செய்வானை' என்பது திருவிசைப்பா அடி.

நங்கையைப் பாகமு நயப்பர் தென்றிசைக்
கெங்கைய தெனப்படுங் கெடில வாணரே. 6

கழிந்தவர் தலைகல னேந்திக் காடுறைந்(து)
இழிந்தவ ரொருவரென் றெள்க வாழ்பவர்
வழிந்திழி மதுகர மிழற்ற மந்திகள்
கிழிந்ததேன் நுகர்தருங் கெடில வாணரே. 7

கிடந்தபாம் பருகுகண் டரிவை பேதுறக்
கிடந்தபாம் பவளையோர் மயிலென் றையுறக்
கிடந்தநீர்ச் சடைமிசைப் பிறையும் ஏங்கவே
கிடந்துதான் நகுதலைக் கெடில வாணரே. 8

வெறியுறு விரிசடை புரள வீசியோர்
பொறியுறு புலியுரி யரைய தாகவும்
நெறியுறு குழலுமை பாக மாகவும்
கிறிபட உழிதர்வர் கெடில் வாணரே. 9

பூண்டதோர் அரக்கனைப் பொருவில் மால்வரைத்
தூண்டுதோ ளவைபட அடர்த்த தாளினர்
ஈண்டுநீர்க் கமலவாய் மேதி பாய்தரக்
கீண்டுதேன் சொரிதருங் கெடில வாணரே. 10

திருச்சிற்றம்பலம்

---

கொப்பளித்த திருநேரிசை* [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

இரும்புகொப் பளித்த யானை ஈருரி போர்த்த ஈசன்
கரும்புகொப் பளித்த இன்சொற் காரிகை பாக மாகச்
சுரும்புகொப் பளித்த கங்கைத் துவலைநீர் சடையி லேற்ற
அரும்புகொப் பளித்த சென்னி அதிகைவீ ரட்ட னாரே. 1

கொம்புகொப் பளித்த திங்கட் கோணல்வெண் பிறையுஞ் சூடி
வம்புகொப் பளித்த கொன்றை வளர்சடை மேலும் வைத்துச்

---

* இப்பதிகம் முழுமையும் கொப்பளித்த என்ற சொல்லும் பொருளும் வருதலால் இப்பெயர் பெற்றது. (கொப்புளித்த என்பதும் பாடம்) கொப்பளித்தல்–தன்மை பண்பு முதலியன மிகுந்து வெளித் தோன்றுதல்.

செம்புகொப் பளித்த மூன்று மதிலுடன் சுருங்க வாங்கி
அம்புகொப் பளிக்க எய்தார் அதிகைவீ ரட்ட னாரே. 2

விடையுங்கொப் பளித்த பாதம் விண்ணவர் பரவி யேத்தச்
சடையுங்கொப் பளித்த திங்கட் சாந்தம்வெண் ணீறு பூசி
உடையுங்கொப் பளித்த நாகம் உள்குவார் உள்ளத் தென்றும்
அடையுங்கொப் பளித்த சீரார் அதிகைவீ ரட்ட னாரே. 3

கறையுங்கொப் பளித்த கண்டர் காமவேள் உருவம் மங்க
இறையுங்கொப் பளித்த கண்ணார் ஏத்துவார் இடர்கள் தீர்ப்பார்
மறையுங்கொப் பளித்த நாவர் வண்டுண்டு பாடுங்* கொன்றை
அறையுங்கொப் பளித்த சென்னி அதிகைவீ ரட்ட னாரே. 4

நீறுகொப் பளித்த மார்பர் நிழல்திகழ் மழுவொன் றேந்திக்
கூறுகொப் பளித்த கோதைக் கோல்வளை மாதோர் பாகம்
ஏறுகொப் பளித்த பாதம் இமையவர் பரவி யேத்த
ஆறுகொப் பளித்த சென்னி அதிகைவீ ரட்ட னாரே. 5

வணங்குகொப் பளித்த பாதம் வானவர் பாவி யேத்தப்||
பிணங்குகொப்பளித்தசென்னிச் சடையுடைப்பெருமை யண்ணல்
சுணங்குகொப் பளித்த கொங்கைச் சுரிகுழல் பாக மாக
அணங்குகொப் பளித்த மேனி அதிகைவீ ரட்ட னாரே. 6

சூலங்கொப் பளித்த கையர் சுடர்விடு மழுவாள் வீசி
நூலுங்கொப் பளித்த மார்பில் நுண்பொறி யரவஞ் சேர்த்தி
மாலுங்கொப் பளித்த பாகர் வண்டுபண் பாடுங் கொன்றை
ஆலங்கொப் பளித்த கண்டத் ததிகைவீ ரட்ட னாரே. 7

நாகங்கொப் பளித்த கையர் நான்மறை யாய பாடி
மேகங்கொப் பளித்த திங்கள் விரிசடை மேலும் வைத்துப்
பாகங்கொப் பளித்த மாதர் பண்ணுடன் பாடி யாட
ஆகங்கொப் பளித்த தோளார் அதிகைவீ ரட்ட னாரே. 8

பரவுகொப் பளித்த பாடல் பண்ணுடன் பத்தர் ஏத்த
விரவுகொப் பளித்த கங்கை விரிசடை மேவ வைத்து
இரவுகொப் பளித்த கண்டர் ஏத்துவா ரிடர்கள் தீர்ப்பார்
அரவுகொப் பளித்த கையர் அதிகைவீ ரட்ட னாரே. 9

---

* வண்டுபண்பாடு என்றும் பாடம். || வானவர் மருவியேத்தப் என்றும் பாடம்.

தொண்டைகொப் பளித்தசெவ்வாய்த் துடியிடைப்பரவையல்குற்
கொண்டைகொப் பளித்த கோதைக் கோல்வளை பாக மாக
வண்டுகொப் பளித்த தீந்தேன் வரிக்கயல் பருகி மாந்தக்
கெண்டைகொப் பளித்த தெண்ணீர்க் கெடிலவீ ரட்ட னாரே. 10

திருச்சிற்றம்பலம்

---

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

வெண்ணிலா மதியந் தன்னை விரிசடை மேவ வைத்து
உண்ணிலாப் புகுந்து நின்றங் குணர்வினுக் குணரக் கூறி
விண்ணிலார் மீயச்* சூரார் வேண்டுவார் வேண்டு வார்க்கே
அண்ணியார்** பெரிதுஞ் சேயார் அதிகைவீ ரட்ட னாரே. 1

பாடினார் மறைகள் நான்கும் பாயிருள் புகுந்தென் உள்ளம்
கூடினார் கூட லால வாயிலார் நல்ல கொன்றை
சூடினார் சூடல் மேவிச் சூழ்சுடர் சுடலை வெண்ணீ(று)
ஆடினார் ஆடல் மேவி அதிகைவீ ரட்ட னாரே. 2

ஊனையே கழிக்க† வேண்டில் உணர்மின்கள் உள்ளத் துள்ளே
தேனைய மலர்கள் கொண்டு சிந்தையுட் சிந்திக் கின்ற
ஏனைய பலவு மாகி இமையவர் ஏத்த நின்று
ஆனையின் உரிவை போர்த்தார் அதிகைவீ ரட்ட னாரே, 3

துருத்தியாங் குரம்பை தன்னில்‡ தொண்ணூற்றங் கறுவர்§நின்று
விருத்திதான் தருக|| வென்று வேதனை பலவுஞ் செய்ய
வருத்தியால் வல்ல வாறு வந்துவந் தடைய நின்ற
அருத்தியார்க் கன்பர் போலும் அதிகைவீ ரட்ட னாரே. 4

பத்தியால் ஏத்தி நின்று பணிபவர் நெஞ்சத் துள்ளார்
துத்திஐந் தலைய நாகஞ் சூழ்சடை முடிமேல் வைத்து

---

* விண்ணிலா மீயச் என்றும் பாடம். ** அண்ணியார் – அணிமையில் உள்ளவர். † ஊனைமெய் கழிக்க என்றும் பாடம். ‡ துருத்தியாம் குரம்பை – கொல்லன் உலையில் ஊதும் துருத்தி போன்ற காற்றடைத்த உடல். § தொண்ணூற்றங்கறுவர் – 96 தத்துவ தாத்துவிகக் கூட்டம். தத்துவம் 36 : தாத்துவிகம் 60. || விருத்திதான் தருக – வேலை தாருங்கள்.

உத்தர மலையர்* பாவை உமையவள் நடுங்க அன்று
அத்தியின் உரிவை போர்த்தார் அதிகைவீ ரட்ட னாரே. 5

வரிமுரி** பாடி யென்றும் வல்லவா றடைந்து நெஞ்சே
கரியுரி மூட வல்ல கடவுளைக் காலத் தாலே
சுரிபுரி விரிகுழலாள் துடியிடைப் பரவை யல்குல்
அரிவையோர் பாகர் போலும் அதிகைவீ ரட்ட னாரே. 6

நீதியால்† நினைசெய் நெஞ்சே நிமலனை நித்த மாகப்
பாதியாம் உமைதன் னோடும் பாகமாய் நின்ற எந்தை
சோதியாய்ச் சுடர்வி ளக்காய்ச் சுண்ணவெண் ணீற தாடி
ஆதியும் ஈறு மானார் அதிகைவீ ரட்ட னாரே. 7

எல்லியும் பகலு மெல்லாந் துஞ்சுவோர்க் கொருவர் வந்து
புல்லிய மனத்துக் கோயில் புக்கனர் காமன் என்னும்
வில்லிஐங் கணையி னானை வெந்துக நோக்கி யிட்டார்
அல்லியம் பழன வேலி அதிகைவீ ரட்ட னாரே. 8

ஒன்றவே யுணர்தி ராகில் ஓங்காரத் தொருவ னாகும்
வென்றஐம் புலன்கள் தம்மை விலக்குதற் குரியீ ரெல்லாம்
நன்றவன் நார ணனும் நான்முகன் நாடிக் காண்குற்(று)
அன்றவர்க் கரியர் போலும் அதிகைவீ ரட்ட னாரே. 9

தடக்கையால் எடுத்து வைத்துத் தடவரை குலுங்க ஆர்த்துக்
கிடக்கையால் இடர்க ளோங்கக் கிளர்மணி முடிகள் சாய
முடக்கினார் திருவி ரலால் முருகமர் கோதை பாகத்
தடக்கினார் என்னை யாளும் அதிகைவீ ரட்ட னாரே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

நம்பனே எங்கள் கோவே நாதனே ஆதி மூர்த்தி
பங்கனே பரம யோகி என்றென்றே பரவி நாளும்
செம்பொனே பவளக் குன்றே திகழ்மலர்ப் பாதங் காண்பான்
அன்பனே அலந்து‡ போனேன் அதிகைவீ ரட்ட னீரே. 1

---

* உத்தரமலையர் – இமயவேந்தன். ** வரிமுரி – இசைப்பாட்டு வகைகள். † நீதியால் – சிவாகம நெறியின்படி. ‡ அம்பொனே அலைந்தும் என்றும் பாடம்.

பொய்யினல் மிடைந்த போர்வை புரைபுரை அழுகி வீழ
மெய்யனுய் வாழ மாட்டேன் வேண்டிற்றேன் றைவர் வேண்டார்
செய்யதா மரைக ளன்ன சேவடி இரண்டுங் காண்பான்
ஐயநான் அலந்து* போனேன் அதிகைவீ ரட்ட னீரே. 2

நீதியால் வாழ மாட்டேன் நித்தலுந் தூயே னல்லேன்
ஓதியும் உணர மாட்டேன் உன்னையுள் வைக்க மாட்டேன்
சோதியே சுடரே உன்றன் தூமலர்ப் பாதங் காண்பான்
ஆதியே அலந்து போனேன் அதிகைவீ ரட்ட னீரே. 3

தெருளுமா தெருள மாட்டேன் தீவினைச் சுற்ற மென்னும்
பொருளுளே அழுந்தி நாளும் போவதோர் நெறியுங் காணேன்
இருளுமா மணிகண் டாநின் இணையடி இரண்டுங் காண்பான்
அருளுமா றருள வேண்டும் அதிகைவீ ரட்ட னீரே. 4

அஞ்சினல் இயற்றப் பட்ட ஆக்கைபெற் றதனுள் வாழும்
அஞ்சினல் அடர்க்கப் பட்டிங் குழிதரும் ஆத னேனை
அஞ்சினல் உய்க்கும் வண்ணங் காட்டினுய்க் கச்சந் தீர்ந்தேன்
அஞ்சினல் பொலிந்த சென்னி அதிகைவீ ரட்ட னீரே. 5

உறுகயி றூசல்T போல ஒன்றுவிட் டொன்று பற்றி
மறுகயி றூசல்T போல வந்துவந் துலவு நெஞ்சம்
பெறுகயி றூசல்T போலப் பிறைபுல்கு சடையாய் பாதத்(து)
அறுகயி றூச லாTனேன்P அதிகைவீ ரட்ட னீரே. 6

கழித்திலேன் காம வெந்நோய் காதன்மை என்னும் பாசம்
ஒழித்திலேன் ஊன்கண் நோக்கி உணர்வெனும் இமைதிறந்து
விழித்திலேன் வெளிறு தோன்ற வினையெனுஞ் சரக்குக் கொண்டேன்
அழித்திலேன் அயர்த்துப் போனேன் அதிகைவீ ரட்ட னீரே. 7

மன்றத்துப் புன்னை போல மரம்படு துயர மெய்தி
ஒன்றினல்S உணர மாட்டேன் உன்னையுள் வைக்க மாட்டேன்
கன்றிய காலன் வந்து கருக்குழி விழுப்ப தற்கே
அன்றினன் அலமந் திட்டேன் அதிகைவீ ரட்ட னீரே. 8

* ஐயனே அலந்து என்றும் பாடம். T கயிற்றூசல் என்றும் பாடம். P பாதத்து அறுகயிறு ஊசலானேன்–ஊசல் கயிறு அற்றால் பூமியில் சேர்வதே அல்லாமல் வேறு துணை இல்லாமைபோல எனக்கு உன் பாதமே அன்றி வேறு தாங்கும் துணை இல்லை என்பதாம். S ஒன்றினல்–மனம் ஒன்றுதலினல்.

பிணிவிடா ஆக்கை பெற்றேன் பெற்றமொன் றேறு வானே
பணிவிடா இடும்பை யென்னும் பாசனத்A தழுந்து கின்றேன்
துணிவிலேன் தூய னல்லேன் தூமலர்ப் பாதங் காண்பான்
அணியனாய் அறிய மாட்டேன் அதிகைவீ ரட்ட னீரே. 9

திருவினாள் கொழுந ஞருந் திசைமுக முடைய கோவும்
இருவரும் எழுந்தும் வீழ்ந்தும் இணைBயடி காண மாட்டாC
ஒருவனே எம்பி ரானே உன்திருப் பாதங் காண்பான்
அருவனே அருள வேண்டும் அதிகைவீ ரட்ட னீரே. 10

திருச்சிற்றம்பலம்

---

திருநேரிசை*

திருச்சிற்றம்பலம்

மடக்கினார் புலியின் தோலை மாமணி நாகங் கச்சா
முடக்கினார் முகிழ்வெண் திங்கள் மொய்சடைக் கற்றை தன்மேல்
தொடக்கினார்தொண்டைச் செவ்வாய்த் துடியிடைப்பரவை யல்குல்
அடக்கினார் கெடில வேலி அதிகைவீ ரட்ட னாரே. 1

சூடினார் கங்கை யாளைச் சூடிய துழனி கேட்டங்(கு)
ஊடினாள் நங்கை யாளும் ஊடலை யொழிக்க வேண்டிப்
பாடினார் சாம வேதம் பாடிய பாணி யாலே
ஆடினார் கெடில வேலி அதிகைவீ ரட்ட னாரே. 2

கொம்பினார் குழைத்த வேனற் கோமகன் கோல நீர்மை
நம்பினார் காண லாகா வகையதோர் நடலை செய்தார்
வெம்பினார் மதில்கள் மூன்றும் வில்லிடை எரித்து வீழ்த்த
அம்பினார் கெடில வேலிD அதிகைவீ ரட்ட னாரே. 3

மறிEபடக் கிடந்த கையர் வளரிள மங்கை பாகம்
செறிபடக் கிடந்த செக்கர்ச் செழுமதிக் கொழுந்து சூடிப்
பொறிFபடக் கிடந்த நாகம் புகையுமிழ்ந் தழல வீக்கிக்
கிறிபட நடப்பர் போலுங் கெடிலவீ ரட்ட னாரே. 4

---

A பாசனம்–பாத்திரம்; சுற்றம். B எழுந்து வீழ்ந்தும் இணை என்றும் பாடம். C காணமாட்டார் என்றும் பாடம். * இப்பதிகத்தில் 9-ம் செய்யுள் சிதைந்து போயிற்று. D வேலி–சூழவுள்ளது. E மறி–மான். F பொறி–பாம்பின் படம்.

நரிவரால் கவ்வச் சென்று நற்றசை இழந்த(து)A ஒத்த
தெரிவரால் மால்கொள் சிந்தைB தீர்ப்பதோர் சிந்தை செய்வார்
வரிவரால் உகளுந் தெண்ணீர்க் கழனிசூழ் பழன வேலி
அரிவரால் வயல்கள் சூழ்ந்த அதிகைவீ ரட்ட னாரே. 5

புள்ளலைத் துண்ட ஓட்டில் உண்டுபோய்ப் பலாசங் கொம்பின்
சுள்ளலைச் சுடலை வெண்ணீ றணிந்தவர் மணிவெள் ளேற்றுத்
துள்ளலைப் பாகன் தன்னைத் தொடர்ந்திங்கே கிடக்கின் றேனை
அள்ளலைக் கடப்பித் தாளும் அதிகைவீ ரட்ட னாரே. 6

நீறிட்ட நுதலர் வேலை நீலஞ்சேர் கண்டர் மாதர்
கூறிட்ட மெய்ய ராகிக் கூறினர் ஆறும் நான்குங்
கீறிட்ட திங்கள் சூடிக் கிளர்தரு சடையி னுள்ளால்
ஆறிட்டு முடிப்பர் போலும் அதிகைவீ ரட்ட னாரே. 7

காணிலார் கருத்தில் வாரார் திருத்தலார் பொருத்த லாகார்
ஏணிலார் இறப்பும் இல்லார் பிறப்பிலார் துறக்க லாகார்
நாணிலார் ஐவ ரோடும் இட்டெனை விரவி வைத்தார்
ஆணலார் பெண்ணும் அல்லார் அதிகைவீ ரட்ட னாரே. 8–9

தீர்த்தயா மலையை நோக்கிச் செருவலி அரக்கன் சென்று
பேர்த்தலும் பேதை அஞ்சப் பெருவிர லதனை யூன்றிச்
சீர்த்தமா முடிகள் பத்துஞ் சிதறுவித் தவனை யன்று
ஆர்த்தவாய் அலற வைத்தார் அதிகைவீ ரட்ட னாரே. 10

திருச்சிற்றம்பலம்

---

திருநேரிசை C

திருச்சிற்றம்பலம்

முன்பெலாம் இளைய காலம்D மூர்த்தியை நினையா தோடிக்
கண்கண இருமி நாளுங் கருத்தழிந் தEருத்த மின்றிப்
பின்பக லுணங்கல்F அட்டும் பேதைமார் Gபோன்றேன் உள்ளம்
அன்பனாய் வாழ மாட்டேன் அதிகைவீ ரட்ட னீரே. H 1

---

A நரிவரால்.........இழந்தது–ஒரு பழமொழி. B தெரிவரான் மாசில் சிந்தை என்றும் பாடம். C இப்பதிகத்தில் 6, 7, 8, 9–ம் செய்யுட்கள் சிதைந்து போயின D இளையகாலம் என்றும் பாடம். E இவ்வடிகள் சுவாமிகள் சமணத்தினின்று சைவம் புகுந்தபோது வயது முதிர்ந்த நிலையைக் குறிப்பால் உணர்த்துகின்றன. F உணங்கல்-சோறு. G 'பின்பகல் உணங்கல் அட்டும் பேதைமார்'-இஃது ஒரு பழமொழி. H வீரட்டனாரே என்றும் பாடம்.

கறைப்பெருங் கண்டத் தானே காய்கதிர் நமனை யஞ்சி
நிறைப்பெருங் கடலுங் கண்டேன் நீள்வரை யுச்சி கண்டேன்
பிறைப்பெருஞ் சென்னி யானே பிஞ்ஞகா இவைய னைத்தும்
அறுப்பதோர் உபாயங் காணேன் அதிகைவீ ரட்ட னீரே. 2

நாதனா ரென்ன நாளும் நடுங்கின ராகித் தங்கள்
ஏதங்கள் அறிய மாட்டார் இணையடி தொழுதோம் என்பார்
ஆதனா[P] னவனென் றெள்கி அதிகைவீ ரட்ட னேநின்
பாதநான் பரவா துய்க்கும் பழவினைப் பரிசி லேனே. 3

சுடலைசேர் சுண்ண மெய்யர் சுரும்புண விரிந்த கொன்றைப்
படலைசேர் அலங்கல் மார்பர் பழனஞ்சேர் கழனித் தெங்கின்
மடலைநீர் கிழிய வோடி அதனிடை மணிகள் சிந்தும்
கெடிலவீ ரட்ட மேய கிளர்சடை முடிய னாரே. 4

மந்திர முள்ள தாக மறிகட லெழுநெய் யாக
இந்திரன் வேள்வித் தீயில் எழுந்ததோர் கொழுந்தின் வண்ணம்§
சிந்துர மாக நோக்கித் தெருட்டுவார் தெருட்ட வந்து
கந்திரம்[T] முரலுஞ் சோலைக் கானலங் கெடிலத் தாரே. 5-9

மைஞ்ஞல மனைய கண்ணாள் பங்கன்மா மலையை யோடி
மெய்ஞ்ஞரம் புதிரம் பில்க விசைதணிந் தரக்கன் வீழ்ந்து
கைஞ்ஞரம் பெழுவிக் கொண்டு காதலால் இனிது சொன்ன
கின்னரங் கேட்டு கந்தார் கெடிலவீ ரட்ட னாரே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருவிருத்தம் * [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மாசிலொள் வாள்போல் மறியும் மணிநீர்த் திரைத்தொகுதி
ஊசலை யாடியங் கொண்சிறை அன்னம் உறங்கலுற்றால்
பாசறை நீலம் பருகிய வண்டுபண் பாடல்கண்டு
வீசுங் கெடில வடகரைத் தேS[S]ன்கை வீரட்டமே.[V] 1

---

P ஆதன் அறிவில்லாதவன். § கொடியின் வண்ணம் என்றும் பாடம். T கந்திரம்-இசை. * இப்பதிகத்தில் 8, 9, 10-ம் செய்யுட்கள் மறைந்து போயின. S கரைத்து-கரையில் உள்ளது. V வீரட்டம்-சிவபெருமான் வீரங்காட்டிய இடம் எட்டினுள் ஒன்று. ஞான சம்பந்தமுள்ள இடமுமாம். வீ-ஞானம், ரம்-சம்பந்தம்.

**பை**ங்கால் தவளை பறைகொட்டப் பாசிலை நீர்ப்படுகர்
அங்காற் குவளைமேல் ஆவி உயிர்ப்ப அருகுலவும்
செங்காற் குருகிவை சேருஞ் செறிகெடி லக்கரைத்தே
வெங்காற் குருசிலை வீரன் அருள்வைத்த வீரட்டமே. 2

**அ**ம்மலர்க் கண்ணியர் அஞ்சனஞ் செந்துவர் வாயிளையார்
வெம்முலைச் சாந்தம் விலைபெறு மாலை யெடுத்தவர்கள்
தம்மருங் குற்கிரங் கார்தடந் தோள்மெலி யக்குடைவார்
விம்மு புனற்கெடி லக்கரைத் தேஎந்தை வீரட்டமே. 3

**மீ**னுடைத் தண்புனல் வீரட்ட ரேநும்மை வேண்டுகின்ற
தியானுடைச் சில்குறை* ஒன்றுள தால்நறுந் தண்ணெருக்கின்
தேனுடைக் கொன்றைச் சடையுடைக் கங்கைத் திரைதவழும்
கூனுடைத் திங்கட் குழவிஎப் போதுங் குறிக்கொண்மினே. 4

**ஆ**ரட்ட தேனும் இரந்துண் டகமக வன்திரிந்து
வோரட்ட நிற்பித் திடுகின்ற தால்விரி நீர்ப்பரவைச்
சூரட்ட வேலவன் தாதையைச் சூழ்வய லாரதிகை
வீரட்டத் தானை விரும்பா வரும்பாவ வேதனையே. 5

**ப**டர்பொற் சடையும் பகுவாய் அரவும் பனிமதியும்
சுடலைப் பொடியுமெல் லாமுள வேயவர் தூயதெண்ணீர்க்
கெடிலக் கரைத்திரு வீரட்ட ராவர்கெட் டேனடைந்தார்
நடலைக்கு நற்றுணை** யாகுங்கண் டீரவர் நாமங்களே. 6

**கா**ளங் கடந்ததொர்† கண்டத்த ராகிக்கண் ணார்கெடில
நாளங் கடிக்கொர் நகரமு மாதிற்கு நன்கிசைந்த
தாளங்கள் கொண்டுங் குழல்கொண்டு மியாழ்கொண்டுந் தாமங்ஙனே
வேடங்கள் கொண்டும் விசும்புசெல் வாரவர் வீரட்டரே. 7-10

திருச்சிற்றம்பலம்

---

திருக்குறுந்தொகை* [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**கோ**ணல் மாமதி சூடியோர் கோவணம்
நாணில் வாழ்க்கை நயந்தும் பயனிலை

---

* குறை—விண்ணப்பம். ** நடலைக்கு நற்றுணை—துன்பத்தைப் போக்க நல்ல துணை. † காளங் கடந்தது—விடத்தை வென்றது.

பாணில்* வீணை பயின்றவன் வீரட்டம்
காணில் அல்லதென் கண்துயில் கொள்ளுமே. 1

பண்ணி னைப்பவ ளத்திரள் மாமணி
அண்ண லைஅம ரர்தொழு மாதியைச்
சுண்ண வெண்பொடி யான்திரு வீரட்டம்
நண்ணி லல்லதென் கண்துயில் கொள்ளுமே. 2

உற்ற வர்தம் உறுநோய் களைபவர்
பெற்றம் ஏறும் பிறங்கு சடையினர்
சுற்றும் பாய்புனல் சூழ்திரு வீரட்டம்
கற்கி லல்லதென் கண்துயில் கொள்ளுமே. 3

முற்று வெண்மதி சூடும் முதல்வனார்
செற்றார் வாழுந் திரிபுரந் தீயெழ
விற்றான் கொண்டெயில் எய்தவன் வீரட்டம்
கற்று லல்லதென் கண்துயில் கொள்ளுமே. 4

பல்லா ரும்பல தேவர் பணிபவர்
நல்லா ருந்நயந் தேத்தப் படுபவன்
வில்லால் மூவெயில் எய்தவன் வீரட்டம்
கல்லே னாகிலென் கண்துயில் கொள்ளுமே. 5

வண்டார் கொன்றையும் மத்தம் வளர்சடைக்
கொண்டான் கோல மதியோ டரவமும்
விண்டார் மும்மதில் எய்தவன் வீரட்டம்
கண்டா லல்லதென் கண்துயில் கொள்ளுமே. 6

அரையார் கோவண ஆடைய னுறைலாந்
திரையார் ஒண்புனல் பாய்கெடி லக்கரை
விரையார் நீற்றன் விளங்குவீ ரட்டன்பால்
கரையே** னாகிலென் கண்துயில் கொள்ளுமே. 7

நீறு டைத்தடந் தோளுடை நின்மலன்
ஆறு டைப்புனல் பாய்கெடி லக்கரை
ஏறு டைக்கொடி யான்திரு வீரட்டம்
கூறி லல்லதென் கண்துயில் கொள்ளுமே. 8

* பண் என்பது பாண் என நின்றது. பாணில் – பாணர் பயில் என்றலுமாம். ** கரைதல் – சொல்லுதல்.

செங்கண் மால்விடை யேறிய செல்வனார்
பைங்க ணானையின் ஈருரி போர்த்தவன்A
அங்கண் ஞாலம தாகிய வீரட்டம்
கங்கு லாகBஎன் கண்துயில் கொள்ளுமே. 9

பூணா ணாரம் பொருந்த வுடையவர்
நாணா கவ்வரை வில்லிடை யம்பினால்
பேணார் மும்மதில் எய்தவன் வீரட்டம்
காணே னாகிலென் கண்துயில் கொள்ளுமே. 10

வரையார்ந் தவயி ரத்திரள் மாணிக்கம்
திரையார்ந் தபுனல் பாய்கெடி லக்கரை
விரையார் நீற்றன் விளங்கிய வீரட்டம்
உரையே னாகிலென் கண்துயில் கொள்ளுமே. 11

உலந்தார் வெண்டலை உண்கல னாகவே
வலந்தான் மிக்கவன்C வாளரக் கன்றனைச்
சிலம்பார் சேவடி யூன்றினான் வீரட்டம்
புலம்பேD னாகிலென் கண்துயில் கொள்ளுமே. 12

திருச்சிற்றம்பலம்

---

திருக்குறுந்தொகைE [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

எட்டு நாண்மலர்F கொண்டவன் சேவடி
மட்ட லர்இடு வார்வினை மாயுமால்
கட்டித் தேன்கலந் தன்ன கெடிலவீ
ரட்ட னாரடி சேரு மவருக்கே. 1

நீள மாநினைந் தெண்மலர் இட்டவர்
கோள வல்வினை யுங்குறை விப்பரால்
வாள மாலிழி யுங்கெடி லக்கரை
வேளி சூழ்ந்தழ காயவீ ரட்டரே. 2

---

A போர்த்தவர் என்றும் பாடம். B கங்கிலாக என்றும் பாடம். C மிக்கவவ் என்றும் பாடம். D புலம்பல்-வருத்தமிகுதியால் பன்னிப் பன்னிப் பேசுதல். E இப்பதிகம் அட்ட புட்பங்கொண்டு அர்ச்சித்திடும் பயனைக்கூறுகின்றது. F எட்டு நாண்மலர்-அட்ட புட்பம்.

கள்ளின் நாண்மல ரோரிரு நான்குகொண்(டு)
உள்கு வாரவர் வல்வினை யோட்டுவார்
தெள்ளு நீர்வயல் பாய்கெடி லக்கரை
வெள்ளை நீறணி மேனிவீ ரட்டரே. 3

பூங்கொத் தாயின மூன்றொடோ ரைந்திட்டு†
வாங்கி நின்றவர்‡ வல்வினை யோட்டுவார்
வீங்கு தண்புனல் பாய்கெடி லக்கரை
வேங்கைத் தோலுடை யாடைவீ ரட்டரே. 4

தேனைI ப் போதுகள் மூன்றொடோ ரைந்துடன்
தானப் போதிடு வார்வினை தீர்ப்பவர்
மீனத் தண்புனல் பாய்கெடி லக்கரை
வேன லானை யுரித்தவீ ரட்டரே. 5

ஏழித் தொன்மலர் கொண்டு பணிந்தவர்
ஊழித் தொல்வினை யோட அகற்றுவார்
பாழித் தண்புனல் பாய்கெடி லக்கரை
வேழத் தின்னுரி போர்த்தவீ ரட்டரே. 6

உரைசெய் நூல்வழிT யொண்மலர் எட்டிடத்
திரைகள் போல்வரு வல்வினை தீர்ப்பரால்
வரைகள் வந்திழி யுங்கெடி லக்கரை
விரைகள் சூழ்ந்தழ காயவீ ரட்டரே. 7

ஓலிP வண்டறை ஒண்மலர் எட்டினால்
காலை யேத்த வினையைக் கழிப்பரால்
ஆலிS வந்திழி யுங்கெடி லக்கரை
வேலி சூழ்ந்தழ காயவீ ரட்டரே. 8

தாரித் துள்ளித் தடமலர் எட்டினால்
பாரித் தேத்தவல் லார்வினை பாற்றுவார்
மூரித் தெண்டிரை பாய்கெடி லக்கரை
வேரிச் செஞ்சடை வேய்ந்தவீ ரட்டரே. 9

---

† மூன்றொடு ஓரைந்து பூங்கொத்து என்க. இஃது அட்ட புட்பம். ‡ வாங்கி நின்றவர்–வணங்கி நின்றவர். I தேனை என்றும் பாடம். தேனை என்பதில் ஐ: அசை. T நூல் வழி–சிவாகம விதிப் படி. P ஓலி-ஓலம்: ஒலி. S ஆலி-அசைத்து ஒலித்து.

அட்ட புட்பம் அவைகொளு மாறுகொண்(டு)
அட்ட மூர்த்தி அனாதிதன் பாலணைந்(து)
அட்டு மாறுசெய் கிற்பஅ திகைவீ
ரட்ட னாரடி சேரு மவர்களே. 10

திருச்சிற்றம்பலம்

---

## ஏழைத்திருத்தாண்டகம்* [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**வெ**றிவிரவு கூவிளநல் தொங்க லானை வீரட்டத் தானை வெள்ளேற்றி னானைப், பொறியரவி னானைப்புள் ளூர்தி யானைப் பொன்னிறத்தி னானைப் புகழ்தக் கானை, அறிதற் கரியசீ ரம்மான் தன்னை அதியரைய மங்கை அமர்ந்தான் தன்னை, எறிகெடிலத் தானை இறைவன் தன்னை ஏழையே னான்பண் டிகழ்ந்த வாறே. 1

**வெ**ள்ளிக் குன்றன்ன விடையான் தன்னை வில்வலான்** வில்வட்டங் காய்ந்தான் தன்னைப், புள்ளி வரிநாகம் பூண்டான் தன்னைப் பொன்பிதிர்ந் தன்ன சடையான் தன்னை, வள்ளி வளைத் தோள் முதல்வன் தன்னை வாரா வுலகருள வல்லான் தன்னை, எள்கவிடு பிச்சை யேற்பான் தன்னை ஏழையே னான்பண் டிகழ்ந்த வாறே. 2

**மு**ந்தி யுலகம் படைத்தான் தன்னை மூவா முதலாய மூர்த்தி தன்னைச், சந்தவெண் திங்கள் அணிந்தான் தன்னைத் தவநெறிகள் சாதிக்க வல்லான் தன்னைச், சிந்தையில் தீர்வினையைத் தேனைப் பாலைச் செழுங்கெடில வீரட்டம் மேவி னானை, எந்தை பெருமானை ஈசன் தன்னை ஏழையே னான்பண் டிகழ்ந்த வாறே. 3

**ம**ந்திரமும் மறைப்பொருளு மானான் தன்னை மதியமும் ஞாயிறுங் காற்றுந் தீயும், அந்தரமு மலைகடலு மானான் தன்னை அதியரைய மங்கை அமர்ந்தான் தன்னைக், கந்தருவஞ்† செய் திருவர்‡ கழல்கை கூப்பிக் கடிமலர்கள் பலதூவிக் காலை மாலை, இந்திரனும் வானவருந் தொழச்செல் வானை ஏழையே னான்பண் டிகழ்ந்த வாறே. 4

---

* 'ஏழையேன் நான் பண்டு இகழ்ந்தவாறே' என்று இப்பதிகப் பாட்டுக்கள் தோறும் முடிவு பெறுதலால் இப்பெயர் பெற்றது. ** வில்வலான்-மன்மதன். † கந்தருவம்-பாட்டு, ‡ இருவர்-அசுவதரன், கம்பளன் என்ற கந்தருவர்கள் இருவர்.

ஒருபிறப்பி லானடியை உணர்ந்துங் காணார் உயர்கதிக்கு வழி தேடிப் போக மாட்டார், வருபிறப்பொன் றுணராது மாசு பூசி வழிகாணா தவர்போல்வார் மனத்த னாகி, அருபிறப்பை அறுப்பிக்கும் அதிகை யூரன் அம்மான்றன் அடியிணையே அணைந்து வாழா, திருபிறப்பும் வெறுவியராய்* இருந்தார் சொற்கேட் டேழையே னான்பண் டிகழ்ந்த வாறே. 5

ஆறேற்க வல்ல சடையான் தன்னை அஞ்சனம் போலும் மிடற்றான் தன்னைக், கூறேற்கக் கூறமர வல்லான் தன்னைக் கோல் வளைக்கை மாதராள் பாகன் தன்னை, நீறேற்கப் பூசும் அகலத் தானை நின்மலன் தன்னை நிமலன் தன்னை, ஏறேற்க வேறுமா வல்லான் தன்னை ஏழையே னான்பண் டிகழ்ந்த வாறே. 6

குண்டாக்க னாய்†உழன்று கையி லுண்டு குவிமுலையார் தம் முன்னே நாண மின்றி, உண்டியுகந் தமணே நின்றார் சொற்கேட் டுடனாகி யுழிதந்தேன் உணர்வொன் றின்றி, வண்டுலவு கொன்றையங் கண்ணி யானை வானவர்க ளேத்தப் படுவான் தன்னை, எண்டிசைக்கும் மூர்த்தியாய் நின்றான் தன்னை ஏழையே னான் பண் டிகழ்ந்த வாறே. 7

உறிமுடித்த‡ குண்டிகைதங் கையில் தூக்கி ஊத்தைவாய்ச் சமணர்க்கோர் குண்டாக் கனாய்க், கறிவிரவு நெய்சோறு கையி லுண்டு கண்டார்க்குப் பொல்லாத காட்சி யானேன், மறிதிரை நீர்ப் பவ்வநஞ் சுண்டான் தன்னை மறித்தொருகால் வல்வினையேன் நினைக்க மாட்டேன், எறிகெடில நாடர் பெருமான் தன்னை ஏழையே னான்பண் டிகழ்ந்த வாறே. 8

நிறைவார்ந்த நீர்மையாய் நின்றான் தன்னை நெற்றிமேற் கண்ணொன் றுடையான் தன்னை, மறையானை மாசொன்றி லாதான் தன்னை வானவர்மேல் மலரடியை வைத்தான் தன்னைக், கறையானைக் காதார் குழையான் தன்னைக் கட்டங்கம் ஏந்திய கையி னானை, இறையானை எந்தை பெருமான் தன்னை ஏழையே னான்பண் டிகழ்ந்த வாறே. 9

---

* வெறுவியராய் – வீணராய். † குண்டரக்கன் என்பதும் பாடம். குண்டன்–கீழோன். ‡ உறிபிடித்த என்றும் பாடம்.

தொல்லைவான் சூழ்வினைகள் சூழப் போந்து தூற்றியே னூற்றியேன் சுடராய் நின்று, வல்லையே இடர்தீர்த்திங் கடிமை கொண்ட வானவர்க்குந் தானவர்க்கும் பெருமான் தன்னைக், கொல்லைவாய்க் குருந்தொசித்துக் குழலும் ஊதுங் கோவலனும் நான்முகனுங் கூடி* எங்கும், எல்லைகாண் பரியானை எம்மான் தன்னை ஏழையே னன்பண் டிகழ்ந்த வாறே. 10

மூலைமறைக்கப் பட்டுநீ ராடாப் பெண்கள் முறைமுறை யால்** நந்தெய்வ மென்று தீண்டித், தலைபறிக்குந் தன்மையர்க ளாகிநின்று தவமேயென் றவஞ்செய்து தக்க தோரார், மலைமறிக் கச்சென்ற இலங்கைக்கோனை மதனழியச் செற்றசே வடியி னானை, இலைமறித்த கொன்றையந் தாரான் தன்னை ஏழையே னான் பண் டிகழ்ந்த வாறே. 11

திருச்சிற்றம்பலம்

---

## அடையாளத் திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

சந்திரனை மாகங்கைத் திரையால் மோதச் சடாமகுடத் திருத் துமே சாம வேத, கந்தருவம் விரும்புமே கபால மேந்து கையனே மெய்யனே கனக மேனிப், பந்தணவு மெல்விரலாள் பாக னாமே பசுவேறு மேபரம† யோகி யாமே, ஐந்தலைய மாசுணங்கொண் டரையார்க் கும்மே அவனாகில் அதிகைவீ ரட்ட னாமே. 1

ஏறேறி யேழுலகும் உழிதர் வானே இமையவர்கள் தொழு தேத்த இருக்கின் றானே, பாறேறு படுதலையிற் பலிகொள் வானே படவரவந் தடமார்பிற் பயில்வித் தானே, நீறேறு செழும்பவளக் குன்றொப் பானே நெற்றிமேல் ஒற்றைக்கண் நிறைவித் தானே, ஆறேறு சடைமுடிமேற் பிறைவைத் தானே அவனாகில் அதிகைவீ ரட்ட னாமே. 2

முண்டத்திற் பொலிந்திலங்கு மேனி யானே‡ முதலாகி நடுவாகி முடிவா னானே, கண்டத்தில் வெண்மருப்பின் காறை யானே கதநாகங் கொண்டாடுங் காட்சி யானே, பிண்டத்தின் இயற்கைக்கோர் பெற்றி யானே பெருநிலநீர் தீவளிஆ காச

---

* கோவலன் நான்முகன் கூடி என்றும் பாடம். ** முறை முறையே என்றும் பாடம். † பசுவேறுமெம்பரம என்றும் பாடம். ‡ திலங்கு நெற்றியானே என்றும் பாடம்.

மாகி, அண்டத்துக் கப்பாலாய் இப்பா லானே அவனாகில் அதிகைவீ ரட்ட னாமே. 3

செய்யனே கரியனே கண்டம் பைங்கண் வெள்ளெயிற்று டாவனே வினைகள் போக, வெய்யனே தண்கொன்றை மிலைத்த சென்னிச் சடையனே விளங்குமழுச் சூல மேந்துங், கையனே காலங்கள் மூன்று னானே கருப்புவில் தனிக்கொடும்பூண் காமற் காய்ந்த, ஐயனே பருத்துயர்ந்த ஆனேற் றானே அவனாகில் அதிகைவீ ரட்ட னாமே. 4

பாடுமே யொழியாமே நால்வே தம்மும் படர்சடைமேல் ஒளிதிகழப் பணிவெண் திங்கள், சூடுமே அரைதிகழத் தோலும் பாம்புஞ் சுற்றுமே தொண்டைவாய் உமையோர் பாகங், கூடுமே குடமுழவம் வீணை தாளங் குறுநடைய சிறுபூதம் முழக்கமாக்கூத், தாடுமே அந்தடக்கை அனலேந் தும்மே அவனாகில் அதிகைவீ ரட்ட னாமே. 5

ஒழித்திடுமே உள்குவார் உள்ளத் துள்ள உறுபிணியுஞ் செறுபகையும் ஒற்றைக் கண்ணால், விழித்திடுமே காமனையும் பொடியாய் வீழ வெள்ளப் புனற்கங்கை செஞ்ச டைமேல், இழித்திடுமே ஏழுலகுந் தானா கும்மே இயங்குந் திரிபுரங்க ளோரம் பினால், அழித்திடுமே ஆதிமா தவத்து ளானே அவனாகில் அதிகைவீ ரட்ட னாமே. 6

சூழலோடு கொக்கரைகைத் தாளம் மொந்தை குறட்பூதம் முன்பாடத் தாடும்மே, கழலாடு திருவிரலாற் கரணஞ்†செய்து கனவின்கண் திருவுருவந் தான்காட் டும்மே, எழிலாருந் தோள் வீசி நடமா டும்மே ஈமப் புறங்காட்டில் ஏமந் தோறும், அழலாடு மேஅட்ட மூர்த்தி யாமே அவனாகில் அதிகைவீ ரட்ட னாமே. 7

மாலாகி மதமிக்க களிறு தன்னை வதைசெய்து மற்றதனின் உரிவை கொண்டு, மேலாலுங் கீழாலுந் தோன்றா வண்ணம் வெம்புலால் கைகலக்க மெய்போர்த் தானே, கோலாலம்‡ படவரைநட் டரவு சுற்றிக் குரைகடலைத் திரையலறக் கடைந்து கொண்ட, ஆலால முண்டிருண்ட கண்டத் தானே அவனாகில் அதிகைவீ ரட்ட னாமே. 8

---

† கரணம்-கூத்து வகைகளுள் ஒன்று. ‡ கோலாலம்-கூக்குரல்.

செம்பொனாற் செய்தழகு பெய்தாற் போலுஞ் செஞ்சடையெம் பெருமானே தெய்வ நாறும், வம்பினுள் மலர்Aக்கூந்த லுமையாள் காதல் மணவாள னேவலங்கை மழுவா ளனே, நம்பனே நான் மறைகள் தொழநின் றானே நடுங்காதார் புரமூன்றும் நடுங்கச் செற்ற, அம்பனே அண்டகோ சரத்துB ளானேC அவனுகில் அதிகைவீ ரட்ட னமே. 9

எழுந்ததிரை நதித்திவலைD நனைந்த திங்கள் இளநிலாத் திகழ்கின்ற வளர்ச டையனே, கொழும்பவளச் செங்கனிவாய்க் காமக் கோட்டிE கொங்கையிணை யமர்பொருது கோலங் கொண்ட, தழும்புளவே வரைமார்பில் வெண்ணூ லுண்டே சாந்தமொடு சந்தனத்தின் அளறு தங்கி, அழுந்தியசெந் திருவுருவில் வெண்ணீற் றானே அவனுகில் அதிகைவீ ரட்ட னமே. 10

நெடியானும் நான்முகனும் நேடிக் காணு நீண்டானே நேரொருவ ரில்லா தானே, கொடியேறு கோலமா மணிFகண் டனே கொல்வேங்கை அதளனே கோவ ணவனே, பொடியேறு மேனியனே ஐயம் வேண்டிப் புவலோகந் திரியுமே புரிநூ லானே, அடியாரை அமருலகம் ஆள்விக் கும்மே அவனுகில் அதிகைவீ ரட்ட னமே. 11

திருச்சிற்றம்பலம்

---

## போற்றித் திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

எல்லாஞ் சிவனென்னG நின்றாய் போற்றிH எரிசுடராய் நின்ற இறைவா போற்றி, கொல்லார் மழுவாட் படையாய் போற்றி கொல்லுங்கூற் றொன்றை உதைத்தாய் போற்றி, கல்லாதார் காட்சிக் கரியாய் போற்றி கற்றா ரிடும்பை களைவாய் போற்றி, வில்லால் வியனரணம் எய்தாய் போற்றி வீரட்டங் காதல் விமலா போற்றி. 1

---

A வம்புலாமலர் என்றும் பாடம். B அண்டகோசரம்-அண்டங்கள்யாவும் சேர்ந்த கூட்டம். C அண்டகோசத்துளானே என்றும் பாடம். D நதித்துவலை என்றும் பாடம். E காமக்கோட்டி - காமாட்சியம்மையார். கோட்டம் - கோயில். F கோலமார்மணி என்றும் பாடம். G எல்லாருஞ் சிவனென்ன என்றும் பாடம். H போற்றி-காப்பாற்றுக; வணக்கமுமாம்.

பாட்டுக்கும் ஆட்டுக்கும் பண்பா போற்றி பல்லூழி யாய படைத்தாய் போற்றி, ஓட்டகத்தே யூண உகந்தாய் போற்றி உள்குவார் உள்ளத் துறைவாய் போற்றி, காட்டகத்தே ஆடல் மகிழ்ந்தாய் போற்றி கார்மேக மன்ன மிடற்றாய் போற்றி, ஆட்டுவதோர் நாகம் அசைத்தாய் போற்றி அலைகெடில வீரட்டத் தாள்வாய் போற்றி. 2

முல்லையங் கண்ணி முடியாய் போற்றி முழுநீறு பூசிய மூர்த்தி போற்றி, எல்லை நிறைந்த குணத்தாய் போற்றி ஏழ் நரம்பி னோசை படைத்தாய் போற்றி, சில்லைச் சிரைத்தலையில் ஊண போற்றி சென்றடைந்தார் தீவினைகள் தீர்ப்பாய் போற்றி, தில்லைச்சிற் றம்பலம் மேயாய் போற்றி திருவீரட் டானத்தெஞ் செல்வா போற்றி. 3

சாம்பர் அகலத் தணிந்தாய் போற்றி தவநெறிகள் சாதித்து நின்றாய்P போற்றி, கூம்பிT த் தொழுவார்தங் குற்றே வலைக் குறிக் கொண் டிருக்குங் குழகா போற்றி, பாம்பும் மதியும் புனலுந் தம்மிற் பகைதீர்த் துடன்வைத்த பண்பா போற்றி, ஆம்பல் மலர்கொண் டணிந்தாய் போற்றி அலைகெடில வீரட்டத் தாள் வாய் போற்றி. 4

நீறேறு நீல மிடற்றாய் போற்றி நிழல்திகழும் வெண்மழு வாள் வைத்தாய் போற்றி, கூறே(று) உமையொருபாற் கொண் டாய் போற்றி கோளரவம் ஆட்டுங் குழகா போற்றி, ஆறேறு சென்னி யுடையாய் போற்றி அடியார்கட் காரமுத மானாய் போற்றி, ஏறேற என்றும் உகப்பாய் போற்றி இருங்கெடில வீரட்டத் தெந்தாய் போற்றி. 5

பாடுவார் பாடல் உகப்பாய் போற்றி பழையாற்றுப் பட்டீச் சுரத்தாய்S போற்றி, வீடுவார் வீடருள வல்லாய் போற்றி வேழத் துரிவெருவப் போர்த்தாய் போற்றி, நாடுவார் நாடற் கரியாய் போற்றி நாகம் அரைக்கசைத்த நம்பா போற்றி, ஆடும்ஆன் ஐந்தும் உகப்பாய் போற்றி அலைகெடில வீரட்டத் தாள்வாய் போற்றி. 6

மண்துளங்க ஆடல் மகிழ்ந்தாய் போற்றி மால்கடலும் மால் விசும்பு மானாய் போற்றி, விண்துளங்க மும்மதிலும் எய்தாய்

---

P சாதிக்க வல்லாய் என்றும் பாடம். T கூம்பி-மனம் ஒடுங்கி.
S பழையாறு, பட்டீச்சுரம் தனித்தனியே சமீபத்தில் உள்ள தலங்கள்.

போற்றி வேழத் துரிமூடும் விகிர்தா* போற்றி, பண்துளங்கப் பாடல் பயின்றாய் போற்றி பார்முழுதும் ஆய பரமா போற்றி, கண்துளங்கக் காமனைமுன் காய்ந்தாய் போற்றி கார்க்கெடிலங் கொண்ட கபாலீ போற்றி. 7

வெஞ்சினவெள் ளேறூர்தி யுடையாய் போற்றி விரிசடைமேல் வெள்ளம் படைத்தாய் போற்றி, துஞ்சாப் பலிதேருந் தோன்றால் போற்றி தொழுதகைதுன் பந் துடைப்பாய் போற்றி, நஞ்சொடுங்குங் கண்டத்து நாதா போற்றி நான்மறையோ டாறங்க மானாய் போற்றி, அஞ்சொலாள் பாகம் அமர்ந்தாய் போற்றி அலைகெடில வீரட்டத் தாள்வாய் போற்றி. 8

சிந்தையாய் நின்ற சிவனே போற்றி சீபர்ப்ப தஞ்சிந்தை செய்தாய் போற்றி, புந்தியாய்ப் புண்டரிகத் துள்ளாய் போற்றி புண்ணியனே போற்றி புனிதா போற்றி, சந்தியாய் நின்ற சதுரா போற்றி தத்துவனே போற்றிஎன் தாதாய் போற்றி, அந்தியாய் நின்ற அரனே போற்றி அலைகெடில வீரட்டத் தாள்வாய் போற்றி. 9

முக்கணா போற்றி முதல்வா போற்றி முருகவேள் தன்னைப் பயந்தாய் போற்றி, தக்கணா** போற்றி தருமா போற்றி தத்துவனே போற்றிஎன் தாதாய் போற்றி, தொக்கணா வென்றிருவர் தோள்கை கூப்பத் துளங்கா தெரிசுடராய் நின்றாய் போற்றி, எக்கண்ணுங் கண்ணிலேன்† எந்தாய் போற்றி எறிகெடில வீரட்டத் தீசா போற்றி. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருவடித் திருத்தாண்டகம் ‡

திருச்சிற்றம்பலம்

அரவணையான்§ சிந்தித் தரற்றும்மடி அருமறையான் சென்னிக் கணியாமடி, சரவணத்தான் கைதொழுது சாரும்மடி சார்ந்தார்கட் கெல்லாஞ் சரணமடி, பரவுவார் பாவம் பறைக்கும்

---

* மூடும்வித்தே என்றும் பாடம். ** தக்கணன் – தட்சிணாமூர்த்தி. † கண்ணிலேன் – (வேறு) பற்றுக்கோடு இல்லேன். ‡ இது திருவடித் தன்மைகளைப்பற்றிக் கூறுவதால் பெற்ற பெயர் ஆகும். § அரவணையான் – திருமால்.

மடி* பதினெண் கணங்களும் பாடும்மடி, திரைவிரவு தென்** கெடில நாடன்னடி திருவீரட் டானத்தெஞ் செல்வன்னடி. 1

கொடுவினையா ரென்றுங் குறுகாவடி குறைந்தடைந்தார் ஆழாமைக் காக்கும்மடி, படுமுழவம் பாணி பயிற்றும்மடி பதைத் தெழுந்த வெங்கூற்றைப் பாய்ந்தவடி, கடுமுரணே றூர்ந்தான் கழற்சேவடி கடல்வையங் காப்பான் கருதும்மடி, நெடுமதியங் கண்ணி யணிந்தானடி நிறைகெடில வீரட்டம் நீங்காவடி. 2

வைதெழுவார் காமம்பொய் போகாவடி வஞ்சவலைப் பாடொன் றில்லாவடி, கைதொழுது நாமேத்திக் காணும்மடி கணக்கு வழக்கைக் கடந்தவடி, நெய்தொழுது நாமேத்தி ஆட்டும் மடி நீள்விசும்பை யூடறுத்து நின்றவடி, தெய்வப் புனற்கெடில நாடன்னடி திருவீரட் டானத்தெஞ் செல்வனடி. 3

அரும்பித்த செஞ்ஞாயி றேய்க்கும்மடி அழகெழுத லாகா அருட் சேவடி, சுரும்பித்த வண்டினங்கள் சூழ்ந்தவடி சோமனையுங் காலனையுங் காய்ந்தவடி, பெரும்பித்தர் கூடிப் பிதற்றும்மடி பிழைத்தார் பிழைப்பறிய வல்லவடி, திருந்துநீர்த் தென்கெடில நாடன்னடி திருவீரட் டானத்தெஞ் செல்வன்னடி. 4

ஒருகாலத் தொன்றாகி நின்றவடி ஊழிதோ றூழி உயர்ந்த வடி, பொருகழலும் பல்சிலம்பும் ஆர்க்கும்மடி புகழ்வார் புகழ் தகைய வல்லவடி, இருநிலத்தார் இன்புற்றங் கேத்தும்மடி இன் புற்றார் இட்டபூ ஏறும்மடி, திருவதிகைத் தென்கெடில நாடன் னடி திருவீரட் டானத்தெஞ் செல்வன்னடி. 5

திருமகட்குச் செந்தா மரையாமடி சிறந்தவர்க்குத் தேனாய் விளைக்கும்மடி, பொருளவர்க்குப் பொன்னுரையாய் நின்றவடி புகழ் வார் புகழ்தகைய வல்லவடி, உருவிரண்டு மொன்றோடொன் றொவ்வா†வடி உருவென் றுணரப் படாதவடி திருவதிகைத் தென் கெடில நாடன்னடி திருவீரட் டானத்தெஞ் செல்வன்னடி. 6

உரைமாலை யெல்லா முடையவடி உரையால் உணரப் படாதவடி, வரைமாதை வாடாமை வைக்கும்மடி வானவர்கள் தாம்வணங்கி

* பறிக்கும்மடி என்றும் பாடம். ** விரவுநீர்த்தென் என்றும் பாடம். † உருவிரண்டும் ஒன்றோடொன்று ஒவ்வா—பெண்ணுருவும் ஆணுருவும்.

வாழ்த்தும்மடி, அரைமாத் திரையில் லடங்கும்மடிA அகலம் அளக்கிற்பார் இல்லாவடி, கரைமாங் கலிக்கெடில நாடன்னடி கமழ்வீரட் டானக் கபாலியடி. 7

நறுமலராய் நாறும் மலர்ச்சேவடி நடுவாய் உலகநா டாய வடி, செறிகதிருந் திங்களுமாய் நின்றவடி தீத்திரளா யுள்ளே திகழ்ந்தவடி, மறுமதியை மாசு கழுவும்மடி மந்திரமுந் தந்திரமும் ஆயவடி, செறிகெடில நாடர் பெருமானடி திருவீரட் டானத் தெஞ் செல்வன்னடி. 8

அணியனவுஞ் சேயனவு மல்லாவடி அடியார்கட் காரமுத மாயவடி, பணிபவர்க்குப் பாங்காக வல்லவடி பற்றற்றார் பற்றும் பவளவடி, மணியடி பொன்னடி மாண்பாமடி மருந் தாய்ப் பிணிதீர்க்க வல்லவடி, தணிபாடு தண்கெடில நாடன்னடி தகைசார் வீரட்டத் தலைவன்னடி. 9

ஆர்ந்தா மரைப்போ தலர்ந்தவடி அரக்கனையும் ஆற்றல் அழித்தவடி, முந்தாகி முன்னே முளைத்தவடி முழங்கழலாய் நீண்டRவெம் மூர்த்தியடி, பந்தாடு மெல்விரலாள் பாகன்னடி பவளத் தடவரையே போல்வானடி, வெந்தார் சுடலைநீ றாடும் மடி வீரட்டங் காதல் விமலன்னடி. 10

திருச்சிற்றம்பலம்

---

## காப்புத் திருத்தாண்டகம்*

திருச்சிற்றம்பலம்

செல்வப் புனற்கெடில வீரட்டமுஞ் சிற்றேமமும் பெருந் தண் குற்றா லமும், தில்லைச்சிற் றம்பலமுந் தென்கூடலுந் தென் ஞானக் காவுஞ்சி ராப்பள் ளியும், நல்லூருந் தேவன்குடி மருகலும் நல்லவர்கள் தொழுதேத்தும்‡ நாரையூரும், கல்லலகு நெடும் புருவக் கபால மேந்திக் கட்டங்கத் தோடுறைவார் காப்புக்களே. 1

---

A அரைமாத்திரையில் அடங்குதல்–பிரணவத்தின் மகரவொற்று அரைமாத்திரை ஒலியினுள் ஒடுங்குதல். R நின்ற என்றும் பாடம்.
* இப்பதிகம் பாட்டுக்கள் தோறும் காப்புக்களே என்று முடிவதால் இப்பெயர் பெற்றதாகும். காப்பு–காவல் புரிவது; காவலுள் நிற்பது. இப்பதிகம் பன்னிரண்டு செய்யுட்களை உடையது.
‡ நல்லார்கள் தாமேத்தும் என்றும் பாடம்.

26,

தீர்த்தப் புனற்கெடில வீரட்டமுந் திருக்கோவல் வீரட்டம் வெண்ணெய் நல்லூர், ஆர்த்தருவி வீழ்சுனைநீர் அண்ணாமலை அறையணி நல்லூரும் அரநெறியும், ஏத்துமின்கள் நீரேத்த நின்ற ஈசன் இடைமரு தின்னம்பர் ஏகம்பமும், கார்த்தயங்கு சோலைக் கயிலாயமுங் கண்ணுதலான் தன்னுடைய காப்புக்களே. 2

சிறையார் புனற்கெடில வீரட்டமுந் திருப்பா திரிப்புலியூர் திருவா மாத்தூர், துறையார் வனமுனிக ளேத்த நின்ற சோற்றுத் துறைதுருத்தி நெய்த்தா னமும், அறையார் புனலொழுகு காவிரி சூழ் ஐயாற் றமுதன் பழனம் நல்ல, கறையார் பொழில்புடை சூழ் கானப் பேருங் கழுக்குன்றுந் தம்முடைய காப்புக்களே. 3

திரையார் புனற்கெடில வீரட்டமுந் திருவாரூர் தேவூர்திரு நெல்லிக்கா, உரையார் தொழுநின்ற ஒற்றியூரும் ஒத்தூரும் மாற் பேறும் மாந்துறையும், வரையா ரருவி சூழ்மா நதியும் மாகாளங் கேதாரம் மாமேருவும், கரையார் புனலொழுகு காவிரிசூழ் கடம் பந் துறையுறைவார் காப்புக்களே. 4

செழுநீர்ப் புனற்கெடில வீரட்டமுந் திரிபுராந் தகந்தென்னூர் தேவீச்சரம், கொழுநீர் புடைசுழிக்குங் கோட்டுக் காவுங் குடமூக் குங் கோகரணங் கோலக்காவும், பழிநீர்மை யில்லாப் பனங் காட் டூரும் பனையூர் பயற்றூர் பராய்த்துறையும், கழுநீர் மதுவிரியுங் காளிங்கமுங் கணபதீச் சரத்தார்தங் காப்புக்களே. 5

தெய்வப் புனற்கெடில வீரட்டமுஞ் செழுந்தண் பிடவூருஞ் சென்று நின்று, பவ்வந் திரியும் பருப்பதமும் பறியலூர் வீரட்டம் பாவநாசம், மவ்வந் திரையுமணி முத்தமும் மறைக்காடும் வாய் மூர் வலஞ்சுழியும், கவ்வை வரிவண்டு பண்ணே பாடுங் கழிப் பாலை தம்முடைய காப்புக்களே. 6

தெண்ணீர்ப் புனற்கெடில வீரட்டமுஞ் சீர்காழி† வல்லந் திருவேட்டியும்‡, உண்ணீரார் ஏடகமும் ஊறல்அம்பர் உறையூர் நறையூர் அரணநல்லூர், விண்ணார் விடையான் விளமர் வெண்ணி மீயச்சூர் வீழி மிழலைமிக்க, கண்ணார் நுதலார் கரபுரமுங் காபாலி யாரவர்தங் காப்புக்களே. 7

† சிக்காலி என்றும், சீக்காலி என்றும் பாடம். ‡ திருவேட்டி- திருவேட்டீசுவரன் பேட்டை (சென்னை) என்பர்.

தெள்ளும் புனற்கெடில வீரட்டமுந் திண்டீச் சரமுந் திருப் புகலூர், எள்ளும் படையான் இடைத்தானமு மேயீச் சுரமுநல் லேமங் கூடல், கொள்ளு மிலயத்தார் கோடிகாவுங் குரங்கணில் முட்டமுங் குறும்பலாவும், கள்ளருந்தத் தெள்ளியா ருள்கி யேத்துங் காரோணந் தம்முடைய காப்புக்களே. 8

சீரார் புனற்கெடில வீரட்டமுந் திருக்காட்டுப் பள்ளிதிரு வெண்காடும், பாரார் பரவுஞ்சீர்ப் பைஞ்ஞீலியும் பந்தணைநல் லூரும் பாசூர் நல்லம், நீரார் நிறைவயல்சூழ் நின்றியூரும் நெடுங் களமும் நெல்வெண்ணெய் நெல்வாயிலும், காரார் கமழ்கொன் றைத் தாரார்க்கென்றுங் கடவூரில் வீரட்டங் காப்புக்களே. 9

சிந்தும் புனற்கெடில வீரட்டமுந் திருவாஞ்சியமுந் திருநள் ளாறும், அந்தண் பொழில்புடைசூழ் அயோகந்தி*யும் ஆக்கூருமா ஆருமான் பட்டியும்,** எந்தம் பெருமாற் கிடமாவது இடைச் சுரமும் எந்தை தலைச்சங்காடும், கந்தங் கமழுங் கரவீரமுங் கடம் பூர்க் கரக்கோயில் காப்புக்களே. 10

தேனார் புனற்கெடில வீரட்டமுந் திருச்செம்பொன் பள்ளி திருப் பூவணமும்,வானோர் வணங்கும் மணஞ்சேரியும் மதிலுஞ்சை மாகாளம் வாரணசி, ஏனோர்க ளேத்தும் வெகுளீச்சரம் இலங்கார் பருப்ப தத்தோ டேனார்சோலைக், கானார் மயிலார் கருமாரியுங் கறைமிடற்றார் தம்முடைய காப்புக்களே. 11

திருநீர்ப் புனற்கெடில வீரட்டமுந் திருவளப்பூர் தெற்கேறு† சித்தவடம், வருநீர் வளம்பெருகு மாநிருபமும் மயிலாப்பில் மன்னினார் மன்னி யேத்தும், பெருநீர் வளர்சடையான் பேணி நின்ற பிரமபுரஞ் சுழியல் பெண்ணா கடம், கருநீல வண்டரற்றுங் காளத்தியுங் கயிலாயந் தம்முடைய காப்புக்களே. 12

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—வீரட்டேசுவரர்; தேவி—திரிபுரசுந்தரி.

---

* அயோகந்தி — அயவந்தி ; இது திருச்சாத்த மங்கையின் கோயிலின் பெயர். ** ஆன்பட்டி – திருப்பேரூர். † தேவதேவ என்றும் பாடம்.

## 4. திருமுதுகுன்றம்*

### திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கருமணியைக் கனகத்தின் குன்றொப் பானைக் கருதுவார்க் காற்ற எளியான் தன்னைக், குருமணியைக் கோளரவம் ஆட்டு வானைக் கொல்வேங்கை அதளானைக் கோவணவன் றன்னை, அருமணியை அடைந்தவர்கட் கமுதொப் பானை ஆனஞ்சும் ஆடியைநான் அபயம் புக்க, திருமணியைத் திருமுதுகுன் றுடையான் தன்னைத் தீவினையேன் அறியாதே திகைத்த வாறே. 1

காரொளிய கண்டத்தெங் கடவுள் தன்னைக் காபாலி கட்டங்க மேந்தி னானைப், பாரொளியை விண்ணொளியைப் பாதாளத்தானைப் பாய்மதியஞ் சூடியோர் பண்பன் தன்னைப், பேரொளியைப் பெண்பாகம் வைத்தான் தன்னைப் பேணுவார் தம்வினையைப் பேணி வாங்குஞ், சீரொளியைத் திருமுதுகுன் றுடையான் தன்னைத் தீவினையேன் அறியாதே திகைத்த வாறே. 2

எத்திசையும் வானவர்கள் தொழநின் றானை ஏறூர்ந்த பெம் மானை யெம்மா னென்று, பத்தனாய்ப் பணிந்தடியேன் தன்னைப் பன்னாட் பாமாலை பாடப் பயில்வித் தானை, முத்தினை யென்மணியை மாணிக் கத்தை முளைத்தெழுந்த செம்பவளக் கொழுந்தொப் பானைச், சித்தனையென் திருமுதுகுன் றுடையான் தன்னைத் தீவினையேன் அறியாதே திகைத்த வாறே. 3

ஊன்கருவின் உள்நின்ற சோதி யானை உத்தமனைப் பத்தர் மனம் குடிகொண் டானைக், கான்திரிந்து காண்டீப மேந்தி னானைக் கார்மேக மிடற்றானைக் கடலைக் காற்றைத், தான்தெரிந்தங் கடியேனை யாளாக் கொண்டு தன்னுடைய திருவடியென் தலைமேல் வைத்த**, தீன்கரும்பைத் திருமுதுகுன் றுடையான் தன்னைத் தீவினையேன் அறியாதே திகைத்த வாறே. 4

தக்கனது பெருவேள்வி தகர்த்தா னாகித் தாமரையான் நான் முகனுந்† தானே யாகி, மிக்கதொரு தீவளிநீர் ஆகா சமாய்

---

* 'விருத்தாசலம்' என வழங்கப்பெறும். ** இவ்வடி குரு மூர்த்தியாய்த் தம்மை ஆட்கொண்ட நிலையினைக் குறிப்பது. † தாம ரையார் நான்முகனும் என்றும் பாடம்.

மேலுலகுக் கப்பாலாய் இப்பா லானை, அக்கினொடு முத்தினையும் அணிந்து தோண்டர்க் கங்கங்கே அறுசமய மாகி நின்ற, திக்கினை யென் திருமுதுகுன் றுடையான் தன்னைத் தீவினையேன் அறியாதே திகைத்த வாறே. 5

புகழொளியைப் புரமெரித்த புனிதன் தன்னைப் பொன் பொதிந்த மேனியனைப் புராணன் தன்னை, விழவொலியும் விண் ணொலியு மானான் தன்னை வெண்காடு மேவிய விகிர்தன் தன்னைக், கழலொலியுங் கைவளையும் ஆர்ப்ப ஆர்ப்பக் கடைதோறும் இடு பிச்சைக் கென்று செல்லுந், திகழொளியைத் திருமுதுகுன் றுடையான் தன்னைத் தீவினையேன் அறியாதே திகைத்த வாறே.6

போர்த்தானை யின்னுரிதோல் பொங்கப் பொங்கப் புலியதளே உடையாகத் திரிவான் தன்னைக், காத்தானை ஐம்புலனும் புரங்கள் மூன்றுங் காலனையுங் குரைகழலாற் காய்ந்தான் தன்னை, மாத் தா‡டிப் பத்தாய் வணங்குந் தொண்டர் வல்வினைவே ரறும்வண் ணம் மருந்து மாகித், தீர்த்தானைத் திருமுதுகுன் றுடையான் தன்னைத் தீவினையேன் அறியாதே திகைத்த வாறே. 7

துறவாதே யாக்கை துறந்தான் தன்னைச் சோதி முழுமுதலாய் நின்றான் தன்னைப், பிறவாதே எவ்வுயிர்க்குந் தானே யாகிப் பெண் ணினோ டாணுருவாய் நின்றான் தன்னை, மறவாதே தன்திறமே வாழ்த்துந் தோண்டர் மனத்தகத்தே அனவரதம் மன்னி நின்ற, திறலானைத் திருமுதுகுன் றுடையான் தன்னைத் தீவினையேன் அறியாதே திகைத்த வாறே. 8

பொற்றூணை புலால்நாறு கபால மேந்திப் புவலோக மெல்லா முழிதந் தானை, முற்றாத வெண்திங்கட் கண்ணி யானை முழுமுதலாய் மூவுலகும் முடிவொன் றில்லாக், கற்றூணைக் காளத்தி மலையான் தன்னைக் கருதாதார் புரமூன்றும் எரிய அம்பால், செற்றானைத் திருமுதுகுன் றுடையான் தன்னைத் தீவினை யேன் அறியாதே திகைத்த வாறே. 9

இகழ்ந்தானை இருபதுதோள் நெரிய வூன்றி யெழுநரம்பின் இசைபாடல் இனிது§ கேட்டுப், புகழ்ந்தானைப் பூந்துருத்தி மேயான் தன்னைப் புண்ணியனை விண்ணவர்கள் நியந் தன்னை,

‡ மாத்து - பெருமை. § பாட இனிது என்றும் பாடம்.

மகிழ்ந்தானை மலைமகளோர் பாகம்¶ வைத்து வளர்மதியஞ் சடை வைத்து மாலோர் பாகம்,T திகழ்ந்தானைத் திருமுதுகுன் றுடையான் தன்னைத் தீவினையேன் அறியாதே திகைத்த வாறே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—பழமலைநாதர்; தேவி—பெரியநாயகி.

---

## 5. திருக்கோவலூர் வீரட்டம்*

**திருநேரிசை** [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

செத்தையேன் சிதம்ப நாயேன்† செடியனேன்‡ அழுக்குப்பாயும்
பொத்தையே போற்றி நாளும் புகலிடம் அறிய மாட்டேன்
எத்தைநான் பற்றி நிற்கேன் இருளற நோக்க மாட்டாக்
கொத்தை**யேன் செய்வ தென்னே கோவல்வீ ரட்ட னீரே. 1

தலைசுமந் திருகை நாற்றித் தரணிக்கே பொறைய தாகி
நிலையிலா நெஞ்சந் தன்னுள் நித்தலும் ஐவர் வேண்டும்
விலைகொடுத் தறுக்கமாட்டேன் வேண்டிற்றே வேண்டி எய்த்தேன்
குலைகொள்மாங் கனிகள் சிந்துங் கோவல்வீ ரட்ட னீரே. 2

வழித்தலைப் படவு மாட்டேன் வைகலுந் தூய்மை செய்து
பழித்திலேன்A பாசம் அற்றுப் பரமநான் பரவ மாட்டேன்
இழித்திலேன் பிறவி தன்னை என்னினைந் திருக்க மாட்டேன்
கொழித்துவந் தலைக்குந் தெண்ணீர்க் கோவல்வீ ரட்ட னீரே. 3

சாற்றுவர் ஐவர் வந்து சந்தித்த குடிமைB வேண்டிக்
காற்றுவர்C கனலப் பேசிக் கண்செவி மூக்கு வாயுள்
ஆற்றுவர் அலந்து போனேன் ஆதியை அறிவொன் றின்றிக்
கூற்றுவர் வாயிற் பட்டேன் கோவல்வீ ரட்ட னீரே. 4

---

¶ மலைமகளோர் பாகம்—அர்த்தநாரீசுவரர். T மாலோர் பாகம்—சங்கரநாராயணர். * 'திருக்கோயிலூர்' என வழங்கப் பெறும். † சிதம்பனாயேன் என்றும் பாடம். சிதம்ப நாயேன் – குணமில்லாதவனாகிய நான். ‡ செடியன்-பாவமுடையவன். **கொத்தை–குருட்டுத்தன்மை; அங்கங் குறைவுடைய தன்மை. A பழுத்திலேன் என்றும் பாடம். B குடிமை–ஏவல்கொள்ளும் தன்மை. C காற்றுவர்–காற்றுப்போல நொய் தாக்குவர்.

தடுத்திலேன் ஐவர் தம்மைத் தத்துவத் துயர்வு நீர்மைப்
படுத்திலேன் பரப்பு நோக்கிப் பன்மலர்ப் பாத முற்ற
அடுத்திலேன் சிந்தை யார ஆர்வலித் தன்பு திண்ணங்
கொடுத்திலேன் கொடிய வானான் கோவல்வீ ரட்ட னீரே. 5

மாச்செய்த குரம்பைA தன்னை மண்ணிடை மயக்க மெய்து
நாச்செய்து நாலும் ஐந்தும் நல்லன வாய்தல்B வைத்துக்
காச்செய்த காயந் தன்னுள் நித்தலும் ஐவர் வந்து
கோச்செய்துC குமைக்க ஆற்றேன் கோவல்வீ ரட்ட னீரே. 6

படைகள்போல் வினைகள் வந்து பற்றிஎன் பக்கல் நின்றும்
விடகிலா ஆத லாலே விகிர்தனை விரும்பி யேத்தும்
இடையிலேன் என்செய் கேன்நான் இரப்பவர் தங்கட் கென்றுங்
கொடையிலேன் கொள்வ தென்னே* கோவல்வீ ரட்ட னீரே. 7

பிச்சிலேன் பிறவி தன்னைப் பேதையேன் பிணக்க மென்னுந்
துச்சுDளே அழுந்தி வீழ்ந்து துயரமே இடும்பை தன்னுள்
அச்சனாய்E ஆதி மூர்த்திக் கன்பனாய்F வாழ மாட்டாக்
கொச்சைGயேன் செய்வ தென்னே கோவல்வீ ரட்ட னீரே. 8

நிணத்திடை யாக்கை பேணி நியமஞ்செய் திருக்க மாட்டேன்
மணத்திடை ஆட்டம் பேசி மக்களே சுற்ற மென்னுங்
கணத்திடை ஆட்டப் பட்டுக் காதலால் உன்னைப் பேணுங்
குணத்திடை வாழ மாட்டேன் கோவல்வீ ரட்ட னீரே. 9

விரிகடல் இலங்கைக் கோனை வியன்கயி லாயத் தின்கீழ்
இருபது தோளும் பத்துச் சிரங்களும் நெரிய வூன்றிப்
பரவிய பாடல் கேட்டுப் படைகொடுத் தருளிச் செய்தார்
குரவொடு கோங்கு சூழ்ந்த கோவல்வீ ரட்ட னீரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி–வீரட்டேசுவரர்; தேவி–சிவானந்தவல்லி.

---

A மாச்செய்த குரம்பை–விலங்கின் தன்மைகொண்ட உடல். மா–மரணமுமாம். B வாசல் என்றும் பாடம். C கோச்செய்து–அதிகாரம் செய்து. *கொள்வதே நான் என்றும் பாடம். D துச்சு–கீழ்மை. E அச்சன்–மேம்பட்டவன்; அதிபன்; அச்சமுடையவன் எனினுமாம். F அன்பிலால் என்றும் பாடம். G கொச்சை–கீழ்மைத் தன்மை.

## 6. திருப்பாதிரிப்புலியூர்

### திருநேரிசை [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

ஈன்றாளு மாயெனக் கெந்தையு* மாயுடன் தோன்றினராய்
மூன்றா யுலகம் படைத்துகந் தான்மனத் துள்ளிருக்க
ஏன்றான் இமையவர்க் கன்பன் திருப்பா திரிப்புலியூர்த்
தோன்றாத் துணை**யா யிருந்தனன் தன்னடி யோங்களுக்கே. 1

பற்றாய் நினைந்திடப் போதுநெஞ் சேஇந்தப் பாரைமுற்றும்
சுற்றாய் அலைகடல் மூடினுங் கண்டேன் புகல்நமக்கு
உற்றான் உமையவட் கன்பன் திருப்பா திரிப்புலியூர்
முற்றா மூளைமதிக் கண்ணியி னான்றன் மொய்கழலே. 2

விடையான் விரும்பியென் னுள்ளத் திருந்தான் இனிநமக்கிங்
கடையா அவலம் அருவினை சாரா நமனையஞ்சோம்
புடையார் கமலத் தயன்போல் பவர்பா திரிப்புலியூர்
உடையான் அடியார் அடியடி யோங்கட் கரியதுண்டே. 3

மாயமெல் லாமுற்ற விட்டிருள் நீங்க† மலைமகட்கே
நேயம் நிலாவ இருந்தா னவன்றன் திருவடிக்கே
தேய மெல்லாநின் றிறைஞ்சுந் திருப்பா திரிப்புலியூர்
மேயநல் லான்மலர்ப் பாதமென் சிந்தையுள் நின்றனவே. 4

வைத்த பொருள்நமக் காமென்று சொல்லி மனத்தடைத்துச்
சித்த மொருக்கிச் சிவாய நமஎன் றிருக்கினல்லால்
மொய்த்த கதிர்மதி போல்வா ரவர்பா திரிப்புலியூர்
அத்தன் அருள்பெற லாமோ அறிவிலாப் பேதைநெஞ்சே. 5

கருவாய்க் கிடந்துன் கழலே நினையுங் கருத்துடையேன்
உருவாய்த் தெரிந்துன்றன் நாமம் பயின்றேன் உனதருளால்
திருவாய் பொலியச் சிவாய நமவென்று நீறணிந்தேன்
தருவாய் சிவகதி நீபா திரிப்புலி யூர்அரனே. 6

எண்ணா தமரர் இரக்கப் பரவையுள் நஞ்சமுண்டாய்
திண்ணார் அசுரர்§ திரிபுரந் தீயெழச் செற்றவனே

---

* ஈன்றாள்-தாய்; சத்தியுமாம். எந்தை-தந்தை; சிவமுமாம்.
** தோன்றாத் துணை-சுவாமியின் பெயர். † நீங்கி என்றும் பாடம்.
§ திண்ணவசுரர் என்றும் பாடம்.

பண்ணார்ந் தமைந்த பொருள்கள் பயில்பா திரிப்புலியூர்க்
கண்ணார் நுதலாய் கழல்நங் கருத்தில் உடையனவே. 7

புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா வுன்னடி யென்மனத்தே
வழுவா திருக்க வரந்தர வேண்டும்இவ் வையகத்தே
தொழுவார்க் கிரங்கி யிருந்தருள் செய்பா திரிப்புலியூர்ச்
செழுநீர்ப் புனற்கங்கை செஞ்சடை மேல்வைத்த தீவண்ணனே. 8

மண்பா தலம்புக்கு மால்கடல் மூடிமற் றேழுலகும்
விண்பால் திசைகெட் டிருசுடர் வீழினும்* அஞ்சல்நெஞ்சே
திண்பால் நமக்கொன்று கண்டோம் திருப்பா திரிப்புலியூர்க்
கண்பாவு நெற்றிக் கடவுட் சுடரான் கழலிணையே. 9

திருந்தா** அமணர்தந் தீநெறிப் பட்டுத் திகைத்துமுத்தி
தருந்தா ளிணைக்கே சரணம்† புகுந்தேன் வரையெடுத்த
பொருந்தா அரக்கன் உடல்நெரித் தாய்பா திரிப்புலியூர்
இருந்தாய் அடியேன் இனிப்பிற வாமல்வந் தேன்றுகொள்ளே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—தோன்றாத்துணைநாதர், பாடலீசுவரர்;
தேவி—தோகைநாயகி, பெரியநாயகியம்மை.

---

## 7. திருமுண்டீச்சரம் ‡

### திருத்தாண்டகம்§ [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

ஆர்த்தான்காண் அழல்நாகம் அரைக்கு நாண அடியவர்கட் கன்பன்காண் ஆனைத் தோலைப், போர்த்தான்காண் புரிசடைமேல் புனலேற் றான்காண் புறங்காட்டி லாடல் புரிந்தான் தான்காண், காத்தான்காண் உலகேழுங் கலங்கா வண்ணங் கனைகடல்வாய் நஞ்சதனைக் கண்டத் துள்ளே, சேர்த்தான்காண் திருமுண்டீச் சரத்து மேய சிவலோகன்|| காண்அவனென் சிந்தை யானே. 1

---

* இருசுடர் வீழ்தல் – தூமகேதுவும் விண்மீனும் வீழ்தல் முதலாயின. ** திருந்தா – உண்மை கண்டுந் திருந்தாத † சரணம் – அடைக்கலம். ‡ 'திருக்கிராமம்' என வழங்கப்பெறும். § இப்பதிகத்தில் 9-ம் செய்யுள் சிதைந்து போயிற்று. || சிவலோகன் – சுவாமியின் பெயர்.

கருத்தன்காண் கமலத்தோன் தலையில் ஒன்றைக் காய்ந்தான் காண் பாய்ந்தநீர் பரந்த சென்னி, ஒருத்தன்காண் உமையவளோர் பாகத் தான்காண் ஓருருவின் மூவுருவா யொன்றாய் நின்ற, விருத்தன்காண் விண்ணவர்க்கும் மேலா னான்காண் மெய்யடியா ருள்ளத்தே விரும்பி நின்ற, திருத்தன்காண் திருமுண்டீச் சரத்து மேய சிவலோகன் காண்அவனென் சிந்தை யானே. 2

நம்பன்காண் நரைவிடையொன் றேறி னான்காண் நாதன் காண் கீதத்தை நவிற்றி னான்காண், இன்பன்காண் இமையாமுக் கண்ணி னான்காண் ஏசற்று மனமுருகும் அடியார் தங்கட், கன்பன் காண் ஆரழல தாடி னான்காண் அவனிவனென் றியாவர்க்கும் அறிய வொண்ணாச், செம்பொன்காண் திருமுண்டீச் சரத்துமேய சிவலோகன் காண்அவனென் சிந்தை யானே. 3

மூவன்காண் மூவர்க்கும் முதலா னான்காண் முன்னுமாய்ப் பின்னுமாய் முடிவா னான்காண், காவன்காண் உலகுக்கோர் கண்ணா னான்காண் கங்காளன் காண்கயிலை மலையி னான்காண், ஆவன்காண் ஆவகத்தஞ் சாடி னான்காண் ஆரழலாய் அயற் கரிக்கும் அறிய வொண்ணாத், தேவன்காண் திருமுண்டீச் சரத்து மேய சிவலோகன் காண்அவனென் சிந்தை யானே. 4

கானவன்காண் கானவனாய்ப் பொருதான் றான்காண் கனலாட வல்லான்காண் கையி லேந்தும், மானவன்காண் மறை நான்கு மாயினான்காண் வல்லேறொன் றதுவேற வல்லான் றான்காண், ஊனவன்காண் உலகத்துக் குயிரா னான்காண் உரைய வன்காண் உணர்வவன்காண் உணர்ந்தார்க் கென்றுந், தேனவன் காண் திருமுண்டீச் சரத்து மேய சிவலோகன் காண்அவனென் சிந்தை யானே. 5

உற்றவன்காண் உறவெல்லா மாவான் றான்காண் ஒழிவற நின் றெங்கு முலப்பி லான்காண், புற்றரவே யாடையுமாய்ப் பூணுமாகிப்* புறங்காட்டி லெரியாடல் புரிந்தான் றான்காண், நற்றவன்காண் அடியடைந்த** மாணிக்காக நணுகியதோர் பெருங்கூற்றைச் சேவ டியினால், செற்றவன்காண் திருமுண்டீச் சரத்து மேய சிவலோகன் காண்அவனென் சிந்தை யானே. 6

* மாகப் என்றும் பாடம். ** நற்றவயடியானையடைந்த என்றும் பாடம்.

உதைத்தவன்காண் உணராத தக்கன் வேள்வி உருண்டோடத் தொடர்ந்தருக்கன் பல்லை யெல்லாந், தகர்த்தவன்காண் தக்கன்றன் தலையைச் செற்ற தலையவன்காண் மலைமகளாம் உமையைச் சால, மதிப்பொழிந்த வல்லமரர் மாண்டார் வேள்வி வந்தவியுண் டவரோடு மதனை யெல்லாஞ், சிதைத்தவன்காண் திருமுண்டீச் சரத்து மேய சிவலோகன் காண்அவனென் சிந்தை யானே. 7

உரிந்தவுடை யார்துவரா லுடம்பை மூடி உழிதருமவ் வூமரவர் உணரா வண்ணம், பரிந்தவன்காண் பனிவரைமீப் பண்டமெல்லாம் பறித்துடனே நிரந்துவரு பாய்நீர்ப் பெண்ணை, நிரந்துவரும் இருகரையுந் தடவா வோடி நின்மலனை வலங்கொண்டு நீளநோக்கித், திரிந்துலவு திருமுண்டீச் சரத்து மேய சிவலோகன் காண்அவனென் சிந்தை யானே. 8-9

அறுத்தவன்காண் அடியவர்கள் அல்லல் எல்லாம் அரும்பொருளாய் நின்றவன்காண் அனங்க னாகம், மறுத்தவன்காண் மலைதன்னை மதியா தோடி மலைமகள்தன் மனம்நடுங்க வானோரஞ்சக், கறுத்தவனைக் கயிலாய மெடுத்தோன் கையுங் கதிர்முடியுங் கண்ணும் பிதுங்கி யோடச், செறுத்தவன்காண் திருமுண்டீச் சரத்துமேய சிவலோகன் காண்அவனென் சிந்தை யானே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—முண்டீசுவரர், சிவலோகநாதர்;
தேவி—கானார்குழலி, செல்வநாயகி.

---

## 8. திருஆமாத்தூர்*

### திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**மா**மாத் தாகிய**மாலயன் மால்கொடு
தாமாத் தேடியுங் காண்கிலர் தாள்முடி
ஆமாத் தூரர னேஅரு ளாயென்றென்(று)
ஏமாப் பெய்திக்கண் டாரிறை யானையே. 1

---

* இது பசுக்களுக்குத் தாயகமான இடம் என்பது பொருள்.
** மா-பெரிய, மாத்து-அறியாமை. ஏமாப்பு-அரண்; இன்பமுமாம்.

சந்தி யானைச் சமாதிசெய் வார்தங்கள்
புந்தி யானைப்புத் தேளிர் தொழப்படும்
அந்தி யானைP ஆமாத்தூர் அழகனைச்S
சிந்தி யாதவர் தீவினை யாளரே. 2

காமாத் தம்Iமெனுங் கார்வலைப் பட்டுநான்
போமாத் தைNயறி யாது புலம்புவேன்
ஆமாத் தூரர னேயென் றழைத்தலும்
தேமாத் தீங்கனி போலத் தித்திக்குமே. 3

பஞ்ச பூத வலையிற் படுவதற்(கு)
அஞ்சி நானும் ஆமாத்தூர் அழகனை
நெஞ்சி னுள்நினைந் தேன்நினை வெய்தலும்
வஞ்ச ஆறுகள் வற்றின காண்மினே. 4

சூரா மன்னுங்குழ லாளொரு கூறனார்
அரா மன்னுஞ்சடை யான்திரு ஆமாத்தூர்
இராம னும்வழி பாடுசெய் ஈசனை
நிரா மயன்றனை நாளும் நினைமினே.* 5

பித்த னைப்பெருந் தேவர்தொ ழப்படும்
அத்த னைஅணி ஆமாத்தூர் மேவிய
முத்தி னையடி யேனுள் முயறலும்
பத்தி வெள்ளம் பரந்தது காண்மினே. 6

நீற்றி னார்திரு மேனியன் நேரிழை
கூற்றி னன்குழற் கோலச் சடையிலோர்
ஆற்றி னன்அணி ஆமாத்தூர் மேவிய
ஏற்றி னன்எமை** யாளுடை யீசனே. 7

பண்ணிற் பாடல்கள் பத்திசெய் வித்தகர்க்(கு)
அண்ணித் தாகும் அமுதினை ஆமாத்தூர்

---

P அந்தியான் - அழகிய தீயின் வடிவுடையன். S அழகன் - சுவாமியின் பெயர். I காமம்+ஆத்தம்=காமாத்தம். காமம்-தீய இச்சைகள். ஆத்தம்-ஆப்தம்; நன்மை தருவது. N போமாற்றை என்பது போமாத்தை என நின்றது. * இச்செய்யுள் இராமன் வழி பட்டதைக் குறிப்பது. நினைவனே என்றும் பாடம். ** ஏற்றி னன்நமை என்றும் பாடம்.

சண்ணிப் பானேத்த மர்க்கணித் தாயதோர்
கண்ணிற் பாவையன் ஞனவன் காண்மினே. 8

குண்டர் பீலிகள் கொள்ளுங் குணமிலா
மிண்ட ரோடெனே வேறு படுத்துய்யக்
கொண்ட நாதன் குளிர்புனல் வீரட்டத்
தண்ட ஞரிடம் ஆமாத்தூர் காண்மினே. 9

வானஞ் சாடு மதியர வத்தொடு
தானஞ் சாதுடன் வைத்த சடையிடைத்
தேனஞ் சாடிய தெங்கிள நீரொடும்
ஆனஞ் சாடிய ஆமாத்தூர் ஐயனே. 10

விடலை* யாய்விலங் கல்லெடுத் தான்முடி
அடர வோர்விரல் ஊன்றிய ஆமாத்தூர்
இடம தாக்கொண்ட ஈசனுக் கென்னுளம்
இடம தாகக்கொண் டின்புற் றிருப்பனே. 11

திருச்சிற்றம்பலம்

---

## திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வண்ணங்கள்** தாம்பாடி வந்து நின்று வலிசெய்து வளை கவர்ந்தார் வகையால் நம்மைக், கண்ணம்பால் நின்றெய்து கனலப் பேசிக்† கடியதோர் விடையேறிக் காபாலியார், சுண்ணங்கள் தாங்கொண்டு துதையப் பூசித் தோலுடுத்து நூல் பூண்டு தோன்றத் தோன்ற, அண்ணலார் போகின்றார் வந்து காணீர் அழகியரே ஆமாத்தூர் ஐய ஞரே. 1

வெந்தார்வெண் பொடிப்பூசி வெள்ளை மாலை விரிசடைமேற் றாஞ்சூடி வீணை யேந்திக், கந்தாரந்‡ தாம்முரலாப் போகா நிற்கக் கறைசேர் மணிமிடற்றீ ரூரே தென்றேன், கொந்தார்போல் வந்தென தில்லேபுக்கு நுடங்கே ரிடைமடவாய் நம்மூர் கேட்கில், அந்தா மரைமலர்மேல் அளிவண் டியாழ்செய் ஆமாத்தூர் என்றடிகள் போயி ஞரே. 2

---

* விடலை-மூர்க்கன். ** வண்ணம்-ஒருவகைப்பாவின் ஓசை. † கனலப் பேசி – இச்சைநோய் அதிகரிக்கும்படி பேசி. ‡கந்தாரம்-காந்தாரம் என்ற பண்.

கட்டங்கந் தாமொன்று கையி லேந்திக் கடிய விடையேறிக் காபா லியார், இட்டங்கள் தாம்பேசி யில்லே புக்கு இடும்பலியும்* இடக்கொள்ளார் போவா ரல்லர், பட்டிமையும்** படிறுமே பேசா நின்றூர் பார்ப்பாரைப் பரிசழிப்பார் போல்கின் ருர்தாம், அட்டியசில் பலியுங் கொள்ளார் விள்ளார்† அழகியரே ஆமாத்தூர் ஐய ஞரே. 3

பசைந்தபல பூதத்தர் பாட லாடல் படநாகக் கச்சையர் பிச்சைக் கென்றங், கிசைந்ததோ ரியல்பினர் எரியின் மேனி இமையாமுக் கண்ணினர் நால்வே தத்தர், பிசைந்த‡திரு நீற்றினர் பெண்ணேர் பாகம் பிரிவறியாப் பிஞ்ஞகனுர் தெண்ணீர்க் கங்கை, அசைந்த திருமுடியர் அங்கைத் தீயர் அழகியரே ஆமாத்தூர் ஐய ஞரே. 4

உருளுடைய தேர்புரவி யோடும் யானை யொன்ருலுங் குறைவில்லை யூர்தி வெள்ளே, திருளுடைய கண்டத்தர் செந்தீ வண்ணர் இமையவர்கள் தொழுதேத்தும் இறைவ ஞர்தாம், பொருளுடைய ரல்லர் இலரு மல்லர் புலித்தோ லுடையாகப் பூதஞ் சூழ, அருளுடைய அங்கோதை மாலை மார்பர் அழகியரே ஆமாத்தூர் ஐய ஞரே. 5

வீறுடைய ஏறேறி நீறு பூசி வெண்தோடு பெய்திடங்கை வீணை யேந்திக், கூறுடைய மடவாளோர் பாகங் கொண்டு குழையாடக் கொடுகொட்டி கொட்டா வந்து, பாறுடைய படுதலை யோர் கையி லேந்திப் பலிகொள்வா ரல்லர் படிறே பேசி, ஆறுடைய சடைமுடியெம் மடிகள் போலும் அழகியரே ஆமாத்தூர் ஐய ஞரே. 6

கையோர் கபாலத்தர் மானின் தோலர் கருத்துடையர் நிருத்தராய்க்§ காண்பார் முன்னே, செய்ய திருமேனி வெண்ணீ றுடித் திகழ்புன் சடைமுடிமேல் திங்கள் சூடி, மெய்யொரு பாகத் துமையை வைத்து மேவார் திரிபுரங்கள் வேவச் செய்து, ஐயனுர் போகின்றூர் வந்து காணீர் அழகியரே ஆமாத்தூர் ஐய ஞரே. 7

ஒன்ருலுங் குறைவில்லை ஊர்தி வெள்ளே ருேற்றியூர் உம்மூரே யுணரக் கூறீர், நின்றுதான் என்செய்வீர் போவீ ராகில் நெற்றி

* இடுபலியும் என்றும் பாடம். ** பட்டிமை – வஞ்சனை. †விள்ளார்–பலி கொள்ளாமைக்குக் காரணஞ் சொல்லார். ‡பிசைந்த–வடித்தெடுத்த. § கருத்துடைய நிருத்தராய்க் என்றும் பாடம்.

மேற் கண்காட்டி நிறையுங்A கொண்டீர், என்றுந்தான் இவ் வகையே இடர்செய் கின்றீர் இருக்குமூர் இனியறிந்தோம் ஏகம் பமோ, அன்றித்தான் போகின்றீர் அடிக ளெம்மோ டழகியரே ஆமாத்தூர் ஐய னாரே. 8

கல்லலகு தாங்கொண்டு காளத் தியார் கடிய விடையேறிக் காணக் காண, இல்லமே தாம்புகுதா இடுமின் பிச்சை யென்று ருக்கெதிரெழுந்தேன் எங்குங் காணேன், சொல்லாதே போகின் றீர் உம்மூ ரேது துருத்தி பழனமோ நெய்த்தானமோ, அல்லலே செய்தடிகள் போகின் றீர்தாம்B அழகியரே ஆமாத்தூர் ஐய னாரே. 9

மழுங்கலா நீறுடும் மார்பர் போலும் மணிமிழலை மேய மணாளர் போலும், கொழுங்குவளைக் கோதைக் கிறைவர் போ லுங் கொடுகொட்டி தாள முடையார் போலும், செழுங்கயி லாயத்தெஞ் செல்வர் போலுந் தென்னதிகை வீரட்டஞ் சேர்ந் தார் போலும், அழுங்கினா ரையுறவு தீர்ப்பார் போலும் அழகியரே ஆமாத்தூர் ஐய னாரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி–அழகியநாதர்; தேவி–அழகியநாயகி.

## 9. திருவண்ணாமலைC

### திருநேரிசைD [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

ஓதிமா மலர்கள் தூவி உமையவள் பங்கா மிக்க
சோதியே துளங்கும் எண்தோள் சுடர்மழுப் படையி னானே
ஆதியே அமரர் கோவே அணியணா மலையு ளானே*
நீதியால் நின்னை யல்லால் நினையுமா நினைவி லேனே. 1

A நிறை–பெண்மை நலம்; பசுத்துவம். B போகின்றீர்தாம் என்றும் பாடம். Cஇதற்கு அருணாசலம், 'அருணகிரி' எனப்பெயர் வழங்கும். D இப்பதிகம் திருவண்ணாமலையின் மேற்கில் உள்ள அணியண்ணாமலை என்ற தலத்தைப் பற்றியது என்பர். *அணி அ(ண்)ணா மலையுளாய் – தொண்டர்க்கு அணிமையுள்ளவராயும், தொண்டு செய்யாதவர்க்கு அண்ணாத(அகப்படாத)வராயும் விளங் கும் மலை வடிவானவனே. அணிஅண்ணாமலையில் இருப்பவரே எனினுமாம்.

பண்தனை வென்ற இன்சொற் பாவையோர் பங்கா நீல
கண்டனே கார்கொள் கொன்றைக் கடவுளே கமல பாதா
அண்டனே அமரர் கோவே அணியணா மலையு ளானே
தொண்டனேன் உன்னை அல்லாற் சொல்லுமா சொல்லி லேனே. 2

உருவமும் உயிரு மாகி ஓதிய உலகுக் கெல்லாம்
பெருவினை பிறப்பு[T] வீடாய் நின்றஎம் பெருமான் மிக்க
அருவிபொன் சொரியும் அண்ணா மலையுளாய் அண்டர் கோவே
மருவிநின் பாத மல்லால் மற்றொரு மாடி லேனே. 3

பைம்பொனே பவளக் குன்றே பரமனே பால்வெண் ணீற்றாய்
செம்பொனே மலர்செய் பாதா சீர்தரு மணியே மிக்க
அம்பொனே கொழித்து வீழும் அணியணா மலையு ளானே
எம்பொனே உன்னை யல்லால் ஏதுநான் நினைவி லேனே. 4

பிறையணி முடியி னானே பிஞ்ஞகா பெண்ணோர் பாகா
மறைவலா இறைவா வண்டார் கொன்றையாய் வாம தேவா[P]
அறைகழல் அமரர் ஏத்தும் அணியணா மலையு ளானே
இறைவனே உன்னை யல்லா லியாதுநான் நினைவி லேனே. 5

புரிசடை முடியின் மேலோர் பொருபுனற் கங்கை வைத்துக்
கரியுரி போர்வை யாகக் கருதிய கால காலா
அரிகுலம் மலிந்த அண்ணா மலையுளாய் அலரின் மிக்க
வரிமிகு வண்டு பண்செய் பாதநான் மறப்பி லேனே. 6

இரவியும் மதியும் விண்ணும் இருநிலம் புனலுங் காற்றும்
உரகமார் பவனம் எட்டுந் திசையொளி உருவ மானாய்[S]
அரவுமிழ் மணிகொள் சோதி அணியணா மலையு ளானே
பரவுநின் பாத மல்லாற் பரமநான் பற்றி லேனே. 7

பார்த்தனுக் கன்று நல்கிப் பாசுப தத்தை ஈந்தாய்
நீர்த்ததும் புலாவு கங்கை நெடுமுடி நிலாவ வைத்தாய்
ஆர்த்துவந் தீண்டு கொண்டல் அணியணா மலையு ளானே
தீர்த்தனே நின்றன் பாதத் திறமலால் திறமி லேனே. 8

---

[T] வினைபிறப்பு—வினையும் பிறப்பும். வினைப்பிறப்பு என்று பாடங் கொள்ளின் வினையாலாகிய பிறப்பு என்பது பொருள். [P] வாமதேவம்— இறைவன் ஐம்முகங்களில் ஒன்று; அது வடக்கு நோக்கிய முகம். [S] இவ்வடிகள் அட்டமூர்த்தத்தைக் குறிப்பன.

பாலுநெய் முதலா மிக்க பசுவில்ஐந் தாடு வானே
மாலுநான் முகனுங் கூடிக் காண்கிலா வகையுள் நின்றாய்*
ஆலுநீர் கொண்டல் பூகம் அணியணா மலையு ளானே
வாலுடை விடை**யாய் உன்றன் மலரடி மறப்பி லேனே. 9

இரக்கமொன் றியாது மில்லாக் காலனைக் கடிந்த† எம்மான்
உரத்தினால் வரையை ஊக்க வொருவிரல் நுதியி னாலே
அரக்கனை நெரித்த அண்ணா மலையுளாய் அமர ரேறே
சிரத்தினால் வணங்கி ஏத்தித் திருவடி மறப்பி லேனே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருக்குறுந்தொகை* [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வட்ட‡ னைம்மதி சூடியை வானவர்
சிட்ட னைத்திரு அண்ணா மலையனை
இட்ட னைஇகழ்ந் தார்புர மூன்றையும்
அட்ட னைஅடி யேன்மறந் துய்வனோ. 1

வான னைம்மதி சூடிய மைந்தனைத்
தேன னைத்திரு வண்ணா மலையனை
என னைஇகழ்ந் தார்புர மூன்றெய்த
ஆன னை§அடி யேன்மறந் துய்வனோ. 2

மத்த னைம்மத யானையு ரித்தஎஞ்
சித்த னைத்திரு அண்ணா மலையனை
முத்த னைம்முனிந் தார்புர மூன்றெய்த
அத்த னைஅடி யேன்மறந் துய்வனோ. 3

காற்ற னைக்கலக் கும்வினை போயறத்
தேற்ற னைத்திரு வண்ணா மலையனைக்
கூற்ற னைக்கொடி யார்புர மூன்றெய்த
ஆற்ற னைஅடி யேன்மறந் துய்வனோ. 4

---

*இவ்வடி திருமாலும் பிரமனும் அடிமுடி தேடிய வரலாற்றைக் குறிப்பது. ** வால் உடை விடை – வெள்ளிய இடபம். † கடந்த என்றும் பாடம். ‡ வட்டன் – அன்பு வட்டத்துள் இருப்பவன். § ஆனன் – ஆனையை யுடையவன்.

மின்ன னைவினை தீர்த்தெனை ஆட்கொண்ட
தென்ன னைத்திரு அண்ணா மலையனை
என்ன னைஇகழ்ந் தார்புர மூன்றெய்த
அன்ன னைஅடி யேன்மறந் துய்வனே. 5

மன்ற னைம்மதி யாதவன் வேள்விமேல்
சென்ற னைத்திரு வண்ணா மலையனை
வென்ற னைவெகுண் டார்புர மூன்றையுங்
கொன்ற னைக்கொடி யேன்மறந் துய்வனே. 6

வீர னைவிட முண்டனை விண்ணவர்
தீர னைத்திரு வண்ணா மலையனை
ஊர னைஉண ரார்புர மூன்றெய்த
ஆர னை*அடி யேன்மறந் துய்வனே. 7

கருவி னை**க்கடல் வாய்விடம் உண்டஎம்
திருவி னை**த்திரு வண்ணா மலையனை
உருவி னை**உண ரார்புர மூன்றெய்த
அருவி னை**அடி யேன்மறந் துய்வனே. 8

அருத்த னைஅர வைந்தலை நாகத்தைத்
திருத்த னைத்திரு வண்ணா மலையனைக்
கருத்த னைக்கடி யார்புர மூன்றெய்த
அருத்த னைஅடி யேன்மறந் துய்வனே. 9

அரக்க னைஅல றவ்விரல் ஊன்றிய
திருத்த னை†த்திரு வண்ணா மலையனை
இரக்க மாய்என் உடலுறு நோய்களைத்
துரக்க னைத்தொண்ட னேன்மறந் துய்வனே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பட்டி ஏறுகந் தேறிப் பலஇ(ல்)லம்
இட்ட மாக இரந்துண் டுழிதரும்

---

* ஆரனை – ஆர் சூடியவனை. ஆர் – கொன்றை; ஆத்தியுமாம். அரனை என்றது ஆரனை என நீண்டு நின்றதுவுமாம்; ** கருவனை, திருவனை, உருவனை, அருவனை என்றும் பாடம். † திருத்தனை – திருத்தம் செய்தவனை.

அட்ட மூர்த்திஅண் ணாமலை கைதொழக்
கெட்டுப் போம்வினை கேடில்லை காண்மினே. 1

பெற்றம் ஏறுவர் பெய்பலிக் கென்றவர்
சுற்ற மாமிகு தொல்புக ழாளொடும்*
அற்றங்** தீர்க்கும்அண் ணாமலை கைதொழ
நற்ற வத்தொடு ஞானத் திருப்பரே. 2

பல்வி லோடுகை யேந்திப் பலஇ(ல்)லம்
ஒல்லை சென்றுணங் கல்கவர் வாரவர்
அல்லல் தீர்க்கும்அண் ணாமலை கைதொழ
நல்ல வாயின நம்மை அடையுமே. 3

பாடிச் சென்று பலிக்கென்று நின்றவர்
ஓடிப் போயினர் செய்வதொன் றென்கொலோ
ஆடிப் பாடிஅண் ணாமலை கைதொழ
ஓடிப் போகும்நம் மேலை வினைகளே.‡ 4

தேடிச் சென்று திருந்தடி ஏத்துமின்
நாடி வந்தவர் நம்மையும் ஆட்கொள்வர்
ஆடிப் பாடிஅண் ணாமலை கைதொழ
ஓடிப் போம்நம துள்ள வினைகளே. 5

கட்டி யொக்குங் கரும்பி னிடைத்துணி
வெட்டி வீணைகள் பாடும் விகிர்தனார்
அட்ட மூர்த்திஅண் ணாமலை மேவிய
நட்ட மாடியை நண்ணநன் காகுமே. 6

கோணிக் கொண்டை||யர் வேடமுன் கொண்டவர்
பாணி நட்டங்க ளாடும் பரமனார்
ஆணிப் பொன்னின்அண் ணாமலை கைதொழப்
பேணி நின்ற பெருவினை போகுமே. 7

---

*தொல்புகழாள்—சிவனுடன் இருக்கும் தொன்மைப் புகழுடையாள்; உண்ணாமுலையம்மை. தொல்குழலாளொடும் என்றும் பாடம். **அற்றம்—கேடு. ‡ இச்செய்யுள் தலைவி கூற்றாகிய அகத்துறை ஆகும். || கோணிக் கொண்டை—முன்புறம் ஒருபாற் கோணலாக முடித்த கொண்டை.

கண்டந் தான்கறுத் தான்காலன் ஆருயிர்
பண்டு கால்கொடு பாய்ந்த பரமனார்
அண்டத் தோங்கும்அண் ணாமலை கைதொழ
விண்டு போகுநம் மேலை வினைகளே. 8

முந்திச் சென்றுமுப் போதும் வணங்குமின்
அந்தி வாயொளி யான்றன் அண் ணாமலை
சிந்தி யாஎழு வார்வினை தீர்த்திடும்
கந்த மாமலர் சூடுங் கருத்தனே. 9

மறையி னானொடு மாலவன் காண்கிலா
நிறையும் நீர்மையுள் நின்றருள் செய்தவன்
உறையும் மாண்பின்அண் ணாமலை கைதொழப்
பறையும்¶ நாஞ்செய்த பாவங்க ளானவே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி—அண்ணாமலையார், அருணாசலேசுவரர்;
தேவி—உண்ணாமுலையம்மை.

## தொண்டை நாட்டில் உள்ள தலங்கள்

### 1, திருக்கச்சி யேகம்பம்*

பண்–காந்தாரம் [4-ம் திருமுறை]

மனத்துள் வைத்த திருப்பதிகம்

திருச்சிற்றம்பலம்

கரவா**டும் வன்னெஞ்சர்க் கரியானைக் கரவார்பால்
விரவாடும் பெருமானை விடையேறும் வித்தகனை
அரவாடச் சடைதாழ அங்கையினில் அனலேந்தி
இரவாடும் பெருமானை என்மனத்தே வைத்தேனே. 1

தேனோக்குங் கிளிமழலை உமைகேள்வன் செழும்பவளம்
தானோக்குந் திருமேனி தழலுரு|| வாஞ் சங்கரனை
வானோக்கும் வளர்மதிசேர் சடையானை வானோர்க்கும்
ஏனோர்க்கும் பெருமானை என்மனத்தே வைத்தேனே. 2

¶பறையும் – நீங்கும். *'காஞ்சீபுரம்' என வழங்கப்பெறும். திருவேகம்பம் என்றும் பாடம். ** கரவு–கள்ளம். || மேனித்தழலுரு என்றும் பாடம்.

கைப்போது மலர்தூவிக் காதலித்து வானோர்கள்
முப்போதும் முடிசாய்த்துத் தொழநின்ற முதல்வனை
அப்போது மலர்தூவி ஐம்புலனும் அகத்தடக்கி
எப்போதும் இனியானை என்மனத்தே வைத்தேனே. 3

அண்டமாய் ஆதியாய் அருமறையோ டைம்பூதப்
பிண்டமாய் உலகுக்கோர் பெய்பொருளாம் பிஞ்ஞகனைத்
தொண்டர்தாம் மலர்தூவிச் சொல்மாலை புனைகின்ற
இண்டைசேர் சடையானை என்மனத்தே வைத்தேனே. 4

ஆறேறு சடையானை ஆயிரம்பே ரம்மானைப்
பாறேறு* படுதலையிற் பலிகொள்ளும் பரம்பரனை
நீறேறு திருமேனி நின்மலனை நெடுந்தூவி**
ஏறேறும் பெருமானை என்மனத்தே வைத்தேனே. 5

தேசனைத் தேசங்கள் தொழநின்ற திருமாலால்
பூசனைப் பூசனைகள் உகப்பானைப் பூவின்கண்
வாசனை மலைநிலநீர் தீவளிஆ காசமாம்
ஈசனை எம்மானை என்மனத்தே வைத்தேனே. 6

நல்லானை நல்லான நான்மறையோ டாறங்கம்
வல்லானை வல்லார்கள் மனத்துறையும் மைந்தனைச்
சொல்லானைச் சொல்லார்ந்த பொருளானைத் துகளேதும்
இல்லானை எம்மானை என்மனத்தே வைத்தேனே. 7

விரித்தானை நால்வர்க்கு வெவ்வேறு வேதங்கள்
புரித்தானைப் பதஞ்சந்திப்† பொருளுருவாம் புண்ணியனைத்
தரித்தானைக் கங்கைநீர் தாழ்சடைமேல் மதில்மூன்றும்
எரித்தானை எம்மானை என்மனத்தே வைத்தேனே. 8

ஆகம்பத் தரவணையான்‡ அயன்அறிதற் கரியானைப்
பாகம்பெண் ணாண்பாக மாய்நின்ற பசுபதியை
மாகம்ப§ மறையோதும் இறையானை மதிற்கச்சி
ஏகம்ப மேயானை என்மனத்தே வைத்தேனே.|| 9

* பாறு – கழுகு. ** நெடுந்தூவி – பெரிய திமில். † பதம்சந்தி – வேதம் சொல்லும் முறை. ‡ ஆகம் பத்து அரவணையான் – பத்து அவதாரங்களைக் கொண்ட திருமால். § மாகம்ப – உரத்த சுரத்தில் ஓதப்பட்ட. || இச்செய்யுள் மட்டும் இத்தலப் பெயர் தாங்கி வந்துள்ளது.

அடுத்தானை உரித்தானை அருச்சுனற்குப் பாசுபதம்
கொடுத்தானைக் குலவரையே சிலையாகக் கூரம்பு
தொடுத்தானைப் புரமெரியச் சினமல்கு கயிலாயம்
எடுத்தானைத் தடுத்தானை என்மனத்தே வைத்தேனே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திரு ஏகம்பம்

### திருநேரிசை [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நம்பனை நகர மூன்றும் எரியுண வெருவ நோக்கும்
அம்பனை அமுதை யாற்றை அணிபொழிற் கச்சி யுள்ளே
கம்பனைக்* கதிர்வெண் திங்கட் செஞ்சடைக் கடவுள் தன்னைச்
செம்பொனைப் பவளத் தூணைச் சிந்தியா எழுகின் றேனே. 1

ஒருமுழம் உள்ள குட்டம் ஒன்பது துறையு டைத்தாய்
அரைமுழம் அதன் அகலம் அதனில்வாழ் முதலை ஐந்து**
பெருமுழை வாய்தல் பற்றிக் கிடந்துநான் பிதற்று கின்றேன்
கருமுகில் தவழும் மாடக் கச்சியே கம்ப னீரே. 2

மலையினார் மகளோர் பாக மைந்தனார் மழுவொன் றேந்திச்
சிலையினால் மதில்கள் மூன்றுந் தீஎழச் செற்ற செல்வர்
இலையினார் சூலம் ஏந்தி ஏகம்பம் மேவி னாரைத்
தலையினால் வணங்க வல்லார் தலைவர்க்குந் தலைவர் தாமே. 3

பூத்தபொற் கொன்றை மாலை புரிசடைக் கணிந்த செல்வர்
தீர்த்தமாங் கங்கை யாளைத் திருமுடி திகழ வைத்து
ஏத்துவார் ஏத்த நின்ற ஏகம்பம் மேவி னாரை
வாழ்த்துமா றறிய மாட்டேன் மால்கொடு மயங்கி னேனே. 4

மையினார் மலர்நெ டுங்கண் மங்கையோர் பங்க ராகிக்
கையிலோர் கபாலம் ஏந்திக் கடைதொறும் பலிகொள் வார்தாம்
எய்வதோர் ஏனம் ஓட்டி ஏகம்பம் மேவி னாரைக்
கையினால் தொழவல் லார்க்குக் கடுவினை களைய லாமே. 5

தருவினை மருவுங் கங்கை தங்கிய சடையன் எங்கள்
அருவினை அகல நல்கும் அண்ணலை அமரர் போற்றுங்

---

*கம்பன் – ஏகம்பர். **குட்டம் – ஆழம். ஒன்பது துறை – உடலின் ஒன்பது வாசல். முதலை ஐந்து – ஐம்பொறி.

திருவினைத் திருவே கம்பஞ் செப்பிட உறைய வல்ல
உருவினை உருகி ஆங்கே உள்ளத்தால் உகக்கின் றேனே. 6

கொண்டதோர் கோல மாகிக் கோலக்கா வுடைய கூத்தன்
உண்டதோர் நஞ்ச மாகில் உலகெலாம் உய்ய உண்டான்
எண்டிசை யோரும் ஏத்த நின்றஏ கம்பன் தன்னைக்
கண்டுநான் அடிமை செய்வான் கருதியே திரிகின் றேனே. 7

படமுடை அரவி னோடு பனிமதி யதனைச் சூடிக்
கடமுடை யுரிவை மூடிக் கண்டவர் அஞ்ச அம்ம
இடமுடைக் கச்சி தன்னுள் ஏகம்பம் மேவி னான்றன்
நடமுடை யாடல் காண ஞாலந்தான் உய்ந்த வாறே. 8

பொன்திகழ் கொன்றை மாலை பொருந்திய நெடுந்தண் மார்பர்
நன்றியில் புகுந்தென் னுள்ளம் மெள்ளவே நவில நின்று
குன்றியில் அடுத்த மேனிக் குவளையங் கண்டர்S எம்மை
இன்துயில் போது கண்டார் இனியர்ஏ கம்ப னாரே. 9

துருத்தியார் பழனத் துள்ளார் தொண்டர்கள் பலரும் ஏத்த
அருத்தியால் அன்பு செய்வார் அவரவர்க் கருள்கள் செய்தே
எருத்தினை இசைய ஏறி ஏகம்பம் மேவி னார்க்கு
வருத்திநின் றடிமை செய்வார் வல்வினை மாயு மன்றே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருவிருத்தம் [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

ஓதுவித் தாய்முன் அறவுரை காட்டி அமணரோடே
காதுவித் தாய்கட்ட நோய்பிணி தீர்த்தாய் கலந்தருளிப்
போதுவித் தாய்நின் பணிபிழைக் கிற்புளி யம்வளாரால்
மோதுவிப் பாய்உகப் பாய்முனி வாய்கச்சி யேகம்பனே. 1

எத்தைக்கொண் டெத்தகை ஏழை அமணொ டிசைவித்தெனைக்
கொத்தைக்கு மூங்கர் வழிகாட்டுவித்Tதென்னைக் கோகுJசெய்தாய்

---

S குன்றியில் அடுத்த மேனிக் குவளையங் கண்டர்—செந்நிறத்தில் கருமைப் பொட்டுக்காணும் குன்றிமணிபோலச் சிவந்த திருமேனிப் பிழம்பில் நீலவிடமாகிய கண்டம் காண உள்ளவர். T கொத்தைக்கு மூங்கர் வழிகாட்டு வித்தல்—ஒரு பழமொழி. கொத்தை—குருடன். மூங்கர்—ஊமை. J கோகு—கபடம்.

முத்தில் திரளும் பளிங்கினிற் சோதியும் மொய்பவளத்
தொத்தினை யேய்க்கும் படியாய் பொழிற்கச்சி யேகம்பனே. 2

மெய்யம்பு கோத்த விசயனொ டன்றொரு வேடுவனாய்ப்
பொய்யம்பெய் தாவ மருளிச்செய் தாய்புர மூன்றெரியக்
கையம்பெய் தாய்நுன் கழலடி போற்றாக் கயவர்நெஞ்சில்
குய்யம்Aபெய் தாய்கொடி மாமதில் சூழ்கச்சி யேகம்பனே. 3

குறிக்கொண் டிருந்துசெந் தாமரை ஆயிரம் வைகல்வைகல்
நெறிப்பட இண்டை புனைகின்ற மாலை நிறையழிப்பான்
கறைக்கண்ட நீயொரு பூக்குறை வித்துக்கண் சூல்விப்பதே
பிறைத்துண்ட வார்சடை யாய்பெருங் காஞ்சியெம் பிஞ்ஞகனே4

உரைக்குங் கழிந்திங் குணர்வரி யான்உள்கு வார்வினையைக்
கரைக்கு மெனக்கை தொழுவதல் லாற்கதி ரோர்களெல்லாம்
விரைக்கொண் மலரவன் மால்எண் வசுக்கள்ஏ காதசர்கள்
இரைக்கும் அமிர்தர்க் கறியவொண் ணான்எங்கள் ஏகம்பனே. 5

கருவுற்ற நாள்முத லாகவுன் பாதமே காண்பதற்கு
உருகிற்றென் உள்ளமும் நானுங் கிடந்தலந் தெய்த்தொழிந்தேன்
திருவொற்றி யூரா திருவால வாயா திருவாரூரா
ஒருபற்றி லாமையுங் கண்டிரங் காய்கச்சி யேகம்பனே. 6

அரிஅயன் இந்திரன் சந்திரா தித்தர் அமரரெல்லாம்C
உரியநின் கொற்றக் கடைத்தலை யார்உணங் காக்கிடந்தார்
புரிதரு புன்சடைப் போக முனிவர்S புலம்புகின்றார்
எரிதரு செஞ்சடை ஏகம்ப என்னோ திருக்குறிப்பே. 7

பாம்பரைச் சேர்த்திப் படருஞ் சடைமுடிப் பால்வண்ணனே
கூம்பலைச்T செய்த கரதலத் தன்பர்கள் கூடிப்பன்னாள்
சாம்பலைப் பூசித் தரையிற் புரண்டுநின் தாள்சரணென்(று)
ஏம்பலிப் பார்Pகட் கிரங்குகண் டாய்கச்சி யேகம்பனே. 8

ஏன்றுகொண் டாயென்னை எம்பெரு மான்இனி யல்லமென்னில்
சான்றுகண் டாம்இவ் வுலகமெல் லாந்தனி யேனென்றென்னை

---

A குய்யம்–வஞ்சம். C சந்திரனுதித் தனமரரெல்லாம் என்றும் பாடம். S போகமுனிவர்–இந்திராதி போகங்களை விரும்பித் தவம் செய்யும் முனிவர்கள். போகர் முனிவர் என்றும் பாடம். T கூம்பல்– கூப்புதல். P ஏம்பலிப்பார்–இரங்கி நிற்பார்.

ஊன்றிநின் றாரைவர்க் கொற்றி வைத்தாய் பின்னை ஒற்றியெல்லாம்
சோன்றுகொண் டாய்கச்சி யேகம்ப மேய சுடர்வண்ணனே. 9

உந்திநின் றார்உன் றன் ஒலக்கச் சூளைகள்[A] வாய்தல்பற்றித்
துன்றிநின் றார்தொல்லை வானவர் ஈட்டம் பணியறிவான்
வந்துநின் றார்அய னுந்திரு மாலும் மதிற்கச்சியாய்
இந்தநின் றோமினி எங்ஙன மோவந் திறைஞ்சுவதே. 10

திருச்சிற்றம்பலம்

---

திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பண்டு செய்த பழவினை யின்பயன்
கண்டுங் கண்டுங் களித்திகாண் நெஞ்சமே
வண்டு லாமலர்ச் செஞ்சடை ஏகம்பன்
தொண்ட னாய்த்திரி யாய்துயர் தீரவே. 1

நச்சி நாளும் நயந்தடி யார்தொழ
இச்சை யால்உமை நங்கை[B] வழிபடக்
கொச்சை யார்[C]குறு கார்செறி தீம்பொழில்
கச்சி யேகம்ப மேகை தொழுமினே. 2

ஊனி லாவி இயங்கி உலகெலாம்
தானு லாவிய தன்மைய ராகிலும்
வானு லாவிய பாணி பிறங்க[D]வெங்
கானி லாடுவர் கச்சியே கம்பரே. 3

இமையா முக்கணர் என்நெஞ்சத் துள்ளவர்
தமையா ரும்மறி வொண்ணாத் தகைமையர்
இமையோ ரேத்த இருந்தவன் ஏகம்பன்
நமையா ளும்மவ னைத்தொழு மின்களே. 4

மருந்தி னோடுநற் சுற்றமும் மக்களும்
பொருந்தி நின்றெனக் காயஎம் புண்ணியன்
கருந்தடங் கண்ணி னாளுமை கைதொழ
இருந்த வன்கச்சி ஏகம்பத் தெந்தையே. 5

---

[A]ஒலக்கச் சூளைகள் – திருவோலக்கத்தில் முறைசெய்யும் காவலாளர்; அரம்பையருமாம். [B]உமை நங்கை – காமாட்சியம்மை. [C] கொச்சையார் கீழ்மக்கள், [D] பாணியிறங்க என்றும் பாடம்.

பொருளி னோடுநற் சுற்றமும் பற்றிலர்க்(கு)
அருளும் நன்மைதந் தாயஅ ரும்பொருள்
சுருள்கொள் செஞ்சடை யான்கச்சி யேகம்பம்
இருள்Aகெ டச்சென்று கைதொழு தேத்துமே. 6

மூக்கு வாய்செவி கண்ணுட லாகிவந்(து)
ஆக்கும் ஐவர்தம் ஆப்பைB அவிழ்த்தருள்
நோக்கு வான்நமை நோய்வினை வாராமே
காக்கும் நாயகன் கச்சியே கம்பனே. 7

பண்ணில் ஓசை பழத்தினில் இன்சுவை
பெண்ணொ டாணென்று பேசற் கரியவன்
வண்ண மில்லி வடிவுவே றாயவன்
கண்ணி லுண்மணி கச்சியே கம்பனே.C 8

திருவின் நாயகன் செம்மலர் மேலயன்
வெருவ நீண்ட விளங்கொளிச் சோதியான்
ஒருவ னாய்உணர் வாய்உணர் வல்லதோர்
கருவுள் நாயகன் கச்சியே கம்பனே. 9

இடுகு நுண்ணிடை ஏந்திள மென்முலை
வடிவின் மாதர் திறம்மனம் வையன்மின்
பொடிகொள் மேனியன் பூம்பொழிற் கச்சியுள்
அடிகள் எம்மை அருந்துயர் தீர்ப்பரே. 10

இலங்கை வேந்தன் இராவணன் சென்றுதன்
விலங்க லையெடுக் கவ்விர லூன்றலும்
கலங்கிக் கச்சியே கம்பவோ வென்றலும்
நலங்கொள் செலவளித் தானெங்கள் நாதனே. 11

திருச்சிற்றம்பலம்

---

## திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பூமே லானும் பூமகள் கேள்வனும்
நாமே தேவ ரெனுமை நடுக்குறத்

---

A இருள்—ஆணவ இருள். B ஐவர் ஆப்பு—ஐம்புல ஆசையாகிய கட்டு. C இஃது அத்துவித நிலையைக் குறிப்பது.

தீமே வும்முரு வாதிரு வேகம்பா
ஆமோ அல்லற் படவடி யோங்களே. 1

அருந்தி றல்அம ரர்அயன் மாலொடு
திருந்த நின்று வழிபடத் தேவியோ(டு)
இருந்த வன்எழி லார்கச்சி யேகம்பம்
பொருந்தச் சென்று புடைபட் டெழுதுமே. 2

கறைகொள் கண்டத்தெண் தோளிறை முக்கணன்
மறைகொள் நாவினன் வானவர்க் காதியான்
உறையும் பூம்பொழில் சூழ்கச்சி யேகம்பம்
முறைமை யாற்சென்று முந்தித் தொழுதுமே. 3

பொறிப் புலன்களைப் போக்கறுத் துள்ளத்தை
நெறிப்ப டுத்து* நினைந்தவர் சிந்தையுள்
அறிப்பு** றும்மமு தாயவன் ஏகம்பம்
குறிப்பி னாற்சென்று கூடித் தொழுதுமே. 4

சிந்தை யுட்சிவ மாய்நின்ற செம்மையோ(டு)
அந்தி யாய்அன லாய்ப்புனல் வானமாய்ப்
புந்தி யாய்ப்புகுந் துள்ளம் நிறைந்தவெம்
எந்தை யேகம்பம் ஏத்தித் தொழுமினே. 5

சாக்கி யத்தொடு மற்றுஞ் சமண்படும்
பாக்கி யம்மிலார் பாடு‡ செ லாதுறப்
பூக்கொள் சேவடி யான்கச்சி யேகம்பம்
நாக்கொ டேத்தி நயந்து தொழுதுமே. 6

மூப்பி னோடு முனிவுறுத் தெந்தமை
ஆர்ப்ப தன்முன் னணிஅம ரர்க்கிறை
காப்ப தாய கடிபொழில் ஏகம்பம்
சேர்ப்ப தாகநாஞ் சென்றடைந் துய்துமே. 7

ஆலு மாமயிற் சாயல்நல் லாரொடும்
சால நீயுறு மால்தவிர் நெஞ்சமே
நீல மாமிடற் றண்ணலே கம்பனார்
கோல மாமலர்ப் பாதமே கும்பிடே. 8

---

* உள்ளத்தை நெறிப்படுத்தல் – மனத்தைத் திருவருளிடத்து ஆக்குதல்: உள்ளத்தை ஒருவழிப்படுத்தலுமாம். ** அறிப்பு – அறிதல்; உணர்தல். ‡ பாடு–பக்கம்; துன்பமுமாம்.

பொய்ய னைத்தையும் விட்டவர் புந்தியுள்
மெய்ய னைச்சுடர் வெண்மழு வேந்திய
கைய னைக்கச்சி யேகம்பம் மேவிய
ஐய னைத்தொழு வார்க்கில்லை யல்லலே. 9

அரக்கன் தன்வலி உன்னிக் கயிலையை
நெருக்கிச் சென்றெடுத் தான்முடி தோள்நெரித்(து)
இரக்க இன்னிசை கேட்டவன் ஏகம்பம்
தருக்க தாகநாஞ் சார்ந்து தொழுதுமே. 10

திருச்சிற்றம்பலம்

---

திருத்தாண்டகம் [6-ம்திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கூற்றுவன்*காண் கூற்றுவனைக் குமைத்த கோன்காண் குவலயன்காண் குவலயத்தின் நீரா னான்காண், காற்றவன்காண் கனலவன்காண் கலிக்கும் மின்காண் கனபவளச் செம்மேனி கலந்த வெள்ளை, நீற்றவன்காண் நிலாவூருஞ் சென்னி யான்காண் நிறையார்ந்த புனற்கங்கை நிமிர்ச டைமேல், ஏற்றவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே. 1

பரந்தவன்காண் பல்லுயிர்க ளாகி யெங்கும் பணிந்தெழு வார் பாவமும் வினையும் போகத், துரந்தவன்காண் தூமலரங் கண்ணி யான்காண் தோற்ற நிலையிறுதிப் பொருளாய் வந்த, மருந்த வன்காண் வையங்கள் பொறைதீர்ப் பான்காண் மலர்தூவி நினைந்தெழுவா ருள்ளம் நீங்கா, திருந்தவன்காண் எழிலாரும் பொழி லார் கச்சி ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே. 2

நீற்றவன்காண் நீராகித் தீயா னான்காண் நிறைமழுவுந் தமரு கமும் எரியுங் கையில், தோற்றவன்காண் தோற்றக்கே டில்லா தான்காண் துணையிலி**காண் துணையென்று தொழுவா ருள்ளம், போற்றவன்காண் புகழ்கள்தமைப் படைத்தான் தான்காண் பொறியரவும் விரிசடைமேற் புனலுங் கங்கை, ஏற்றவன்

---

* கூற்றுவன் – வேதங்களைச் சொன்னவன். இறுதிபயப்பவனு மாம், ** துணையிலி–ஒப்பு இல்லாதவன்.

காண் எழிலாரும் பொழிலார் கச்சி ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே. 3

தாயவன்காண் உலகிற்குத் தன்னொப் பில்லாத் தத்துவன் காண் மலைமங்கை பங்கா வென்பார், வாயவன்†காண் வரும் பிறவி நோய்தீர்ப் பான்காண் வானவர்க்குந் தானவர்க்கும் மண்ணு ளோர்க்குஞ், சேயவன்காண் நினைவார்க்குச் சித்த மாரத் திருவடியே உள்கிநினைந் தெழுவா ருள்ளம், ஏயவன்காண் எழி லாரும் பொழிலார் கச்சி ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே. 4

அடுத்தானை யுரித்தான்காண்...........|| 5

அழித்தவன்காண் எயில்மூன்றும் அயில்வா யம்பால் ஐயா றும் இடைமருதும் ஆள்வான் தான்காண், பழித்தவன்காண் அடையாரை அடைவார் தங்கள் பற்றவன்காண் புற்றரவ நாணி னன்காண், சுழித்தவன்காண் முடிக்கங்கை அடியே போற்றுந் தூயமா முனிவர்க்காய்ப் பார்மேல் நிற்க, இழித்தவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி ஏகம்பன் காண்அவனென் எண் ணத் தானே. 6

அசைந்தவன்காண் நடமாடிப் பாடல் பேணி அழல் வண்ணத் தில்லடியும் முடியுந் தேடப், பசைந்தவன்காண் பேய்க் கணங்கள் பரவியேத்தும் பான்மையன்காண் பரவிநினைந் தெழு வார் தம்பால், கசிந்தவன்காண் கரியினுரி போர்த்தான் தான் காண் கடல்விடம் உண்டமரர்க் கமுத மீய, இசைந்தவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே. 7

முடித்தவன்காண் வன்கூற்றைச் சீற்றத் தீயால் வலியார் தம் புரமூன்றும் வேவச் சாபம், பிடித்தவன்காண் பிஞ்ஞகனும் வேடத் தான்காண் பிணையல்வெறி கமழ்கொன்றை அரவு சென்னி, முடித்தவன்காண் மூவிலைநல் வேலி னன்காண் முழங்கி யுரு மெனத்தோன்றும் மழையாய் மின்னி, இடித்தவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி ஏகம்பன் காண்அவனென் எண் ணத் தானே. 8

---

† வாயவன்—வாக்கில் இருப்பவன். || இச்செய்யுளில் எஞ்சிய பாகம் சிதைந்து போயிற்று.

வருந்தான்காண்¶ மனமுருகி நினையா தார்க்கு வஞ்சகன்காண் அஞ்செழுத்து நினைவார்க் கென்றும், மருந்தவன்காண் வான்பிணிகள் தீரும் வண்ணம் வானகமும் மண்ணகமும் மற்று மாகிப், பரந்த வன்காண் படர்சடையெட் டுடையான் தான்காண் பங்கயத் தோன் தன்சிரத்தை யேந்தி யூரூர், இரந்தவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே. 9

வெம்மான உழுவையத ளுரிபோர்த் தான்காண் வேதத்தின் பொருளான்காண் என்றி யம்பி, விம்மாநின் றழுவார்கட் களிப் பான் தான்காண் விடையேறித் திரிவான்காண் நடஞ்செய் பூதத், தம்மான்காண் அகலிடங்கள் தாங்கி னான்காண் அற்புதன்காண் சொற்பதமுங் கடந்து நின்ற, எம்மான்காண் எழிலாரும் பொழி லார் கச்சி ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே. 10

அறுத்தான்காண் அயன்சிரத்தை அமரர் வேண்ட ஆழ்கட லின் நஞ்சுண்டங் கணிநீர்க் கங்கை, செறுத்தான்காண் தேவர்க் குந் தேவன் தான்காண் திசையனைத்துந் தொழுதேத்தக் கலை மான் கையில், பொறுத்தான்காண் புகலிடத்தை நலிய வந்து பொருகயிலை எடுத்தவன்தன் முடிதோள் நாலஞ், சிறுத்தான் காண் எழிலாரும் பொழிலார் கச்சி ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே. 11

திருச்சிற்றம்பலம்

---

## திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

உரித்தவன்காண் உரக்களிற்றை உமையாள் ஒல்க ஓங்காரத் தொருவன்*காண் உணர்மெய்ஞ் ஞானம், விரித்தவன்காண் விரித்த நால் வேதத் தான்காண் வியனுலகிற் பல்லுயிரை விதியி னாலே, தெரித்தவன்காண் சில்லுருவாய்த் தோன்றி யெங்குந் திரண் டவன்காண் திரிபுரத்தை வேவ வில்லால், எரித்தவன்காண் எழி லாரும் பொழிலார் கச்சி ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே. 1

நேசன்காண் நேசர்க்கு நேசந் தன்பால் இல்லாத நெஞ்சத்து நீசர் தம்மைக், கூசன்காண் கூசாதார் நெஞ்சு தஞ்சே குடிகொண்ட

---

¶ வருந்தவன்காண் என்றும் பாடம். * ஓங்காரத்து ஒருவன்— ஓங்காரம் என்னும் தலத்தில் எழுந்தருளிய ஏகன் எனினுமாம்.

குழகன்காண் அழகார் கொன்றை, வாசன்காண் மலைமங்கை பங்கன் தான்காண் வானவர்கள் எப்பொழுதும் வணங்கி யேத்தும், ஈசன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே. 2

பொறையவன்காண் பூமியேழ் தாங்கி யோங்கும் புண்ணி யன்காண் நண்ணியபுண் டரிகப் போதில், மறையவன்காண் மறையவனைப் பயந்தோன் தான்காண் வார்சடைமா சுணமணிந்து வளரும் பிள்ளைப், பிறையவன்காண் பிறைதிகழும் எயிற்றுப் பேழ்வாய்ப் பேயோடங் கிடுகாட்டில் எல்லி யாடும், இறையவன் காண் எழிலாரும் பொழிலார் கச்சி ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே. 3

பாரவன்காண் விசும்பவன்காண் பவ்வந் தான்காண் பனி வரைகள் இரவிநெடு பகலாய் நின்ற, சீரவன்காண் திரையவன் காண் திசைகளெட்டுஞ் செறிந்தவன்காண் சிறந்தடியார் சிந்தை செய்யும், பேரவன்காண் பேரா யிரங்களேத்தும் பெரியவன் காண் அரியவன்காண் பெற்றம்ஊர்ந்த, ஏரவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே. 4

பெருந்தவத்தெம் பிஞ்ஞகன்காண் பிறைசூ டிகாண் பேதையேன் வாதையுறு பிணியைத் தீர்க்கும், மருந்தவன்காண் மந்திரங்க ளாயினான்காண் வானவர்கள் தாம்வணங்கும் மாதேவன்காண், அருந்தவத்தாள் ஆயிழையாள் உமையாள் பாகம் அமர்ந்த வன்காண் அமரர்கள்தாம் அர்ச்சித் தேத்த, இருந்தவன் காண் எழிலாருங் பொழிலார் கச்சி ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே. 5

ஆய்ந்தவன்காண் அருமறையோ டங்கம்ஆறும் அணிந்தவன் காண் ஆடரவோ டென்பு மாமை, காய்ந்தவன்காண் கண்ணழ லாற் காமன் ஆகங் கனன்றெழுந்த காலனுடன் பொடியாய் வீழப், பாய்ந்தவன்காண் பண்டுபல சருகால் பந்தர் பயின்றநூற் சிலந்திக்குப் பாராள் செல்வம், ஈந்தவன்காண் எழிலாரும் பொழி லார் கச்சி ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே. 6

உமையவளை யொருபாகஞ் சேர்த்தி னான்காண் உகந்தொலி நீர்க் கங்கைசடை யொழுக்கி னான்காண், இமய வடகயிலைச் செல்வன் தான்காண் இல்பலிக்குச் சென்றுழலும் நல்கூர்ந் தான்காண், சமயமவை யாறினுக்குந் தலைவன் தான்காண் தத்து

வன்காண் உத்தமன்காண் தானே யாய, இமையவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி ஏகம்பன் காண்அவனென் எண் ணத் தானே. 7

தொண்டுபடு தொண்டர்துயர் தீர்ப்பான் தான்காண் தூமலர்ச்சே வடியிணையெம் சோதி யான்காண், உண்டுபடு விடங்கண்டத் தொடுக்கி னான்காண் ஒலிகடலில் அமுதமரர்க் குதவி னான்காண், வண்டுபடு மலர்க்கொன்றை மாலை யான்காண் வாண்மதியாய் நாண்மீனு மாயி னான்காண், எண்டிசையும் எழிலாரும் பொழி லார்கச்சி ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே. 8

முந்தைகாண் மூவரினும் முதலா னான்காண் மூவிலைவேல் மூர்த்திகாண் முருக வேட்குத், தந்தைகாண் தண்கடமா முகத்தி னற்குத் தாதைகாண் தாழ்ந்தடியே வணங்கு வார்க்குச், சிந்தை காண் சிந்தாத சித்தத் தார்க்குச் சிவனவன்காண் செங்கண்மால் விடையொன் றேறும், எந்தைகாண் எழிலாரும் பொழிலார் கச்சி ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே. 9

பொன்னிசையும் புரிசடையெம் புனிதன் தான்காண் பூதகண நாதன்காண் புலித்தோ லாடை, தன்னிசைய வைத்தஎழி லரவி னான்காண் சங்கவெண் குழைக்காதிற் சதுரன் தான்காண், மின்னிசையும் வெள்ளெயிற்றோன் வெகுண்டு வெற்பை யெடுக்க அடி யடர்ப்பமீண் டவன்றன் வாயில், இன்னிசைகேட் டிலங் கொளிவாள் ஈந்தோன் கச்சி ஏகம்பன் காண்அவனென் எண் ணத் தானே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—ஏகாம்பரநாதர், திருவேகம்பர்;
தேவி—காமாட்சியம்மையார், ஏலவார்குழலி.

---

## 2. திருக்கச்சி மேற்றளி *

திருநேரிசை [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மறையது பாடிப் பிச்சைக் கென்றகந் திரிந்து வாழ்வார்
பிறையது சடைமு டிமேற் பெய்வளை யாள்தன் னோடும்

---

* 'பிள்ளை பாளையம்' என வழங்கப்பெறும். திருக்காஞ்சித் திருமேற்றளி என்றும் பாடம். தளி – கோயில்.

கறையது கண்டங் கொண்டார் காஞ்சிமா நகர்தன் னுள்ளால்
இறையவர் பாட லாடல் இலங்குமேற் றளிய னாரே. 1

மாலன மாயன் தன்னை மகிழ்ந்தனர் விருத்த ராகும்
பாலனார்* பசுபதியார் பால்வெள்ளை நீறு பூசிக்
காலனைக் காலாற் செற்றார் காஞ்சிமா நகர்தன் னுள்ளால்
ஏலநற் கடம்பன் தாதை இலங்குமேற் றளிய னாரே. 2

விண்ணிடை விண்ண வர்கள் விரும்பிவந் திறைஞ்சி வாழ்த்தப்
பண்ணிடைச் சுவையின் மிக்க கின்னரம் பாடல் கேட்டார்
கண்ணிடை மணியி னொப்பார் காஞ்சிமா நகர்தன் னுள்ளால்
எண்ணிடை யெழுத்து மானார்** இலங்குமேற் றளிய னாரே. 3

சோமனை அரவி னோடு சூழ்தரக் கங்கை சூடும்
வாமனை வான வர்கள் வலங்கொடு வந்து போற்றக்
காமனைக் காய்ந்த கண்ணார் காஞ்சிமா நகர்தன் னுள்ளால்
ஏமநின் றாடும் எந்தை இலங்குமேற் றளிய னாரே. 4

ஊனவ ருயிரி னோடு முலகங்க ளூழி யாகித்
தானவர் தனமு மாகித் தனஞ்சய னோடெ திர்ந்த
கானவர் காள கண்டர் காஞ்சிமா நகர்தன் னுள்ளால்
ஏனமக் கோடு பூண்டார் இலங்குமேற் றளிய னாரே. 5

மாயனாய் மால னாகி மலரவ னாகி மண்ணாய்த்
தேயமாய்த் திசையெட் டாகித் தீர்த்தமாய்த் திரிதர் கின்ற
காயமாய்க் காயத் துள்ளார் காஞ்சிமா நகர்தன் னுள்ளால்
ஏயமென் தோளி பாகர் இலங்குமேற் றளிய னாரே. 6

மண்ணினை யுண்ட மாயன் தன்னையோர் பாகங் கொண்டார்
பண்ணினைப் பாடி யாடும் பத்தர்கள் சித்தங் கொண்டார்
கண்ணினை மூன்றுங் கொண்டார் காஞ்சிமா நகர்தன் னுள்ளால்
எண்ணினை யெண்ண வைத்தார் இலங்குமேற் றளிய னாரே. 7

செல்வியைப் பாகங் கொண்டார் சேந்தனை மகனாக் கொண்டார்
மல்லிகைக் கண்ணி யோடு மாமலர்க் கொன்றை சூடிக்
கல்வியைக் கரையி லாத காஞ்சிமா நகர்தன் னுள்ளால்
எல்லியை விளங்க நின்றார் இலங்குமேற் றளிய னாரே. 8

---

* விருத்தராகும் பாலனார்—இது விருத்த குமார பாலரான திருவிளையாடலைக் குறிப்பது. ** எண்ணிடை எழுத்து மானார்—உயிர் அறிவை விளங்க வைப்பர்.

வேறிணை இன்றி யென்றும் விளங்கொளி மருங்கி னாளைக்
கூறியல் பாகம் வைத்தார் கோளரா மதியும் வைத்தார்
ஆறினைச் சடையுள் வைத்தார் அணிபொழிற் கச்சி தன்னுள்
ஏறினை யேறு மெந்தை இலங்குமேற் றளிய னாரே. 9

தென்னவன்A மலையெ டுக்கச் சேயிழை நடுங்கக் கண்டு
மன்னவன் விரலா லூன்ற மணிமுடி நெரிய வாயால்
கன்னலின் கீதம் பாடக் கேட்டவர் காஞ்சி தன்னுள்
இன்னவற் கருளிச் செய்தார்B இலங்குமேற் றளிய னாரே. 10

திருச்சிற்றம்பலம்

---

வாமி—திருமேற்றளிநாதர்; தேவி—காமாட்சியம்மையார்.

---

## 3. திருமாற்பேறு

திருவிருத்தம்C [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மாணிக் குயிர்பெறக் கூற்றை யுதைத்தன மாவலிபால்
காணிக் கிரந்தவன் காண்டற் கரியன கண்டதொண்டர்
பேணிக் கிடந்து பரவப் படுவன பேர்த்துமஃதே
மாணிக்க மாDவன மாற்பே றுடையான் மலரடியேE. 1

கருடத் தனிப்பாகன் காண்டற் கரியன காதல்செய்யில்
குருடர்Fக்கு முன்னே குடிகொண் டிருப்பனG கோலமல்கு
செருடக் கடிமலர்ச் செல்விதன் செங்கம லக்கரத்தால்
வருடச் சிவப்பன மாற்பே றுடையான் மலரடியே. 2

திருச்சிற்றம்பலம்

---

A தென்னவன்-இராவணன். B இன்னவர்க் கருளிச் செய்தார் என்றும், இன்னவாக் கருளிச்செய்தார் என்றும் பாட பேதம். C இப்பதிகத்தில் இரண்டு செய்யுட்கள் தவிர ஏனைய செய்யுட்கள் மறைந்துபோயின. D மாணிக்கம்-இது பெறற்கரிய சிவப்பேற்றைக் குறிப்பது. E அடி-திருவருள் நிறைவு. F குருடர்-முன்னர் உண்மை காணாதவர். G முன்னே குடிகொண்டிருத்தல் - வழிகாட்டுதல்; இஃது அருளுதல் குறித்தது.

திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]
திருச்சிற்றம்பலம்

பொருமாற் றின்படை வேண்டிநற் பூம்புனல்
வருமாற் றின்மலர் கொண்டு வழிபடும்
கருமாற் கி*ன்னருள் செய்தவன் காண்தகு
திருமாற் பேறு தொழவினை தேயுமே. 1

ஆலத் தார்நிழ லில்அறம் நால்வர்க்குக்
கோலத் தாலுரை செய்தவன் குற்றமில்
மாலுக் காரருள் செய்தவன் மாற்பேறு
ஏலத்** தான்தொழு வார்க்கிட ரில்லையே. 2

துணிவண் ணச்சுடர் ஆழிகொள் வானெண்ணி
அணிவண் ணத்தலர் கொண்டடி யர்ச்சித்த
மணிவண் ணற்கருள் செய்தவன் மாற்பேறு
பணிவண் ணத்தவர்க் கில்லையாம் பாவமே. 3

தீதவை செய்து தீவினை வீழாதே
காதல் செய்து கருத்தினில் நின்றநன்
மாத வர்பயில் மாற்பேறு கைதொழப்
போது மின்வினை யாயின போகுமே. 4

வார்கொள் மென்முலை மங்கையோர் பங்கினன்
ஊர்கொள் நன்முர சம்மறை யவ்வறை
வார்கொள் பைம்பொழில் மாற்பேறு கைதொழு
வார்கள் மன்னுவர் பொன்னுல கத்திலே. 5

பண்டை வல்வினை பற்றறுக் கும்வகை
உண்டு சொல்லுவன் கேண்மின் ஒளிகிளர்
வண்டு சேர்பொழில் சூழ்திரு மாற்பேறு
கண்டு கைதொழத் தீருங் கவலையே. 6

மழுவ லான்திரு நாமம்† மகிழ்ந்துரைத்(து)
அழுவ லார்‡களுக் கன்புசெய் தின்பொடும்
வழுவி லாவருள் செய்தவன் மாற்பேறு
தொழுவ லார்தமக் கில்லைத் துயரமே. 7

* கருமாற்கு–கரிய திருமாலுக்கு. **ஏல–மிகவும். † திருநாமம்–ஐந்தெழுத்து. ‡ அழுவலார்–அன்பு மேலீட்டினால் அழுவல்லவர்.

முன்ன வன்உல குக்கு முழுமணிப்
பொன்ன வன்திகழ் முத்தொடு போகமாம்
மன்ன வன்§திரு மாற்பேறு கைதொழும்
அன்ன வரெமை யாளுடை யார்களே. 8

வேட னாய்விச யன்னொடும் எய்துவெம்
காடு நீடுகந் தாடிய கண்ணுதல்
மாட நீடுய ருந்திரு மாற்பேறு
பாடு வார்பெறு வார்பர லோகமே. 9

கருத்த னாய்க்கயி லாய மலைதனைத்
தருக்கி னாலெடுத் தானைத் தகரவே
வருத்தி ஆரருள் செய்தவன் மாற்பேறு
அருத்தி† யால்தொழு வார்க்கில்லை அல்லலே. 10

திருச்சிற்றம்பலம்

---

திருக்குறுந்தொகை*

திருச்சிற்றம்பலம்

ஏது மொன்றும் அறிவில ராயினும்
ஓதி அஞ்செழுத் தும்முணர் வார்கட்குப்
பேத மின்றி அவரவர் உள்ளத்தே
மாதுந் தாமும் மகிழ்வர்மாற் பேறரே. 1

அச்ச மில்லைநெஞ் சேஅரன் நாமங்கள்
நிச்ச லுந்நினை யாய்வினை போயறக்
கச்ச மாவிட முண்டகண் டாவென
வைச்ச** மாநிதி யாவர்மாற் பேறரே. 2

சாத்தி ரம்பல பேசுஞ் சழக்கர்காள்
கோத்தி ரமுங்கு லமுங்கொண் டென்செய்வீர்
பாத்தி ரஞ்சிவ மென்று பணிதிரேல்
மாத்தி ரைக்குள் அருளுமாற் பேறரே.‡ 3

---

§ போகமாம் மன்னவன்—உலகத்துக்கெல்லாம் போகத்தை அளிக்கும் அரசன்; இறைவன்; சிவம் சக்தியுடன் கூடியே போகத்தை அளிக்கும் என்பதாம். † அருத்தி—ஆசை. * இப்பதிகத்தில் 8, 9-ம் செய்யுட்கள் சிதைந்து போயின. **வைச்ச – சேமித்து வைத்த. ‡ இறைவனின் நினைவு இல்லாவிடின் சாத்திரமும் கோத்திரமும் குலமும் பயன் தாரா என்பது இச்செய்யுளின் கருத்து.

இருந்து சொல்லுவன் கேண்மின்கள் ஏழைகாள்
அருந்த வந்தரும் அஞ்செழுத் தோதினால்
பொருந்து நோய்பிணி போகத் துரப்பதோர்
மருந்து மாகுவர் மன்னுமாற் பேறரே. 4

சாற்றிச்† சொல்லுவன் கேண்மின் தரணியீர்
ஏற்றின் மேல்வரு வான்கழ லேத்தினால்
கூற்றை நீக்கிக் குறைவறுத் தாள்வதோர்
மாற்றி லாச்செம்பொ னாவர்மாற் பேறரே. 5

ஈட்டும் மாநிதி சால இழக்கினும்
வீட்டுங் காலன் விரைய அழைக்கினும்
காட்டில் மாநட மாடுவாய் காவெனில்
வாட்டந் தீர்க்கவும் வல்லர்மாற் பேறரே. 6

ஐய னேயர னேயென் றரற்றினால்
உய்ய லாமுல கத்தவர் பேணுவர்
செய்ய பாதம் இரண்டும் நினையவே
வையம் ஆளவும் வைப்பர்மாற் பேறரே. 7-9

உந்திச் சென்று மலையை யெடுத்தவன்
சந்து தோளொடு தாளிற வூன்றினான்
மந்தி பாய்பொழில் சூழுமாற் பேறென
அந்த மில்லதோர் இன்பம்‡ அணுகுமே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பாரானைப் பாரினது பயனா னானைப் படைப்பாகிப்* புல்லுயிர்க்கும் பரிவோன் தன்னை, ஆராத இன்னமுதை அடியார் தங்கட் கனைத்துலகு மானானை அமரர் கோனைக், காராருங் கண்டனைக் கயிலை வேந்தைக் கருதுவார் மனத்தானைக் காலற் செற்ற, சீரானைச் செல்வனைத் திருமாற் பேற்றெஞ் செம்பவளக் குன்றினைச்சென் றடைந்தேன் நானே. 1

---

† சாற்றல்–இங்கு அறைதல்; பலரறியக் கூறுதலுமாம். ‡ அந்தமில்லதோர் இன்பம்–பேரின்பம். *படைப்பானைப் என்றும் பாடம்.

விளக்கின்ற நீராகி வித்து மாகி விண்ணோடு மண்ணாகி விளங்கு செம்பொன், துளக்கின்ற துளையாகிச் சோதி யாகித் தூண்டரிய சுடராகித் துளக்கில் வான்மேல், முளைக்கின்ற கதிர் மதியும் அரவு மொன்றி முழங்கொலிநீர்க் கங்கையொடு மூவா தென்றும், திளைக்கின்ற சடையானைத் திருமாற் பேற்றெஞ் செம் பவளக் குன்றினைச்சென் றடைந்தேன் நானே. 2

மலைமகள்தங் கோனவனை மாநீர் முத்தை மரகதத்தை மா மணியைT மல்கு செல்வக், கலைநிலவு கையானைக் கம்பன் தன்னைக் காண்பினிய செழுஞ்சுடரைக் கனகக் குன்றை, விலைபெரிய வெண்ணீற்று மேனியானை மெய்யடியார் வேண்டுவதே* வேண்டு வானைச், சிலைநிலவு கரத்தானைத் திருமாற் பேற்றெஞ் செம்பவளக் குன்றினைச்சென் றடைந்தேன் நானே. 3

உற்றானை உடல்தனக்கோர் உயிரா னானை ஓங்காரத் தொரு வனைSயங் குமையோர் பாகம், பெற்றானைப் பிஞ்ஞகனைப் பிறவா தானைப் பெரியனவுந் அரியனவும் எல்லாம் முன்னே, கற்றானைக் கற்பனவுந் தானே யாய கச்சியே கம்பனைக் காலன் வீழச், செற் றானைத் திகழொளியைத் திருமாற் பேற்றெஞ் செம்பவளக் குன்றினைச்சென் றடைந்தேன் நானே. 4

நீறாகி நீறுமிழும் நெருப்புமாகி நினைவாகி நினைவினிய மலை யான் மங்கை, கூறாகிக் கூற்றாகிக் கோளு மாகிக் குணமாகிக் குறையாத வுவகைக் கண்ணீர், ஆறாத ஆனந்தத் தடியார் செய்த அனாசாரம் பொறுத்தருளி அவர்மே லென்றுஞ், சீறாத பெருமானைத் திருமாற் பேற்றெஞ் செம்பவளக் குன்றினைச்சென் றடைந்தேன் நானே. 5

மருவினிய மறைப்பொருளை மறைக்காட் டானை மறப் பிலியை மதியேந்து சடையான் தன்னை, உருநிலவு மொண்சுடரை உம்பரானை உரைப்பினிய தவத்தானை உலகில் வித்தைக், கருநிலவு கண்டனைக் காளத் தியைக் கருதுவார் மனத்தானைக் கல்வி தன்னைச், செருநிலவு படையானைத் திருமாற் பேற்றெஞ் செம் பவளக் குன்றினைச்சென் றடைந்தேன் நானே. 6

---

T முத்து-முழுமணிச்சோதி; மரகதம்-அம்மைபாகம்; மாமணி-இறைவன் பாகம். * வேண்டியதே என்றும் பாடம். S ஓங்காரத்து ஒருவனை-பிரணவ வாச்சியனாகிய சிவனை.

பிறப்பானைப்† பிறவாத பெருமை யானைப்* பெரியானை அரியானைப் பெண்ஆண் ஆய, நிறத்தானை நின்மலனை நினையா தாரை நினையானை நினைவோரை நினைவோன் தன்னை, அறத்தானை அற வோனை ஐயன் தன்னை அண்ணல்தனை நண்ணரிய அமர ரேத்துந், திறத்தானைத் திகழொளியைத் திருமாற் பேற்றெஞ் செம்பவளக் குன்றினைச்சென் றடைந்தேன் நானே. 7

வானகத்தில் வளர்முகிலை மதியந் தன்னை வணங்குவார் மனத்தானை வடிவார் பொன்னை, ஊனகத்தில் உறுதுணையை உலவா தானை ஒற்றியூர் உத்தமனை ஊழிக் கன்றைக், கானகத்துக் கருங்களிற்றைக் காளத் தியைக் கருதுவார் கருத்தானைக் கருவை மூலத், தேனகத்தி லின்சுவையைத் திருமாற் பேற்றெஞ் செம் பவளக் குன்றினைச்சென் றடைந்தேன் நானே. 8

முற்றாத முழுமுதலை முளையை மொட்டை முழுமலரின் மூர்த் தியை முனியா தென்றும், பற்றாகிப் பல்லுயிர்க்கும் பரிவோன் தன்னைப் பராபரனைப் பரஞ்சுடரைப் பரிவோர் நெஞ்சில், உற் றானை உயர்கருப்புச் சிலையோன் நீறாய் ஒள்ளழல்வாய் வேவவுறு** நோக்கத் தானைச், செற்றானைத் திரிபுரங்கள் திருமாற் பேற்றெஞ் செம்பவளக் குன்றினைச்சென் றடைந்தேன் நானே. 9

விரித்தானை நான்மறையோ டங்க மாறும் வெற்பெடுத்த இராவணனை விரலா லூன்றி, நெறித்தானை நின்மலனை அம்மான் தன்னை நிலாநிலவு செஞ்சடைமேல் நிறைநீர்க் கங்கை, தரித் தானைச் சங்கரனைச்‡ சம்பு§ தன்னைத் தரியலர்கள் புரமூன்றுந் தழல்வாய் வேவச், சிரித்தானைத் திகழொளியைத் திருமாற் பேற்றெஞ் செம்பவளக் குன்றினைச்சென் றடைந்தேன் நானே.

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி–மால்வணங்கீசுவரர், மணிகண்டேசுவரர்;

தேவி–கருணைநாயகி, அஞ்சனாட்சியம்மை.

---

† பிறப்பானை – பிறக்கச்செய்வானை என்றலுமாம். * பிறவாத பெருமையான் – எல்லா உயிருள்ளும் நிறைந்திருந்தும் தான்பிறவியில் வாராதவன். ‡ சங்கரன் – இன்பஞ்செய்பவன். § இன்பத்திற்குப் பிறப்பிடமானவன். ** வேவவரு, வேவவொரு என்றும் பாடம்.

## 4. திருவாலங்காடு*

### திருநேரிசை [4-ம் திருமுறை]

### திருச்சிற்றம்பலம்

வெள்ளநீர்ச் சடையர் போலும் விரும்புவார்க் கெளியர் போலும்
உள்ளுளே யுருகி நின்றங் குகப்பவர்க் கன்பர் போலும்
கள்ளமே** வினைக ளெல்லாங் கரிசு†றுத் திடுவர் போலும்
அள்ளலம் பழனை மேய ஆலங்காட் டடிக ளாரே. 1

செந்தழ லுருவர் போலுஞ் சினவிடை யுடையர் போலும்
வெந்தவெண் ணீறு கொண்டு மெய்க்கணிந் திடுவர் போலும்
மந்தமாம் பொழிற் பழனை மல்கிய வள்ளல்‡ போலும்
அந்தமில் அடிகள் போலும் ஆலங்காட் டடிக ளாரே. 2

கண்ணினாற் காம வேளைக் கனலெழ விழிப்பர் போலும்
எண்ணிலார் புரங்கள் மூன்று மெரியுணச் சிரிப்பர் போலும்
பண்ணினார் முழவ மோவாப் பைம்பொழிற் பழனை மேய
அண்ணலார் எம்மை யாளும் ஆலங்காட் டடிக ளாரே. 3

காறிடு§ விடத்தை யுண்ட கண்டரெண் தோளர் போலும்
தூறிடு சுடலை தன்னிற் சுண்ணவெண் ணீற்றர் போலும்
கூறிடு முருவர் போலுங் குளிர்பொழிற் பழனை மேய
ஆறிடு சடையர் போலும் ஆலங்காட் டடிக ளாரே. 4

பார்த்தனோ டமர் பொருது பத்திமை காண்பர் போலும்
கூர்த்தவா யம்பு கோத்துக் குணங்களை அறிவர் போலும்
பேர்த்துமோ ராவ நாழி¶ அம்பொடுங் கொடுப்பர் போலும்
தீர்த்தமாம் பழனை மேய திருவாலங் காட னாரே. 5

வீட்டினார் சுடுவெண் ணீறு மெய்க்கணிந் திடுவர் போலும்
காட்டில்நின் றாடல் பேணுங் கருத்தினை யுடையர் போலும்
பாட்டினார் முழவ மோவாப் பைம்பொழிற் பழனை மேயார்
ஆட்டினார் அரவந் தன்னை ஆலங்காட் டடிக ளாரே. 6

தாளுடைச் செங்க மலத் தடங்கொள்சே வடியர் போலும்
நாளுடைக் காலன் வீழ உதைசெய்த நம்பர் போலும்

---

*இது பழையனூர் ஆலங்காடு எனப்பெயர் பெறும். **கள்ளம்-ஆணவம். † கரிசு–துன்பம்; குற்றம். ‡ மல்கிய செல்வர் என்றும் பாடம். § காறிடு–கொல்லும். ¶ ஆவநாழி–அம்பறுத்தூணி.

கோளுPடைப் பிறவி தீர்ப்பார் குளிர்பொழிற் பழனை மேய
ஆளுடை அண்ணல் போலும் ஆலங்காட் டடிக ளாரே. 7

கூடினார் உமைதன் னோடே குறிப்புடை வேடங் கொண்டு
சூடினார் கங்கை யாளைச் சுவறிடு சடையர் போலும்
பாடினார் சாம வேதம் பைம்பொழிற் பழனை மேயார்
ஆடினார் காளி காண ஆலங்காட் டடிக ளாரே. 8

வெற்றரைச் சமண ரோடு விலையுடைக் கூறை போர்க்கும்
ஒற்றரைச் சொற்கள்S கொள்ளார் குணங்களை உகப்பர் போலும்
பெற்றமே உகந்தங் கேறும் பெருமையை யுடையர் போலும்
அற்றங்கள் அறிவர் போலும் ஆலங்காட் டடிக ளாரே. 9

மத்தனாய் மலையெ டுத்த அரக்கனைக் கரத்தோ டொல்க
ஒத்தினார் திருவிரலா லூன்றியிட் டருள்வர் போலும்
பத்தர்தம் பாவந் தீர்க்கும் பைம்பொழிற் பழனை மேய
அத்தனார் நம்மை ஆள்வார் ஆலங்காட் டடிக ளாரே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

ஒன்றா வுலகனைத்து மானார் தாமே ஊழிதோ றூழி உயர்ந்தார்* தாமே, நின்றாகி யெங்கும் நிமிர்ந்தார் தாமே நீர்வளிதீ யாகாச மானார் தாமே, கொன்றாடுங் கூற்றை யுதைத்தார் தாமே கோலப் பழனை உடையார் தாமே, சென்றாடு தீர்த்தங்க ளானார் தாமே திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே. 1

மலைமகளைப் பாக மமர்ந்தார் தாமே வானோர் வணங்கப் படுவார் தாமே, சலமகளைச் செஞ்சடைமேல் வைத்தார் தாமே சீரணிைன் றிருப்பார்கட் கன்பர் தாமே, பலபலவும் வேடங்க ளானார் தாமே பழனை பதியா வுடையார் தாமே, சிலைமலையா மூவெயிலும் அட்டார் தாமே திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே. 2

---

P கோள்-பாசக்கட்டு. S ஒற்றரைச் சொற்கள்-வெறுஞ் சொற்கள்; பயனில்லாத சொற்கள் * ஊழிதோறூழி உயர்ந்தார்-காலங் கடந்தவர்.

ஆவுற்ற ஐந்தும் உகந்தார் தாமே அளவில் பெருமை யுடையார் தாமே, பூவுற்ற நாற்றமாய் நின்றார் தாமே புனிதப் பொருளாகி நின்றார் தாமே, பாவுற்ற பாட லுகப்பார் தாமே பழனை பதியா வுடையார் தாமே, தேவுற் றடிபரவ நின்றார் தாமே திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே. 3

நாறுபூங் கொன்றை முடியார் தாமே நான்மறையோ டாறங்கஞ் சொன்னார் தாமே, மாறிலா மேனி யுடையார் தாமே மாமதியஞ் செஞ்சடைமேல் வைத்தார் தாமே, பாறினார் வெண்டலையி லுண்டார் தாமே பழனை பதியா வுடையார் தாமே, தேறினார் சித்தத் திருந்தார் தாமே திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே. 4

அல்லும் பகலுமாய் நின்றார் தாமே அந்தியுஞ் சந்தியு மானார்T தாமே, சொல்லும் பொருளெலா மானார் தாமே தோத்திரமுஞ் சாத்திரமு* மானார் தாமே, பல்லுரைக்கும் பாவெலா மானார் தாமே பழனை பதியா வுடையார் தாமே, செல்லும் நெறி காட்ட வல்லார் தாமே திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே. 5

தொண்டாய்ப் பணிவார்க் கணியார் தாமே தூநீ றணியுஞ் சுவண்டர் தாமே, தண்தா மரையானும் மாலுந் தேடத் தழலுருவா யோங்கி நிமிர்ந்தார் தாமே, பண்தான் இசைபாட நின்றார் தாமே பழனை பதியா வுடையார் தாமே, திண்டோள்க ளெட்டுமுடையார் தாமே திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே. 6

மையாருங் கண்ட மிடற்றார் தாமே மயானத்தி லாடல் மகிழ்ந்தார் தாமே, ஐயாறும் ஆரூரும் ஆனைக் காவும் அம்பலமுஞ்S கோயிலாக் கொண்டார் தாமே, பையா டரவ மசைத்தார் தாமே பழனை பதியா வுடையார் தாமே, செய்யாள் வழிபட நின்றார் தாமே திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே. 7

விண்முழுதும் மண்முழுது மானார் தாமே மிக்கோர்க ளேத்துங் குணத்தார் தாமே, கண்விழியாற் காமனையுங் காய்ந்தார்

---

T அல்லும்............சந்தியுமானார் - காலதத்துவமாய் நிற்றல், * தோத்திரமும் சாத்திரமும்-தேவார முதலிய அருட்பாக்களும் ஞான சாஸ்திரங்களும்; வேதங்களும் ஆகமங்களுமாம். S அம்பலம். சிதம்பரம்.

தாமே காலங்க ளூழி கடந்தார் தாமே, பண்ணியலும் பாட லுகப்பார் தாமே பழனை பதியா வுடையார் தாமே, திண்மழுவா ளேந்து கரத்தார் தாமே திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே.

காரார் கடல்நஞ்சை யுண்டார் தாமே கயிலை மலையை உடையார் தாமே, ஊரா ஏகம்பம் உகந்தார் தாமே ஒற்றியூர் பற்றி இருந்தார் தாமே, பாரார் புகழப் படுவார் தாமே பழனை பதியா வுடையார் தாமே, தீராத வல்வினைநோய்‡ தீர்ப்பார் தாமே திரு
வாலங் காடுறையுஞ் செல்வர் தாமே. 9

மாலைப் பிறைசென்னி வைத்தார் தாமே வண்கயிலை மாமலையை வந்தி யாத, நீலக் கடல்சூ ழிலங்கைக் கோனை நெரிய விரலால் அடர்த்தார் தாமே, பாலொத்த மேனி நிறத்தார் தாமே பழனை பதியா வுடையார் தாமே, சீலத்தார்† ஏத்துந் திறத்தார்
தாமே திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி–தேவர் சிங்கப்பெருமான், ஊர்த்துவதாண்டவர்;
தேவி–வண்டார் குழலியம்மை.

---

## 5. திருப்பாசூர்*

### திருக்குறுந்தொகை* [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மூந்தி மூவெயி லெய்த முதல்வனார்
சிந்திப் பார்வினை தீர்த்திடுஞ் செல்வனார்
அந்திக் கோன்**தனக் கேயருள் செய்தவர்
பந்திச் செஞ்சடைப் பாசூ ரடிகளே. 1

மடந்தை பாகம் மகிழ்ந்த மணாளனார்
தொடர்ந்த வல்வினை போக்கிடுஞ் சோதியார்
கடந்த காலனைக் கால்கொடு பாய்ந்தவர்
படர்ந்த நாகத்தர் பாசூ ரடிகளே. 2

---

† நோய்–ஆணவம். ‡ சீலத்தார் – முனிவர்கள். * இறைவன் மூங்கிலின் அடியில் முளைத்தெழுந்த காரணத்தால் இப்பெயர் பெற்றது. பாசு-மூங்கில். ** அந்திக்கோன்–சந்திரன்.

நாறு கொன்றையும் நாகமுந் திங்களும்
ஆறுஞ் செஞ்சடை வைத்த அழகனார்
காறு† கண்டத்தர் கையதோர் சூலத்தர்
பாறி னேட்டினர் பாசூ ரடிகளே. 3

வெற்றி யூருறை வேதிய ராவர்நல்
ஒற்றி யேயேறுகந் தேறு மொருவனார்
நெற்றிக் கண்ணினர் நீளர வந்தனைப்
பற்றி யாட்டுவர் பாசூ ரடிகளே. 4

மட்ட* விழ்ந்த மலர்நெடுங் கண்ணி**பால்
இட்ட வேட்கைய ராகி இருப்பவர்
துட்ட ரேலறி யேனிவர் சூழ்ச்சிமை
பட்ட நெற்றியர் பாசூ ரடிகளே. 5

பல்லில் ஓடுகை யேந்திப் பகலெலாம்
எல்லி‡ நின்றிடு பெய்பலி ஏற்பவர்
சொல்லிப் போய்ப்புகும் ஊரறி யேன்சொலீர்
பல்கு நீற்றினர் பாசூ ரடிகளே. 6

கட்டி விட்ட சடையர் கபாலியர்
எட்டி நோக்கிவந் தில்புகுந் தவ்வவர்
இட்ட மாஅறி யேன்இவர் செய்வன
பட்ட நெற்றியர் பாசூ ரடிகளே. 7

வேத மோதிவந் தில்புகுந் தாரவர்
காதில் வெண்குழை வைத்த கபாலியார்
நீதி யொன்றறி யார்நிறை கொண்டனர்
பாதி வெண்பிறைப் பாசூ ரடிகளே. 8

சாம்பல் பூசுவர் தாழ்சடை கட்டுவர்
ஓம்பல் மூதெரு தேறு மொருவனார்
தேம்பல் வெண்மதி சூடுவர் தீயதோர்
பாம்பு மாட்டுவர் பாசூ ரடிகளே. 9

மாலி னோடு மறையவன் தானுமாய்
மேலுங் கீழும் அளப்பரி தாயவர்

---

† காறு – கரிய; கொடிய. *மட்டு – தேன்; மணமுமாம். ** கண்ணி–தலைவி. ‡ எல்லி – வெயில்,

ஆலின் நீழல் அறம்பகர்ந் தார்மிகப்
பால்வெண் ணீற்றினர் பாசூ ரடிகளே. 10

திரியும் மூஎயில் செங்கணை யொன்றினால்
எரிய எய்தன ரேனும் இலங்கைக்கோன்
நெரிய வூன்றியிட் டார்விர லொன்றினால்
பரியர் நுண்ணியர் பாசூ ரடிகளே. 11

திருச்சிற்றம்பலம்

---

## திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

விண்ணாகி நிலனாகி விசும்பு மாகி வேலைசூழ் ஞாலத்தார் விரும்பு கின்ற, எண்ணாகி எழுத்தாகி* இயல்பு மாகி எழுலகுந் தொழுதேத்திக் காண நின்ற, கண்ணாகி மணியாகிக் காட்சியாகிக் காதலித்தங் கடியார்கள் பரவ நின்ற, பண்ணாகி இன்னமுதாம் பாசூர் மேய பரஞ்சுடரைக் கண்டடியேன் உய்ந்த வாறே. 1

**வே**தமோர் நான்காய் ஆறங்க மாகி விரிக்கின்ற பொருட்கெல்லாம் வித்து மாகிக், கூதலா**ய்ப் பொழிகின்ற மாரி யாகிக் குவலயங்கள் முழுதுமாய்க் கொண்ட லாகிக், காதலால் வானவர்கள் போற்றி யென்றுங் கடிமலர்கள் அவைதூவி எத்த நின்ற, பாதியோர் மாதினனைப் பாசூர் மேய பரஞ்சுடரைக் கண்டடியேன் உய்ந்த வாறே. 2

தடவரைக ளேழுமாய்க் காற்றாய்த் தீயாய்த் தண்விசும்பாய்த் தண்விசும்பின் உச்சி யாகிக், கடல்வலயஞ் சூழ்ந்ததொரு ஞால மாகிக் காண்கின்ற கதிரவனும் மதியு மாகிக், குடமுழவச் சதி† வழியே அனல்கை யேந்திக் கூத்தாட வல்ல குழக னாகிப், படவரவொன் றதுவாட்டிப் பாசூர் மேய பரஞ்சுடரைக் கண்டடியேன் உய்ந்த வாறே. 3

நீராருஞ் செஞ்சடைமேல் அரவங் கொன்றை நிறைமதிய முடன்சூடி நீதி யாலே, சீராரும் மறையோதி உலக முய்யச் செழுங்கடலைக் கடைந்தகடல் நஞ்ச முண்ட, காராருங்

---

* எண் – கணிதம்; தருக்கமுமாம். எழுத்து – இலக்கணம்.
** கூதல் – குளிர்; சாரல். † சதி – தாளம்; இசை ஒத்து.

கண்டனைக் கச்சி மேய கண்ணுதலைக் கடலொற்றி கருதி னானைப், பாரோரும் விண்ணோரும் பரசும் பாசூர்ப் பரஞ்சுடரைக் கண் டடியேன் உய்ந்த வாறே. 4

வேடனாய் விசயன்தன் வியப்பைக் காண்பான் வில்பிடித்துக் கொம்புடைய ஏனத் தின்பின், கூடினார் உமையவளுங் கோலங் கொள்ளக் கொலைப்பகழி உடன்கோத்துக் கோரப் பூசல், ஆடி னார் பெருங்கூத்துக் காளி காண அருமறையோ டாறங்கம் ஆய்ந்துகொண்டு, பாடினார் நால்வேதம் பாசூர் மேய பரஞ்சுட ரைக் கண்டடியேன் உய்ந்த வாறே. 5

புத்தியினாற் சிலந்தியுந்தன் வாயின் நூலால் பொதுப்பந்தர் அதுஇழைத்துச் சருகால் மேய்ந்த, சித்தியினால் அரசாண்டு சிறப் புச் செய்யச் சிவகணத்துப் புகப்பெய்தார் திறலால் மிக்க, வித்த கத்தால் வெள்ளானை வெள்ளா அன்பு விரவியவா கண்டதற்கு வீடு காட்டிப், பத்தர்களுக் கின்னமுதாம் பாசூர் மேய பரஞ் சுடரைக் கண்டடியேன் உய்ந்த வாறே. 6

இணையொருவர் தாமல்லால் யாரு மில்லார் இடைமருதோ டேகம்பத் தென்றும் நீங்கார், அணைவரியர் யாவர்க்கும் ஆதி தேவர் அருமந்த நன்மையெலா மடியார்க் கீவர், தணல்முழுகு பொடி*யாடுஞ் செக்கர்மேனித் தத்துவனைச் சாந்தகிலி னளறு தோய்ந்த, பணைமுலையாள் பாகனைஎம் பாசூர் மேய பரஞ்சுட ரைக் கண்டடியேன் உய்ந்த வாறே. 7

அண்டவர்கள் கடல்கடைய அதனுள் தோன்றி அதிர்ந் தெழுந்த ஆலாலம் வேலை ஞாலம், எண்டிசையுஞ் சுடுகின்ற வாற் றைக் கண்டு இமைப்பளவி லுண்டிருண்ட கண்டர் தொண்டர், வண்டுபடு மதுமலர்கள் தூவி நின்று வானவர்கள் தானவர்கள் வணங்கி ஏத்தும், பண்டரங்க வேடனைஎம் பாசூர் மேய பரஞ் சுடரைக் கண்டடியேன் உய்ந்த வாறே. 8

ஞாலத்தை யுண்டதிரு மாலும் மற்றை நான்முகனு மறியாத நெறியான் கையிற், சூலத்தால் அந்தகனைச்† சுருளக் கோத்துத் தொல்லுலகிற் பல்லுயிரைக் கொல்லுங் கூற்றைக், காலத்தா லுதைசெய்து காதல் செய்த அந்தணனைக் கைக்கொண்ட செவ்

* தணல்முழுகு பொடி - ஊழியில் உலகம் எரிந்து எஞ்சிய நீறு.
† அந்தகன்—அந்தகாசுரன்.

வான் வண்ணர், பாலொத்த வெண்ணீற்றர் பாசூர் மேய பரஞ் சுடரைக் கண்டடியேன் உய்ந்த வாறே. 9

வேந்தன்நெடு முடியுடைய அரக்கர் கோமான் மெல்லிய லாள் உமைவெருவ விரைந்திட் டோடிச், சாந்தமென நீறணிந் தான் கயிலை வெற்பைத் தடக்கைகளா லெடுத்திடலுந் தாளா லூன்றி, ஏந்துதிரள் திண்தோளுந் தலைகள் பத்தும் இறுத்தவன் தன் இசை கேட்டு இரக்கங் கொண்ட, பாந்தளணி சடைமுடி யெம் பாசூர் மேய பரஞ்சுடரைக் கண்டடியேன் உய்ந்த வாறே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—பாசூர்நாதர்; தேவி—பசுபதிநாயகி.

---

## 6. திருக்காளத்தி

### திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

விற்றூணொA ன்றில்லாத நல்கூர்ந் தான்காண் வியன்கச்சிக் கம்பன்காண் பிச்சை யல்லால், மற்றூணொன் றில்லாத மாசது ரன்Bகாண் மயானத்து மைந்தன்காண் மாசொன் றில்லாப், பொற்றூண்காண் மாமணிநற் குன்றொப் பான்காண் பொய் யாது பொழிலேழுந் தாங்கி நின்ற, கற்றூண்காண் காளத்தி காணப்பட்ட கணநாதன்C காண்அவனென் கண்ணு ளானே. 1

இடிப்பான்காண் என்வினையை ஏகம் பன்காண் எலும்பா பரணன்காண் எல்லாம் முன்னே, முடிப்பான்காண் மூவுலகு மாயி னான்காண் முறைமையால் ஐம்புரியும்D வழுவா வண்ணம், படித்தான் தலையறுத்த பாசு பதன்காண் பராய்த்துறையான் பழனம்பைஞ் ஞீலி யான்காண், கடித்தார் கமழ்கொன்றைக் கண்ணி யான்காண் காளத்தி யானவனென் கண்ணு ளானே. 2

நாரணன்காண் நான்முகன்காண் நால்வே தன்காண் ஞானப் பெருங்கடற்கோர் நாவாய் அன்ன, பூரணன்காண் புண்

---

A விற்று ஊண் – விற்று உண்ணும் உடமை, B மாசதுரன் – பெரிய வல்லமை யுடையவன். C கணநாதன்–சுவாமியின் பெயர். D ஐம்புரி–பஞ்சாங்கம். அது திதி, வாரம், நட்சத்திரம் யோகம், கரணம் என்ற ஐந்து.

ணியன்காண் புராணன் தான்காண் புரிசடைமேற் புனலேற்ற புனிதன் தான்காண், சாரணன்காண் சந்திரன்காண் கதிரோன் தான்காண் தன்மைக்கண் தானேகாண் தக்கோர்க் கெல்லாம், காரணன்காண் காளத்தி காணப்பட்ட கணநாதன் காண்அவ னென் கண் ணு ளானே. 3

செற்றான்காண் என்வினையைத் தீயாடிகாண் திருவொற்றி யூரான்காண் சிந்தை செய்வார்க், குற்றான்காண் ஏகம்பம் மேவி னான்காண் உமையாள்நற் கொழுநன்காண் இமையோ ரேத்தும், சொற்றான்காண் சோற்றுத் துறையுளான்காண் சுறாவேந்தன்A ஏவலத்தை நீறா நோக்கக், கற்றான்காண் காளத்தி காணப்பட்ட கணநாதன் காண்அவனென் கண் ணு ளானே. 4

மனத்தகத்தான் தலைமேலான் வாக்கி னுள்ளான் வாயாரத் தன்னடியே பாடுந் தொண்டர், இனத்தகத்தான் இமையவர்தஞ் சிரத்தின் மேலான் ஏழண்டத் தப்பாலான் இப்பாற் செம்பொன், புனத்தகத்தான் நறுங்கொன்றைப் போதி னுள்ளான் பொருப் பிடையான் நெருப்பிடையான் காற்றி னுள்ளான், கனத்தகத் தான் கயிலாயத் துச்சியுள்ளான் காளத்தி யானவனென் கண் ணு ளானே.B 5

எல்லாம்முன் றோன்றாமே தோன்றி னான்காண் ஏகம்பம் மேயான்காண் இமையோ ரேத்தப், பொல்லாப் புலனைந்தும் போக்கி னான்காண் புரிசடைமேற் பாய்கங்கை பூரித் தான்காண், நல்லவிடை மேல்கொண்டு நாகம் பூண்டு நளிர்சிரமொன் றேந்தி யோர் நாணு யற்ற, கல்லாடைC மேற்கொண்ட காபாலிகாண் காளத்தி யானவனென் கண் ணு ளானே. 6

கரியுருவு கண்டத்தெங் கண் ணு ளான்காண் கண்டன்காண் வண்டுண்ட கொன்றை யான்காண், எரிபவள வண்ணன்காண் ஏகம்பன்காண் எண்டிசையுந் தானாய குணத்தி னான்காண், திரி புரங்கள் தீயிட்ட தீயா டிகாண் தீவினைகள் தீர்த்திடுமென் சிந்தை யான்காண், கரியுரிவை போர்த்துDகந்த காபா லிகாண் காளத்தி யானவனென் கண் ணு ளானே. 7

A சுறாவேந்தன் – மன்மதன். B இச்செய்யுள் மிக உயர்ந்த தத்துவ உண்மைகளை எடுத்துக் கூறுவது. C கல்லாடை – காவி ஆடை. D கரியுரிமெய் போர்த்து என்றும் பாடம்.

இல்லாடிச் சில்பலிசென் றேற்கின் றான்காண் இமையவர்கள் தொழுதிறைஞ்ச இருக்கின் றான்காண், வில்லாடி வேடனா யோடி னான்காண் வெண்ணூலுஞ் சேர்ந்த அகலத்* தான்காண் மல்லாடு திரள்தோள்மேல் மழுவா ளன்காண் மலைமகள்தன் மணாளன்காண் மகிழ்ந்து முன்னாள், கல்லாலின் கீழிருந்த காபா லிகாண் காளத்தி யானவனென் கண்ணு ளானே. 8

தேனப்பூ வண்டுண்ட கொன்றை யான்காண் திருவேகம் பத்தான்காண் தேனார்ந் துக்க, ஞானப்பூங் கோதையாள்** பாகத் தான்காண் நம்பன்காண் ஞானத் தொளியா னான்காண், வானப்பே ரூரு மறிய வோடி மட்டித்து நின்றான்காண் வண்டார் சோலைக், கானப்பே ரூரான்காண் கறைக்கண் டன்காண் காளத்தி யானவனென் கண்ணு ளானே. 9

இறையவன்காண் ஏழுலகு மாயி னான்காண் ஏழ்கடலுஞ் சூழ்மலையு மாயி னான்காண், குறையுடையார்† குற்றேவல் கொள்வான் தான்காண், குடமூக்கிற் கீழ்க்கோட்டம் மேவி னான் காண், மறையுடைய வானோர் பெருமான் தான்காண் மறைக் காட் டுறையும் மணிகண் டன்காண், கறையுடைய கண்டத்தெங் காபா லி‡காண் காளத்தி யானவனென் கண்ணு ளானே. 10

உண்ணா வருநஞ்ச முண்டான் தான்காண் ஊழித்தீ யன்னான் காண் உகப்பார் காணப், பண்ணாரப் பல்லியம் பாடி னான்காண் பயின்றநால் வேதத்தின் பண்பி னான்காண், அண்ணா மலையான் காண் அடியா ரீட்டம் அடியிணைகள் தொழுதேத்த அருளு வான் காண், கண்ணாரக் காண்பார்க்கோர் காட்சி யான்§காண் காளத்தி யானவனென் கண்ணு ளானே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி–காளத்தீசுவரர், கணநாதர், தேவி–ஞானப்பூங்கோதை.

---

* அகலம் – மார்பு. ** தேனார்ந்துக்க ஞானப் பூங்கோதை – தேவியின் பெயர். இத்தேவியின் கூந்தல் தேன் மொய்க்கும்படி இயற்கை மணம் உடையது என்பது குறிப்பு. † குறையுடையார்– குறையிரந்து வந்தடைந்தவர்கள். ‡ காபாலி – பிரமகபாலமேந்திப் பலி கொள்பவன். § கண்ணார......காட்சியான்–இங்கு கண்ணப்ப நாயனாரின் அன்பின் நிகழ்ச்சியைக் குறிப்பதாகும்.

## 7. திருஒற்றியூர்

### திருநேரிசை [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வெள்ளத்தைச் சடையில் வைத்த வேதகீ தன்*றன் பாதம்
மெள்ளத்தான் அடைய வேண்டின் மெய்தரு ஞானத் தீயால்
கள்ளத்தைக் கழிய நின்றார் காயத்துக் கலந்து நின்று
உள்ளத்துள் ஒளியு மாகும் ஒற்றியூ ருடைய கோவே.** 1

வசிப்பெனும் வாழ்க்கை வேண்டா வானவர் இறைவன் நின்று
புசிப்பதோர் பொள்ள லாக்கை அதனோடும் புணர்வு வேண்டில்
அசிர்ப்பெ†னும் அருந்த வத்தால் ஆன்மாவி னிடம தாகி
உசிர்ப்பெ‡னும் உணர்வு முள்ளார் ஒற்றியூ ருடைய கோவே. 2

தானத்தைச் செய்து வாழ்வான் சலத்துளே அழுந்து கின்றீர்
வானத்தை வணங்க வேண்டில் வம்மின்கள் வல்லீ ராகில்
ஞானத்தை விளக்கை ஏற்றி நாடியுள் விரவ வல்லார்
ஊனத்தை ஒழிப்பர் போலும் ஒற்றியூ ருடையகோவே. 3

காமத்துள் அழுந்தி நின்று கண்டாரால் ஒறுப்புண் ணாதே
சாமத்து வேத மாகி நின்றதோர் சயம்பு தன்னை
ஏமத்தும் இடையி ராவும் ஏகாந்தம் இயம்பு வார்க்கு
ஓமத்துள்‖ ஒளிய தாகும் ஒற்றியூ ருடைய கோவே. 4

சமையமே லாறு மாகித் தானொரு சயம்பு§ வாகி
இமையவர் பரவி ஏத்த இனிதினங் கிருந்த ஈசன்
கமையினை யுடைய ராகிக் கழலடி பரவு வார்க்கு
உமையொரு பாகர் போலும் ஒற்றியூ ருடைய கோவே. 5

ஒருத்திதன் தலைச்சென் றானைக் கரந்திட்டான் உலக மேத்த
ஒருத்திக்கு நல்ல னாகி மறுப்படுத் தொளித்து மீண்டே
ஒருத்தியைப் பாகம் வைத்தான் உணர்வினால் ஐயம் உண்ணி
ஒருத்திக்கு நல்ல னல்லன் ஒற்றியூ ருடைய கோவே. 6

---

* வேதகீதன் – வேதகீதம் பாடுபவன்; வேதங்களிலும் கீதங்களிலும் வல்லனுமாம். ** கோவே; விளி; † அயர்ப்பு என்பது அசிர்ப்பு என வந்தது. ‡ உசிர்ப்பு – உயிர்ப்பு. ‖ ஓமம் – இங்கு அந்தரியாகம். § சயம்பு – சுயம்பு; தானாகவாதல்.

பிணமுடை உடலுக் காகப் பித்தராய்த் திரிந்து நீங்கள்
புணர்வெனும் போகம் வேண்டா போக்கலாம் பொய்யை நீங்க
நிணமுடை நெஞ்சி னுள்ளால் நினைக்குமா நினைக்கின் றார்க்கு
உணர்வினோ டிருப்பர் போலும் ஒற்றியூ ருடைய கோவே. 7

பின்னுவார் சடையான் தன்னைப் பிதற்றிலாப் பேதை மார்கள்
துன்னுவார் நரகந் தன்னுள் தொல்வினை தீர வேண்டின்
மன்னுவான் மறைக ளோதி மனத்தினுள் விளக்கொன் றேற்றி
உன்னுவார் உள்ளத் துள்ளார் ஒற்றியூ ருடைய கோவே. 8

முள்குவார் போகம் வேண்டின் முயற்றியால் இடர்கள் வந்தால்
எள்குவார் எள்கி நின்றங் கிதுவொரு மாய மென்பார்
பள்குவார்§ பத்த ராகிப் பாடியும் ஆடி நின்றும்
உள்குவார் உள்ளத் துள்ளார் ஒற்றியூ ருடைய கோவே. 9

வெறுத்துகப் புலன்கள் ஐந்தும் வேண்டிற்று வேண்டு நெஞ்சே
மறுத்துக ஆர்வச் செற்றக் குரோதங் களான மாயப்
பொறுத்துகப் புட்ப கத்தே ருடையானை அடர வூன்றி
ஒறுத்துகந் தருள்கள் செய்தார் ஒற்றியூ ருடைய கோவே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருநேரிசை*

திருச்சிற்றம்பலம்

ஓம்பினேன் கூட்டை**வாளா உள்ளத்தோர் கொடுமை வைத்துக்
காம்பிலா மூழை† போலக் கருதிற்றே முகக்க மாட்டேன்
பாம்பின்வாய்த் தேரை போலப் பலபல நினைக்கின் றேனை
ஓம்பிநீ உய்யக் கொள்ளாய் ஒற்றியூ ருடைய கோவே. 1

மனமெனுந் தோணி பற்றி மதியெனுங் கோலை யூன்றிச்
சினமெனுஞ் சரக்கை ஏற்றிச் செறிகட லோடும் போது
மதனெ‡னும் பாறை தாக்கி§ மறியும்போ தறிய வொண்ணா(து)
உனையுனும் உணர்வை நல்காய் ஒற்றியூ ருடைய கோவே.¶ 2

திருச்சிற்றம்பலம்

---

§ பள்குதல்–பதுங்குதல். * இப்பதிகத்தில் முதலிரண்டு செய்யுட்கள் தவிர ஏனையவை சிதைவுற்றன. ** கூடு–உடல். † மூழை-அகப்பை. ‡ மதம்-ஐம்புல இன்ப ஆசைகள். § பாறைத்தாக்கி என்றும் பாடம். பாரை-பாரில். ¶ இச்செய்யுள் உருவகம்.

திருவிருத்தம் [4-ம் திருமுறை]
திருச்சிற்றம்பலம்

செற்றுக்* களிற்றுரி கொள்கின்றஞான்று செருவெண்கொம்பொன்(று)
இற்றுக் கிடந்தது போலும் இளம்பிறை பாம்பதனைச்
சுற்றிக் கிடந்தது கிம்புரி போலச் சுடரிமைக்கும்
நெற்றிக்கண் மற்றதன் முத்தொக்கு மாவொற்றி யூரனுக்கே. 1

சொல்லக் கருதிய தொன்றுண்டு கேட்கில்தொண் டாயடைந்தார்
அல்லற் படக்கண்டு பின்னென் கொடுத்தி அலைகொள்முந்நீர்
மல்லற் றிரைச்சங்க நித்திலங் கொண்டுவம் பக்கரைக்கே
ஒல்லைத் திரைகொணர்ந் தெற்றுமொற்றி யூருறை யுத்தமனே. 2

பரவை வருதிரை நீர்க்கங்கை பாய்ந்துக்க பல்சடைமேல்
அரவ மணிதரு கொன்றை இளந்திங்கள் சூடியதோர்
குரவ நறுமலர் கோங்கம் அணிந்துகு லாயசென்னி
உரவு திரைகொணர்ந் தெற்றுமொற்றி யூருறை யுத்தமனே. 3

தானகங் காடரங் காக வுடையது தன்னடைந்தார்
ஊனக நாறும் முடைதலை யிற்பலி கொள்வதுந்தான்
தேனக நாறுந் திருவொற்றி யூருறை வாரவர்தாம்
தானக மேவந்து போனகம் வேண்டி உழிதர்வரே. 4

வேலைக் கடல்நஞ்ச முண்டுவெள் ளேற்றொடும் வீற்றிருந்த
மாலைச் சடையார்க் குறைவிட மாவது வாரிகுன்று
ஆலைக் கரும்பொடு செந்நெற் கழனி அருகணைந்த
சோலைத் திருவொற்றி யூரைஎப் போதுந் தொழுமின்களே. 5

புற்றினில் வாழு மரவுக்குந் திங்கட்குங் கங்கையென்னுஞ்
சிற்றிடை யாட்குஞ் செறிதரு கண்ணிக்குஞ் சேர்விடமாம்
பெற்று†டை யான்பெரும் பேச்சுடை யான்‡பிரி யாதெனையாள்
விற்றுடை யானொற்றி யூருடை யான்றன் விரிசடையே. 6

இன்றரைக் கண்ணுடை யாரெங்கு மில்லை இமயமென்னும்
குன்றரைக் கண்ணன் குலமகட் பாவைக்குக் கூறிட்டநாள்

---

* செற்று-அடர்த்து; கொன்று. † பெற்று-பெற்றம். இதில் அம் கெட்டு நின்றது. ‡ பெரும் பேச்சு உடையான்-மகா வாக்கியத்தினால் பேசப்படும் பெருமையுடையவன்.

அன்றரைக் கண்ணுங் கொடுத்துமை யாளையும் பாகம்வைத்த
ஒன்றரைக் கண்ணன் கண்டீர் ஒற்றி யூருறை யுத்தமனே. 7

சுற்றிவண் டியாழ்செயுஞ் சோலையுங் காவுந் துதைந்திலங்கு
பெற்றிகண் டால்மற்றி யாவருங் கொள்வர் பிறரிடைநீ
ஒற்றிகொண் டாயொற்றி யூரையுங் கைவிட் டுறுமென் றெண்ணி
விற்றிகண் டாய்மற் றிதுவொப்ப தில்லிடம் வேதியனே. 8

சுற்றிக் கிடந்தொற்றி யூரன்என் சிந்தை பிரிவறியான்
ஒற்றித் திரிதந்து* நீயென்ன செய்தி யுலகமெல்லாம்
பற்றித் திரிதந்து† பல்லொடு நாமென்று கண்குழித்துத்
தெற்றித் திருப்பதல் லால்என்ன செய்யும்இத் தீவினையே. 9

அங்கட் கடுக்கைக்கு முல்லைப் புறவம் முறுவல் செய்யும்
பைங்கட் டலைக்குச் சுடலைக் களரி பருமணிசேர்
கங்கைக்கு வேலை அரவுக்குப் புற்றுக் கலைநிரம்பாத்
திங்கட்கு வானந் திருவொற்றி யூரர் திருமுடியே. 10

தருக்கின வாளரக் கன்முடி பத்திறப் பாதந்தன்னால்
ஒருக்கின வாறடி யேனைப் பிறப்பறுத் தாளவல்லான்
நெருக்கின வானவர் தானவர் கூடிக் கடைந்தநஞ்சைப்
பருக்கின வாறென்செய் கேன்ஒற்றி யூருறை பண்டங்கனே.‡ 11

திருச்சிற்றம்பலம்

---

## திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

ஒற்றி யூரும் ஒளிமதி பாம்பினை
ஒற்றி யூருமப் பாம்பும் அதனையே
ஒற்றி யூர வொருசடை வைத்தவன்
ஒற்றி யூர்தொழ நம்வினை ஓயுமே. 1

வாட்ட மொன்றுரைக் கும்மலை யான்மகள்
ஈட்ட வேயிரு ளாடி இடுபிணக்
காட்டி லோரி கடிக்க எடுத்ததோர்
ஓட்டை வெண்டலைக் கையொற்றி யூரரே. 2

---

* ஒற்றித் திரிந்தது என்றும் பாடம். † பற்றித் திரிந்தது என்றும் பாடம். ‡ பண்டங்கன் – பண்டரங்கக்கூத்தாடுவோன்.

கூற்றுத் தண்டத்தை* அஞ்சிக் குறிக்கொண்மின்
ஆற்றுத் தண்டத் தடக்கு மரனடி
நீற்றுத் தீண்டத்**த ராய்நினை வார்க்கெலாம்
ஊற்றுத் தண்டொப்பர் போலொற்றி யூரரே. 3

சுற்றும் பேய்சுழ லச்சுடு காட்டெரி
பற்றி யாடுவர் பாய்புலித் தோலினர்
மற்றை யூர்களெல் லாம்பலி தேர்ந்துபோய்
ஒற்றி யூர்புக் குறையும் ஒருவரே. 4

புற்றில் வாளர வாட்டி† உமையொடு
பெற்ற மேறுகந் தேறும் பெருமையான்
மற்றை யாரொடு வானவ ருந்தொழ
ஒற்றி யூருறை வானோர் கபாலியே. 5

போது தாழ்ந்து புதுமலர் கொண்டுநீர்
மாது தாழ்சடை வைத்த மணாளனார்
ஓது வேதிய னார்திரு வொற்றியூர்
பாத மேத்தப் பறையுநம் பாவமே. 6

பலவும் அன்னங்கள் பன்மலர் மேல்துஞ்சும்
கலவ மஞ்ஞைகள் காரென வெள்குறும்
உலவு பைம்பொழில் சூழ்திரு வொற்றியூர்
நிலவி னான்அடி யேயடை நெஞ்சமே. 7

ஒன்று போலும் உகந்தவ ரேறிற்று
ஒன்று போலும் உதைத்துக் களைந்தது
ஒன்று போலொளி மாமதி சூடிற்று
ஒன்று போலுகந் தார்ஒற்றி யூரரே. 8

படைகொள் பூதத்தர் வேதத்தர் கீதத்தர்
சடைகொள் வெள்ளத்தர் சாந்தவெண் நீற்றினர்
உடையுந் தோலுகந் தாருறை யொற்றியூர்
அடையு முள்ளத் தவர்வினை யல்குமே. 9

வரையி னாலுயர்‡ தோளுடை மன்னனை
வரையி னார்வலி செற்றவர் வாழ்விடம்

* கூற்றுத் தண்டம் – இயமதண்டனை. ** தண்டம் – உடல்.
† புற்றிலாடரவாட்டி என்றும் பாடம். ‡ வரையினுருயர் என்றும் பாடம்.

திரையி னார்புடை சூழ்திரு வொற்றியூர்
உரையி னாற்பொலிந் தார்உயர்ந் தார்களே. 10

திருச்சிற்றம்பலம்

———

## திருத்தாண்டகம் [௬-ம்திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வண்டோங்கு செங்கமலக் கழுநீர் மல்கும் மதமத்தஞ் சேர் சடை*மேல் மதியஞ் சூடித், திண்டோள்க ளாயிரமும் வீசி நின்று திசைசேர நடமாடிச் சிவலோ கனார், உண்டார்நஞ் சுலகுக்கோ ருறுதிவேண்டி ஒற்றியூர் மேய வொளிவண் ணனார், கண்டேன்நான் கனவகத்திற் கண்டேற் கென்றன் கடும்பிணி யுஞ் சுடுந் தொழிலுங் கைவிட் டவே. 1

ஆகத்தோர் பாம்பசைத்து வெள்ளே றேறி அணிகங்கை செஞ்சடைமே லார்க்கச் சூடிப், பாகத்தோர் பெண்ணுடையார் ஆணுமாவர் பசுவேறி யுழிதருமெம் பரம யோகி, காமத்தால்** ஐங்கணையான் தன்னை வீழக் கனலா எரிவிழித்த கண்மூன் றினார், ஓமத்தால்‡ நான்மறைக ளோத லோவா ஒளிதிகழு மொற்றியூ ருறைகின் றாரே. 2

வெள்ளத்தைச் செஞ்சடைமேல் விரும்பி வைத்தீர் வெண் மதியும் பாம்பு முடனே வைத்தீர், கள்ளத்தை மனத்தகத்தே கரந்து வைத்தீர் கண்டார்க்குப் பொல்லாது கண்டீ ரெல்லே, கொள்ளத்தான் இசைபாடிப் பலியுங் கொள்ளீர் கோளரவுங் குளிர்மதியுங் கொடியுங் காட்டி, உள்ளத்தை நீர்கொண்டீர் ஓத லோவா ஒளிதிகழு மொற்றியூ ருடைய கோவே. 3

நரையார்ந்த விடையேறி நீறு பூசி நாகங்கச் சரைக்கார்த் தோர் தலைகை யேந்தி, உரையாவந் தில்புகுந்து பலிதான்வேண்ட எம்மடிக ளும்மூர்தா னேதோ என்ன, விரையாதே கேட்டி யேல் வேற்கண் நல்லாய் விடுங்கலங்கள் நெடுங்கடலுள் நின்று தோன்றுந், திரைமோதக் கரையேறிச் சங்க மூருந் திருவொற்றி யூரென்றார் தீய வாறே. 4

---

* மதமத்தஞ் செஞ்சடை என்றும் பாடம். ** காமத்தால் – காமங்காரணமாக. ‡ ஓமத்தால்–ஓமத்தோடு. ஓமம்–வேள்வி.

மத்தமா களியானை யுரிவை போர்த்து வானகத்தார் தான கத்தா ராகி நின்று, பித்தர்தாம் போலங்கோர் பெருமை பேசிப் பேதையரை யச்சுறுத்திப் பெயரக் கண்டு, பத்தர்கள்தாம் பலரு டனே கூடிப்பாடிப் பயின்றிருக்கு மூரேதோ பணியீர் என்ன, ஒத்தமைந்த உத்திரநாள்T தீர்த்த மாகS வொளிதிகழு மொற்றியூர் என்கின் றாரே. 5

கூடிய விடையேறிக் காள கண்டர் கலையோடு மழுவாளோர் கையிலேந்தி, இடிய பலிPகொள்ளார் போவா ரல்லர் எல்லாந்தா னிவ்வடிகள் யாரென் பாரே, வடிவுடைய மங்கையுங்H தாமு மெல் லாம் வருவாரை எதிர்கண்டோம் மயிலாப் புள்ளே, செடிபடு வெண் தலையொன் றேந்தி வந்து திருவொற்றி யூர்புக்கார் தீய வாறே. 6

வல்லராய் வானவர்க ளெல்லாங் கூடி வணங்குவார் வாழ்த்துவார் வந்து நிற்பார், எல்லேஎம் பெருமானைக் காணே மென்ன எவ்வாற்றால் எவ்வகையாற் காண மாட்டார், நல்லார் கள் நான்மறையோர் கூடி நேடி நாமிருக்கு மூர்பணியீர் அடிகே ளென்ன, ஒல்லைதான் திரையேறி யோதம் மீளு மொளிதிகழு மொற்றியூர் என்கின் றாரே. 7

நிலைப்பாடே நான்கண்ட தேடீ கேளாய் நெருநலைநற் பகலிங்கோ ரடிகள் வந்து, கலைப்பாடுங் கண்மலருங் கலக்க நோக்கிக் கலந்து பலியிடுவேன் எங்குங் காணேன், சலப்பாடே இனியொருநாட் காண்பே னாகில் தன்னைத் தென்னை மொடுங் கும் வண்ணம், உலைப்பாடே படத்தழுவிப் போக லொட்டேன் ஒற்றியூ ருறைந்திங்கே திரிவா னையே. 8

மண்ணல்லை விண்ணல்லை வலய மல்லை மலையல்லை கடலல்லை வாயு வல்லை, எண்ணல்லை எழுத்தல்லை எரியு மல்லை இரவல்லை பகலல்லை யாவு மல்லை, பெண்ணல்லை ஆணல்லை பேடு மல்லை பிறிதல்லை யானாயும் பெரியாய் நீயே, உண்ணல்லை நல்லார்க்குத் தீயை யல்லை உணர்வரிய ஒற்றியூ ருடைய கோவே. 9

---

T உத்திரம்–பங்குனி உத்திரம். S தீர்த்தம்–திருப்பெரு விழாவின் தீர்த்த நாள்; இறுதி நாள். P இடியபலி–இடித்த மாவினால் இயன்ற பலிப்பிண்டம். இடிய–இடுதற்குரிய என்றலுமாம். H வடிவுடைய மங்கை–அம்மையின் பெயர்.

மருவுற்ற மலர்க்குழலி மடவா ளஞ்ச மலைதுளங்கத் திசை நடுங்கச் செறுத்து நோக்கிச், செருவுற்ற வாளரக்கன் வலிதான் மாளத் திருவடியின் விரலொன்றால் அலற வூன்றி, உருவொற்றி யங்கிருவ ரோடிக்காண ஓங்கினவவ் வொள்ளழலார் இங்கே வந்து, திருவொற்றி யூர்நம்மூ ரென்று போனார் செறிவளைகள் ஒன்றொன்றாச் சென்ற வாறே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—படம்பக்க நாதர், ஆதிபுரீசுவரர், தியாகேசர்;
தேவி—வடிவுடையம்மை.

---

## 8. திருவான்மியூர்†

### திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

விண்ட மாமலர் கொண்டு விரைந்துநீர்
அண்ட நாயகன்* தன்னடி சூழ்மின்கள்
பண்டு நீர்செய்த பாவம் பறைந்திடும்**
வண்டு சேர்பொழில் வான்மியூ ரீசனே. 1

பொருளுஞ் சுற்றமும் பொய்ம்மையும் விட்டுநீர்
மருளும் மாந்தரை மாற்றி மயக்கறுத்(து)
அருளு மாவல்ல ஆதியா யென்றலும்
மருள றுத்திடும் வான்மியூ ரீசனே. 2

மந்த மாகிய சிந்தை மயக்கறுத்(து)
அந்த மில்குணத் தானை யடைந்துநின்(று)
எந்தை யீசனென் றேத்திட வல்லிரேல்
வந்து நின்றிடும் வான்மியூ ரீசனே. 3

உள்ள முள்கலந் தேத்தவல் லார்க்கலால்
கள்ள முள்ளவ ழிக்கசி வானலன்
வெள்ள மும்மர வும்விர வுஞ்சடை
வள்ள லாகிய வான்மியூ ரீசனே. 4

---

† இது வான்மீக முனிவர்க்கு அருள் செய்த தலம் ஆதலால் இப்பெயர் பெற்றது. *அண்டர் நாயகன் என்றும் பாடம். **பறைந்திடும்-பறைவித்திடும். பறைவித்தல்-பாறச் செய்தல்.

படங்கொள் பாம்பரைப் பால்மதி சூடியை
வடங்கொள் மென்முலை மாதொரு கூறனைத்
தொடர்ந்து நின்று தொழுதெழு வார்வினை
மடங்க நின்றிடும் வான்மியூ ரீசனே. 5

நெஞ்சி லேவர் நினைக்க நினைக்குரூர்
பஞ்சின் மெல்லடி யாளுமை பங்கவென்(று)
அஞ்சி நாண்மலர் தூவி யழுதிரேல்
வஞ்சங்* தீர்த்திடும் வான்மியூ ரீசனே. 6

நுணங்கு நூலயன் மாலு மறிகிலாக்
குணங்கள் தான்பர விக்குறைந் துக்கவர்†
சுணங்கு பூண்முலைத் தூமொழி யாரவர்
வணங்க நின்றிடும் வான்மியூ ரீசனே. 7

ஆதி யும்மர னயன் மாலுமாய்ப்
பாதி பெண்ணுரு வாய பரமனென்(று)
ஓதி யுள்குழைந் தேத்தவல் லாரவர்
வாதை‡ தீர்த்திடும் வான்மியூ ரீசனே. 8

ஓட்டை மாடத்தி§ லொன்பது வாசலும்
காட்டில் வேவதன் முன்னங் கழலடி
நாட்டி நாண்மலர் தூவி வலஞ்செயில்
வாட்டந் தீர்த்திடும் வான்மியூ ரீசனே. 9

பார மாக மலையெடுத் தான்றனைச்
சீர மாக¶த் திருவிர லூன்றினான்
ஆர்வ மாக அழைத்தவ னேத்தலும்
வார மாயினன் வான்மியூ ரீசனே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி—மருந்தீசர், பால்வண்ணநாதர்; தேவி—சொக்கநாயகி.

---

* வஞ்சம்—நினைக்கவொட்டாது தடுத்து இடுக்கண் செய்யும் புலனாசை. † குறைந்து உக்கவர்—குறைசொல்லிப் பணிந்து அடைந்தவர். ‡ வாதை—பிறவிநோய். § ஓட்டை மாடம்—எண்ணிறந்த துவாரங்களையுடைய உடல். ¶ சீரமாக—சீரணிக்க; அழிய என்றலுமாம்.

## 9. திருக்கழுக்குன்றம்

### திருத்தாண்டகம்* [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மூவிலைவேற் கையானை மூர்த்தி தன்னை முதுபிணக்கா டுடை யானை முதலா னானை, ஆவினிலைந் துகந்தானை அமரர் கோனை ஆலால முண்டுகந்த ஐயன் தன்னைப், பூவினின்மேல் நான்முகனும் மாலும் போற்றப் புணர்வரிய பெருமானைப் புனிதன் தன்னைக். காவலனைக் கழுக்குன்றம் அமர்ந்தான் தன்னைக் கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே. 1

பல்லாடு** தலைசடைமே லுடையான் தன்னைப் பாய்புலித்தோ லுடையானைப் பகவன் தன்னைச், சொல்லோடு பொருளனைத்து மானான் தன்னைச் சுடருருவில் என்பறாக் கோலத் தானை, அல்லாத காலனைமுன் னடர்த்தான் தன்னை ஆலின்கீழ் இருந்தானை அமுதா னானைக், கல்லாடை புனைந்தருளுங் காபா லியைக் கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே. 2-10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—வேதகிரீசுவரர்; தேவி—பெண்ணினல்லாளம்மை.

---

## துளுவநாட்டில் உள்ள தலம்

## 1. திருக்கோகரணம்

### திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

சந்திரனுந் தண்புனலுஞ் சந்தித் தான்காண் தாழ்சடை யான்காண் சார்ந்தார்க் கமுதா னான்காண், அந்தரத்தில் அசுரர்புரம் மூன்றட் டான்காண் அவ்வுருவி லவ்வுருவ மாயி னான்காண், பந்தரத்து நான்மறைகள் பாடி னான்காண் பலபலவும் பாணி பயில்கின் றான்காண், மந்திரத்து மறைப்பொருளு மாயி னான் காண் மாகடல்சூழ் கோகரணம்† மன்னி னானே. 1

---

* இப்பதிகத்தில் முதலிரண்டு செய்யுட்கள் தவிர ஏனைய செய் யுட்கள் மறைந்து போயின. ** பல்லாடு – பற்கள் வீழ்ந்த. அடு. ஆடு என நீண்டது. † கோகரணம் – பசுவின் காது; சிவலிங்கம் பசுவின் காது போல நீண்டிருப்பதால் இப்பெயர் பெற்றது.

தந்தவத்தன் தன்தலையைத் தாங்கி னான்காண் சாரணன் காண் சார்ந்தார்க்கின் னமுதா னான்காண், கெந்தத்தன் காண் கெடில வீரட் டன்காண் கேடிலிகாண் கெடுப்பார்மற் றில்லா தான்காண், வெந்தொத்த நீறுமெய் பூசி னான்காண் வீரன்காண் வியன்கயிலை மேவி னான்காண், வந்தொத்த நெடுமாற்கும் அறிவொ ணான்காண் மாகடல் சூழ் கோகரணம் மன்னி னானே. 2

தன்னுருவம் யாவருக்குந் தாக்கா தான்காண் தாழ்சடை யெம் பெருமான்காண் தக்கார்க் குள்ள, பொன்னுருவச் சோதி புன லாடி னான்காண் புராணன்காண் பூதங்க ளாயி னான்காண், மின்னுருவ நுண்ணிடையாள் பாகத் தான்காண் வேழத்தி னுரிவெருவப் போர்த்தான் தான்காண், மன்னு நவாய் மாமறைக ளோதி னான்காண் மாகடல்சூழ் கோகரணம் மன்னி னானே. 3

ஆறேறு செஞ்சடைஎம் ஆரூ ரன்காண் அன்பன்காண் அணிபழனம் மேயான் தான்காண், நீறேறி நிழல்திகழும் மேனி யான்காண் நிருபன்காண் நிகரொன்று மில்லா தான்காண், கூறேறு கொடுமழுவாட் படையி னான்காண் கொக்கரையன் காண்குழுநற் பூதத் தான்காண், மாறூய மதில்மூன்றும் மாய்வித் தான்காண் மாகடல்சூழ் கோகரணம் மன்னி னானே. 4

சென்றச் சிலைவாங்கிச் சேர்வித் தான்காண் தியம்பன் காண் திரி புரங்கள் மூன்றும், பொன்றப் பொடியாக நோக்கி னான் காண் பூதன்காண் பூதப் படையா ளிகாண், அன்றப் பொழுதே அருள்செய் தான்காண் அனலாடிகாண் அடியார்க் கமுதா னான் காண், மன்றல் மணங்கமழும் வார்சடை யான்காண் மாகடல் சூழ் கோகரணம் மன்னி னானே. 5

பிறையோடு பெண்ணொருபால் வைத்தான் றான்காண் பேரவன்காண் பிறப்பொன்று மில்லா தான்காண், கறையோடு மணி மிடற்றுக் காபா லிகாண் கட்டங்கன் காண்கையிற் கபால மேந்திப், பறையோடு பல்கீதம் பாடி னான்காண் ஆடினான் காண் பாணி யாக நின்று, மறையோடு மாகீதம் கேட்டான் றான்காண் மாகடல்சூழ் கோகரணம் மன்னி னானே. 6

மின்னளந்த மேல்முகட்டின் மேலுற் றான்காண் விண்ணவர் தம் பெருமான்காண் மேவி லெங்கும், முன்னளந்த மூவர்க்கும் முதலா னான்காண் மூவிலைவேற் சூலத்தெங் கோலத் தான்காண்,

எண்ணளந்தேன் சிந்தையே மேவி னான்காண் ஏவலன்காண் இமை யோர்க ளேத்த நின்று, மண்ணளந்த மாலறியா மாயத் தான் காண் மாகடல்சூழ் கோகரணம் மன்னி னானே. 7

பின்னு சடைமேற் பிறைசூடி னான்காண் பேருளன் காண் பிறப்போன் றில்லா தான்காண், முன்னி யுலகுக்கு முன்னா னான் காண் மூஎயிலுஞ் செற்றுகந்த முதல்வன் றான்காண், இன்னவுரு வென்றறிவோண் ணாதான் றான்காண் ஏழ்கடலும் ஏழுலகு மாயி னான்காண், மன்னும் மடந்தையோர் பாகத் தான்காண் மாகடல் சூழ் கோகரணம் மன்னி னானே. 8

வெட்ட வெடித்தார்க்கோர் வெவ்வழ லன்காண் வீரன் காண் வீரட்டம் மேவி னான்காண், பொட்ட அனங்கனையும் நோக்கி னான்காண் பூதன்காண் பூதப் படையி னான்காண், கட்டக் கடுவினைகள் காத்தாள் வான்காண் கண்டன்காண் வண்டுண்ட கொன்றை யான்காண், வட்ட மதிப்பாகஞ் சூடி னான்காண் மாகடல்சூழ் கோகரணம் மன்னி னானே, 9

கையாற் கயிலை யெடுத்தான் தன்னைக் கால்விரலால் தோள் நெரிய வூன்றி னான்காண், மெய்யின் நரம்பிசையாற் கேட்பித் தாற்கு மீண்டே அவற்கருள்கள் நல்கி னான்காண், பொய்யர் மனத்துப் புறம்பா வான்காண் போர்ப்படையான் காண் பொருவா ரில்லா தான்காண், மைகொள் மணிமிடற்று வார்சடை யான்காண் மாகடல்சூழ் கோகரணம் மன்னி னானே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி-மகாபலநாதர்; தேவி–கோகரணநாயகி.

---

## வடநாட்டில் உள்ள தலங்கள்

### 1. திருப்பருப்பதம்*

திருநேரிசை [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கன்றினார் புரங்கள் மூன்றுங் கனலெரி யாகச் சீறி
நின்றதோ ருருவங்** தன்னால் நீர்மையும் நிறையுங் கொண்டு

---

* 'ஸ்ரீசைலம்' அல்லது 'மல்லிகார்ச்சுனம்' எனப்பெறும். சிபற்பதமலை என்றும் பாடம். **நின்றதோர் உருவம்–பிட்சாடனர்.

ஒன்றியாங் குமையுந் தாமும் ஊர்பலி தேர்ந்து பின்னும்
பன்றிப்பின் வேட ராகிப் பருப்பத நோக்கி னாரே. 1

கற்றமா மறைகள் பாடிக் கடைதொறும் பலியுந் தேர்வார்
வற்றலோர் தலைகை யேந்தி வானவர் வணங்கி வாழ்த்த
முற்றவோர் சடையில் நீரை ஏற்றமுக் கண்ணர் தம்மைப்
பற்றினார்†க் கருள்கள் செய்து பருப்பத நோக்கி னாரே. 2

கரவிலா மனத்த ராகிக் கைதொழு வார்கட் கென்றும்
இரவுநின் றெரிய தாடி இன்னருள் செய்யும் எந்தை
மருவலார் புரங்கள் மூன்று மாட்டிய வகைய ராகிப்
பரவுவார்க் கருள்கள் செய்து பருப்பத நோக்கி னாரே. 3

கட்டிட்ட தலைகை ஏந்திக் கனலெரி யாடிச் சீறிச்
சுட்டிட்ட நீறு பூசிச் சுடுபிணக் காட ராகி
விட்டிட்ட வேட்கை யார்க்கு வேறிருந் தருள்கள் செய்து
பட்டிட்ட வுடைய ராகிப் பருப்பத நோக்கி னாரே. 4

கையராய்க் கபால மேந்திக் காமனைக் கண்ணாற் காய்ந்து
மெய்யராய் மேனி தன்மேல் விளங்குவெண் ணீறு பூசி
உய்வரா யுள்கு வார்கட் குவகைகள் பலவுஞ் செய்து
பையரா அரையி லார்த்துப் பருப்பத நோக்கி னாரே. 5

வேடராய் வெய்ய ராகி வேழத்தி னுரிவை போர்த்து
ஓடரா‡ யுலகெ மெல்லா முழிதர்வர் உமையுந் தாமுங்
காடராய்க் கனல்கை யேந்திக் கடியதோர் விடைமேல் கொண்டு
பாடராய்ப் பூதஞ் சூழப் பருப்பத நோக்கி னாரே. 6

மேகம்போல் மிடற்ற ராகி வேழத்தி னுரிவை போர்த்து
ஏகம்பம் மேவி னார்தாம் இமையவர் பரவி ஏத்தக்
காகம்பர் கழற ராகிக் கடியதோர் விடையொன் றேறிப்
பாகம்பெண் ணுருவ மானார் பருப்பத நோக்கி னாரே. 7

பேரிடர்ப் பிணிகள் தீர்க்கும் பிஞ்ஞகன் எந்தை பெம்மான்
காருடைக் கண்ட ராகிக் கபாலமோர் கையி லேந்திச்
சீருடைச் செங்கண் வெள்ளே றேறிய செல்வர் நல்ல
பாரிடம் பாணி செய்யப் பருப்பத நோக்கி னாரே. 8

---

† பற்றினார் – பிறபற்றுக்களை யெல்லாம் விட்டுத் தம்மையே பற்றினவர். ‡ ஓடர்–தலையோட்டினை ஏந்தியவர்.

அங்கண்மா லுடைய ராய ஐவரா லாட்டு ணுதே
உங்கண்மால் தீர வேண்டி லுள்ளத்தால் உள்கி ஏத்துஞ்
செங்கண்மால் பரவி ஏத்திச் சிவனென நின்ற செல்வர்
பைங்கண்வெள் ளேற தேறிப் பருப்பத நோக்கி னுரே. 9

அடல்விடை யூர்தி யாகி அரக்கன்தோள் அடர வூன்றிக்
கடலிடை நஞ்ச முண்ட கறையணி கண்ட னுர்தாஞ்
சுடர்விடு மேனி தன்மேற் சுண்ணவெண் ணீறு பூசிப்
படர்சடை மதியஞ் சேர்த்திப் பருப்பத நோக்கி னுரே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி–பருப்பதநாதர்; தேவி–பருப்பதநாயகி, பிரமராம்பாள்.

---

## 2. திருக்கயிலாயம்*

### திருநேரிசை [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கனமா வயிர முந்து** மாமணிக் கயிலை கண்டும்
உனகனு யரக்க ளுேடி யெடுத்தலு முமையா ளஞ்ச
அனகனுய் நின்ற ஈச னூன்றலு மலறி வீழ்ந்தான்
மனகனு யூன்றி னுனேல் மறித்துநோக் கில்லை யன்றே. 1

கதித்தவன் கண்சி வந்து கயிலைநன் மலையை யோடி
அதிர்த்தவன் எடுத்திடலும் அரிவைதான் அஞ்ச ஈசன்
நெதித்தவ னூன்றி யிட்ட நிலையழிந் தலறி வீழ்ந்தான்
மதித்திறை யூன்றி னுனேல் மறித்துநோக் கில்லை யன்றே. 2

கறுத்தவன் கண்சி வந்து கயிலைநன் மலையைக் கையால்
மறித்தலும் மங்கை அஞ்ச வானவர் இறைவன் நக்கு
நெறித்தொரு விரலா லூன்ற நெடுவரை போல வீழ்ந்தான்
மறித்திறை யூன்றி னுனேல் மறித்துநோக் கில்லை யன்றே. 3

கடுத்தவன் கண்சி வந்து கயிலைநன் மலையை யோடி
எடுத்தலும் மங்கை அஞ்ச இறையவ னிறையே நக்கு

---

* திருநொடித்தான்மலை என்றும் பாடம். இது சங்கார கருத்தாவாகிய உருத்திரர் வீற்றிருக்கும் மலை ஆதலால் நொடித்தான்மலை எனப்பெற்றது. நொடித்தல் – சங்கரித்தல். இஃது இமயமலைச் சிகரத்தில் உள்ளது. ** வயிரமுத்து என்றும் பாடம்.

நொடிப்பள விரலா லூன்ற நோவது மலறி யிட்டான்
மடித்திறை யூன்றி ஞனேல் மறித்துநோக் கில்லை யன்றே. 4

கன்றித்தன் கண்சி வந்து கயிலைநன் மலையை யோடி
வென்றித்தன் கைத்த லத்தா லெடுத்தலும் வெருவ மங்கை
நன்றுத்தான் நக்கு நாத னூன்றலு நகழ வீழ்ந்தான்
மன்றித்தான் ஊன்றி ஞனேல் மறித்துநோக் கில்லை யன்றே. 5

களித்தவன் கண்சி வந்து கயிலைநன் மலையை யோடி
நெளித்தவ னெடுத்திட லும் நேரிழை அஞ்ச நோக்கி
வெளித்தவ னூன்றி யிட்ட வெற்பினு லலறி வீழ்ந்தான்
மளித்திறை யூன்றி ஞனேல் மறித்துநோக் கில்லை யன்றே. 6

கருத்தனுய்க் கண்சி வந்து கயிலைநன் மலையைக் கையால்
எருத்தனுய் எடுத்த வாறே ஏந்திழை அஞ்ச ஈசன்
திருத்தனுய் நின்ற தேவன் திருவிர லூன்ற வீழ்ந்தான்
வருத்துவான் ஊன்றி ஞனேல் மறித்துநோக் கில்லை யன்றே. 7

கடியவன் கண்சி வந்து கயிலைநன் மலையை யோடி
வடிவுடை மங்கை அஞ்ச எடுத்தலும் மருவ நோக்கிச்
செடிபடத் திருவிரலா லூன்றலுஞ் சிதைந்து வீழ்ந்தான்
வடிவுற வூன்றி ஞனேல் மறித்துநோக் கில்லை யன்றே. 8

கரியத்தான் கண்சி வந்து கயிலைநன் மலையைப் பற்றி
இரியத்தான் எடுத்திட லும் ஏந்திழை அஞ்ச ஈசன்
நெரியத்தான் ஊன்ரு முன்னம் நிற்கிலா தலறி வீழ்ந்தான்
மரியத்தான் ஊன்றி ஞனேல் மறித்துநோக் கில்லை யன்றே. 9

கற்றனன் கயிலை தன்னைக் காண்டலும் அரக்கன் ஓடி
செற்றவன் எடுத்த வாறே சேயிழை அஞ்ச ஈசன்
உற்றிறை ஊன்ரு முன்னம் உணர்வழி வகையால் வீழ்ந்தான்
மற்றிறை ஊன்றி ஞனேல் மறித்துநோக் கில்லை யன்றே. 10

திருச்சிற்றம்பலம்

---

## போற்றித் திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**வே**ற்ருகி விண்ணுகி நின்ருய் போற்றி மீளாமே ஆளென்
னைக் கொண்டாய் போற்றி, ஊற்ருகி உள்ளே ஒளித்தாய் போற்றி

ஓவாத சத்தத் தொலியே* போற்றி, ஆற்ருகி அங்கே அமர்ந்தாய் போற்றி ஆறங்கம் நால்வேத மாஞய் போற்றி, காற்ருகி யெங்குங் கலந்தாய் போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி. 1

பிச்சாடல் பேயோ டுகந்தாய் போற்றி பிறவி யறுக்கும் பிரானே போற்றி, வைச்சாடல் நன்று மகிழ்ந்தாய் போற்றி மருவியென் சிந்தை புகுந்தாய் போற்றி, பொய்ச்சார்** புரமூன்று மெய்தாய் போற்றி போகாதென் சிந்தை புகுந்தாய் போற்றி, கச்சாக நாக மசைத்தாய் போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி. 2

மருவார் புரமூன்று மெய்தாய் போற்றி மருவியென் சிந்தை புகுந்தாய் போற்றி, உருவாகி யென்னைப் படைத்தாய் போற்றி உள்ளாவி வாங்கி யொளித்தாய் போற்றி, திருவாகி நின்ற திறமே போற்றி தேசம் பரவப் படுவாய் போற்றி, கருவாகி யோடும் முகிலே போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி. 3

வானத்தார் போற்றும் மருந்தே போற்றி வந்தென்றன் சிந்தை புகுந்தாய் போற்றி, ஊனத்தை நீக்கு முடலே போற்றி ஓங்கி அழலாய் நிமிர்ந்தாய் போற்றி, தேனத்தை வார்த்த தெளிவே போற்றி தேவர்க்குந் தேவஞய் நின்ருய் போற்றி, கானத்தீ யாட லுகந்தாய் போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி. 4

ஊராகி நின்ற உலகே போற்றி ஓங்கி அழலாய் நிமிர்ந்தாய் போற்றி, பேராகி யெங்கும் பரந்தாய் போற்றி பெயராதென் சிந்தை புகுந்தாய் போற்றி, நீராவி யான நிழலே போற்றி நேர்வா ரொருவரையு மில்லாய் போற்றி, காராகி நின்ற முகிலே போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி. 5

சில்லுருவாய்ச் சென்று திரண்டாய் போற்றி தேவ ரறியாத தேவே போற்றி, புல்லுயிர்க்கும் பூட்சி† புணர்த்தாய் போற்றி போகாதென் சிந்தை புகுந்தாய் போற்றி, பல்லுயிராய்ப் பார் தோறும்‡ நின்ருய் போற்றி பற்றி உலகை விடாதாய் போற்றி,

* ஓவாத சத்தத்தொலி – நாதம். **பொய்ச்சார் – பொய்த்தார். † பூட்சி – உணவு. ‡ பார்தோறும் – அண்டங்கள் தோறும்.

கல்லுயிராய் நின்ற கனலே போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி. 6

பண்ணின் இசையாகி நின்றாய் போற்றி பாவிப்பார் பாவ மறுப்பாய் போற்றி, எண்ணும் எழுத்துஞ்சொல் லானாய் போற்றி என்சிந்தை நீங்கா இறைவா போற்றி, விண்ணும் நிலனுந்தீ யானாய் போற்றி மேலவர்க்கும் மேலாகி நின்றாய் போற்றி, கண்ணின் மணியாகி நின்றாய் போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி. 7

இமையா துயிரா யிருந்தாய் போற்றி என்சிந்தை நீங்கா இறைவா போற்றி, உமைபாகம் ஆகத் தணைத்தாய் போற்றி ஊழி யேழா*ன ஒருவா போற்றி, அமையா வருநஞ்ச மார்ந்தாய் போற்றி ஆதி புராணனாய் நின்றாய் போற்றி, கமையாகி நின்ற கனலே போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி. 8

மூவாய் பிறவாய் இறவாய் போற்றி முன்னமே தோன்றி முளைத்தாய் போற்றி, தேவாதி தேவர்தொழுந் தேவே போற்றி சென்றேறி யெங்கும் பரந்தாய் போற்றி, ஆவா அடியேனுக் கெல்லாம் போற்றி அல்லல் நலிய அலந்தேன் போற்றி, காவாய் கனகத் திரளே போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி. 9

நெடிய விசும்பொடு கண்ணே போற்றி நீள அகல முடையாய் போற்றி, அடியும் முடியும் இகலி போற்றி அங்கொன் றறியாமை நின்றாய் போற்றி, கொடிய வன்கூற்றம் உதைத்தாய் போற்றி கோயிலா என்சிந்தை கொண்டாய் போற்றி, கடிய உருமொடு மின்னே போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி. 10

உண்ணா துறங்கா திருந்தாய் போற்றி ஓதாதே வேத முணர்ந்தாய் போற்றி, எண்ணா இலங்கைக்கோன் தன்னைப் போற்றி இறைவிரலால் வைத்துகந்த ஈசா போற்றி, பண்ணா ரிசையின்சொற் கேட்டாய் போற்றி பண்டேயென் சிந்தை புகுந்தாய் போற்றி, கண்ணா யுலகுக்கு நின்றாய் போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி. 11

திருச்சிற்றம்பலம்

* ஊழி ஏழு – இங்கு ஊழி என்றது ஊழியில் மீளத் தோன்றும் உலகங்களை.

## போற்றித்திருத்தாண்டகம்

### திருச்சிற்றம்பலம்

பொறையுடைய பூமிநீ ரானாய் போற்றி பூதப் படையாள் புனிதா போற்றி, நிறையுடைய நெஞ்சின் இடையாய் போற்றி நீங்காதென் னுள்ளத் திருந்தாய் போற்றி, மறையுடைய வேதம் விரித்தாய் போற்றி வானோர் வணங்கப் படுவாய் போற்றி, கறையுடைய கண்ட முடையாய் போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி. 1

முன்பாகி நின்ற முதலே போற்றி மூவாத மேனிமுக் கண்ணா போற்றி, அன்பாகி நின்றார்க் கணியாய் போற்றி ஆறேறு சென்னிச் சடையாய் போற்றி, என்பாக எங்கும் அணிந்தாய் போற்றி என்சிந்தை நீங்கா இறைவா போற்றி, கண்பாவி நின்ற கனலே போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி. 2

மாலை யெழுந்த மதி*யே போற்றி மன்னியென் சிந்தை யிருந் தாய் போற்றி, மேலை வினைக ளறுப்பாய் போற்றி மேலாடு திங்கள் முடியாய் போற்றி, ஆலைக் கரும்பின் தெளிவே போற்றி அடியார்கட் காரமுத மானாய் போற்றி, காலை முளைத்த கதிரே போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி. 3

உடலின் வினைக ளறுப்பாய் போற்றி ஒள்ளெரி வீசும் பிரானே போற்றி, படருஞ் சடைமேல் மதியாய் போற்றி பல் கணக் கூத்தப் பிரானே போற்றி, சுடரில் திகழ்கின்ற சோதி போற்றி தோன்றியென் னுள்ளத் திருந்தாய் போற்றி, கடலி லொளியாய முத்தே போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி. 4

மைசேர்ந்த கண்ட முடையாய் போற்றி மாலுக்கும் ஓராழி ஈந்தாய் போற்றி, பொய்சேர்ந்த சிந்தை புகாதாய் போற்றி போகாதென் னுள்ளத் திருந்தாய் போற்றி, மெய்சேரப் பால் வெண்ணீ றாடீ போற்றி மிக்கார்†க ளேத்தும் விளக்கே போற்றி, கைசேர் அனலேந்தி யாடீ போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி. 5

ஆறேறு சென்னி முடியாய் போற்றி அடியார்கட் காரமு தாய் நின்றாய் போற்றி, நீறேறு மேனி யுடையாய் போற்றி நீங்கா

---

* மாலையெழுந்தமதி-முழுமதி. †மிக்கார்-அன்பில் மிகுந்தவர்கள்.

தென் னுள்ளத் திருந்தாய் போற்றி, கூறேறு மங்கை மழுவா போற்றி கொள்ளுங் கிழமையை ழானுய் போற்றி, காறேறு கண்ட மிடற்ருய் போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி.6

அண்டமே மூன்று கடந்தாய் போற்றி ஆதி புராணனுய் நின்ருய் போற்றி, பண்டை வினைக ளறுப்பாய் போற்றி பாரோர் விண்ணேத்தப் படுவாய் போற்றி, தொண்டர் பரவு மிடத்தாய்† போற்றி தொழில்நோக்கி ஆளுஞ் சுடரே போற்றி, கண்டங் கறுக்கவும் வல்லாய் போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி. 7

பெருகி யலைக்கின்ற ஆறே போற்றி பேராநோய் பேர விடுப்பாய் போற்றி, உருகி நினைவார்தம் முள்ளாய் போற்றி ஊனந் தவிர்க்கும் பிரானே போற்றி, அருகி மிளிர்கின்ற பொன்னே போற்றி யாரு மிகழப் படாதாய் போற்றி, கருகிப் பொழிந்தோடு நீரே போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி. 8

செய்ய மலர்மேலான் கண்ணன் போற்றித் தேடி யுணராமை நின்ருய் போற்றி, பொய்யாநஞ் சுண்ட பொறையே போற்றி பொருளாக என்னையாட் கொண்டாய் போற்றி, மெய்யாக ஆனஞ் சுகந்தாய் போற்றி மிக்கார்க ளேத்துங் குணத்தாய் போற்றி, கையானை மெய்த்தோ லுரித்தாய் போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி. 9

மேல்வைத்த வானோர் பெருமான் போற்றி மேலாடு புரமூன்று மெய்தாய் போற்றி, சீலத்தான் தென்னிலங்கை மன்னன் போற்றிச் சிலையெடுக்க வாயலற வைத்தாய் போற்றி, கோலத்தாற் குறைவில்லான் தன்னை யன்று கொடிதாகக் காய்ந்த குழகா போற்றி, காலத்தாற் காலனையுங் காய்ந்தாய் போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி. 10

திருச்சிற்றம்பலம்

---

### போற்றித்திருத்தாண்டகம்‡

திருச்சிற்றம்பலம்

பாட்டான நல்ல தொடையாய் போற்றி பரிசை§ யறியாமை நின்ருய் போற்றி, சூட்டான திங்கள் முடியாய் போற்றி

† தொண்டர் பரவு மிடற்ருய் என்றும் பாடம். ‡ இப்பதிகத்தில் 9-ம் செய்யுள் சிதைந்து போயிற்று. § பரிசை—தன்மை,

தூமாலை மத்த மணிந்தாய் போற்றி, ஆட்டான தஞ்சு மமர்ந்தாய் போற்றி அடங்கார் புரமெரிய நக்காய் போற்றி, காட்டானை மெய்த் தோ லுரித்தாய் போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி. 1

அதிரா வினைகள் அறுப்பாய் போற்றி ஆல நிழற்கீழ் அமர்ந் தாய் போற்றி, சதுரா சதுரக் குழையாய் போற்றி சாம்பர் மெய் பூசுந் தலைவா போற்றி, எதிரா உலக மமைப்பாய் போற்றி என்றும் மீளாஅருள் செய்வாய் போற்றி, கதிரார் கதிருக்கோர் கண்ணே போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி. 2

செய்யாய் கரியாய் வெளியாய் போற்றி செல்லாத செல்வ முடையாய் போற்றி, ஐயாய் பெரியாய் சிறியாய் போற்றி ஆகாச வண்ண முடையாய் போற்றி, வெய்யாய் தணியா யணியாய் போற்றி வேளாத வேள்வி யுடையாய் போற்றி, கையார் தழலார் விடங்கா போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி. 3

ஆட்சி யுலகை யுடையாய் போற்றி அடியார்க் கமுதெ*லாம் ஈவாய் போற்றி, சூட்சி சிறிதும் இலாதாய் போற்றி சூழ்ந்த கடல்நஞ்ச முண்டாய் போற்றி, மாட்சி பெரிதும் உடையாய் போற்றி மன்னியென் சிந்தை மகிழ்ந்தாய் போற்றி, காட்சி பெரிது மரியாய் போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி. 4

முன்னியா நின்ற முதல்வா போற்றி மூவாத மேனி யுடையாய் போற்றி, என்னியாய் எந்தை பிரானே போற்றி ஏழின் இசையே யுகப்பாய் போற்றி, மன்னிய மங்கை மணாளா போற்றி மந்திரமுந் தந்திரமும் ஆனாய் போற்றி, கன்னியார் கங்கைத் தலைவா போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி. 5

உரியாய் உலகினுக் கெல்லாம் போற்றி உணர்வென்னும் ஊர்வது உடையாய்** போற்றி, எரியாய தெய்வச் சுடரே போற்றி யேசுமா முண்டி யுடையாய் போற்றி, அரியாய் அமரர்கட் கெல்லாம் போற்றி அறிவே யடக்க முடையாய் போற்றி, கரியானுக் காழியன் றீந்தாய் போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி. 6

* அமுது – முத்தி; அது சாலோக சாமீப சாரூப சாயுச்சியம் என நான்கு. ** உணர்வு என்னும் ஊர்வது உடையாய்–ஞானமாகிய வாகனத்தை ஊர்தியாக உடையாய்.

எண்மேலும் எண்ணம் உடையாய் போற்றி ஏ றறிய வேறுங் குணத்தாய் போற்றி, பண்மேலே பாவித் திருந்தாய் போற்றி பண்ணொடியாழ் வீணை பயின்றாய் போற்றி, விண்மேலும் மேலும் நிமிர்ந்தாய் போற்றி மேலார்கண் மேலார்கண் மேலாய் போற்றி, கண்மேலுங் கண்ணொன் றுடையாய் போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி. 7

முடியார் சடையின் மதியாய் போற்றி முழுநீறு சண்ணித்த மூர்த்தி போற்றி, துடியா ரிடையுமையாள் பங்கா போற்றி சோதித்தார் காணாமை நின்றாய் போற்றி, அடியா ரடிமை அறிவாய் போற்றி அமரர் பதியாள வைத்தாய் போற்றி, கடியார் புரமூன்றும் எய்தாய் போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி. 8

போற்றிசைத்துன் னடிபரவ நின்றாய் போற்றி புண்ணியனே நண்ண லரியாய் போற்றி, ஏற்றிசைக்கும் வான்மேல் இருந்தாய் போற்றி எண்ணா யிரநூறு பேராய் போற்றி, நாற்றிசைக்கும் விளக்காய நாதா போற்றி நான்முகற்கும் மாற்கும் அறியாய் போற்றி, காற்றிசைக்குந் திசைக்கெல்லாம் வித்தே போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி. 9-10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—கயிலாயநாதர், பரமசிவன்; தேவி—பார்வதியம்மை.

---

## பொது

**சிவனெனுமோசை; பண்–பியந்தைக்காந்தாரம்* [4-ம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

சிவனெனு மோசை யல்ல தறையோ வுலகில் திருநின்ற செம்மை** யுளதே, அவனுமோ ரைய முண்ணி யதளாடை யாவ ததன்மேலொ ராட லரவம், கவணள வுள்ள வுள்கு கரிகாடு கோயில் கலனாவ தோடு கருதில், அவனது பெற்றி கண்டு மவனீர்மை கண்டு மகனேர்வர் தேவ ரவரே. 1

---

* இப்பதிகம் இறைவனின் இயல்பு முதலியவற்றைத் திறம்படக் கூறுவது. ** திருநின்ற செம்மை – முத்திதரும் செம்பொருள்.

விரிகதிர் ஞாயி றல்லர் மதியல்லர் வேத விதியல்லர் விண் ணும் நிலனும், திரிதரு வாயு வல்லர் செறுதீயு மல்லர் தெளிநீரு மல்லர் தெரியில், அரிதரு கண்ணி யாளை ஒருபாக மாக அருள்கா ரணத்தில் வருவார், எரியர வார மார்பர் இமையாரு மல்லர் இமைப்பாரு மல்லர் இவரே. 2

தேய்பொடி வெள்ளை பூசி யதன்மேலோர் திங்கள் திலகம் பதித்த நுதலர், காய்கதிர் வேலைநீல ஒளிமா மிடற்றர் கரிகாடர் காலொர் கழலர், வேயுட னாடு தோளி† அவள்விம்ம வெய்ய மழுவீசி வேழ வுரிபோர்த், தேயிவ ராடு மாறும் இவள்காணு மாறும் இதுதா னிவர்க்கொ ரியல்பே. 3

வளர்பொறி யாமை புல்கி வளர்கோதை வைகி வடி தோலும் நூலும் வளரக், கிளர்பொறி நாக மொன்று மிளிர் கின்ற மார்பர் கிளர்காடு நாடு மகிழ்வர்,‡ நளிர்பொறி மஞ்ஞை யன்ன தளிர் போன்ற சாய லவள்தோன்று வாய்மை பெருகிக், குளிர்பொறி வண்டு பாடு குழலா ளொருத்தி யுளள்போல் குலாவி யுடனே. 4

உறைவது காடு போலு முரிதோ லுடுப்பர் விடையூர்வ தோடு கலனு, இறையிவர் வாழும் வண்ண மிதுவேலு மீச ரொருபா லிசைந்த தொருபால், பிறைநுதல் பேதை மாதர் உமையென்னு நங்கை பிறழ்பாட நின்று பிணைவான், அறைகழல் வண்டு பாடும் அடிநீழ லாணை கடவா தமர ருலகே. 5

கணிவளர் வேங்கை யோடு கடிதிங்கள் கண்ணி கழல்கால் சிலம்ப அழகார், அணிகிள ரார வெள்ளை தவழ்சுண்ண வண்ண மியலா ரொருவ ரிருவர், மணிகிளர் மஞ்ஞை யால மழையாடு சோலை மலையான் மகட்கு மிறைவர், அணிகிள ரன்ன வண்ணம் அவள்வண்ண வண்ணம் அவர்வண்ண வண்ணம் அழலே. 6

நகைவளர் கொன்றை துன்று நகுவெண் டலையர் நளிர் கங்கை தங்கு முடியர், மிகைவளர் வேத கீத முறையோடும் வல்ல கறைகொள் மணிசெய் மிடறர், முகைவளர் கோதை மாதர் முனி

---

† வேயுடன் நாடு தோளி—மூங்கிலோடு ஒன்றுகக் கருதப்படு கின்ற தோளை யுடையாள்; வேயுடன் ஆடு தோளி எனப் பிரித்து மூங்கிலோடு உவமை கூறுதற்கு உரிய தோளி என்றுமாம். ‡ நாடு கிழவர் என்றும் பாடம்.

பாடு மாறு மெரியாடு மாறு மிவர்கைப், பகைவளர் நாகம் வீசி மதியங்கு மாறு மிதுபோலும் ஈச ரியல்பே. 7

ஒளிவளர் கங்கை தங்கு மொளிமா லயன்ற னுடல்வெந்து வீய சுடர்நீ, றணிகிள ரார வெள்ளை தவழ்சுண்ண வண்ணர் தமியா ரொருவ ரிருவர், களிகிளர் வேடமுண்டொர் கடமா வுரித்த உடைதோல் தொடுத்த கலனர், அணிகிள ரன்ன தொல்லை யவள்பாக மாக எழில்வேத மோது மவரே. 8

மலைமட மங்கை யோடும் வடகங்கை நங்கை மணவாள ராகி மகிழ்வர், தலைகல னாக வுண்டு தனியே திரிந்து தவவாண ராகி முயல்வர், விலையிலி சாந்த மென்று வெறிநீறு பூசி விளையாடும் வேட விகிர்தர், அலைகடல் வெள்ள முற்று மலறக் கடைந்த அழல் நஞ்ச முண்ட அவரே. 9

புதுவிரி பொன்செ யோலை யொருகாதொர் காது சுரிசங்க நின்று புரள, விதிவிதி§ வேத கீத மொருபாடு மோத மொருபாடு மெல்ல நகுமால், மதுவிரி கொன்றை துன்று சடைபாக மாதர் குழல்பாக¶ மாக வருவர், இதுஇவர் வண்ண வண்ணம் இவள் வண்ண வண்ணம் எழில் வண்ண வண்ண மியல்பே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திரு அங்கமாலை: பண்–சாதாரி* [4–ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

தலையே நீவணங்காய்—தலை மாலை தலைக்கணிந்து, தலையா லேபலி தேருந் தலைவனைத் தலையே நீவணங்காய். 1

கண்காள் காண்மின்களோ—கடல் நஞ்சுண்ட கண்டன் றன்னை, எண்டோள் வீசிநின் றாடும் பிரான் றன்னைக் கண்காள் காண்மின்களோ. 2

செவிகாள் கேண்மின்களோ–சிவன் எம்மிறை செம்பவள, எரிபோல் மேனிப்பி ரான்திறம் எப்போதுஞ் செவிகாள் கேண்மின்களோ. 3

---

§ விதிவிதி – விதிகளை விதிக்கின்ற. ¶ சடைபாகம் – இறைவர் பாகம். குழல்பாகம்–அம்மை பாகம். * இப்பதிகம் உடலின் புற உறுப்புகளும், அக உறுப்புகளும் இறைவன் வழிபாட்டிற்கே உரியன என்பதை வலியுறுத்தும்.

மூக்கே நீமுரலாய்* – முது காடுறை முக்கணனை, வாக்கே நோக்கிய மங்கை மணாளனை மூக்கே நீமுரலாய். 4

வாயே வாழ்த்துகண்டாய்–மத யானை யுரிபோர்த்துப், பேய் வாழ் காட்டகத் தாடும்பிரான் தன்னை வாயே வாழ்த்து கண்டாய்.

நெஞ்சே நீநினையாய் – நிமிர் புன்சடை நின்மலனை, மஞ்சாடும்மலை மங்கை மணாளனை நெஞ்சே நீநினையாய். 6

கைகாள் கூப்பித்தொழீர் – கடி மாமலர் தூவிநின்று, பை வாய்ப் பாம்பரை யார்த்த பரமனைக் கைகாள் கூப்பித்தொழீர். 7

ஆக்கை யாற்பயனென்–அரன் கோயில் வலம்வந்து, பூக்கை யால்அட்டிப் போற்றி யென்னாதஇவ் ஆக்கை யாற்பயனென். 8

கால்க ளாற்பயனென் – கறைக் கண்ட னுறைகோயில் கோலக்கோபுரக்கோகர ணஞ்**சூழாக் கால்க ளாற்பயனென். 9

உற்றா ராருளரோ – உயிர் கொண்டு போம்பொழுது, குற்றாலத்†துறை கூத்தன‡ல் லால்நமக் குற்றார் ஆருளரோ. 10

இறுமாந் தி§ருப்பன்கொலோ – ஈசன் பல்கணத் தெண்ணப் பட்டுச், சிறுமா னேந்திதன் சேவடிக்கீழ்ச் சென்றங் கிறுமாந் திருப்பன் கொலோ. 11

தேடிக் கண்டுகொண்டேன் – திரு மாலொடு நான்முகனும், தேடித்தே டொணாத் தேவனை என்னுளே தேடிக் கண்டு கொண்டேன். 12

திருச்சிற்றம்பலம்

---

**நமச்சிவாயத் திருப்பதிகம்** ||

**பண் – காந்தார பஞ்சமம் [4-ம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணை திருந்தடி பொருந்தக் கைதொழக்

---

* முரலல் - மெல்லிய ஒலியால் போற்றுதல். ** கோகரணம் – துளுவநாட்டில் உள்ள தலம். † குற்றாலம் – திருக்குற்றாலம் என்னும் தலம். ‡ கூத்தன் - இங்கு குறும்பலா ஈசன். § இறுமாந்திருத்தல்– பெருமித உணர்ச்சியுடன் இருத்தல். || இப்பதிகம் சமணர்கள் சுவாமிகளைக் கல்லுடன் பிணித்துக் கடலில் வீழ்த்தியபோது ஓதியருளியதாகும்.

கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே. 1

பூவினுக் கருங்கலம் பொங்கு* தாமரை
ஆவினுக் கருங்கலம் அரன்அஞ் சாடுதல்
கோவினுக் கருங்கலங் கோட்ட மி**ல்லது
நாவினுக் கருங்கலம் நமச்சி வாயவே. 2

விண்ணுற அடுக்கிய விறகின் வெவ்வழல்
உண்ணிய புகிலவை யொன்று மில்லையாம்
பண்ணிய வுலகினிற் பயின்ற பாவத்தை
நண்ணிநின் றறுப்பது நமச்சி வாயவே. 3

இடுக்கண்பட் டிருக்கினும் இரந்தி யாரையும்
விடுக்கிற் பிரானென்று வினவுவோ மல்லோம்
அடுக்கற்கீழ்க் கிடக்கினு மருளின் நாமுற்ற
நடுக்கத்தைக் கெடுப்பது நமச்சி வாயவே. 4

வெந்தநீ றருங்கலம் விரதி கட்கெலாம்
அந்தணர்க் கருங்கலம் அருமறை யாறங்கம்
திங்களுந் கருங்கலந் திகழு நீண்முடி
நங்களுக் கருங்கலம் நமச்சி வாயவே. 5

சலமிலன் சங்கரன் சார்ந்த வர்க்கலால்
நலமிலன் நாடொறு நல்கு வானலன்
குலமில ராகிலுங் குலத்திற் கேற்பதோர்
நலமிகக் கொடுப்பது நமச்சி வாயவே. 6

வீடினார் உலகினில் விழுமிய தொண்டர்கள்
கூடினார் அந்நெறி கூடிச் சென்றலும்†
ஓடினே னோடிச்சென் றுருவங் காண்டலும்
நாடினேன் நாடிற்று நமச்சி வாயவே. 7

இல்லக விளக்கது இருள்கெ டுப்பது
சொல்லக விளக்கது சோதி யுள்ளது
பல்லக விளக்கது பலருங் காண்பது
நல்லக விளக்கது நமச்சி வாயவே. 8

* பொங்கு - சிறப்புடைய. ** கோட்டம் - ஒருபாற் கோடுதல்.
† கூடச்சென் றலும் என்றும் பாடம்,

முன்னெறி யாகிய முதல்வன் முக்கணன்
தன்னெறி யேசர ணாதல் திண்ணமே
அந்நெறி யேசென் றங் கடைந்த வர்க்கெலாம்
நன்னெறி யாவது நமச்சி வாயவே. 9

மாப்பிணை தழுவிய மாதொர்A பாகத்தன்
பூப்பிணைB திருந்தடி பொருந்தக் கைதொழ
நாப்பிணை தழுவிய நமச்சி வாயப்பத்(து)
ஏத்தவல் லார்தமக் கிடுக்க ணில்லையே. 10

திருச்சிற்றம்பலம்

---

தசபுராணம்:C பண்-பழம்பஞ்சுரம்C [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பருவரை யொன்று சுற்றி அரவங்கை விட்ட இமையோர் இரிந்து பயமாய்த், திருநெடு மால்நிறத்தை அடுவான் விசும்பு சுடு வா னெழுந்த விசைபோய், பெருகிட மற்றி தற்கொர் பிதி காரD மொன்றை அருளாய் பிரானே எனலும், அருள்கொடு மாவிடத்தை எரியாமல் உண்ட அவனண்டர் அண்ட ரரசே. 1

நிரவொலி வெள்ள மண்டி நெடுவண்ட மூட நிலநின்று தம்ப மதுவப், பரமொரு தெய்வ மெய்த இதுவொப்ப தில்லை யிருபாலு நின்று பணியப், பிரமனு மாலு மேலை முடியோடு பாதம் அறியாமை நின்ற பெரியோன், பரமுத லாய தேவர் சிவனாய மூர்த்தி யவனா நமக்கொர் சரணே. 2

காலமு நாள்கள் ஊழி படையா முன் ஏக உருவாகி மூவர் உருவில், சாலவு மாகி மிக்க சமயங்க ளாறின் உருவாகி நின்ற தழலோன், ஞாலமு மேலை விண்ணொ டுலகேழு முண்டு குறளாயொ ராலின் இலைமேல், பாலனு மாய வற்கொர் பரமாய மூர்த்தி யவனா நமக்கொர் சரணே. 3

---

A மாப்பிணை தழுவிய மாது – பிரிதலில்லாமல் இறைவனுடன் கூடியிருக்கும் சக்தி. B பூப்பிணை–மலர்மாலை, C இப்பதிகம் ஒவ்வொரு பாட்டிலும் ஒவ்வொரு புராண சரிதத்தை விரித்துப் போற்றுவது. D பிரதிகாரம் பிதிகாரம் என்றாயது; பதில் செய்கை என்பது பொருள்.

நீடுயர் மண்ணு விண்ணும் நெடுவேலை குன்றொ டுலகேழும் எங்கு நலியச், சூடிய கையராகி இமையோர் கணங்கள் துதிஓதி நின்று தொழவும், ஓடிய தாரு கன்றன் உடலம் பிளந்தும் ஒழி யாத கோபம் ஒழிய, ஆடிய மாநடத்தெம் அனலாடி பாதம் அவையா நமக்கொர் சரணே. 4

நிலைவலி இன்றி எங்கும் நிலனோடு விண்ணும் நிதனஞ்†செய் தோடு புரமூன்(று), அலைநலி வஞ்சி யோடி அரியோடு தேவ ரரணம் புகத்தன் அருளால், கொலைநலி வாளிமூள அரவங்கை நாணும் அனல்பாய நீறு புரமா, மலைசிலை கையில் ஒல்க வளை வித்த வள்ள லவனு நமக்கொர் சரணே. 5

நீலநன் மேனி செங்கண் வளைவெள் ளெயிற்ற னெரிகேசன்‡ நேடி வருநாள், காலநன் மாலை கொண்டு வழிபாடு செய்யும் அளவின்கண் வந்து குறுகிப், பாலனை ஓட ஓடப் பயமெய்து வித்த உயிர்வவ்வு பாசம் விடுமக், காலனை வீடு செய்த கழல்போ லும் அண்டர் தொழுதோது சூடு கழலே. 6

உயர்தவ மிக்க தக்கன் உயர்வேள்வி தன்னில் அவியுண்ண வந்த இமையோர், பயமுறு மெச்சனங்கி மதியோனு முற்ற படி கண்டு நின்று பயமாய், அயனொடு மாலுமெங்க ளறியாமை யாதி கமி§யென் றிறைஞ்சி யகலச், சயமுறு தன்மை கண்ட தழல் வண்ணன் எந்தை கழல்கண்டு கொள்கை கடனே.¶ 7

நலமலி மங்கை நங்கை விளையாடி யோடி நயனத் தலங்கள் கரமா, உலகினை எழு முற்றும் இருள்மூடமூட இருளோட நெற்றி ஒருகண், அலர்தர அஞ்சி மற்றை நயனங்கை விட்டு மடவாள் இறைஞ்ச மதிபோல், அலர்தரு சோதி போல அலர் வித்த முக்க ணவனு நமக்கொர் சரணே. 8

கழைபடு காடு தென்றல் குயில் கூவ அஞ்சு கணையோன் அணைந்து புகலும், மழைவடி வண்ணன் எண்ணி மகவோனை விட்ட மலரான தொட்ட மதனன், எழில்பொடி வெந்து வீழ இமையோர் கணங்கள் எரியென் றிறைஞ்சி யகலத், தழல்படு நெற்றி ஒற்றை நயனஞ் சிவந்த தழல்வண்ணன் எந்தை சரணே. 9

---

† நிதனம்—நாசம்; அழிவு. ‡ நீலநன்...எரிகேசன்—இயமன். §கமி —பொறுக்க. ¶ கொள்கை சரணே என்றும் பாடம்.

தடமலர் ஆயி ரங்கள் குறைவொன்ற தாக நிறைவென்று தன்க ணதனுல், உடன்வழி பாடுசெய்த திருமாலை யெந்தை பெருமான் உகந்து மிகவும், சுடரடி யான்முயன்று சுழல்வித் தரக் கன் இதயம் பிளந்த கொடுமை, அடல்வலி ஆழி ஆழி யவனுக் களித்த அவனும் நமக்கொர் சரணே. 10

கடுகிய தேர்செ லாது கயிலாய மீது கருதேலுன் வீரம் ஒழிநீ, முடுகுவ தன்று தன்மT மென நின்றுபாகன் மொழிவானை நன்று முனியா, விடுவிடு வென்று சென்று விரைவுற்றரக்கன் வரையுற் றெடுக்க முடிதோள், நெடுநெடு இற்று வீழ விரலுற்ற பாதம் நினைவுற்ற தென்றன் மனனே. 11

திருச்சிற்றம்பலம்

---

## பாவநாசத் திருப்பதிகம்:* பண்–பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

பற்றற் றார்சேர் பழம்பதி**யைப் பாசூர் நிலாய பவளத்தைச்
சிற்றம் பலத்தெந் திகழ்கனியைத் தீண்டற் கரிய திருவுருவை
வெற்றி யூரில் விரிசுடரை விமலர் கோனைத் திரைசூழ்ந்த
ஒற்றி யூரெம் உத்தமனை உள்ளத் துள்ளே வைத்தேனே. 1

ஆனைக் காவில் அணங்கினை ஆரூர் நிலாய அம்மானைக்
கானப் பேரூர்க் கட்டியைக் கானூர் முளைத்த கரும்பினை
வானப் பேரார் வந்தேத்தும் வாய்மூர் வாழும் வலம்புரியை
மானக் கயிலை மழகளிற்றை மதியைச் சுடரை மறவேனே. 2

மதியங் கண்ணி ஞாயிற்றை மயக்கந் தீர்க்கும் மருந்தினை
அதிகை மூதூர் அரசினை ஐயா றமர்ந்த ஐயனை
விதியைப் புகழை வானோர்கள் வேண்டித் தேடும் விளக்கினை
நெதியை ஞானக் கொழுந்தினை நினைந்தேற் குள்ளம் நிறைந்ததே. 3

புறம்ப யத்தெம் முத்தினைப் புகலூர் இலங்கு பொன்னினை
உறந்தை‡ யோங்கு சிராப்பள்ளி உலகம் விளக்கு ஞாயிற்றைக்
கறங்கு மருவிக் கழுக்குன்றிற் காண்பார் காணுங் கண்ணானை
அறஞ்சூழ் அதிகை வீரட்டத் தரிமான் ஏற்றை அடைந்தேனே. 4

---

T தன்று கன்மமென என்றும் பாடம். * இப்பதிகம் பாவம் நாசமாவதற்குரிய வழிகளை உபதேசிப்பது. ** பழம்பதி–திருப்புன வாயில். ‡ உறந்தை–உறையூர்.

கோலக் காவிற் குருமணியைக் குடமூக் குறையும் விடமுணியை
ஆலங் காட்டி லந்தேனை அமரர் சென்னி யாய்மலரைப்
பாலில் திகழும் பைங்கனியைப் பராய்த்துறைஎம்பசும்பொன்னைச்
சூலத் தானைத் துணையிலியைத் தோளைக் குளிரத் தொழுதேனே. 5

மருகலுறையுமா ணிக்கத்தைP வலஞ்சுழியி னம்மாலையைக்
கருகா வூரிற் கற்பகத்தைக் காண்டற் கரிய கதிரொளியைப்
பெருவே ளூரெம் பிறப்பிலியைப் பேணு வார்கள் பிரிவரிய
திருவாஞ் சியத்தெஞ் செல்வனைச் சிந்தை யுள்ளே வைத்தேனே. 6

எழிலார் இராச சிங்கத்தை இராமேச் சுரத்தெம் எழிலேற்றைக்
குழலார் கோதை வரைமார்பிற் குற்றா லத்தெங் கூத்தனை
நிழலார் சோலை நெடுங்களத்து நிலாய நித்த மணாளனை
அழலார் வண்ணத் தம்மானை அன்பி லணைத்து வைத்தேனே. 7

மாலைத் தோன்றும் வளர்மதியை மறைக்காட் டுறையும் மணாளனை
ஆலைக் கரும்பி னின்சாற்றை அண்ணா மலையெம் அண்ணலைச்
சோலைத் துருத்தி நகர்மேய சுடரிற் றிகழுந் துளக்கிலியை
மேலை வானோர் பெருமானை விருப்பால் விழுங்கி யிட்டேனே. 8

சோற்றுத் துறையெஞ் சோதியைத் துருத்தி மேய தூமணியை
ஆற்றிற் பழனத் தம்மானை ஆல வாய்எம் அருமணியை
நீற்றிற் பொலிந்த நிமிர்திண்டோள் நெய்த்தா னத்தெந் நிலாச்சுடரைத்
தோற்றக் கடலை அடலேற்றைத் தோளைக் குளிரத் தொழுதேனே. 9

புத்தூ ருறையும் புனிதனைப் பூவ ணத்தெம் போரேற்றை
வித்தாய் மிழலை முளைத்தானை வேள்விக் குடியெம் வேதியனைப்
பொய்த்தார் புரமூன் றெரித்தானைப் பொதியில் மேய புராணனை
வைத்தேன்என்றன் மனத்துள்ளே மாத்தூர் மேயமருந்தையே. 10

முந்தித் தானே முளைத்தானை மூரி வெள்ளே றூர்ந்தானை
அந்திச் செவ்வான் படியானை அரக்கன் ஆற்றல் அழித்தானைச்
சிந்தை வெள்ளப் புனலாட்டிச் செஞ்சொன்மாலை யடிசேர்த்தி
எந்தை பெம்மான் என்னெம்மான் என்பார் பாவ நாசமே.* 11

திருச்சிற்றம்பலம்

---

Pமருகல் உறையும் மாணிக்கம் – திருமருகலின் இறைவர் மாணிக்கவண்ணர் என்பது குறிப்பு. * பாவநாசமே – பாவங்கள் நாசமாகும்; ஏகாரம் தேற்றம்.

விடந்தீர்த்த திருப்பதிகம்* ; பண் – இந்தளம் [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

ஒன்றுகொ லாமவர் சிந்தை யுயர்வரை
ஒன்றுகொ லாமுய ரும்மதி சூடுவர்
ஒன்றுகொ லாமிடு வெண்டலை கையது
ஒன்றுகொ லாமவர் ஊர்வது தானே. 1

இரண்டுகொ லாமிமை யோர்தொழு பாதம்
இரண்டுகொ லாமிலங் குங்குழை பெண்ணாண்
இரண்டுகொ லாமுரு வஞ்சிறு மான்மழு
இரண்டுகொ லாமவர் எய்தின தாமே.** 2

மூன்றுகொ லாமவர் கண்ணுத லாவன
மூன்றுகொ லாமவர் சூலத்தின் மொய்யிலை
மூன்றுகொ லாங்கணை† கையது வில்நாண்
மூன்றுகொ லாம்புர மெய்தனர் தாமே. 3

நாலுகொ லாமவர் தம்முக மாவன
நாலுகொ லாஞ்சன னம்முதற் றோற்றமும்
நாலுகொ லாமவர் ஊர்தியின் பாதங்கள்
நாலுகொ லாமறை பாடின தாமே. 4

அஞ்சுகொ லாமவர் ஆடர வின்படம்
அஞ்சுகொ லாமவர் வெல்புல னாவன
அஞ்சுகொ லாமவர் காயப்பட் டான்‡கணை
அஞ்சுகொ லாமவர் ஆடின தாமே. 5

ஆறுகொ லாமவர் அங்கம் படைத்தன
ஆறுகொ லாமவர் தம்மக னார்முகம்
ஆறுகொ லாமவர் தார்மிசை வண்டின்கால்
ஆறுகொ லாஞ்சுவை யாக்கின தாமே. 6

ஏழுகொ லாமவர் ஊழி படைத்தன
ஏழுகொ லாமவர் கண்ட இருங்கடல்

---

* இப்பதிகம் அப்பூதியடிகளின் மூத்த புதல்வரைத் தீண்டிய அரவின் விடம் நீங்கும்படி ஓதியருளியதாகும். ** எய்தினர்தாமே என்றும் பாடம். † கணைமூன்று – ஈர்க்கு–வாயு; உடல் – திருமால்; கூர் – அக்கினி. ‡ காயப்பட்டான் – மன்மதன்.

ஏழுகொ லாமவர் ஆளு முலகங்கள்
ஏழுகொ லாம்இசை யாக்கின தாமே. 7

எட்டுக்கொ லாமவர் ஈறில் பெருங்குணம்
எட்டுக்கொ லாமவர் சூடு மினமலர்
எட்டுக்கொ லாமவர் தோளிணை யாவன
எட்டுக்கொ லாந்திசை யாக்கின தாமே. 8

ஒன்பது போலவர் வாசல் வகுத்தன
ஒன்பது போலவர் மார்பினில் நூலிழை
ஒன்பது போலவர் கோலக் குழற்சடை
ஒன்பது போலவர் பாரிடந் தானே. 9

பத்துக்கொ லாமவர் பாம்பின்கண் பாம்பின்பல்
பத்துக்கொ லாமெயி றுந்நெரிந் துக்கன
பத்துக்கொ லாமவர் காயப்பட் டான்தலை
பத்துக்கொ லாமடி யார்செய்கை தானே. 10

திருச்சிற்றம்பலம்

---

நினைந்த திருநேரிசை* [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

முத்தினை மணியைப் பொன்னை முழுமுதற் பவளம் ஏய்க்குங்
கொத்தினை** வயிர மாலைக் கொழுந்தினை அமரர் சூடும்
வித்தினை வேத வேள்வி கேள்வியை விளங்க நின்ற
அத்தனை நினைந்த நெஞ்சம் அழகிதா நினைந்த வாறே. 1

முன்பனை† யுலகுக் கெல்லாம் மூர்த்தியை‡ முனிக ளேத்தும்
இன்பனை யிலங்கு சோதி இறைவனை அரிவை அஞ்ச
வன்பனைத் தடக்கை வேள்விக் களிற்றினை§ யுரித்த எங்கள்
அன்பனை நினைந்த நெஞ்சம் அழகிதா நினைந்த வாறே. 2

கரும்பினு மினியான் தன்னைக் காய்கதிர்ச் சோதி யானை
இருங்கட லமுதந் தன்னை இறப்பொடு பிறப்பி லானைப்

---

* இப்பதிகம் இறைவனின் நினைப்பினைப்பற்றிக் கூறுவது. ** தொத்தினை என்றும் பாடம். † முன்பன் – முதல்வன்; அநாதியாய் உள்ளவன். ‡ மூர்த்தி – தலைவன். § வேள்விக்களிறு – தாருகாவனத்து இருடிகள் செய்த யாக குண்டத்தினின்று வந்த யானை; வேழக் களிற்றினை என்றும் பாடம்.

பெரும்பொருட் கிளவி யானைப் பெருந்தவ முனிவ ரேத்தும்
அரும்பொனை நினைந்த நெஞ்சம் அழகிதா நினைந்த வாறே. 3

செருத்தனை யருத்தி செய்து செஞ்சரம் செலுத்தி யூர்மேல்
கருத்தனைக் கனக மேனிக் கடவுளைக் கருதும் வானோர்க்
கொருத்தனை யொருத்தி பாகம் பொருத்தியும் அருத்தி தீரா
நிருத்தனை நினைந்த நெஞ்சம் நேர்பட நினைந்த வாறே. 4

கூற்றினை யுதைத்த பாதக் குழகனை மழலை வெள்ளே(று)
ஏற்றனை இமையோ ரேத்த இருஞ்சடைக் கற்றை தன்மேல்
ஆற்றனை அடிய ரேத்தும் அமுதனை அமுத யோக
நீற்றனை* நினைந்த நெஞ்சம் நேர்பட நினைந்த வாறே. 5

கருப்பனைத் தடக்கை வேழக் களிற்றினை யுரித்த கண்டன்
விருப்பனை விளங்கு சோதி வியன்கயி லாய மென்னும்
பொருப்பனைப் பொருப்பன் மங்கை பங்கனை அங்கை யேற்ற
நெருப்பனை நினைந்த நெஞ்சம் நேர்பட நினைந்த வாறே. 6

நீதியால் நினைப்பு ளானை நினைப்பவர் மனத்து ளானைச்
சாதியைச் சங்க வெண்ணீற் றண்ணலை விண்ணில் வானோர்
சோதியைத் துளக்க மில்லா விளக்கினை அளக்க லாகா
ஆதியை நினைந்த நெஞ்சம் அழகிதா நினைந்த வாறே. 7

பழகனை யுலகுக் கெல்லாம் பருப்பனைப் பொருப்போ டொக்கும்
மழகளி யானை யின்தோல் மலைமகள் நடுங்கப் போர்த்த
குழகனைக் குழவித் திங்கள் குளிர்சடை மருவ வைத்த
அழகனை நினைந்த நெஞ்சம் அழகிதா நினைந்த வாறே. 8

விண்ணிடை மின்னொப் பானை மெய்ப்பெரும் பொருளொப் பானைக்
கண்ணிடை மணியொப் பானைக் கடுவிருட் சுடரொப் பானை
எண்ணிடை** எண்ண லாகா இருவரை வெருவ நீண்ட
அண்ணலை நினைந்த நெஞ்சம் அழகிதா நினைந்த வாறே. 9

உரவனைத்† திரண்ட திண்தோள் அரக்கனை யூன்றி மூன்றூர்
நிரவனை‡ நிமிர்ந்த சோதி நீண்முடி யமரர் தங்கள்

---

* அமுதயோக நீற்றன் – வீட்டினைத்தரும் திருநீற்றை யணிந்தவன். ** எண்ணிடை – எண்ணத்தினுள். † உரவன் – அறிஞன்; வலியனுமாம். ‡ நிரவன் – அழிப்பவன்.

குரவனைக் குளிர்வெண் திங்கட் சடையிடைப் பொதியும் ஐவாய்
அரவனை நினைந்த நெஞ்சம் அழகிதா நினைந்த வாறே. 10

திருச்சிற்றம்பலம்

## தனித் திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

தொண்டனேன் பட்ட தென்னே தூயகா விரியின் நன்னீர்
கொண்டிருக் கோதி யாட்டிக் குங்குமக் குழம்பு சாத்தி
இண்டைகொண் டேற நோக்கி ஈசனை யெம்பி ரானைக்
கண்டனை*க் கண்டி ராதே காலத்தைக் கழித்த வாறே. 1

பின்னிலேன் முன்னி லேன்நான் பிறப்பறுத் தருள்செய் வானே
என்னிலேன் நாயி னேன்நான் இளங்கதிர்ப் பயலைத் திங்கள்
சின்னிலா எறிக்குஞ் சென்னிச் சிவபுரத் தமர ரேறே
நின்னலால் களைகண் ஆரே நீறுசே ரகலத் தானே. 2

கள்ளனேன் கள்ளத் தொண்டாய்க்காலத்தைக் கழித்துப்போக்கித்
தெள்ளியே னாகி நின்று தேடினேன் நாடிக் கண்டேன்
உள்குவா ருள்கிற் றெல்லாம் உடனிருந் தறிதி என்று
வெள்கினேன் வெள்கி நானும் விலாவிறச் சிரித்திட் டேனே. 3

உடம்பெனும் மனைய கத்துள் உள்ளமே தகளி யாக
மடம்படும் உணர்நெய் யட்டி உயிரெனுந் திரிம யக்கி
இடம்படு ஞானத் தீயால் எரிகொள இருந்து நோக்கில்
கடம்பமர் காளை தாதை கழலடி காண லாமே.** 4

வஞ்சப்பெண் ணரங்கு கோயில் வாளெயிற் றரவந் துஞ்சா
வஞ்சப்பெண் இருந்த சூழல் வான்தவழ் மதியந் தோயும்
வஞ்சப்பெண் வாழ்க்கை யாளன் வாழ்வினை வாழ லுற்று
வஞ்சப்பெண் ணுறக்க மானேன் வஞ்சனேன் என்செய் கேனே5

உள்குவார் உள்ளத் தானை உணர்வெனும் பெருமை யானை
உள்கினேன் நானுங் காண்பான் உருகினேன் ஊறி யூறி
எள்கினேன் எந்தை பெம்மான் இருதலை மின்னு கின்ற
கொள்ளிமேல் எறும்பெ†ன் உள்ளம் எங்ஙனங் கூடு மாறே. 6

---

* கண்டன் – பாசத்தைத் துண்டிப்பவன். ** இச்செய்யுள் தியானத்தின் தன்மையினைக் கூறுவது. † இருதலை...எறும்பு — ஒரு பழமொழி.

மோத்தையைக்**கண்டகாக்கை போலவல் வினைகள்மொய்த்துன்
வார்த்தையைப் பேச வொட்டா மயக்கநான் மயங்கு கின்றேன்
சீத்தை†யைச் சிதம்பு‡தன்னைச் செடிகொள்நோய் வடிவொன்றில்லா
ஊத்தையைக் கழிக்கும் வண்ணம் உணர்வுதா உலக மூர்த்தி. 7

அங்கத்தை மண்ணுக் காக்கி ஆர்வத்தை உனக்கே தந்து
பங்கத்தைப் போக மாற்றிப் பாவித்தேன் பரமா நின்னைச்
சங்கொத்த மேனிச் செல்வா சாதல்நாள் நாயேன் உன்னை
எங்குற்றாய் என்ற போதா இங்குற்றேன் என்கண் டாயே. 8

வெள்ளநீர்ச் சடைய னார்தாம் வினவுவார் போல வந்தென்
உள்ளமே புகுந்து நின்றார்க் குறங்குநான் புடைகள் போந்து
கள்ளரோ புகுந்தீர் என்னக் கலந்துதான் நோக்கி நக்கு
வெள்ளரோ மென்று நின்றார் விளங்கிளம் பிறைய னாரே. 9

பெருவிரல் இறைதா னூன்றப் பிறையெயி றிலங்க அங்காந்
தருவரை அனைய தோளான் அரக்கனன் றலறி வீழ்ந்தான்
இருவரும் ஒருவ னாய உருவமங் குடைய வள்ளல்
திருவடி சுமந்து கொண்டு காண்கநான் திரியு மாறே. 10

திருச்சிற்றம்பலம்

---

## தனித் திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

மருளவா மனத்த னாகி மயங்கினேன் மதியி லாதேன்
இருளவா அறுக்கும் எந்தை இணையடி நீழல் என்னும்
அருளவாப் பெறுத லின்றி அஞ்சிநான் அலமந் தேற்குப்
பொருளவாத் தந்த வாறே போதுபோய்ப் புலர்ந்த தன்றே. 1

மெய்ம்மையாம் உழவைச் செய்து விருப்பெனும் வித்தை வித்திப்
பொய்ம்மையாங்களையைவாங்கிப்பொறையெனும் நீரைப்பாய்ச்சித்
தம்மையும் நோக்கிக் கண்டு தகவெனும் வேலி இட்டுச்
செம்மையுள் நிற்ப ராகிற் சிவகதி விளையு மன்றே.* 2

எம்பிரான் என்ற தேகொண் டென்னுளே புகுந்து நின்றிங்(கு)
எம்பிரான் ஆட்ட ஆடி என்னுளே உழிதர் வேனை

---

** மோத்தை - ஆட்டுக்கடா. † சீத்தை – அழுகிய பண்டம். ‡ சிதம்பு-அழிவுடையது. * இச்செய்யுள் உழவு பற்றிய உருவகம்; இது, சிவகதியாகிய விளைவுக்கு உபாயம் கூறியதாகும்.

எம்பிரான் என்னைப் பின்னைத் தன்னுள்ளே கரக்கு மென்றால்
எம்பிரான் என்னின் அல்லால் என்செய்கேன் ஏழை யேனே. 3

காயமே கோயில் ஆகக் கடிமனம் அடிமை யாக
வாய்மையே தூய்மை ஆக மன**மணி இலிங்கம் ஆக
நேயமே நெய்யும் பாலா நிறையநீர் அமைய ஆட்டிப்
பூசனை ஈச னார்க்குப் போற்றவிக் காட்டி னோமே.† 4

வஞ்சகப் புலைய னேனை வழியறத் தொண்டிற் பூட்டி
அஞ்சலென் றாண்டு கொண்டாய் அதுவுநின் பெருமை அன்றே
நெஞ்சகங் கனிய மாட்டேன் நின்னையுள் வைக்க மாட்டேன்
நஞ்சிடங் கொண்ட கண்டா என்னென நன்மை தானே. 5

நாயினுங் கடைப்பட் டேனை நன்னெறி காட்டி ஆண்டாய்
ஆயிரம் அரவ மார்த்த அமுதனே அமுத மொத்து
நீயுமென் நெஞ்சி னுள்ளே நிலாவினாய் நிலாவி நிற்க
நோயவை சாரு மாகில் நோக்கிநீ அருள்செய் வாயே.‡ 6

விள்ளத்தா னொன்று மாட்டேன் விருப்பெனும் வேட்கை யாலே
வள்ளத்தேன் போல நுன்னை வாய்மடுத் துண்டி டாமே
உள்ளத்தே நிற்றி யேனும் உயிர்ப்புளே வருதி யேனும்
கள்ளத்தே நிற்றி அம்மா எங்ஙனங் காணு மாறே. 7

ஆசைவன் பாச மெய்தி அங்குற்றே னிங்குற் றேனாய்
ஊசலாட் டுண்டு வாளா உழந்துநா னுழித ராமே
தேசனே தேச மூர்த்தீ திருமறைக் காடு மேய
ஈசனே உன்றன் பாதம் ஏத்துமா றருளெம் மானே. 8

நிறைவிலேன் நேச மில்லேன் நினைவிலேன் வினையின் பாச
மறைவிலே புறப்பட் டேறும் வகையெனக் கருளெ னெம்மான்
சிறையிலேன் செய்வ தென்னே திருவடி பரவி ஏத்தக்
குறைவிலேன் குற்றந் தீராய் கொன்றைசேர் சடையி னானே. 9

நடு§விலாக் காலன் வந்து நணுகும்போ தறிய வொண்ணா
அடுவன அஞ்சு பூதம் அவைதமக் காற்ற லாகேன்

---

** மனம் - இங்கு ஆன்மா. † இச்செய்யுள் அகப்பூசை வழிப்பாட்டின் முறைமையைக் குறிப்பது. ‡ செயாயே என்றும் பாடம். § நடு-கண்ணோட்டம்.

படுவன பலவுங் குற்றம் பாங்கிலர் மனிதர் வாழ்க்கை
கெடுவதிப் பிறவி சீசீ கிளரொளிச் சடையி னீரே. 10

திருச்சிற்றம்பலம்

## தனித் திருநேரிசை*

திருச்சிற்றம்பலம்

கடும்பகல் நட்ட மாடிக் கையிலோர் கபால மேந்தி
இடும்பலிக் கில்லந் தோறு முழிதரும் இறைவ னீரே
நெடும்பொறை மலையர் பாவை நேரிழை நெறிமென் கூந்தற்
கொடுங்குழை புகுந்த அன்றுங் கோவண மரைய தேயோ. 1

கோவண முடுத்த வாறுங் கோளர வசைத்த வாறுந்
தீவணச் சாம்பர் பூசித் திருவுரு இருந்த வாறும்
பூவணக் கிழவ னாரைப் புலியுரி அரைய னாரை
ஏவணச் சிலையி னாரை யாவரே எழுது வாரே. 2

விளக்கினார் பெற்ற இன்பம் மெழுக்கினாற் பதிற்றி யாகும்
துளக்கில்நன் மலர்தொ டுத்தால் தூயவிண் ணேற லாகும்
விளக்கிட்டார் பேறு சொல்லின் மெய்ந்நெறி ஞான மாகும்
அளப்பில கீதஞ் சொன்னார்க் கடிகள்தாம் அருளு மாறே.§ 3

சந்திரற் சடையில் வைத்த சங்கரன் சாம வேதி
அந்தரத் தமரர் பெம்மான் ஆன்நல்வெள் ளூர்தி யான்றன்
மந்திரம் நமச்சி வாய ஆகநீ றணியப் பெற்றால்
வெந்தறும் வினையும் நோயும் வெவ்வழல் விறகிட் டன்றே. 4

புள்ளுவர்** ஐவர் கள்வர் புனத்திடைப் புகுந்து நின்று
துள்ளுவர் சூறை கொள்வர் தூநெறி விளைய வொட்டார்
முள்ளுடை யவர்கள் தம்மை முக்கணான் பாத நீழல்
உள்ளிடை மறைந்து நின்றங் குணர்வினா லெய்ய லாமே. 5

தொண்டனேன் பிறந்து வாளாத் தொல்வினைக் குழியில் வீழ்ந்து
பிண்டமே† சுமந்து நாளும் பெரியதோ ரவாவிற் பட்டேன்
அண்டனே அமரர் கோவே அறிவனே அஞ்ச லென்னைத்
தெண்டிரைக் கங்கை சூடுந் திகழ்தரு சடையி னானே. 6

* இப்பதிகத்தில் 8, 9-ம் செய்யுட்கள் சிதைந்து போயின.
§ இச்செய்யுள் சரியையின் பயனைக் கூறுகின்றது. ** புள்ளுவர்—வேடர். † பிண்டம்—உடல்.

பாறினாய் பாவி நெஞ்சே பன்றிபோல் அளற்றிற் பட்டுத்
தேறிநீ நினைதி யாயிற் சிவகதி திண்ண மாகும்
ஊறலே உவர்ப்பு நாறி உதிரமே யொழுகும் வாசல்
கூறையால் மூடக் கண்டு கோலமாக் கருதி னாயே. 7-9

உய்த்தகா லுதயத் தும்பர் உமையவள் நடுக்கந் தீர
வைத்தகா லரக்க னோதன் வான்முடி தனக்கு நேர்ந்தான்
மொய்த்தகான் முகிழ்வெண் திங்கண் மூர்த்தியெ னுச்சி தன்மேல்
வைத்தகால் வருந்து மென்று வாடிநான் ஒடுங்கி னேனே. 10

திருச்சிற்றம்பலம்

---

## குறைந்த திருநேரிசை*

திருச்சிற்றம்பலம்

வென்றிலேன் புலன்க ளைந்தும் வென்றவர் வளாகந்† தன்னுள்
சென்றிலே னாத லாலே செந்நெறி அதற்குஞ் சேயேன்
நின்றுளே துளும்பு கின்றேன் நீசனேன் ஈச னேயோ
இன்றுளேன் நாளை இல்லே னென்செய்வான் தோன்றினேனே. 1

கற்றிலேன் கலைகள் ஞானங் கற்றவர் தங்க ளோடும்
உற்றிலே னாத லாலே உணர்வுக்குஞ் சேய னானேன்
பெற்றிலேன் பெருந்த டங்கண் பேதைமார் தமக்கும் பொல்லேன்
எற்றுளேன் இறைவ னேநா னென்செய்வான் தோன்றினேனே 2

மாட்டினேன் மனத்தை முன்னே மறுமையை உணர மாட்டேன்
மூட்டிநான் முன்னை நாளே முதல்வனை வணங்க மாட்டேன்
பாட்டினாய் போல§ நின்று பற்றதாம் பாவந் தன்னை
ஈட்டினேன் களைய மாட்டே னென்செய்வான் தோன்றினேனே 3

கரைக்கடந் தோதம் ஏறுங் கடல்விட முண்ட கண்டன்
உரைகடந் தோது நீர்மை யுணர்ந்திலே னாத லாலே
அரைக்கிடந் தசையு நாகம் அசைப்பனே இன்ப வாழ்க்கைக்
கிரைக்கடைந் துருகு‡கின்றே னென்செய்வான் தோன்றி னேனே. 4

---

* இப்பதிகம் தன் குறையினை நினைந்து உருகிப் பணிந்து வேண்டுவதைக் குறிப்பது. † வளாகம்-இருக்கும் இடத்தின் அண்மையாகிய சுற்றுப்புறம். § பாட்டினாய் போல-பாடு-பெருமை. அஃதில்லாத நாய்போல. ‡ உருகுதல்-ஆழ்ந்து வருந்துதல். இரைக்கிடந்து என்றும் பாடம்.

செம்மைவெண் ணீறு பூசுஞ் சிவனவன் தேவ தேவன்
வெஃமைநோய் வினைகள் தீர்க்கும் விகிர்தனுக் கார்வ மெய்தி
அம்மைநின் றடிமை செய்யா வடிவிலா முடிவில் வாழ்க்கைக்(கு)
இம்மைநின் றுருகு கின்றே னென்செய்வான் தோன்றினேனே. 5

பேச்சொடு பேச்சுக் கெல்லாம் பிறர்தமைப் புறமே பேசக்
கூச்சிலே னாதலாலே கொடுமையை விடுமா றோரேன்
நாச்சொலி நாளும் மூர்த்தி நன்மையை உணர மாட்டேன்
ஏச்சுளே நின்று மெய்யே னென்செய்வான் தோன்றினேனே. 6

தேசனைத் தேச மாகுந் திருமாலோர் பங்கன் தன்னைப்
பூசனைப் புனிதன் தன்னைப் புணரும்புண் டரீகத் தானை
நேசனை நெருப்பன் தன்னை நிவஞ்சகத் தகன்ற செம்மை
ஈசனை யறிய மாட்டே னென்செய்வான் தோன்றினேனே. 7

விளைக்கின்ற வினையை நோக்கி வெண்மயிர் விரவி மேலும்
முளைக்கின்ற வினையைப் போக முயல்கிலே னியல வெள்ளம்
திளைக்கின்ற முடியி னான்றன் திருவடி பரவ மாட்டா(து)
இளைக்கின்றே னிருமி யூன்றி யென்செய்வான் தோன்றினேனே. 8

வினைவறி விலாமை யாலே வேதனைக் குழியி லாழ்ந்து
கனைகணு மில்லேன் எந்தாய் காமரங் கற்று மில்லேன்
தனையவிழ் கோதை நல்லார் தங்களோ டின்பம் எய்த
இளையனு மல்லேன் எந்தா† யென்செய்வான் தோன்றினேனே. 9

வெட்டன வுடைய னாகி வீரத்தால் மலையெ டுத்த
துட்டனைத் துட்டுத் தீர்த்துச் சுவைபடக் கீதங் கேட்ட
அட்டமா மூர்த்தி யாய ஆதியை ஓதி நாளும்
எட்டனை§ எட்ட மாட்டே னென்செய்வான் தோன்றினேனே. 10

திருச்சிற்றம்பலம்

## குறைந்த திருநேரிசை*

திருச்சிற்றம்பலம்

தம்மானங் காப்ப தாகித் தையலார் வலையு ளாழ்ந்து
அம்மானை அமுதன் தன்னை ஆதியை அந்த மாய

† கோதை......மல்லேன்-சுவாமிகள் வயது முதிர்ந்தவர் என்பது குறிப்பு. § எட்டனை-எள்ளளவும்; எட்டுக் குணங்களை யுடையவனு மாம். * இப்பதிகத்தில் 6, 7, 8, 9-ம் செய்யுட்கள் மறைந்து போயின.

செம்மான ஒளிகொள் மேனிச் சிந்தையு ளொன்றி நின்ற
எம்மானை நினைய மாட்டே னென்செய்வான் தோன்றி னேனே. 1

மக்களே மணந்த தாரம் அவ்வயிற் றவரை யோம்பும்
சிக்குளே யழுந்தி ஈசன் திறம்படேன் தவம தோரேன்
கொப்புளே** போலத் தோன்றி அதனுளே மறையக் கண்டும்
இக்கரே பரத்தை† யோம்ப என்செய்வான் தோன்றி னேனே. 2

கூழையே னாகி§ மாட்டேன் கொடுவினைக் குழியில் வீழ்ந்து
ஏழினின் னிசையி னாலும் இறைவனை யேத்த மாட்டேன்
மாழையொண் கண்ணின் நல்ல மடந்தைமார் தமக்கும் பொல்லேன்
ஏழையே னாகி நாளு மென்செய்வான் தோன்றி னேனே. 3

முன்னையென் வினையி னாலே மூர்த்தியை நினைய மாட்டேன்
பின்னைநான் பித்த னாகிப் பிதற்றுவன் பேதை யேன்நான்
என்னுளே மன்னி நின்ற சீர்மைய தாயி னானை
என்னுளே நினைய மாட்டே னென்செய்வான் தோன்றி னேனே. 4

கறையணி கண்டன் தன்னைக் காமரங் கற்று மில்லேன்
பிறைநுதற் பேதை மாதர் பெய்வளை யார்க்கு மல்லேன்‡
மறைநவில் நாவி னானை மன்னிநின் றிறைஞ்சி நாளும்
இறையுமே யேத்தமாட்டே னென்செய்வான் தோன்றினேனே. 5

வளைத்துநின் றைவர் கள்வர் வந்தெனை நடுக்கஞ் செய்யத்
தளைத்துவைத் துலையை யேற்றித் தழலெரி மடுத்த நீரில்
திளைத்துநின் றாடு கின்ற ஆமைபோல் தெளிவி லாதேன்
இளைத்துநின் றாடு கின்றே னென்செய்வான் தோன்றி னேனே. 6-10

திருச்சிற்றம்பலம்

---

## ஆருயிர்த் திருவிருத்தம் [4-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

எட்டாந் திசைக்கும் இருதிசை||க் கும்இறை வாமுறைஎன்(று)
இட்டார் அமரர்வெம் பூசல் எனக்கேட் டெரிவிழியா
ஒட்டாக் கயவர் திரிபுர மூன்றையும் ஓரம்பினால்
அட்டான் அடிநிழற் கீழதன் றோஎன் றன் ஆருயிரே. 1

---

** கொப்புள்-நீர்க்குமிழி. † களேபரம்-உடம்பு. § கூழையேன்-தொண்டர்பின் செல்பவன். ‡ யார்க்கும் பொல்லேன் என்றும் பாடம். || இருதிசை-மேல், கீழ்.

பேழ்வாய் அரவின் அரைக்கமர்ந் தேறிப் பிறங்கிலங்கு
தேய்வாய் இளம்பிறை செஞ்சடை மேல்வைத்த தேவர்பிரான்
மூவான் இளகான்** முழுவுல கோடுமண் விண்ணுமற்றும்
ஆவான் அடிநிழற் கீழதன் றேஎன்றன் ஆருயிரே. 2

தரியா வெகுளிய னாய்த்தக்கன் வேள்வி தகர்த்துகந்த
எரியார் இலங்கிய சூலத்தி னான்இமை யாதமுக்கட்
பெரியான் பெரியார் பிறப்பறுப் பானென்றுந் தன்பிறப்பை
அரியான்† அடிநிழற் கீழதன் றேஎன்றன் ஆருயிரே. 3

வடிவுடை வாள்நெடுங் கண்ணுமை யாளையொர் பால்மகிழ்ந்து
வெடிகொள் அரவொடு வேங்கை அதள்கொண்டு மேல்மருவிப்
பொடிகொ ளகலத்துப் பொன்பிதிர்ந் தன்னபைங் கொன்றையந்தார்
அடிகள் அடிநிழற் கீழதன் றேஎன்றன் ஆருயிரே. 4

பொறுத்தான் அமரர்க் கமுதருளி நஞ்சம் உண்டுகண்டம்
கறுத்தான் கறுப்பழ காவுடை யான் கங்கை செஞ்சடைமேல்
செறுத்தான் தனஞ்சயன் சேணா கலங் கணைஒன்றினால்
அறுத்தான் அடிநிழற் கீழதன் றேஎன்றன் ஆருயிரே. 5

காய்ந்தான் செறற்கரி யானென்று காலனைக் காலொன்றினால்
பாய்ந்தான் பணைமதில் மூன்றுங் கணைஎன்னும் ஒள்ளழலால்
மேய்ந்தான் வியனுல கேழும் விளங்க விழுமியநூல்
ஆய்ந்தான் அடிநிழற் கீழதன் றேஎன்றன் ஆருயிரே. 6

உளைந்தான் செறுதற் கரியான்‡ தலையை உகிரொன்றினால்
களைந்தான் அதனை நிறைய நெடுமால் கணார்குருதி
வளைந்தான் ஒருவிர லின்னொடு வீழ்வித்துச் சாம்பர்வெண்ணீ(று)
அளைந்தான் அடிநிழற் கீழதன் றேஎன்றன் ஆருயிரே. 7

முந்திவட் டத்§திடைப் பட்டதெல் லாம்முடி வேந்தர்தங்கள்
பந்திவட் டத்திடைப் பட்டலைப் புண்பதற் கஞ்சிக்கொல்லோ
நந்திவட் டந்நறு மாமலர்க் கொன்றையு நக்கசென்னி
அந்திவட் டத்தொளி‖ யானடிச் சேர்ந்ததென் ஆருயிரே. 8

---

** மூவான் - மூப்பதுமில்லை; இளகான் - இளமையாவதுமில்லை. † பிறப்பை அறியான்-பிறப்பு இல்லாதவன்; அருமை ஈண்டு இன்மை மேனின்றது. ‡ செறுத்தற்கரியான் என்றும் பாடம். செறுதற்கரியான்-பிரமன். § முந்திவட்டம்-முன்னைச்சூழல். ‖ அந்திவட்டத்து ஒளி-செவ்வான ஒளி.

மிகத்தான் பெரியதோர் வேங்கை அதள்கொண்டு மெய்ம்மருவி
அகத்தான் வெருவநல் லாளை நடுக்குறுப் பான்வரும்பொன்
முகத்தாற் குளிர்ந்திருந் துள்ளத்தி னுலுகப் பான்இசைந்த
அகத்தான் அடிநிழற் கீழதன் றேஎன் றன் ஆருயிரே. 9

பைம்மா ணரவல்குற் பங்கயச் சீறடி யாள்வெருவக்
கைம்மா வரிசிலை†க் காமனை அட்ட கடவுள் முக்கண்
எம்மான் இவனென் றிருவரும் ஏத்த எரிநிமிர்ந்த
அம்மான் அடிநிழற் கீழதன் றேஎன் றன் ஆருயிரே. 10

பழகவோ ரூர்தியரன் பைங்கட் பாரிடம் பாணிசெய்யக்
குழலும் முழவொடு மாநட மாடி உயரிலங்கைக்
கிழவன் இருபது தோளும் ஒருவிர லால்இறுத்த
அழகன் அடிநிழற் கீழதன் றேஎன் றன் ஆருயிரே. 11

திருச்சிற்றம்பலம்

---

## பசுபதித் திருவிருத்தம்*

திருச்சிற்றம்பலம்

சாம்பலைப் பூசித் தரையிற் புரண்டுநின் தாள்பரவி
ஏம்பலிப் பார்**கட் கிரங்குகண் டாயிருங் கங்கையென்னும்
காம்பலைக் கும்பணைத் தோளி கதிர்ப்பூண் வனமுலைமேல்
பாம்பலைக் குஞ்சடை யாயெம்மை யாளும் பசுபதியே. 1

உடம்பைத் தொலைவித் துன்பாதந் தலைவைத்த உத்தமர்கள்
இடும்பைப் படாமல் இரங்குகண் டாயிரு ளோடச்செந்தீ
அடும்பொத் தனைய அழன்மழு வாஅழ லேயுமிழும்
படம்பொத் தரவரை யாயெம்மை யாளும் பசுபதியே. 2

தாரித் தி‡ரந்த விராவடி யார்தடு மாற்றமென்னும்
மூரித் திரைப்பெளவ நீக்குகண் டாய்முன்னை நாளொருகால்

---

† மாவடுசிலை என்றும் பாடம்; இதற்கு வண்டாகிய நாண் பூட்டிய வில் என்பது பொருள். * இப்பதிகத்தில் 8, 9-ம் செய்யுட்கள் சிதைந்து போயின. இப்பதிகம் அடியார்களின் பொருட்டு அறைகூவிச் செய்துகொண்ட விண்ணப்பம் ஆகும். பசுபதி-ஆன்மாக்களுக்குத் தலைவன்; இறைவன். **ஏம்பலிப்பார்-அவாவுவார். ‡ தாரித்து-மேற்பூண்டு.

வேரித்தண் பூஞ்சுடர் ஐங்கணை வேள்வெந்து வீழச்செந்தீப்
பாரித்த கண்ணுடை யாயெம்மை யாளும் பசுபதியே. 3

ஒருவரைத் தஞ்சமென் றெண்ணா துன்பாத மிறைஞ்சுகின்றார்
அருவினைச் சுற்றம் அகல்விகண் டாய்அண்ட மேயணவும்
பெருவரைக் குன்றம் பிளிறப் பிளந்துவேய்த் தோளியஞ்சப்
பருவரைத் தோலுரித் தாயெம்மை யாளும் பசுபதியே. 4

இடுக்கொன் றுமின்றி யெஞ்சாமை உன்பாத மிறைஞ்சுகின்றார்க்
கடர்க்கின்ற நோயை விலக்குகண் டாயண்ட மெண்டிசையும்
சுடர்த்திங்கள் சூடிச் சுழல்கங்கை யோடுஞ் சுரும்புதுன்றிப்
படர்க்கொண்ட செஞ்சடை யாயெம்மை யாளும் பசுபதியே. 5

அடலைக் கடல்கழி வான்நின் னடியிணை யேயடைந்தார்
நடலைப் படாமை விலக்குகண் டாய்நறுங் கொன்றைதிங்கள்
சுடலைப் பொடிச்சுண்ண மாசுணஞ் சூளா மணிகிடந்து
படரச் சுடர்மகு டாஎம்மை யாளும் பசுபதியே. 6

துறவித் தொழிலே புரிந்துன் சுரும்படி யேதொழுவார்
மறவித் தொழிலது மாற்றுகண் டாய்மதில் மூன்றுடைய
அறவைத் தொழில்*புரிந் தந்தரத் தேசெல்லும் மந்திரத்தேர்ப்
பறவைப் புரமெரித் தாயெம்மை யாளும் பசுபதியே. 7-9

சித்தத் துருகிச் சிவனெம் பிரானென்று சிந்தையுள்ளே
பித்துப் பெருகப் பிதற்றுகின் றார்பிணி தீர்த்தருளாய்
மத்தத் தரக்கன் இருபது தோளும் முடியுமெல்லாம்
பத்துற் றுறநெரித் தாயெம்மை யாளும் பசுபதியே. 10

திருச்சிற்றம்பலம்

---

### சரக்கறைத் திருவிருத்தம் **

திருச்சிற்றம்பலம்

விடையும்† விடைப்பெரும் பாகாஎன் விண்ணப்பம் வெம்மழுவாள்‡
படையும் படையாய் நிரைத்தபல் பூதமும் பாய்புலித்தோல்
உடையும் முடைதலை மாலையும் மாலைப் பிறையொதுங்கும்
சடையு மிருக்குஞ் சரக்கறை யோஎன் தனிநெஞ்சமே. 1

---

* அறவைத் தொழில்-தீத்தொழில்; அழிவு. ** இப்பதிகம் தம் பொருட்டு அறைகூவி விண்ணப்பித்தது. † விடையும் – கோபமுடைய. ‡ வெண்மழுவாள் என்றும் பாடம்.

விஞ்சத் தடவரை வெற்பாஎன் விண்ணப்பம் மேலிலங்கு
சங்கக் கலனுஞ் சரிகோ வணமுந் தமருகமும்
அந்திப் பிறையும் அனல்வா யரவும் விரவியெல்லாம்
சந்தித் திருக்குஞ் சரக்கறை யோஎன் தனிநெஞ்சமே. 2

வீந்தார் தலைகல னேந்தீஎன் விண்ணப்பம் மேலிலங்கு
சாந்தாய வெந்த தவளவெண் நீறுந் தருணிச்சமும்*
பூந்தா மரைமேனிப் புள்ளி யுழைமா னதள்புலித்தோல்
தாந்தா மிருக்குஞ் சரக்கறை யோஎன் தனிநெஞ்சமே. 3

வெஞ்சமர் வேழத் துரியாய்என் விண்ணப்பம் மேலிலங்கு
வஞ்சமா வந்த வருபுனற் கங்கையும் வான்மதியும்
நஞ்சமா நாகம் நகுசிர மாலை நகுவெண்டலை
தஞ்சமா வாழுஞ் சரக்கறை யோஎன் தனிநெஞ்சமே. 4

வேலைக் கடல்நஞ்ச முண்டாய்என் விண்ணப்பம் மேலிலங்கு
காலற் கடந்தா னிடங்கயி லாயமுங் காமர்கொன்றை
மாலைப் பிறையும் மணிவா யரவும் விரவியெல்லாம்
சாலக் கிடக்குஞ் சரக்கறை யோஎன் தனிநெஞ்சமே. 5

வீழிட்ட கொன்றையந் தாராய்என் விண்ணப்பம் மேலிலங்கு
சூழிட் டிருக்குநற் சூளா மணியுஞ் சுடலைநீறும்
ஏழிட் டிருக்குநல் லக்கு மரவும்என் பாமையோடும்
தாழிட் டிருக்குஞ் சரக்கறை யோஎன் தனிநெஞ்சமே. 6

விண்டார் புரமூன்று மெய்தாய்என் விண்ணப்பம் மேலிலங்கு
தொண்டா டியதொண் டடி**ப்பொடி நீறுந் தொழுதுபாதம்
கண்டார்கள் கண்டிருக் குங்கயி லாயமுங் காமர்கொன்றைத்
தண்தார் இருக்குஞ் சரக்கறை யோஎன் தனிநெஞ்சமே. 7

விடுபட்டி ஏறுகந் தேறீஎன் விண்ணப்பம் மேலிலங்கு
கொடுகொட்டி கொக்கரை தக்கை குழல்தாளம் வீணைமொந்தை
வடுவிட்ட கொன்றையும் வன்னியும் மத்தமும் வாளரவும்
தடுகுட்ட மாடுஞ் சரக்கறை யோஎன் தனிநெஞ்சமே. 8

வெண்டிரைக் கங்கை விகிர்தாஎன் விண்ணப்பம் மேலிலங்கு
கண்டிகை பூண்டு கடிசூத் திரமேற் கபாலவடம்

* தருணிச்சம் – இயங்களின் ஒருவகை. ** தொண்டரடி என்றும் பாடம்.

குண்டிகை கொக்கரை கோணற் பிறை* குறட் பூதப்படை
தண்டிவைத் திட்ட சரக்கறை யோளென் தனிநெஞ்சமே. 9

வேதித்த வெம்மழு† வாளீஎன் விண்ணப்பம் மேலிலங்கு
சோதித் திருக்குநற் சூளா மணியுஞ் சுடலைநீறும்
பாதிப் பிறையும் படுதலைத் துண்டமும் பாய்புலித்தோல
சாதித் திருக்குஞ் சரக்கறை யோளென் தனிநெஞ்சமே. 10

விவந்தா டியகழல் எந்தாயென் விண்ணப்பம் மேலிலங்கு
தவந்தா னெடுக்கத் தலைபத் திறுத்தனை தாழ்புலித்தோல்
சிவந்தா டியபொடி நீறுஞ் சிரமாலை சூடிநின்று
தவந்தா னிருக்குஞ் சரக்கறை யோளென் தனிநெஞ்சமே. 11

திருச்சிற்றம்பலம்

---

## தனித் திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

வெள்ளிக் குழைத்துணி போலுங் கபாலத்தன் வீழ்ந்திலங்கு
வெள்ளிப் புரியன்ன வெண்புரி நூலன் விரிசடைமேல்
வெள்ளித் தகடன்ன வெண்பிறை சூடிவெள் ளென்பணிந்து
வெள்ளிப் பொடிப்பவ ளப்புறம் பூசிய வேதியனே. 1

உடலைத் துறந்துல கேழுங் கடந்துல வாததுன்பக்
கடலைக் கடந்துய்யப் போயிட லாகுங் கனகவண்ணப்
படலைச் சடைப்பர வைத்திரைக் கங்கைப் பனிப்பிறைவெண்
சுடலைப் பொடிக்கட வுட்கடி மைக்கண் துணிநெஞ்சமே. 2

முன்னே யுரைத்தால் முகமனே யொக்குமிவ் மூவுலகுக்(கு)
அன்னையு மத்தனு மாவா யழல்வண நீயலையோ
உன்னை நினைந்தே கழியுமென் னாவி கழிந்ததற்பின்
என்னை மறக்கப் பெறுயெம் பிரானுன்னை வேண்டியதே. 3

நின்னையெப் போது நினையவொட் டாய்நீ நினையப்புகில்
பின்னையப் போதே மறப்பித்துப் பேர்த்தொன்று நாடுவித்தி
உன்னையெப் போதும் மறந்திட் டுனக்கினி தாஇருக்கும்
என்னையொப் பாருள ரோசொல்லு வாழி இறையவனே. 4

---

* கொக்கரை கொன்றைபிறை என்றும் பாடம். † வெண்மழு என்றும் பாடம்.

முழுத்தழல் மேனித் தவளப் பொடியன் கனகக்குன்றத்
தெழிற்பெருஞ் சோதியை யெங்கள் பிரானை இகழ்திர்கண்டீர்
தொழப்படுந் தேவர் தொழப்படு வானைத் தொழுதபின்னைத்
தொழப்படுந்தேவர்தம்மால்தொழுவிக்குந்தன்தொண்டரையே. 5

விண்ணகத் தான்மிக்க வேதத் துளான்விரி நீருடுத்த
மண்ணகத் தான்திரு மாலகத் தான்மரு வற்கினிய
பண்ணகத் தான்பத்தர் சித்தத்து ளான்பழ நாயடியேன்
கண்ணகத் தான்மனத் தான்சென்னியானெங்கறைக்கண்டனே. 6

பெருங்கடல் மூடிப் பிரளயங் கொண்டு பிரமனும்போய்
இருங்கடல் மூடி இறக்கும் இறந்தான் களேபரமும்
கருங்கடல் வண்ணன் களேபரமுங் கொண்டு கங்காளராய்
வருங்கடல் மீளநின் றெம்மிறை நல்வீணை வாசிக்குமே. 7

வானந் துளங்கிலென் மண்கம்ப மாகிலென் மால்வரையும்
தானந் துளங்கித் தலைதடு மாறிலென் தண்கடலும்
மீனம் படிலென் விரிசுடர் வீழிலென் வேலைநஞ்சுண்(டு)
ஊனமொன் றில்லா ஒருவனுக் காட்பட்ட உத்தமர்க்கே. 8

சிவனெனும் நாமந் தனக்கே யுடையசெம் மேனிஎம்மான்
அவனெனை யாட்கொண் டளித்திடு மாகி லவன்தனையான்
பவனெ†னு நாமம் பிடித்துத் திரிந்துபன் னாளழைத்தால்
இவனெனைப் பன்னாள் அழைப்பொழி யானென் றெதிர்ப்படுமே. 9

என்னையொப் பாருன்னை எங்ஙனங் காண்பார் இகலியுன்னை
நின்னையொப் பார்நின்னைக் காணும் படித்தன்று நின்பெருமை
பொன்னையொப் பாரித் தழலை வளாவிச்செம் மானஞ்செற்று
மின்னையொப் பார மிளிருஞ் சடைக்கற்றை வேதியனே. 10

திருச்சிற்றம்பலம்

---

## தனித் திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

பவளத் தடவரை போலுந்திண் தோள்களத் தோள்மிசையே
பவளக் குழைதழைத் தாலொக்கும் பல்சடை அச்சடைமேல்
பவளக் கொழுந்தன்ன பைம்முக நாகமந் நாகத்தொடும்
பவளக்கண் வால மதிஎந்தை சூடும் பனிமலரே. 1

---

† பவன்-உயர்ந்த நாமம்.

முருகார் நறுமலர் இண்டை தழுவிவண் டேமுரலும்
பெருகா றடைசடைக் கற்றையி னுய்பிணி மேய்ந்திருந்த
இருகாற் குரம்பை யிதுநா னுடைய திதுபிரிந்தால்
தருவாய் எனக்குன் திருவடிக் கீழொர் தலைமறைவே. 2

மூவா உருவத்து முக்கண் முதல்வமிக் கூரிடும்பை
காவா யெனக்கடை தூங்கு மணியைக் கையாலமரர்
நாவா யசைத்த வொலியொலி மாறிய தில்லையப்பால்
தீயாய் எரிந்து பொடியாய் கழிந்த திரிபுரமே. 3

பந்தித்த பாவங்கள் அம்மையிற்**செய்தன இம்மைவந்து
சந்தித்த பின்னைச் சமழ்ப்பதென்‡ னேவந் தமரர்முன்னாள்
முந்திச் செழுமல ரிட்டு முடிதாழ்த் தடிவணங்கும்
நந்திக்கு முந்துற ஆட்செய்கி லாவிட்ட நன்னெஞ்சமே. 4

அந்திவட் டத்திளங் கண்ணியன் ஆறமர் செஞ்சடையான்
புந்திவட் டத்திடைப் புக்குநின் றானையும் பொய்யென்பனே
சந்திவட் டச்சடைக் கற்றை யலம்பச் சிறிதலர்ந்த
நந்திவட் டத்தொடு கொன்றை வளாவிய நம்பனையே. 5

உன்மத் தகமலர் சூடி உலகர் தொழச்சுடலைப்
பன்மத் தகங்கொண்டு பல்கடை தோறும் பலிதிரிவான்
என்மத் தகத்தே இரவும் பகலும் பிரிவரியான்
தன்மத் தகத்தொர் இளம்பிறை சூடிய சங்கரனே. 6

அரைப்பா லுடுப்பன கோவணச் சின்னங்கள் ஐயமுணல்
வரைப்பா வையைக்கொண்ட தெக்குடி வாழ்க்கைக்கு வானிரைக்
இரைப்பா படுதலை யேந்துகை யாமறை தேடும்எந்தாய் [கும்
உரைப்பார் உரைப்பன வேசெய்தி யால்எங்கள் உத்தமனே. 7

துறக்கப் படாத உடலைத் துறந்துவெந் தூதுவரோ(டு)
இறப்பன் இறந்தால் இருவிசும் பேறுவன் ஏறிவந்து
பிறப்பன் பிறந்தாற் பிறையணி வார்சடைப் பிஞ்ஞகன்பேர்
மறப்பன் கொலோஎன் றென்னுள்ளங் கிடந்து மறுகிடுமே. 8

வேரி வளாய விரைமலர்க் கொன்றை புனைந்தனகன்
சேரி வளாயஎன் சிந்தை புகுந்தான் திருமுடிமேல்

---

** பாவங்களுள் உம்மையிற் என்றும் பாடம். ‡ சமழ்ப்பது — வருந்துதல்.

வாரி வளாய வருபுனற் கங்கை சடைமறிவாய்
எரி வளாவிக் கிடந்தது போலும் இளம்பிறையே. 9

கன்னெடுங் காலம் வெதும்பிக் கருங்கடல் நீர்சுருங்கிப்
பன்னெடுங் காலம் மழைதான் மறுக்கினும் பஞ்சமுண்டென்(று)
என்னெடுஞ் சூளறும் அஞ்சல்நெஞ் சேஇமை யாதமுக்கண்
பொன்னெடுங் குன்றமொன் றுண்டுகண் டீர்இப் புகலிடத்தே. 10

மேலு மறிந்திலன் நான்முகன் மேற்சென்று கீழிடந்து
மாலு மறிந்திலன் மாலுற்ற தேவழி பாடுசெய்யும்
பாலன் மிசைச்சென்று பாசம் விசிறி மறிந்தசிந்தைக்
காலன் அறிந்தான் அறிதற் கரியான் கழலடியே. 11

திருச்சிற்றம்பலம்

---

**தனித் திருக்குறுந்தொகை [5-ம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

ஒன்று வெண்பிறைக் கண்ணியோர் கோவணம்
ஒன்று கீளுமை யோடும் உடுத்தது*
ஒன்று வெண்டலை ஏந்திஎம் உள்ளத்தே
ஒன்றி நின்றங் குறையும் ஒருவனே. 1

இரண்டு மாமவர்க் குள்ளன செய்தொழில்†
இரண்டு மாமவர்க் குள்ளன கோலங்கள்
இரண்டு மில்லிள மானெமை யாளுகந்(து)
இரண்டு போதுமென் சிந்தையுள் வைகுமே. 2

மூன்று மூர்த்தியுள் நின்றிய லுந்தொழில்
மூன்று மாயின மூவிலைச் சூலத்தன்
மூன்று கண்ணினன் தீத்தொழில்§ மூன்றினன்
மூன்று போதுமென் சிந்தையுள் மூழ்குமே. 3

நாலின் மேன்முகஞ் செற்றது மன்னிழல்
நாலு நன்குணர்ந் திட்டதும் இன்பமாம்
நாலு வேதஞ் சரித்தது நன்னெறி
நாலு போலெம் அகத்துறை நாதனே 4

---

* முகந்து என்றும் பாடம். † இரண்டு தொழில் - ஊன நடனம், ஞான நடனம்; அல்லது அழித்தல், அருளுதல். § தீத் தொழில்-வேள்வி; தீத்தொழில் மூன்று-ஆகவனீயம், காருகபத்தியம் தட்சிணாக்கினியம் என்ற முத்தீ.

அஞ்சு மஞ்சுமோ ராடி* யரைமிசை
அஞ்சு போலரை யார்த்ததின் தத்துவம்
அஞ்சு மஞ்சுமோ ரோரஞ்சு மாயவன்
அஞ்சு மாமெம் அகத்துறை ஆதியே. 5

ஆறு கால்வண்டு மூசிய கொன்றையன்
ஆறு சூடிய அண்ட முதல்வனார்
ஆறு கூர்மையர்க் கச்சம யப்பொருள்
ஆறு போலெம் அகத்துறை ஆதியே. 6

ஏழு மாமலை ஏழ்பொழில் சூழ்கடல்
ஏழு போற்றுமி ராவணன் கைந்நரம்(பு)
ஏழு கேட்டருள் செய்தவன் பொற்கழல்
ஏழுஞ் சூழ்†டி யேன்மனத் துள்ளவே. 7

எட்டு மூர்த்தியாய் நின்றிய லுந்தொழில்
எட்டு வான்குணத்§ தீசனெம் மான்றனை
எட்டு மூர்த்தியும் எம்மிறை யெம்முளே
எட்டு மூர்த்தியும் எம்மு ளொடுங்குமே. 8

ஒன்ப தொன்பதி யானை‡ யொளிகளி(று)
ஒன்ப தொன்பது பல்கணஞ் சூழவே
ஒன்ப தாமவை தீத்தொழி லின்னுரை
ஒன்ப தொத்துநின் றென்னு ளொடுங்குமே. 9

பத்து நூறவன் வெங்கண்வெள் ளேற்றண்ணல்
பத்து நூறவன் பல்சடை தோள்மிசை
பத்தி யாமில மாதலின் ஞானத்தால்
பத்தி யானி||டங் கொண்டது பள்ளியே.¶ 10

திருச்சிற்றம்பலம்

---

* ஓர் அஞ்சும் ஆடி-ஆனைந்தும் மஞ்சன மாடி. ஓர் அஞ்சும் ஆடி - ஒப்பற்ற ஐந்தொழிலும் இயற்றி. † ஏழும் சூழ் - ஏழ்பிறப்பிலும். § எட்டுவான்குணம் - தன் வயத்தனாதல் முதலிய இறைமைக் குணங்கள் எட்டு. ‡ ஒன்பதொன்பதியான் - 81 பதங்களில் பேசப்படுபவன். || பத்தியான்-பத்துக் குணங்களையுடைய அடியவர். ¶ பள்ளி-தங்குமிடம்.

## தனித் திருக்குறுந்தொகை*

திருச்சிற்றம்பலம்

**மா**சில் வீணையும் மாலை மதியமும்†
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும்‡ போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே. 1

**ந**மச்சி வாயவே ஞானமுங் கல்வியும்
நமச்சி வாயவே நானறி விச்சையும்
நமச்சி வாயவே நாநவின் றேத்துமே
நமச்சி வாயவே நன்னெறி காட்டுமே. 2

**ஆ**ளா காரா ளானா ரைஅடைந் துய்யார்
மீளா ஆட்செய்து மெய்ம்மையுள் நிற்கிலார்
தோளா தசுரை யோதொழும் பர்செவி
வாளா மாய்ந்துமண் ணாகிக் கழிவரே. 3

**ந**டலை வாழ்வுகொண் டென்செய்தீர் நாணிலீர்
சுடலை சேர்வது சொற்பிர மாணமே
கடலின் நஞ்சமு துண்டவர் கைவிட்டால்
உடலி னார்கிடந் தூர்முனி பண்டமே. 4

**பூ**க்கைக் கொண்டரன் பொன்னடி போற்றிலார்
நாக்கைக் கொண்டரன் நாமம் நவில்கிலார்
ஆக்கைக் கேஇரை தேடி அலமந்து
காக்கைக் கேஇரை ஆகிக் கழிவரே. 5

**கு**றிக ளும்§அடை யாளமுங் கோயிலும்
நெறிக ளும்அவர் நின்றதோர் நேர்மையும்
அறிய ஆயிரம் ஆரணம் ஓதிலும்
பொறியி லீர்மன மென்கொல் புகாததே. 6

**வா**ழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியுந் தந்த தலைவனைச்

---

* இப்பதிகம் சமணர்கள் சுவாமிகளை நீற்றறையில் தள்ளி அடைத்தபோது ஓதியருளியது ஆகும். † மாலைமதி – முழுமதி. ‡ வண்டறைப் பொய்கையும் என்றும் பாடம். § குறிகள் - சிவன் வெளிப்பட்டருளும் குறியிடங்கள்; குருலிங்க சங்கமம்,

சூழ்த்த மாமலர் தூவித்த துதியாதே
வீழ்த்த வாவினை யேன்நெடுங் காலமே. 7

எழுது பாவைநல் லார்திறம் விட்டுநான்
தொழுது போற்றிநின் றேனையுஞ் சூழ்ந்துகொண்(டு)
உழுத சால்வழி யேஉழு வான்பொருட்(டு)
இழுதை நெஞ்சமி தென்படு கின்றதே. 8

நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும்பொன் னார்சடைப் புண்ணியன்
பொக்க மிக்கவர் பூவுநீ ருங்கண்டு
நக்கு நிற்பர்* அவர்தம்மை நாணியே. 9

விறகில் தீயினன் பாலிற் படுநெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோல்நட் டுணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே.** 10

திருச்சிற்றம்பலம்

## தனித் திருக்குறுந்தொகை †

திருச்சிற்றம்பலம்

ஏயி லானை‡ யெனிச்சை யகம்படிக்
கோயி லானைக்§ குணப்பெருங் குன்றினை
வாயி லானை மனோன்மணி யைப்பெற்ற
தாயி லானைத் தழுவுமென் ஆவியே. 1

முன்னை ஞான முதல்தனி வித்தினைப்
பின்னை ஞானப் பிறங்கு சடையனை
என்னை ஞானத் திருளறுத் தாண்டவன்
தன்னை ஞானத் தளையிட்டு வைப்பனே. 2

ஞானத் தால்தொழு வார்சில ஞானிகள்
ஞானத் தால்தொழு வேனுனை நானலேன்

---

* நக்கு நிற்பர் – மறைந்து நிற்பர். ** முன் நிற்கும் – வெளிப்பட்டு நிற்கும். † இப்பதிகத்தில் 9-ம் செய்யுள் மறைந்துபோயிற்று. ‡ ஏயிலானை - தமக்குமேல் தலைவன் இல்லாதவனை. § அகம்படிக் கோயில் – உள்ளக் கோயில்.

ஞானத் தால்தொழு வார்கள் தொழக்கண்டு
ஞானத் தாய்உனை நானுந் தொழுவனே.* 3

புழுவுக் குங்குணம் நான்கெனக் கும்மதே
புழுவுக் கிங்கெனக் குள்ளபொல் லாங்கில்லை
புழுவி னுங்கடை யேன்புனி தன்தமர்
குழு**வுக் கெவ்விடத் தேன்சென்று கூடவே. 4

மலையே வந்து விழினும் மனிதர்காள்
நிலையில் நின்று கலங்கப் பெறுதிரேல்
தலைவ னாகிய ஈசன் தமர்களைக்
கொலைசெய் யானைதான் கொன்றிடு கிற்குமே.† 5

கற்றுக் கொள்வன வாயுள நாவுள
இட்டுக் கொள்வன பூவுள நீருள
கற்றைச் செஞ்சடை யானுளன் நாமுளோம்
எற்றுக் கோநம னால்முனி வுண்பதே.‡ 6

மனிதர் காளிங்கே வம்மொன்று சொல்லுகேன்
கனிதந் தாற்கனி யுண்ணவும் வல்லிரே
புனிதன் பொற்கழல் ஈசனெ னுங்கனி
இனிது சாலவும் ஏசற் றவர்கட்கே.§ 7

என்னை ஏதும் அறிந்திலன் எம்பிரான்
தன்னை நானுமுன் ஏதும் அறிந்திலேன்
என்னைத் தன்னடி யானென் றறிதலும்
தன்னை நானும் பிரானென் றறிந்தெனே. 8-9

தெள்ளத் தேறித் தெளிந்துதித் திப்பதோர்
உள்ளத் தேறல் அமுத ஒளிவெளி
கள்ளத் தேன்கடி யேன்கவ லைக்கடல்
வெள்ளத் தேனுக்கெவ் வாறு விளைந்ததே. 10

திருச்சிற்றம்பலம்

---

* ஞானத்தாலுனை என்றும் பாடம். ** தமர்குழு – அடியார் கூட்டம். † கொன்றிடு கிற்குமே – கொல்லவல்லதா? அன்று. ஏகாரம் எதிர்மறை. ‡ சிவனைப் பூசித்து வாழ்த்தினால் நமன் பயமில்லை என்பது இச்செய்யுளின் கருத்து. § இஃது உலகத்தவரை நோக்கி எளிதாகக் கூறும் நல்லுபதேசம்.

## காலபாசத் திருக்குறுந்தொகை*

திருச்சிற்றம்பலம்

கண்டு கொள்ளரி யானைக் கனிவித்துப்†
பண்டு நான்செய்த பாழிமை கேட்டிரேல்
கொண்ட பாணி கொடுகொட்டி தாளங்கைக்
கொண்ட தொண்டரைத் துன்னிலுஞ் சூழலே. 1

நடுக்கத் துள்ளும் நகையுளும் நம்பர்க்குக்
கடுக்கக் கல்ல வடமிடு வார்கட்குக்
கொடுக்கக் கொள்க எனவுரைப் பார்களை
இடுக்கண் செய்யப் பெறீரிங்கு நீங்குமே. 2

கார்கொள் கொன்றைக் கடிமலர்க் கண்ணியான்
சீர்கொள் நாமஞ் சிவனென் றரற்றுவார்
ஆர்க ளாகிலு மாக அவர்களை
நீர்கள் சாரப் பெறீரிங்கு நீங்குமே. 3

சாற்றி னேன்சடை நீண்முடிச் சங்கரன்
சீற்றங் காமன்கண் வைத்தவன் சேவடி
ஆற்ற வுங்களி பட்ட மனத்தராய்ப்
போற்றி யென்றுரைப் பார்புடை போகலே. 4

இறையென் சொல்மற வேல்நமன் தூதுவீர்
பிறையும் பாம்பு முடைப்பெரு மான்தமர்
நறவம் நாறிய நல்நறுஞ் சாந்திலும்
நிறைய நீறணி வாரெதிர் செல்லலே. 5

வாம தேவன் வளநகர்‡ வைகலும்
காம மொன்றில ராய்க்கை விளக்கொடு
தாமம் தூபமும் தண்நறுஞ் சாந்தமும்
ஏம மும்புனை வாரெதிர் செல்லலே. 6

படையும் பாசமும் பற்றிய கையினீர்
அடையன் மின்நம தீசன் அடியரை

---

* இப்பதிகம் சிவனடியார் பக்கம் செல்லாதீர்கள் என்று இமயன் தூதர்களுக்கு ஆணையிட்டுக் கூறியதாகும். காலபாரா யணத் என்றும் பாடம். † கனவித்து என்றும் பாடம். ‡ வாம தேவன் வளநகர் - சிவாலயம்,

விடைகொ ளூர்தியி னான்அடி யார்குழாம்
புடைபு காதுநீர் போற்றியே போமினே. 7

விச்சை யாவதும் வேட்கைமை யாவதும்
நிச்சல் நீறணி வாரை நினைப்பதே
அச்ச மெய்தி அருகணை யாதுநீர்
பிச்சை புக்கவன் அன்பரைப் பேணுமே. 8

இன்னங் கேண்மின் இளம்பிறை சூடிய
மன்னன் பாதம் மனத்துட னேத்துவார்
மன்னும் அஞ்செழுத் தாகிய மந்திரம்
தன்னி லொன்றுவல் லாரையுஞ் சாரலே 9

மற்றுங் கேண்மின் மனப்பரிப் பொன்றின்றிச்
சுற்றும் பூசிய நீற்றொடு கோவணம்
ஒற்றை யேறுடை யானடியே அலால்
பற்றொன் றில்லிகள் மேற்படை போகலே. 10

அரக்கன் ஈரைந் தலையுமோர் தாளினால்
நெருக்கி யூன்றியிட் டான்தமர் நிற்கிலும்
சுருக்கெ னாதங்குப் பேர்மின்கண் மற்றுநீர்
சுருக்கெ னிற்சுட ரான்கழல் சூடுமே. 11

திருச்சிற்றம்பலம்

---

## மறக்கிற்பனேயென்னும் திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

காச னைக்கன லைக்கதிர் மாமணித்
தேச னைப்புக ழார்சிலர் தெண்ணர்கள்*
மாசி னைக்கழித் தாட்கொள வல்லஎம்
ஈச னையினி நான்மறக் கிற்பனே.† 1

புந்திக் குவிளக் காய புராணனைச்
சந்திக் கண்நட மாடுஞ் சதுரனை
அந்தி வண்ணனை ஆரழல் மூர்த்தியை
வந்தெ னுள்ளங்கொண் டானை மறப்பனே. 2

---

* சில தொண்ணர்கள் என்றும் பாடம். தொண்ணர்கள் - கீழோர்கள். † மறக்கிற்பனே - மறக்கும் ஆற்றல் உளனாவனோ? மறக்கேன். கில் - ஆற்றலுணர்த்தும் இடைநிலை. ஏகாரம் எதிர் மறை.

ஈசன் ஈசனென் றென்றும் அரற்றுவன்
ஈசன் தானென் மனத்திற் பிரிவிலன்
ஈசன் தன்னையும் என்மனத் துக்கொண்டு
ஈசன் தன்னையும் யான்மறக் கிற்பனே. 3

ஈசன் என்னை யறிந்த தறிந்தனன்
ஈசன் சேவடி யேற்றப் பெறுதலால்
ஈசன் சேவடி யேத்தப்பெற் றேன்இனி
ஈசன் தன்னையும் யான்மறக் கிற்பனே. 4

தேனைப் பாலினைத் திங்களை ஞாயிற்றை
வான வெண்மதி சூடிய மைந்தனை
வேனி லானை|| மெலிவுசெய் தீயழல்
ஞான மூர்த்தியை நான்மறக் கிற்பனே. 5

கன்ன லைக்கரும் பூறிய தேறலை
மின்ன னை‡மின் னனைய உருவனைப்
பொன்ன னைமணிக் குன்று பிறங்கிய
என்ன னைஇனி யான்மறக் கிற்பனே. 6

கரும்பி னைக்கட்டி யைக்கந்த மாமலர்ச்
சுரும்பி னைச்சுடர்ச் சோதியுட் சோதியை
அரும்பி னிற்பெரும் போதுகொண் டாய்மலர்
விரும்பும் ஈசனை யான்மறக் கிற்பனே. 7

துஞ்சும் போதுஞ் சுடர்விடு சோதியை
நெஞ்சுள் நின்று நினைப்பிக்கு நீதியை
நஞ்சு கண்டத் தடக்கிய நம்பனை
வஞ்ச னேன்இனி நான்மறக் கிற்பனே. 8

புதிய பூவினைப் புண்ணிய நாதனை
நிதியை நீதியை நித்திலக் குன்றினைக்
கதியைக் கண்டங் கறுத்த கடவுளை
மதியை மைந்தனை¶ நான்மறக் கிற்பனே. 9

---

|| வேனலானை என்றும் பாடம். ‡ மின்னனை-மின்னை யுடையவனை; மின்-உமாதேவியார்: ஆகு பெயர். ¶ மைந்தன்-வலிமையுள்ளோன்; வலி ஈண்டு சர்வ வல்லமை.

கருகு கார்முகில் போல்வதோர் கண்டனை
உருவ நோக்கியை ஊழி முதல்வனைப்
பருகு பாலனைப் பால்மதி சூடியை
மருவு மைந்தனை நான்மறக் கிற்பனே. 10

திருச்சிற்றம்பலம்

### தொழற்பாலதே என்னுந் திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

அண்டத் தானை அமரர் தொழப்படும்
பண்டத்* தானைப் பவித்திர** மார்திரு
முண்டத்† தானைமுற் றாத இளம்பிறைத்
துண்டத் தானைக்கண் டீர்தொழற் பாலதே. 1

முத்தொப் பானை முளைத்தெழு கற்பக
வித்தொப் பானை விளக்கிடை நேரொளி
ஒத்தொப் பானை யொளிபவ ளத்திரள்
தொத்தொப் பானைக்கண் டீர்தொழற் பாலதே. 2

பண்ணைத் தானைப் பவளந் திரண்டதோர்
வண்ணத் தானை வகையுணர் வான்றனை
எண்ணத் தானை இளம்பிறை போல்வெள்ளைச்
சுண்ணத் தானைக்கண் டீர்தொழற் பாலதே. 3

விடலை யானை விரைகமழ் தேன்கொன்றைப்
படலை‡ யானைப் பலிதிரி வான்செலும்
நடலை யானை நரிபிரி யாததோர்
சுடலை யானைக்கண் டீர்தொழற் பாலதே. 4

பரிதி யானைப்பல் வேறு சமயங்கள்
கருதி யானைக்கண் டார்மனம் மேவிய
பிரிதி யானைப் பிறரறி யாததோர்
சுருதி யானைக்கண் டீர்தொழற் பாலதே. 5

ஆதி யானை அமரர் தொழப்படும்
நீதி யானை நியம நெறிகளை

* பண்டம்–உறுதிப்பொருள். ** பவித்திரம்–தூய்மை. † திருமுண்டம்–திருநீறு. ‡ படலை–மாலைவகை.

ஓதி யானை உணர்தற் கரியதோர்
சோதி யானைக்கண் டீர்தொழற் பாலதே. 6

ஞாலத் தானைநல் லானைவல் லார்தொழும்
கோலத் தானைக் குணப்பெருங் குன்றினை
மூலத் தானை முதல்வனை மூவிலைச்
சூலத் தானைக்கண் டீர்தொழற் பாலதே. 7

ஆதிப் பாலட்ட மூர்த்தியை ஆனஞ்சும்
வேதிப் பானை†நம் மேல்வினை வெந்தறச்
சாதிப் பானைத் தவத்திடை மாற்றங்கள்
சோதிப் பானை‡க்கண் டீர்தொழற் பாலதே. 8

நீற்றி னானை நிகரில்வெண் கோவணக்
கீற்றி னானைக் கிளரொளிச் செஞ்சடை
ஆற்றி னானை அமரர்தம் ஆருயிர்
தோற்றி னானைக்கண் டீர்தொழற் பாலதே. 9

விட்டிட் டானைமெஞ் ஞானத்து மெய்ப்பொருள்
கட்டிட் டானைக் கனங்குழை பாலன்பு
பட்டிட் டானைப் பகைத்தவர் முப்புரஞ்
சுட்டிட் டானைக்கண் டீர்தொழற் பாலதே. 10

முற்றி னானை இராவணன் நீண்முடி
ஒற்றி னானை ஒருவிர லாலுறப்
பற்றி னானையோர் வெண்டலைப் பாம்பரைச்
சுற்றி னானைக்கண் டீர்தொழற் பாலதே. 11

திருச்சிற்றம்பலம்

---

## இலிங்கபுராணத் திருக்குறுந்தொகை*

திருச்சிற்றம்பலம்

புக்க ணைந்து புரிந்தல ரிட்டிலர்
நக்க ணைந்து நறுமலர் கொய்திலர்
சொக்க§ ணைந்த சுடரொளி வண்ணனை
மிக்குக் காணலுற் றாரங் கிருவரே. 1

---

† வேதிப்பான் - விரும்புபவன். ‡ சோதிப்பான் - தூய்மை செய்பவன். * இப்பதிகம் சரியையின் சிறப்பினையும் சிவலிங்கத் தத்துவத்தையும் கூறுவதால் இப்பெயர் பெற்றது. § சொக்கு - அழகு.

அலரு நீருங்கொண் டாட்டித் தெளிந்திலர்*
திலக மண்டலம்† தீட்டித் திரிந்திலர்
உலக மூர்த்தி யொளிநிற வண்ணனைச்
செலவு காணலுற் றாரங் கிருவரே. 2

ஆப்பி‡ நீரோ டலகுகைக் கொண்டிலர்
பூப்பெய் கூடை புனைந்து சுமந்திலர்
காப்புக் கொள்ளி கபாலிதன் வேடத்தை
ஒப்பிக் காணலுற் றாரங் கிருவரே. 3

நெய்யும் பாலுங்கொண் டாட்டி நினைந்திலர்
பொய்யும் பொக்கமும் போக்கிப் புகழ்ந்திலர்
ஐயன் வெய்ய அழல்நிற வண்ணனை
மெய்யைக் காணலுற் றாரங் கிருவரே. 4

எருக்கங் கண்ணிகொண் டிண்டை புனைந்திலர்
பெருக்கக் கோவணம் பீறி யுடுத்திலர்
தருக்கி னாற்சென்று தாழ்சடை யண்ணலை
நெருக்கிக் காணலுற் றாரங் கிருவரே. 5

மரங்க ளேறி மலர்பறித் திட்டிலர்
நிரம்ப நீர்சுமந் தாட்டி நினைந்திலர்
உரம்பொ ருந்தி யொளிநிற வண்ணனை
நிரம்பக் காணலுற் றாரங் கிருவரே. 6

கூட்டு வாங்கங் கபாலங்கைக் கொண்டிலர்
அட்ட மாங்கங் கிடந்தடி வீழ்ந்திலர்
சிட்டன் சேவடி சென்றெய்திக் காணிய
பட்ட கட்டமுற் றாரங் கிருவரே. 7

வெந்த நீறு விளங்க அணிந்திலர்
கந்த மாமலர் இண்டை புனைந்திலர்
எந்தை ஏறுகந் தேறெரி வண்ணனை
அந்தங் காணலுற் றாரங் கிருவரே. 8

இளவெ ழுந்த இருங்குவ ளைம்மலர்
பிளவு செய்து பிணைத்தடி யிட்டிலர்

* தெளித்திலர் என்றும் பாடம். † திலகமண்டலம் - வட்டமாகிய திலகம்; பொட்டு. ‡ ஆப்பி - பசுவின் சாணம்.

களவு செய்தொழிற் காமனைக் காய்ந்தவன்
அளவு காணலுற் றாரங் கிருவரே. 9

கண்டி பூண்டு கபாலங்கைக் கொண்டிலர்
விண்ட வான்சங்கம் விம்மவாய் வைத்திலர்
அண்ட மூர்த்தி அழல்நிற வண்ணனைக்
கெண்டிக் காணலுற் றாரங் கிருவரே. 10

செங்க ணானும் பிரமனுந் தம்முளே
எங்குந் தேடித் திரிந்தவர் காண்கிலார்
இங்குற் றேனென்றி லிங்கத்தே தோன்றினன்
பொங்கு செஞ்சடைப் புண்ணிய மூர்த்தியே. 11

திருச்சிற்றம்பலம்

---

## மனத்தொகைத் திருக்குறுந்தொகை*

திருச்சிற்றம்பலம்

பொன்னுள் ளத்திரள் புன்சடை யின்புறம்
மின்னுள் ளத்திரள் வெண்பிறை யாயிறை
நின்னுள் ளத்தருள் கொண்டிருள் நீங்குதல்
என்னுள் ளத்துள தெந்தை பிரானிரே.** 1

மூக்க ணும்முடை யாய்முனி கள்பலர்
தொக்கெ ணுங்கழ லாயொரு தோவினே(டு)
அக்க ணம்மறை யாயரு ளேயலா(து)
எக்க ணும்மிலன் எந்தை பிரானிரே. 2

பனியாய் வெங்கதிர் பாய்படர் புன்சடை
முனியாய் நீயுல கம்முழு தாளினும்
தனியாய் நீசரண் நீசல மேபெரி
தினியாய் நீயெனக் கெந்தை பிரானிரே. 3

மறையும் பாடுதிர் மாதவர் மாலினுக்
குறையு மாயினை கோளர வோடொரு
பிறையுஞ் சூடினை யென்பத லாற்பிறி(து)
இறையுஞ் சொல்லிலே எந்தை பிரானிரே. 4

---

* இப்பதிகம் உள்ளக்கிடக்கையை அறிவிப்பதால் இப்பெயர் பெற்றது. ** எந்தை பிரானீரே என்பது இங்கு மகுடம்.

பூத்தார் கொன்றையி னுய்புலி யின்னதள்
ஆர்த்தாய் ஆடர வோடன லாடிய
கூத்தா நின்குறை யார்கழ லேயல(து)
ஏத்தா நாவெனக் கெந்தை பிரானிரே. 5

பைம்மா லும்மர வாபர மாபசு
மைம்மால் கண்ணியோ டேறும் மைந் தாவெனும்
அம்மா லல்லது மற்றடி நாயினேற்(கு)
எம்மா லும்மிலேன் எந்தை பிரானிரே. 6

வெப்பத் தின்மன மாக விளக்கிய
செப்பத் தாற்சிவ னென்பவர் தீவினை
ஒப்பத்* தீர்த்திடும் எண்கழ லாற்கல்ல(து)
எப்பற் றும்மிலன் எந்தை பிரானிரே. 7

திகழுஞ் சூழ்சுடர் வானொடு வைகலும்
நிகழு மொண்பொரு ளாயின நீதியென்
புகழு மாறு மலானுன பொன்னடி
இகழு மாறிலேன் எந்தை பிரானிரே. 8

கைப்பற் றித்திரு மால்பிர மன்னுனை
எப்பற் றியறி தற்கரி யாயருள்
அப்பற் றல்லது மற்றடி நாயினேன்
எப்பற் றும்மிலேன் எந்தை பிரானிரே. 9

எந்தை யெம்பிரான் என்றவர் மேல்மனம்
எந்தை யெம்பிரான் என்றிறைஞ் சித்தொழு(து)
எந்தை யெம்பிரான் என்றடி யேத்துவார்
எந்தை யெம்பிரான் என்றடி சேர்வரே. 10

திருச்சிற்றம்பலம்

---

**சித்தத்தொகைத் திருக்குறுந்தொகை †**

திருச்சிற்றம்பலம்

சிந்திப் பார்மனத் தான்சிவன் செஞ்சுடர்
அந்தி வான்நிறத் தான்அணி யார்மதி

---

* ஒப்ப – முற்றும். † இப்பதிகம் சித்தத்தினுள்ளே சிவனைச் சிந்திக்குந் திறங்களைக் கூறுவது ஆகும்.

முந்திச் சூடிய முக்கண்ணி னடி
வந்திப் பாரவர் வானுல காள்வரே. 1

அண்ட மாரிரு ளூடு கடந்தும்பர்
உண்டு போலுமோ ரொண்சுட ரச்சுடர்
கண்டிங் காரறி வார்அறி வர்எலாம்
வெண்டிங் கட்கண்ணி வேதியன் என்பரே. 2

ஆதி யாய்அவ னுரு மிலாதவன்
போது சேர்புனை நீண்முடிப் புண்ணியன்
பாதி பெண்ணுரு வாகிப் பரஞ்சுடர்ச்
சோதி யுட்சோதி யாய்நின்ற சோதியே. 3

இட்ட திட்டதோ ரேறுகந் தேறியூர்
பட்டி துட்டங்க னைப்பலி தேர்வதோர்
கட்ட வாழ்க்கைய னாகிலும் வானவர்
அட்ட மூர்த்தி யருளென் றடைவரே. 4

ஈறில் கூறை*ய னாகி எரிந்தவெண்
நீறு பூசி நிலாமதி சூடிலும்
வீறி லாதன செய்யினும் விண்ணவர்
ஊற லாயரு ளாயென் றுரைப்பரே. 5

உச்சி வெண்மதி சூடிலும் ஊன்அறுப்
பச்சை வெண்டலை யேந்திப் பலஇ(ல்)லம்
பிச்சை யேபுகு மாகிலும் வானவர்
அச்சந் தீர்த்தரு ளாயென் றடைவரே. 6

ஊரி லாயென்றொன் றாக உரைப்பதோர்
பேரி லாய்பிறை சூடிய பிஞ்ஞகா
காரு லாங்கண்ட னேஉன் கழலடி
சேர்வி லார்கட்குத் தீயவை தீயவே. 7

எந்தை யேயெம் பிரானே யெனவுள்கிச்
சிந்திப் பாரவர் தீவினை தீருமால்
வெந்த நீறுமெய் பூசிய வேதியன்
அந்த மாவளப் பாரடைந் தார்களே. 8

* ஈறில் கூறை – திக்குக்கள் ஆகிய ஆடை.

ஏன வெண்மருப் போடென்பு பூண்டெழில்
ஆனை யீருரி போர்த்தன லாடிலும்
தான வண்ணத்த னாகிலுந் தன்னையே
வான நாடர் வணங்குவர் வைகலே. 9

ஐயன் அந்தணன் ஆணொடு பெண்ணுமாம்
மெய்யன் மேதகு வெண்பொடி பூசிய
மைகொள் கண்டத்தன் மான்மறிக் கையினன்
பைகொள் பாம்பரை யார்த்த பரமனே. 10

ஒருவ னாகிநின் றான்இவ் வுலகெலாம்
இருவ ராகிநின் றார்கட் கறிகிலான்
அருவ ராஅரை ஆர்த்தவ னார்கழல்
பரவு வாரவர் பாவம் பறையுமே. 11

ஓத வண்ணனும்* ஒண்மலர்ச் செல்வனும்
நாத னேஅரு ளாயென்றார்† நாடொறும்
காதல் செய்து கருதப் படுமவர்
பாத மேத்தப் பறையும்நம் பாவமே. 12

ஔவ தன்மை யவரவ ராக்கையான்
வெவ்வ தன்மைய னென்ப தொழிமினோ
மௌவல் நீண்மலர் மேலுறை வானொடு
பௌவ வண்ணனு மாய்ப்பணி வார்களே. 13

அக்கும் ஆமையும் பூண்டன லேந்திஇல்
புக்குப் பல்பலி தேரும் புராணனை
நக்கு நீர்கள் நரகம் புகேன்மினோ
தொக்க வானவ ராற்றொழு வானையே. 14

கங்கை தங்கிய செஞ்சடை மேலிளந்
திங்கள் சூடிய தீநிற வண்ணனார்
இங்க னாரெ‡ழில் வானம் வணங்கவே
அங்க னாற்கது வாலவன் தன்மையே. 15

ஙகர வெல்கொடி§ யானொடு நன்னெஞ்சே
நுகர நீயுனைக் கொண்டுயப் போக்குறில்

---

* ஓதவண்ணன்–திருமால். † நாதநம்மருளாயென்று என்றும் பாடம். ‡ இங்கணார்–இங்கு எளிதில் வருபவர். § நகரவெல் கொடி என்றும் பாடம்.

மகர வெல்கொடி மைந்தனைக்* காய்ந்தவன்
புகரில் சேவடி யேபுக லாகுமே. 16

சரண மாம்படி யார்பிற ரியாவரோ
கரணந் தீர்த்துயிர் கையி லிகழ்ந்தபின்
மரண மெய்திய பின்னவை நீக்குவான்
அரண மூஎயில் எய்தவ னல்லனே. 17

நமனென் பான்நர கர்க்கு நமக்கெலாம்
சிவனென் பான்செழு மான்மறிக் கையினன்
கவனஞ் செய்யுங் கனவிடை யூர்தியான்
தமரென் றாலுங் கெடுந்தடு மாற்றமே. 18

இடப மேறியும் இல்பலி ஏற்பவர்
அடவி காதலித் தாடுவர் ஐந்தலைப்
படவம் பாம்பரை யார்த்த பரமனைக்
கடவி ராய்ச்சென்று கைதொழு துய்ம்மினே. 19

இணர்ந்து† கொன்றைபொன் தாது சொரிந்திடும்
புணர்ந்த வாளர வம்மதி யோடுடன்
அணைந்த அஞ்சடை யானவன் பாதமே
உணர்ந்த உள்ளத் தவருணர் வார்களே. 20

தருமந் தான்தவந் தான்தவத் தால்வரும்
கருமந் தான்கரு மான்மறிக் கையினன்
அருமந் தன்ன அதிர்கழல் சேர்மினோ
சிரமஞ் சேரழல் தீவினை ஆளரே. 21

நமச்சி வாயஎன் பாருள ரேல்அவர்
தமச்சு நீங்கத் தவநெறி சார்தலால்
அமைத்துக் கொண்டதோர் வாழ்க்கைய ராகிலும்
இமைத்து நிற்பது சால அரியதே. 22

பற்பல் காலம் பயிற்றிப் பரமனைச்
சொற்பல் காலநின் றேத்துமின் தொல்வினை
வெற்பில் தோன்றிய வெங்கதிர் கண்டஅப்
புற்ப னிக்கெடு மாறது போலுமே. 23

---

* மகர வெல்கொடி மைந்தன் - மன்மதன். † இணர்ந்து - கொத்தாகப் பூத்த.

மணிசெய் கண்டத்து மான்மறிக் கையினன்
கணிசெய் வேடத்தர் ஆயவர் காப்பினல்
பணிகள் தாஞ்செய வல்லவர் யாவர்தம்
பிணிசெ யாக்கையை நீக்குவர் பேயரே.* 24

இயக்கர் கின்னரர் இந்திரன் தானவர்
நயக்க நின்றவன் நான்முகன் ஆழியான்
மயக்கம் எய்தவன் மாலெரி யாயினன்
வியக்குந் தன்மையி னனெம் விகிர்தனே. 25

அரவ மார்த்தனல் ஆடிய அண்ணலைப்
பரவு வாரவர் பாவம் பறைதற்குக்**
குரவை கோத்தவ னுங்†குளிர் போதின்மேல்
கரவில் நான்முக னுங்கரி யல்லரே. 26

அழலங் கையினன் அந்தரத் தோங்கிநின்(று)
அழலும் மூவெயில் ஒள்ளழ லாட்டினன்
தழலுந் தாமரை யானொடு தாவினன்
கழலுஞ் சென்னியுங் காண்டற் கரியனே. 27

இளமை கைவிட் டகறலும் மூப்பினர்
வளமை போய்ப்பிணி யோடு வருதலால்
உளமெ லாம்ஒளி ஆய்மதி ஆயினன்
கிளமை யேகிளை யாக நினைப்பனே. 28

தன்னிற் றன்னை அறியுந் தலைமகன்
தன்னிற் றன்னை அறியிற் றலைப்படும்
தன்னிற் றன்னை அறிவில ராயிடில்
தன்னிற் றன்னையுஞ் சார்தற் கரியனே. 29

இலங்கை மன்னனை ஈரைந்து பத்துமன்
றலங்க லோடுட னேசெல வூன்றிய
நலங்கொள் சேவடி நாடொறும் நாடொறும்
வலங்கொண் டேத்துவார் வானுல காள்வரே. 30

திருச்சிற்றம்பலம்

—

* பேயர் – சிவகணத்தார். ** பறைத்தற்குக் என்றும் பாடம்.
† குரவை போத்தவனுங் என்றும் பாடம். குரவை கோத்தவன் – திருமால். குரவை – ஒரு கூத்து.

## உள்ளத் திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

நீற லைத்ததோர் மேனி நிமிர்சடை
ஆற லைக்கநின் றுடும் அமுதினைத்
தேற லைத்தெளி யைத்தெளி வாய்த்ததோர்
ஊற லைக்கண்டு கொண்டதெ னுள்ளமே. 1

பொந்தை† யைப்புக்கு நீக்கப் புகுந்திடும்
தந்தை யைத்தழல் போல்வதோர்‡ மேனியைச்
சிந்தை யைத்தெளி வைத்தெளி வாய்த்ததோர்
எந்தை யைக்கண்டு கொண்டதெ னுள்ளமே. 2

வெள்ளத் தார்விஞ்சை யார்கள் விரும்பவே
வெள்ளத் தைச்சடை வைத்த விகிர்தனுர்
கள்ளத் தைக்கழி யம்மன மொன்றிநின்(று)
உள்ளத் தில்ஒளி யைக்கண்ட துள்ளமே. 3

அம்மா னையமு தின்னமு தேயென்று
தம்மா னைத்தத்து வத்தடி யார்தொழும்
செம்மா னநிறம் போல்வதோர் சிந்தையுள்
எம்மா னைக்கண்டு கொண்டதெ னுள்ளமே. 4

கூறே றும்உமை பாகமோர் பாலராய்
ஆறே றுஞ்சடை மேற்பிறை சூடுவர்
பாறே றுந்தலை யேந்திப் பலஇ(ல்)லம்
ஏறே றும்எந்தை யைக்கண்டதெ னுள்ளமே.§ 5

முன்னெஞ் சம்மின்றி மூர்க்கராய்ச் சாகின்றுர்
தந்நெஞ் சந்தமக் குத்தாமி லாதவர்
வன்னெஞ் சம்மது நீங்குதல் வல்லீரே
என்னெஞ் சில்ஈச னைக்கண்டதெ னுள்ளமே. 6

வென்று னைப்புல னைந்துமென் தீவினை
கொன்று னைக்குணத் தாலே வணங்கிட
நன்று நன்மனம் வைத்திடு ஞானமாம்
ஒன்று னைக்கண்டு கொண்டதெ னுள்ளமே. 7

---

† பொந்தை-பொத்தல் உடம்பு. ‡ தழலொப்பதோர் என்றும் பாடம். § கண்டதுள்ளமே என்றும் பாடம்.

மருவி னைமட நெஞ்சம் மனம்புகும்
குருவி னைக்குணத் தாலே வணங்கிடும்
திருவி னைச்சிந்தை யுட்சிவ னாய்நின்ற
உருவி னைக்கண்டு கொண்டதெ னுள்ளமே. 8

தேச னைத்திரு மால்பிர மன்செயும்
பூச னைப்புண ரிற்புணர் வாயதோர்
நேச னைநெஞ்சி னுள்நிறை வாய்நின்ற
ஈச னைக்கண்டு கொண்டதெ னுள்ளமே. 9

வெறுத்தானை ஐம்புல னும்பிர மன்தலை
அறுத்தானைஅரக் கன்கயி லாயத்தைக்
கறுத்தானைக்கா லின்விர லொன்றினால்
ஒறுத்தானைக்கண்டு கொண்டதெ னுள்ளமே. 10

திருச்சிற்றம்பலம்

---

## பாவநாசத் திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

பாவ மும்பழி பற்றற வேண்டுவீர்
ஆவில் அஞ்சுகந் தாடும் அவன்கழல்
மேவ ராய்மிக வும்மகிழ்ந் துள்குமின்†
காவ லாளன் கலந்தருள் செய்யுமே. 1

கங்கை யாடிலென் காவிரி யாடிலென்
கொங்கு தண்குமரித்துறை யாடிலென்
ஓங்கு மாகடல் ஓதநீ ராடிலென்
எங்கும் ஈசனெ னாதவர்க் கில்லையே. 2

பட்ட ராகிலென் சாத்திரங் கேட்கிலென்
இட்டு மட்டியு மீதொழில் பூணிலென்
எட்டு மொன்றும் இரண்டு மறியிலென்
இட்ட மீசனெ னாதவர்க் கில்லையே. 3

வேத மோதிலென் வேள்விகள் செய்கிலென்‡
நீதி நூல்பல நித்தல் பயிற்றிலென்

---

† மிகவும் நினைத்துள்குமின் என்றும் பாடம். ‡ மோதிலென் சாத்திரங்கேட்கிலென் என்றும் பாடம்.

ஓதி யங்கமோ ராறும் உணரிலென்
ஈச னையுள்கு வார்க்கன்றி இல்லையே. 4

காலை சென்று கலந்துநீர் மூழ்கிலென்
வேலை தோறும் விதிவழி நிற்கிலென்
ஆலை வேள்வி யடைந்தது வேட்கிலென்
ஏல ஈசனென் பார்க்கன்றி இல்லையே. 5

கான நாடு கலந்து திரியிலென்
ஈன மின்றி இருந்தவஞ் செய்யிலென்
ஊனை யுண்டல் ஒழிந்துவான் நோக்கிலென்
ஞான னென்பவர்க் கன்றிநன் கில்லையே. 6

கூட வேடத்த ராகிக் குழுவிலென்
வாடி யூனை வருத்தித் திரியிலென்
ஆடல் வேடத்தன் அம்பலக் கூத்தனைப்
பாட லாளர்க்கல் லாற்பயன் இல்லையே. 7

நன்று நோற்கிலென் பட்டினி யாகிலென்
குன்ற மேறி இருந்தவஞ் செய்யிலென்
சென்று நீரிற் குளித்துத் திரியிலென்
என்று மீசனென் பார்க்கன்றி இல்லையே. 8

கோடி தீர்த்தங் கலந்து குளித்தவை
ஆடி னாலும் அரனுக்கன் பில்லையேல்
ஓடும் நீரினை ஓட்டைக் குடத்தட்டி
மூடி வைத்திட்ட மூர்க்கனோ டொக்குமே. 9

மற்று நற்றவஞ் செய்து வருந்திலென்
பொற்றை யுற்றெடுத் தானுடல் புக்கிறக்
குற்ற நற்குரை யார்கழற் சேவடி
பற்றி லாதவர்க் குப்பயன் இல்லையே. 10

திருச்சிற்றம்பலம்

---

## ஆதிபுராணத் திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

வேத நாயகன் வேதியர் நாயகன்
மாதின் நாயகன் மாதவர் நாயகன்

ஆதி நாயகன் ஆதிரை நாயகன்
பூத நாயகன் புண்ணிய மூர்த்தியே. 1

செத்துச் செத்துப் பிறப்பதே தேவென்று
பத்தி செய்மனப் பாறைகட்* கேறுமோ**
அத்த னென்றரி யோடு பிரமனும்
துத்தி யஞ்||செய நின்றநற் சோதியே. 2

நூறு கோடி பிரமர்கள் நொந்தினர்‡
ஆறு கோடி நாராயண ரங்ஙனே
ஏறு கங்கை மணலெண்ணில் இந்திரர்
ஈறி லாதவன் ஈச னொருவனே. 3

வாது செய்து மயங்கும் மனத்தராய்
ஏது சொல்லுவீ ராகிலும் ஏழைகாள்
யாதோர் தேவ ரெனப்படு வார்க்கெலாம்
மாதே வன்னலால் தேவர்மற் றில்லையே. 4

கூவ லாமை குரைகட லாமையைக்
கூவ லோடொக்கு மோகட லென்றல்போல்
பாவ காரிகள் பார்ப்பரி தென்பரால்
தேவ தேவன் சிவன்பெருந் தன்மையே. 5

பேய்வ னத்தமர் வானைப்பி ரார்த்தித்தார்க்(கு)
ஈவ னையிமை யோர்முடி தன்னடிச்
சாய்வ னைச்சல வார்கள் தமக்குடல்
சீவ னைச்சிவ னைச்சிந்தி யார்களே. 6

எரிபெ ருக்குவர் அவ்வெரி ஈசன(து)
உருவ ருக்கம தாவ துணர்கிலார்
அரிஅ யற்கரி யானை அயர்த்துப்போய்
நரிவி ருத்தம தாகுவர்¶ நாடரே. 7

அருக்கன் பாதம் வணங்குவர் அந்தியில்
அருக்க னாவான் அரனுரு வல்லனோ

---

* மனப்பாறைகட்கு-கல்போன்றமன துடையவர்க்கு. **செய்துமோ என்றும் பாடம். || துத்தியம்-துதிக்கும்பாட்டு. ‡ நுங்கினர் என்றும் பாடம். ¶ நரிவிருத்தமதாகுதல்-நரியின் சூழ்ச்சி போன்று பயனற்றதாதல்.

இருக்கு நான்மறை ஈசனை யேதொழும்
கருத்தி னைஇனை யார்கல் மனவரே. 8

தாயி னும்நல்ல சங்கர னுக்கன்பர்
ஆய வுள்ளத் தமுதருந் தப்பெறார்
பேயர் பேய்முலை யுண்டுயிர் போக்கிய
மாயன் மாயத்துப் பட்ட மனத்தரே. 9

அரக்கன் வல்லரட் டாங்கொழித் தாரருள்
பெருக்கச் செய்த பிரான்பெருந் தன்மையை
அருத்தி செய்தறி யப்பெறு கின்றிலர்
கருத்தி லாக்கய வக்கணத் தோர்களே. 10

திருச்சிற்றம்பலம்

---

**க்ஷேத்திரக் கோவைத் திருத்தாண்டகம் [6-ம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

தில்லைச்சிற் றம்பலமுஞ் செம்பொன் பள்ளி தேவன்குடி சிராப்பள்ளி தெங்கூர், கொல்லிக் குளிரறைப் பள்ளி கோவல் வீரட்டங் கோகரணங் கோடி காவும், முல்லைப் புறவம் முருகன் பூண்டி முளையூர் பழையாறை சத்தி முற்றங், கல்லில் திகழ்சீரார் காளத்தியுங் கயிலாய நாதனையே காண லாமே. 1

ஆரூர்மு லட்டானம் ஆனைக் காவும் ஆக்கூரில் தான் தோன்றி மாடம் ஆவூர், பேரூர் பிரமபுரம் பேரா வூரும் பெருந் துறை காம்பீலி பிடவூர் பேணுங், கூரார் குறுக்கைவீ ரட்டா னமுங் கோட்டூர் குடமூக்குக் கோழம் பமுங், காரார் கழுக் குன்றுங் கானப்பேருங் கயிலாய நாதனையே காண லாமே. 2

இடைமரு தீங்கோ யிராமேச் சுரம் இன்னம்பர் ஏரிடவை ஏமப் பேறூர், சடைமுடி சாலைக் குடிதக் களூர் தலையாலங் காடு தலைச்சங் காடு, கொடுமுடி குற்றாலங் கொள்ளம் பூதூர் கோத் திட்டை கோட்டாறு கோட்டுக் காடு, கடைமுடி கானூர்கடம்பந் துறை கயிலாய நாதனையே காண லாமே. 3

எச்சில் இளமர் ஏம நல்லூர் இலம்பையங் கோட்டூர் இறை யான் சேரி அச்சிறு பாக்க மளப்பூர்* அம்பர் ஆவடு தண்டுறை

---

* அளப்பூர் - தரங்கம்பாடி என்பர்.

அழுந்தூர் ஆறை, கச்சினங் கற்குடி கச்சூர் ஆலக் கோயில் கர வீரங் காட்டுப் பள்ளி, கச்சிப் பலதளியும் ஏகம் பத்துங் கயிலாய நாதனையே காண லாமே. 4

கொடுங்கோளூர் அஞ்சைக் களஞ்செங் குன்றூர் கொங்க ணங் குன்றியூர் குரக்குக் காவும், நெடுங்களம் நன்னிலம் நெல்லிக் காவும் நின்றியூர் நீடூர் நியம நல்லூர், இடும்பா வனமெழுமூர்* ஏழூர் தோழூர் எறும்பியூர் ஏராரும் ஏம கூடங், கடம்பை யிளங் கோயில் தன்னி லுள்ளுங் கயிலாய நாதனையே காண லாமே. 5

மண்ணிப் படிக்கரை வாழ்கொளி புத்தூர் வக்கரை மந்தாரம் வார ணாசி, வெண்ணி விளத்தொட்டி வேள்விக்குடி விளமர் விராடபுரம் வேட்க ளத்தும், பெண்ணை யருட்டுறை தண்பெண் ணாகடம் பிரம்பில் பெரும்புலியூர் பெருவே ளூருங், கண்ணை களர்க்காறை கழிப்பாலையுங் கயிலாய நாதனையே காண லாமே. 6

வீழி மிழலைவெண் காடு வேங்கூர் வேதிகுடி விசய மங்கை வியலூர், ஆழி யகத்தியான் பள்ளி அண்ணா மலையாலங் காடும் அரதைப் பெரும், பாழி பழனம் பனந்தாள் பாதாளம் பராய்த் துறை பைஞ்ஞீலி பனங்காட் டூர்தண், காழி கடல்நாகைக் காரோ ணத்துங் கயிலாய நாதனையே காண லாமே. 7

உஞ்சேனை மாகாளம் ஊறல்ஒத்தூர் உருத்திர கோடி மறைக் காட் டுள்ளும், மஞ்சார் பொதியின்மலை தஞ்சை வழுவூர் வீரட் டம் மாதானங் கேதா ரத்தும், வெஞ்சமாக் கூடல் மீயச்சூர் வைகா வேதீச் சுரம் விவீசுரம் வெற்றி யூருங், கஞ்சனூர் கஞ்சாறு பஞ்சாக் கையுங் கயிலாய நாதனையே காண லாமே. 8

திண்டீச்சரஞ்† சேய்ஞலூர் செம்பொன் பள்ளி தேவூர் சிர புரஞ் சிற்றேமம் சேறை, கொண்டீச்சரங் கூந்தலூர் கூழையூர் கூடல் குருகாவூர் வெள்ளடை குமரி கொங்கு, அண்டர்தொழும் அதிகை வீரட்டானம் ஐயா றசோகந்தி ஆமாத் தூருங், கண்டியூர் வீரட்டங் கருகாவூருங் கயிலாய நாதனையே காண லாமே. 9

நறையூரிற் சித்தீச் சரம்நள் ளாறு நாரையூர் நாகேச்சரம் நல்லூர் நல்ல, துறையூர் சோற்றுத்துறை சூல மங்கை‡ தோணி

---

* எழுமூர் - எழும்பூர். † திண்டீச்சரம் - திண்டுக்கல் அல்லது திண்டிவனம் என்பர். ‡ சூலமங்கை - சூலமங்கலம்.

புரந் துருத்தி சோமீச் சரம், உறையூர் கடலொற்றி யூரூற் றத்தூர் ஓமாம் புலியூர் ஓர்வட கத்துங், கறையூர்§ கருப்பறியல் கன்றாப் பூருங் கயிலாய நாதனையே காண லாமே. 10

புலிவலம் புத்தூர் புகலூர் புன்கூர் புறம்பயம் பூவணம் பொய்கை நல்லூர், வலிவலம் மாற்பேறு வாய்மூர் வைகல் வலஞ் சுழி வாஞ்சியம் மருகல் வன்னி, நிலமலி நெய்த்தா னத்தோ டெத்தா னத்தும் நிலவு பெருங் கோயில்பல கண்டால் தொண் டர், கலிவலிமிக் கோனைக்கால் விரலாற் செற்ற கயிலாய நாத னையே காண லாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

## அடைவு திருத்தாண்டகம்*

திருச்சிற்றம்பலம்

பொருப்பள்ளி வரைவில்லாப் புரமூன் றெய்து புலந்தழியச் சலந்தரனைப் பிளந்தான் சொற்சக், கரப்பள்ளி திருக்காட்டுப் பள்ளி கள்ளார் கமழ்கொல்லி யறைப்பள்ளி கலவஞ் சாரற், சிரப்பள்ளி சிவப்பள்ளி செம்பொன் பள்ளி செழுநனி பள்ளி தவப் பள்ளி சீரார், பரப்பள்ளி யென்றென்று பகர்வோ ரெல் லாம் பரலோகத் தினிதாகப் பாலிப் பாரே.** 1

காவிரியின் கரைக்கண்டி வீரட் டானங் கடவூர்வீ ரட்டானங் காமருசீ ரதிகை, மேவியவீ ரட்டானம் வழுவை வீரட்டம் வியன் பறியல் வீரட்டம் விடையூர்திக் கிடமாங், கோவல்நகர் வீரட்டங் குறுக்கைவீ ரட்டங் கோத்திட்டை குடிவீரட் டானமிவை கூறி, நாவில்நவின் றுரைப்பார்க்கு நணுகச் சென்றால் நமன்தமருஞ் சிவன்தமரேன் றகல்வர் நன்கே.† 2

நற்கொடிமேல் விடையுயர்த்த நம்பன் செம்பங் குடிநல்லக் குடிநளி நாட்டியத் தான்குடி, கற்குடிதென் களக்குடி செங்காட் டங்குடி கருந்திட்டைக் குடிகடையக் குடிகா ணுங்கால், விற்குடி

---

§கறையூர்–பாண்டிக் கொடுமுடி என்பர். *இப்பதிகம் புகலாக அடையத்தகும் இடத்தை வரிசைப் படுத்திக் குறிப்பது. ** பாரிப் பாரே என்றும் பாடம். † இச்செய்யுள் அட்ட வீரட்டங்கள் இன்னவை என்று குறிப்பிடுகின்றது.

வேள் விக்குடிநல் வேட்டக்குடி வேதிகுடி மாணிகுடி விடைவாய்க்குடி, புற்குடி மாகுடி தேவன்குடி நீலக்குடி புதுக்குடியும் போற்ற இடர் போகு மன்றே. 3

பிறையூருஞ் சடைமுடியெம் பெருமா னூர் பெரும்பற்றப் புலியூரும் பேரா வூரும், நறையூரும் நல்லூரும் நல்லாற் றூரும் நாலூருஞ் சேற்றூரும் நாரை யூரும், உறையூரும் ஒத்தூரும் ஊற்றத் தூரும் அளப்பூரோ மாம்புலியூர் ஒற்றி யூருர், துறையூருந் துவையூருந் தோழூர் தானுந் துடையூருந் தொழஇடர்கள் தொடரா வன்றே. 4

பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும் பெருங்கோயில் எழுபதினோ டெட்டும் மற்றுங், கரக்கோயில் கடிபொழில்சூழ் ஞாழற் கோயில் கருப்பறியல் பொருப்பனைய கொகுடிக் கோயில், இருக்கோதி மறையவர்கள் வழிபட் டேத்தும் இளங்கோயில் மணிக்கோயில் ஆலக்கோயில், திருக்கோயில் சிவனுறையுங் கோயில் சூழ்ந்து தாழ்ந்திறைஞ்சத் தீவினைகள் தீரும் அன்றே. 5

மலையார்தம் மகளொடுமா தேவன் சேரும் மறைக்காடு வண்பொழில்சூழ் தலைச்சங் காடு, தலையாலங் காடுதடங் கடல்சூழந்தண் சாய்க்காடு தள்ளுபுனற் கொள்ளிக் காடு, பலர்பாடும் பழயனூர் ஆலங் காடு பனங்காடு பாவையர்கள் பாவம் நீங்க, விலையாடும் வளைதிளைக்கக் குடையும் பொய்கை வெண்காடும் அடையவினை வேறு மன்றே. 6

கடுவாயர் தமைநீக்கி யென்னை யாட்கொள் கண்ணுதலோன் நண்ணுமிடம் அண்ணல் வாயில், நெடுவாயில் நிறைவயல்சூழ் நெய்தல் வாயில் நிகழ்முல்லை வாயிலொடு ஞாழல் வாயில், மடுவார்தென் மதுரைநக ரால வாயில் மறிகடல்சூழ் புனவாயில் மாடம் நீடு, குடவாயில் குணவாயி லான வெல்லாம் புகுவாரைக் கொடுவினைகள் கூடா வன்றே. 7

நாடகமா டிடநந்தி கேச்சுரமா காளேச் சுரநாகேச் சுரநாகளேச்சுரநன் கான, கோடீச்சுரங் கொண்டீச் சுரந்திண் டீச்சரங் குக்குடேச் சுரமக்கீச் சுரங்கூ றுங்கால், ஆடகேச் சுரமகத்தீச் சுரமய னீச்சுர மத்தீச் சுரஞ்சித்தீச் சுரமந் தண்கானல், ஈடுதிரை

இராமேச்சுர மென்றென் றேத்தி இறைவனுறை சுரம்பலவும் இயம்பு வோமே.* 8

கந்தமா தனங்கயிலே மலேகே தாரங் காளத்தி கழுக்குன்றங் கண்ணார் அண்ணா, மந்தமாம் பொழிற்சாரல் வடபர்ப்பதம் மகேந்திரமா மலே**நீலம் எம கூடர், விந்தமா மலேவேதஞ் சையர்† மிக்க வியன்பொதியின் மலேமேரு உதயம் மத்தம், இந்துசே கர னுறையும் மலேகள் மற்றும் ஏத்துவோம் இடர்கெடநின் றேத்து வோமே. 9

நள்ளாறும் பழையாறுங் கோட்டாற் றேடு நலந்திகழும் நாலாறுந் திருவை யாறுந், தெள்ளாறும் வளேகுளமுந் தளிக்கு ளமுநல் லிடைக்குளமுந் திருக்குளத்தோ டஞ்சைக்களம், விள் ளாத நெடுங்களம் வேட்களம் நெல்லிக்கா கோலக்கா ஆனேக்கா வியன்கோ டிகா, கள்ளார்ந்த கொன்றையான் நின்ற ஆறுங் குளம்களம்கா என அனேத்துங் கூறுவோமே. 10

கயிலாய மலேயெடுத்தான் கரங்க ளோடு சிரங்களுரம் நெரி யக்கால் விரலாற் செற்றேன், பயில்வாய பராய்த்துறைதென் பாலேத்துறை பண்டெழுவர் தவத்துறை‡வெண் துறைபைம் பொழிற், குயிலாலந் துறைசோற்றுத் துறைபூந் துறை பெருந் துறையுங் குரங்காடு துறையினேடு, மயிலாடு துறைகடம்பந்துறை யாவடு துறைமற்றுந் துறையனேத்தும் வணங்கு வோமே. 11

திருச்சிற்றம்பலம்

---

## பலவகைத் திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

நேர்ந்தொருத்தி ஒருபாகத் தடங்கக் கண்டு நிலேதளர ஆயி ரமா முகத்§தி னேடு, பாய்ந்தொருத்தி படர்சடைமேற் பயிலக் கண்டு படஅரவும் பனிமதியும் வைத்த செல்வர், தாந்திருத்தித் தம் மனத்தை ஒருக்காத் தொண்டர் தனித்தொருதண் டூன்றிமெய் தளரா முன்னம், பூந்துருத்தி பூந்துருத்தி என்பீ ராகில் பொல்லாப் புலால் துருத்தி|| போக்க லாமே. 1

---

* பலவு மேத்துவோமே என்றும் பாடம். ** மகேந்திரமலே – கயிலாயமலே என்பர். †வேத (மலே) – திருக்கழுக்குன்றம், சையம்– காவிரி பிறக்கும் மலே. ‡ தவத்துறை–லால்குடி. § ஆயிரம் முகம்– பல ஆறுகள். || புலால் துருத்தி–உடல்,

ஐத்தானத் தகமிடறு சுற்றி ஆங்கே அகத்தடைந்தால் யா தொன்று மிடுவா ரில்லை, மைத்தானக் கண்மடவார் தங்க ளோடு மாயமனை வாழ்க்கை மகிழ்ந்து வாழ்வீர், பைத்தானத் தொண் மதியும் பாம்பும் நீரும் படர்சடைமேல் வைத்துகந்த பண்பன் மேய, நெய்த்தானம் நெய்த்தானம் என்பீ ராகில் நிலாவாப் புலால் தானம் நீக்க லாமே. 2

பொய்யாறு வாறே புனைந்து பேசிப் புலர்ந்தெழுந்த காலைப் பொருளே தேடிக், கையாறுக் கரண முடையோ மென்று களித்த மனத்தராய்க் கருதி வாழ்வீர், நெய்யாறு ஆடிய நீல கண்டர் நிமிர்புன் சடைநெற்றிக் கண்ணர் மேய, ஐயாறே ஐயாறே என்பீ ராகில் அல்லல்தீர்ந் தமருலகம் ஆள லாமே. 3

இழவொன்று தாமொருவர்க் கிட்டொன் றீயார் ஈன் றெடுத்த தாய்தந்தை பெண்டீர் மக்கள், கழனங்கோ வையாதல் கண்டுந் தேறார் களித்த மனத்தராய்க் கருதி வாழ்வீர், அழனம்மை நீக்கு விக்கும் அரைய னுக்கும் அமருலகம் ஆள்விக்கும் அம்மான் மேய, பழனம் பழனமே என்பீ ராகில் பயின்றெழுந்த பழவினை நோய் பாற்ற லாமே. 4

ஊற்றுத் துறையொன்ப துள்*நின் றோரீர் ஒக்க அடைக்கும் போதுணர மாட்டீர், மாற்றுத் துறைவழிகொண் டோடா முன் னம் மாய மனைவாழ்க்கை மகிழ்ந்து வாழ்வீர், வேற்றுத் தொழில் பூண்டார் புரங்கள் மூன்றும் வெவ்வழல்வாய் வீழ்விக்கும் வேந் தன் மேய, சோற்றுத் துறைசோற்றுத் துறைஎன்பீ ராகில் துயர் நீங்கித் தூநெறிக்கட் சேர லாமே. 5

கலஞ்சுழிக்குங் கருங்கடல்சூழ் வையந் தன்னிற் கள்ளக் கடலி லழுந்தி வாளா, நலஞ்சுழியா எழுநெஞ்சே இன்பம் வேண் டில் நம்பன்றன் அடியிணைக்கே நவில்வா யாகில், அலஞ்சுழிக்கும் மன்னுகந் தன்னான் மேய அருமறையோ டாறங்க மானார் கோயில், வலஞ்சுழியே வலஞ்சுழியே என்பீ ராகில் வல்வினைகள் தீர்ந்துவா னாள லாமே. 6

தண்டி குண்டோ தரன்பிங் கிருடி சார்ந்த புகழ்நந்தி சங்கு கன்னன், பண்டை உலகம் படைத்தான் தானும் பாரை அளந்

* ஊற்றுத்துறை ஒன்பதுள் – மலம், நீர் ஊறும் துறைகள் போன்ற உடலில் உள்ள ஒன்பது வாயில்,

தான் பல்லாண் டிசைப்பத், திண்டி வயிற்றுச் சிறுகட் பூதஞ் சிலபாடச் செங்கண் விடையொன் றூர்வான், கண்டியூர் கண்டியூர் என்பீ ராகிற் கடுகநும் வல்வினையைக் கழற்ற லாமே. 7

விடமூக்கப் பாம்பேபோற் சிந்தி நெஞ்சே வெள்ளேற்றான் தன்தமரைக் கண்ட போது, வடமூக்க மாமுனிவர்† போலச் சென்று மாதவத்தார் மனத்துளார் மழுவாட் செல்வர், படமூக் கப் பாம்பணையிற் பள்ளி யானும் பங்கயத்து மேலயனும் பரவிக் காணுக், குடமூக்கே குடமூக்கே என்பீ ராகிற் கொடுவினைகள் தீர்ந்தரனைக் குறுக லாமே. 8

தண்காட்டாச் சந்தனமுந் தவள நீறுந் தழையணுகுங் குறுங்கொன்றை மாலை சூடிக், கண்காட்டாக் கருவரைபோ லனைய காஞ்சிக் கார்மயிலஞ் சாயலார் கலந்து காண, எண் காட்டாக் காடங் கிடமா நின்று எரிவீசி இரவாடும் இறைவர் மேய, வெண்காடே வெண்காடே என்பீ ராகில் வீடாத வல்வினை நோய் வீட்ட லாமே. 9

தந்தையார் தாயா ருடன் பிறந்தார் தாரமார் புத்திரரார் தாந்தா மாரே, வந்தவா றெங்ஙனே போமா றேதோ மாயமா மிதற்கேதும் மகிழ வேண்டாம், சிந்தையீர் உமக்கொன்று சொல்லக் கேண்மின் திகழ்மதியும் வாளரவுந் திளைக்குஞ் சென்னி, எந்தையார் திருநாமம் நமச்சி வாய என்றெழுவார்க் கிருவிசும்பி லிருக்க லாமே. 10

திருச்சிற்றம்பலம்

---

நின்ற திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி இயமான னாய்*யெறியுங் காற்று மாகி, அருநிலைய திங்களாய் ஞாயி றாகி ஆகாச மாயட்ட மூர்த்தி** ஆகிப், பெருநலமுங் குற்றமும் பெண்ணும் ஆணும் பிறருருவுந் தம்முருவுந் தாமே யாகி, நெருநலையாய் இன்றாகி நாளை யாகி நிமிர்புன் சடையடிகள் நின்ற வாறே. 1

மண்ணாகி விண்ணாகி மலையு மாகி வயிரமுமாய் மாணிக்கந் தானே யாகிக், கண்ணாகிக் கண்ணுக்கோர் மணியு மாகிக் கலை

---

† வடமூக்க மாமுனிவர் – முத்தி விரும்பி வடக்கு நோக்கித் தவஞ் செய்யும் அறவோர். * இயமானன்–ஆன்மா. **இவ்வடிகள் அட்டமூர்த்தத்தைக் குறிப்பன.

யாகிக் கலைஞானந் தானே யாகிப், பெண்ணாகிப் பெண்ணுக்கோ ராணு மாகிப் பிரளயத்துக் கப்பாலோ ரண்ட மாகி, எண்ணாகி எண்ணுக்கோ ரெழுத்துமாகி எழுஞ்சுடரா யெம்மடிகள் நின்ற வாறே. 2

கல்லாகிக் களறாகிக் கானு மாகிக் காவிரியாய்க் கால்ஆறாய்க் கழியு மாகிப், புல்லாகிப் புதலாகிப் பூடு மாகிப் புரமாகிப் புரமூன் றுங் கெடுத்தா னாகிச், சொல்லாகிச் சொல்லுக்கோர் பொருளு மாகிச் சுலா† வாகிச் சுலாவுக்கோர் சூழ லாகி, நெல்லாகி நிலனாகி நீரு மாகி நெடுஞ் சுடராய் நிமிர்ந்தடிகள் நின்ற வாறே. 3

காற்றாகிக் கார்முகிலாய்க் காலம் மூன்றாய்க் கனவாகி நன வாகிக் கங்கு லாகிக், கூற்றாகிக் கூற்றுதைத்த கொல்களிறு மாகிக் குரைகடலாய்க் குரைகடற்கோர் கோமா னுமாய், நீற்றா னாய் நீறேற்ற மேனியாகி நீள்விசும்பாய் நீள்விசும்பி னுச்சி யாகி, ஏற்றானா யேறூர்ந்த செல்வ னாகி எழுஞ்சுடராய் எம்மடிகள் நின்ற வாறே. 4

தீயாகி நீராகித் திண்மை யாகித் திசையாகி அத்திசைக்கோர் தெய்வ மாகித், தாயாகித் தந்தையாய்ச் சார்வு மாகித் தாரகையும் ஞாயிறுந்தண் மதியு மாகிக், காயாகிப் பழமாகிப் பழத்தில் நின்ற இரதங்கள் நுகர்வானுந் தானே யாகி, நீயாகி நானாகி நேர்மை யாகி நெடுஞ்சுடராய் நிமிர்ந்தடிகள் நின்ற வாறே. 5

அங்கமா‡ யாதியாய் வேத மாகி அருமறை§யோ டைம்பூதந் தானே யாகிப், பங்கமாய்ப் பலசொல்லுந் தானே யாகிப் பால் மதியோ டாதியாய்ப் பான்மை யாகிக், கங்கையாய்க் காவிரி யாய்க் கன்னி யாகிக் கடலாகி மலையாகிக் கழியு மாகி, எங்குமாய் ஏறூர்ந்த செல்வ னாகி எழுஞ்சுடராய் எம்மடிகள் நின்ற வாறே. 6

மாதா பிதாவாகி மக்க ளாகி மறிகடலும் மால்விசும்புந் தானே யாகிக், கோதா விரியாய்க் குமரி யாகிக் கொல்புலித்தோ லாடைக் குழக னாகிப், போதாய மலர்கொண்டு போற்றி நின்று புனைவார் பிறப்பறுக்கும் புனித னாகி, யாதானு மெனநினைந்தார்க் கெளிதா யாகி அழல்வண்ண வண்ணர்தாம் நின்ற வாறே. 7

---

† சுலா – காற்று. ‡ அங்கம் – வேதாங்கம். § அருமறை – இங்கு உபநிடம்.

ஆவாகி ஆவினில் ஐந்து மாகி அறிவாகி அழலாகி அவியு மாகி, நாவாகி நாவுக்கோர் உரையு மாகி நாதனாய் வேதத்தி னுள்ளோ னாகிப், பூவாகிப் பூவுக்கோர் நாற்ற மாகிப் புக்குளால் வாசமாய் நின்றா னாகித், தேவாகித் தேவர் முதலு மாகிச் செழுஞ் சுடராய்ச் சென்றடிகள் நின்ற வாறே. 8

நீராகி நீளகலந் தானே யாகி நிழலாகி நீள்விசும்பி னுச்சி யாகிப், பேராகிப் பேருக்கோர் பெருமை யாகிப் பெருமதில்கள் மூன்றினையும் எய்தா னாகி, ஆரேனுந் தன்னடைந்தார் தம்மை எல்லாம் ஆட்கொள்ள வல்லவெம் மீச னார்தாம், பாராகிப் பண் ணாகிப் பாட லாகிப் பரஞ்சுடராய்ச் சென்றடிகள் நின்ற வாறே. 9

மாலாகி நான்முகனாய் மாபூதமாய் மருக்கமாய் அருக்க மாய்† மகிழ்வு மாகிப், பாலாகி யெண்டிசைக்கும் எல்லை யாகிப் பரப்பாகிப் பரலோகந் தானே யாகிப், பூலோக புவலோக சுவ லோகமாய்ப் பூதங்களாய்ப் புராணன் தானே யாகி, ஏலா தன வெல்லாம் ஏல்விப் பானாய் எழுஞ்சுடராய் எம்மடிகள் நின்ற வாறே. 10

திருச்சிற்றம்பலம்

---

## தனித் திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

அப்பன்நீ அம்மைநீ ஐய னும்நீ அன்புடைய மாமனும் மாமி யும்நீ, ஒப்புடைய மாதரும்* ஒண்பொரு ளும்நீ ஒருகுலமுஞ் சுற் றமும் ஒரூ ரும்நீ, துய்ப்பனவும் உய்ப்பனவுந் தோற்று வாய்நீ துணையாயென் நெஞ்சந் துறப்பிப் பாய்நீ, இப்பொன்நீ இம் மணிநீ இம்முத் தும்நீ இறைவன்நீ ஏறூர்ந்த செல்வன் நீயே. 1

வெம்பவரு கிற்பதன்று கூற்றம் நம்மேல் வெய்யவினைப் பகையும் பைய நையும், எம்பரிவு தீர்ந்தோம் இடுக்கண் இல்லோம் எங்கெழிலென் ஞாயி றெளியோ மல்லோம், அம்பவளச் செஞ் சடைமேல் ஆறுசூடி அனலாடி ஆன் அஞ்சும் ஆட்டு கந்த, செம் பவள வண்ணர்செங் குன்ற வண்ணர் செவ்வான வண்ண ரென் சிந்தை யாரே. 2

---

† மருக்கம் - மனம், அருக்கம்–உணவு; சுருங்கியுநிலையுமாம்.
* ஒப்புடைய மாதர்–மனைவி.

ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடா தாரே அடக்குவித்தால் ஆரொருவர் அடங்கா தாரே, ஓட்டுவித்தால் ஆரொருவர் ஓடா தாரே உருகுவித்தால் ஆரொருவர் உருகா தாரே, பாட்டுவித் தால் ஆரொருவர் பாடா தாரே பணிவித்தால் ஆரொருவர் பணியா தாரே, காட்டுவித்தால் ஆரொருவர் காணா தாரே காண் பாரார் கண்ணுதலாய்க் காட்டாக் காலே. 3

நற்பதத்தார்* நற்பதமே ஞான மூர்த்தி நலஞ்சுடரே நால் வேதத் தப்பால் நின்ற, சொற்பதத்தார் சொற்பதமுங்† கடந்து நின்ற சொலற்கரிய சூழலாய் இதுவுன் தன்மை. நிற்பதொத்து நிலையிலா நெஞ்சந் தன்னுள் நிலாவாத புலாலுடம்பே புகுந்து நின்ற, கற்பகமே யானுன்னை விடுவேன் அல்லேன் கனகமா மணிநிறத்தெங் கடவு ளானே. 4

திருக்கோயி லில்லாத திருவி லூரும் திருவெண்ணீ றணியாத திருவி லூரும், பருக்கோடிப் பத்திமையாற் பாடா வூரும் பாங்கி னொடு பலதளிக ளில்லா வூரும், விருப்போடு வெண்சங்கம் ஊதா வூரும் விதானமும் வெண்கொடியு மில்லா வூரும், அருப்போடு மலர்பறித்திட் டுண்ணா வூரும் அவையெல்லாம் ஊரல்ல அடவி காடே.‡ 5

திருநாமம் அஞ்செழுத்துஞ் செப்பா ராகில் தீவண்ணர் திற மொருகால் பேசா ராகில், ஒருகாலுந் திருக்கோயில் சூழா ராகில் உண்பதன்முன் மலர்பறித்திட் டுண்ணா ராகில், அருநோய்கள் கெடவெண்ணீ றணியா ராகில் அளியற்றார் பிறந்தவா றேதோ என்னிற், பெருநோய்கள் மிகநலியப் பெயர்த்துஞ் செத்துப் பிறப்பதற்கே தொழிலாகி இறக்கின் றாரே. 6

நின்னாவார் பிறரன்றி§ நீயே யானாய் நினைப்பார்கள் மனத் துக்கோர் வித்து மானாய், மன்னானாய் மன்னவர்க்கோ ரமுத மானாய் மறைநான்கு மானாய்ஆ றங்க மானாய், பொன்னானாய் மணியானாய் போக மானாய் பூமிமேல் புகழ்தக்க பொருளே

---

* நற்பதத்தார்–ஞானிகள். † சொற்பதம்–வேத சிரம். ‡ இச் செய்யுள் ஊருக்கு இன்றியமையாதவைகளைக் குறிப்பிடுகிறது. அடவிகாடு–விலங்குகள் வாழும் காடு; சுடுகாடுமாம். § பிறரின்றி என்றும் பாடம்.

உன்னை, என்னுனைய் என்னுனைய் என்னி னல்லால் ஏழையேன் என்சொல்லி ஏத்து கேனே. 7

அத்தாவுன் அடியேனை அன்பா லார்த்தாய் அருள்நோக்கில் தீர்த்தநீ ராட்டிக் கொண்டாய், எத்தனையும் அரியநீ எளியை யானாய் எனையாண்டு கொண்டிரங்கி யேன்று கொண்டாய், பித்தனேன் பேதையேன் பேயேன் நாயேன் பிழைத்தனகள் எத்தனையும் பொறுத்தா யன்றே, இத்தனையும் எம்பரமோ ஐய ஐயோ எம்பெருமான் திருக்கருணை இருந்த வாறே. 8

குலம்பொல்லேன் குணம்பொல்லேன் குறியும் பொல்லேன் குற்றமே பெரிதுடையேன் கோல மாய, நலம்பொல்லேன் நான் பொல்லேன் ஞானி யல்லேன் நல்லாரோ* டிசைந்திலேன் நடுவே நின்ற, விலங்கல்லேன் விலங்கல்லா தொழிந்தேன் அல்லேன் வெறுப்பனவும் மிகப்பெரிதும்பேச வல்லேன், இலம்†பொல்லேன் இரப்பதே ஈய மாட்டேன் என்செய்வான் தோன்றினேன் ஏழையேனே. 9

சங்கநிதி பதுமநிதி இரண்டுந் தந்து தரணியொடு வானாளத் தருவரேனும், மங்குவார் அவர்செல்வம் மதிப்போ மல்லோம் மாதேவர்க் கேகாந்த ரல்லா ராகில், அங்கமெலாங் குறைந்தழுகு தொழுநோ யராய் ஆவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனுங், கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்ப ராகில் அவர்கண்டீர் நாம் வணங்குங் கடவு ளாரே. 10

திருச்சிற்றம்பலம்

---

## தனித் திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

ஆமயந்‡தீர்த் தடியேனை யாளாக் கொண்டார் அதிகைவீ ரட்டானம் ஆட்சி கொண்டார், தாமரையோன் சிரமரிந்து கையிற் கொண்டார் தலையதனிற் பலிகொண்டார் நிறைவாம் தன்மை, வாமனனார் மாகாயத் துதிரங் கொண்டார் மானிடங்கொண்டார் வலங்கை மழுவாட் கொண்டார், காமனையும் உடல்கொண்டார்

---

* நல்லார்–கேட்டுச் சிந்தித்துத் தெளிந்த மெய்யன்பர். † இலம்–வறுமை. ‡ ஆமயம்–ஆன்மசொருபம்; ஆன்மாவைப் பந்தித்த ஆணவமலமுமாம், சூலைநோய் என்றலும் ஒக்கும்.

கண்ணால் நோக்கிக் கண்ணப்பர் பணியுங்கொள்* கபாலி யாரே. 1

மூப்புரிநூல் வரைமார்பின் முயங்கக் கொண்டார் முதுகேழல் முளைமருப்புங் கொண்டார் பூணச், செப்புருவ முலைமலையாள் பாகங் கொண்டார் செம்மேனி வெண்ணீறு திகழக் கொண்டார், துப்புரவார் சுரிசங்கின் தோடு கொண்டார் சுடர்முடிசூழ்ந் தடியமரர் தொழவுங் கொண்டார், அப்பலிகொண் டாயிழையார் அன்புங் கொண்டார் அடியேனை ஆளுடைய அடிக ளாரே. 2

முடிகொண்டார் முளையிளவெண் திங்க ளோடு மூசுமிளநாகமுட னாகக் கொண்டார், அடிகொண்டார் சிலம்பலம்பு கழலுமார்ப்ப அடங்காத முயலகனை அடிக்கீழ்க் கொண்டார், வடிகொண்டார்ந் திலங்குமழு வலங்கைக் கொண்டார் மாலையிடப் பாகத்தே மருவக் கொண்டார், துடிகொண்டார் கங்காளந்தோள் மேற் கொண்டார் சூலைதீர்த் தடியேனை யாட்கொண் டாரே. 3

பொக்கணமும் புலித்தோலும் புயத்திற் கொண்டார் பூதப் படைகள்புடை சூழக் கொண்டார், அக்கினொடு படஅரவம் அரை மேற் கொண்டார் அனைத்துலகும் படைத்தவையும் அடங்கக் கொண்டார், கொக்கிறகுங் கூவிளமுங் கொண்டை கொண்டார் கொடியானை யடலாழிக் கிரையாக் கொண்டார், செக்கர்நிறத் திருமேனி திகழக் கொண்டார் செடியேனை யாட் கொண்ட சிவனார் தாமே. 4

அந்தகனை அயிற்சூலத் தழுத்திக் கொண்டார் அருமறையைத் தேர்க்குதிரை யாக்கிக் கொண்டார், சுந்தரனை*த் துணைக் கவரி வீசக் கொண்டார் சுடுகாடு நடமாடு மிடமாக் கொண்டார், மந்தரம்நற் பொருசிலையா வளைத்துக் கொண்டார் மாகாளன் வாசல்காப் பாகக் கொண்டார், தந்திரமந் திரத்தரா யருளிக் கொண்டார் சமண்தீர்த்தென் றன்னையாட் கொண்டார் தாமே. 5

பாரிடங்கள் பலகருவி பயிலக் கொண்டார், பவளநிறங் கொண்டார் பளிங்குங் கொண்டார், நீரடங்கு சடைமுடிமேல் நிலவுங்கொண்டார் நீலநிறங் கோலநிறை மிடற்றிற் கொண்டார்,

---

* பலியுங்கொள் என்றும் பாடம். † சுந்தரன்—ஆலால சுந்தரன். பின்னர் ஆளுடையநம்பிகளாக அவதரிக்க உள்ளவர் என்பர்.

வாரடங்கு வனமுலையார் மைய லாகி வந்திட்டபலி கொண்டார் வளையுங் கொண்டார், ஊரடங்க ஒற்றிநகர் பற்றிக் கொண்டார் உடலுறு நோய் தீர்த்தென்னை யாட்கொண் டாரே. 6

அணிதில்லை அம்பலமா டரங்காக் கொண்டார் ஆலால அரு நஞ்சம் அமுதாக் கொண்டார், கணிவளர்தார்ப் பொன்னிதழிக் கமழ்தார் கொண்டார் காதலார் கோடிகலந் திருக்கை கொண் டார், மணிபணத்த அரவந் தோள் வளையாக் கொண்டார் மால் விடைமேல் நெடுவீதி போதக் கொண்டார், துணிபுலித்தோ லினை யாடை யுடையாக் கொண்டார் சூலங்கைக் கொண்டார்தொண் டெனைக்கொண் டாரே. 7

படமூக்கப் பாம்பணையா னோடு வானோன் பங்கயனென் றங்கவரைப் படைத்துக் கொண்டார், குடமூக்கிற் கீழ்க்கோட் டங் கோயில் கொண்டார் கூற்றுதைத்தோர் வேதியனை உய்யக் கொண்டார், நெடுமூக்கிற் கரியினுரி மூடிக் கொண்டார் நினை யாத பாவிகளை நீங்கக் கொண்டார், இடமாக்கி இடைமருதுங் கொண்டார் பண்டே என்னை இந்நாள் ஆட்கொண்ட இறைவர் தாமே. 8

எச்சன்நிணைத் தலை*கொண்டார் பகன்கண் கொண்டார் இரவிகளி லொருவன்பல் லிறுத்துக் கொண்டார்,† மெச்சன் வியாத் திரன்‡தலையும் வேறுக் கொண்டார் விறலங்கி கரங்கொண் டார் வேள்வி காத்து, உச்சநமன் தாளறுத்தார் சந்திரனை உதைத் தார் உணர்விலாத் தக்கன்றன் வேள்வி யெல்லாம், அச்சமெழ அழித்துக்கொண் டருளுஞ் செய்தார் அடியேனை யாட்கொண்ட அமலர் தாமே. 9

சடையொன்றிற் கங்கையையுந் தரித்துக் கொண்டார் சாமத்தின் இசைவீணை தடவிக் கொண்டார், உடையொன்றிற் புள்ளியுழைத் தோலுங் கொண்டார் உள்குவார் உள்ளத்தை ஒருக்கிக் கொண்டார், கடைமுன்றிற் பலிகொண்டார் கனலுங் கொண்டார் காபால வேடங் கருதிக் கொண்டார், விடைவென் றிக் கொடியதனில் மேவக் கொண்டார் வெந்துயரந் தீர்த்தென்னை யாட்கொண் டாரே. 10

* எச்சன் இணைத்தலை என்றும் பாடம். † மெச்சன்—விரும்பி வைக்கப்பட்டவனாகிய. ‡ விதாத்திரன் என்றும், வித்தியாத்திரன் என்றும் பாடம். வியாத்திரன்—தொழில் நடத்துவோன்.

சூராமலரோ டராமதியஞ் சடைமேற் கொண்டார் குட முழநந் தீசனைவா சகனுக்¶ கொண்டார், சீராமலைதஞ் சேர்விட மாத் திருந்தக் கொண்டார் தென்றல்நெடுந் தேரோனைப் பொன்றக் கொண்டார், பராபரனென் பதுதமது பேராக் கொண்டார் பருப்பதங் கைக்கொண்டார் பயங்கள் பண்ணி, இராவணனென் றவனைப் பேர் இயம்பக் கொண்டார் இடருறு நோய் தீர்த்தென்னை யாட்கொண் டாரே. 11

திருச்சிற்றம்பலம்

## வினாவிடைத் திருத்தாண்டகம்*

திருச்சிற்றம்பலம்

அண்டங் கடந்த சுவடு** முண்டோ அனலங்கை யேந்திய ஆட லுண்டோ, பண்டை யெழுவர் படியு முண்டோ பாரி டங்கள் பலசூழப் போந்த துண்டோ, கண்ட மிறையே கறுத்த துண்டோ கண்ணின்மேற் கண்ணொன்று கண்ட துண்டோ, தொண்டர்கள் சூழத் தொடர்ச்சி யுண்டோ சொல்லீரெம் பிரானரைக் கண்ட வாறே. 1

எரிகின்ற இளஞாயி றன்ன மேனி இலங்கிழையோர் பால் உண்டோ வெள்ளே றுண்டோ, விரிகின்ற பொறியரவத் தழலு முண்டோ வேழத்தி னுரியுண்டோ வெண்ணூ லுண்டோ, வரி நின்ற பொறியரவச் சடையு முண்டோ அச்சடைமேல் இளமதி யம் வைத்த துண்டோ, சொரிகின்ற புனலுண்டோ சூலம் உண்டோ சொல்லீரெம் பிரானரைக் கண்ட வாறே. 2

நிலாமாலை செஞ்சடைமேல் வைத்த துண்டோ நெற்றிமேற் கண்ணுண்டோ நீறு சாந்தோ, புலால்நாறு வெள்ளெலும்பு பூண்ட துண்டோ பூதந்தற் சூழ்ந்தனவோ போரே றுண்டோ,

---

¶ வாசகன் – வீட்டை யடைந்தவன். வாசம்–வீடு. இங்கே திருக்கோயிலை அடைந்து வாயிற்காவலனாக இருப்பவன் என்பது கருத்து. வாசகன்–மாணிக்கவாசகர் என்பாருமுளர். நந்தியம்பெரு மான் பின்னர் மணிவாசகராக அவதரித்தார் என்று வரலாறு கூறு கிறது. * இப்பதிகம் முதல் ஐந்து செய்யுட்கள் வினாவாகவும், பின் ஆறு செய்யுட்கள் அவ்வினாக்களுக்கு விடையுமாக அமைந்து உள் ளது. ** சுவடு–அடையாளம்.

கலாமாலை வேற்கண்ணாள் பாகத் துண்டோ கார்க்கொன் றை மாலை கலந்த் துண்டோ, சுலாமாலை யாடரவந் தோள்மே லுண்டோ சொல்லீரெம் பிரானாரைக் கண்ட வாறே. 3

பண்ணார்ந்த வீணை பயின்ற துண்டோ பாரிடங்கள் பல சூழப் போந்த துண்டோ, உண்ணா வருநஞ்ச முண்ட துண்டோ வூழித்தீ யன்ன ஒளிதா னுண்டோ, கண்ணார் கழல்காலற் செற்ற துண்டோ காமனையுங் கண்ணழலாற் காய்ந்த துண்டோ, எண்ணார் திரிபுரங்க ளெய்த துண்டோ எவ்வகையெம் பிரானா ரைக் கண்ட வாறே. 4

நீறுடைய திருமேனி பாக முண்டோ நெற்றிமேலொற்றைக் கண் முற்று முண்டோ, கூறுடைய கொடுமழுவாள் கையி லுண்டோ கொல்புலித்தோ லுடையுண்டோ கொண்டவேடம், ஆறுடைய சடையுண்டோ அரவ முண்டோ அதனருகே பிறை யுண்டோ அளவிலாத, ஏறுடைய கொடியுண்டோ இலய முண் டோ எவ்வகையெம் பிரானாரைக் கண்ட வாறே. 5

பட்டமுந் தோடுமோர் பாகங் கண்டேன் பார்திகழப் பலி திரிந்து போதக் கண்டேன், கொட்டிநின்று லயங்க ளாடக் கண் டேன் குழை காதிற் பிறைசென்னி இலங்கக் கண்டேன், கட்டங் கங் கொடிதிண்டோள் ஆடக் கண்டேன் கனமழுவாள் வலங் கையில் இலங்கக் கண்டேன், சிட்டனைத் திருவால வாயிற் கண்டேன் தேவனைக் கனவில்நான் கண்ட வாறே. 6

அலைத்தோடு புனற்கங்கை சடையிற் கண்டேன் அலர் கொன்றைத் தாரணிந்த வாறு கண்டேன், பலிக்கோடித் திரிவார் கைப் பாம்பு கண்டேன் பழனம் புகுவாரைப் பகலே கண்டேன், கலிக்கச்சி மேற்றளியே இருக்கக் கண்டேன் கறைமிடறுங் கண் டேன் கனலுங் கண்டேன், வலித்துடுத்த மான்தோல் அரையிற் கண்டேன் மறைவல்ல மாதவனைக் கண்ட வாறே. 7

நீறேறு திருமேனி நிகழக் கண்டேன் நீள்சடைமேல் நிறை கங்கை யேறக் கண்டேன், கூறேறு கொடுமழுவாள் கொள்ளக் கண்டேன் கொடுகொட்டி கையலகு கையிற் கண்டேன், ஆறேறு சென்னியணி மதியுங் கண்டேன் அடியார்கட் காரமுத மாகக் கண்டேன், ஏறேறி இந்நெறியே போதக் கண்டேன் இவ் வகை யெம் பெருமானைக் கண்ட வாறே. 8

விரையுண்ட வெண்ணீறு தானு முண்டு வெண்தலைகை யுண் டொருகை வீணை யுண்டு, சுரையுண்டு சூடும் பிறையொன் றுண்டு சூலமுந் தண்டுஞ் சுமந்த துண்டு, அரையுண்ட கோவண ஆடை யுண்டு வலிக்கோ லுந் தோலு மழகா வுண்டு, இரையுண் டறியாத பாம்பு முண்டு இமையோர் பெருமா னிலாத தென்னே. 9

மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சி மயானத்தான் வார் சடையான் என்னி னல்லான், ஒப்புடைய னல்லன் ஒருவ னல்லன் ஓரூர னல்லன் ஒருவம னில்லி, அப்படியும் அந்நிறமும் அவ்வண்ண மும் அவனருளே கண்ணாகக் காணின் அல்லால், இப்படியன் இந் நிறத்தன் இவ்வண்ணத்தன் இவனிறைவன் என்றெழுதிக் காட்டொ ணாதே.* 10

பொன்னொத்த மேனிமேற் பொடியுங் கண்டேன் புலித்தோ லுடைகண்டேன் புணரத் தன்மேல், மின்னொத்த நுண்ணிடை யாள் பாகங் கண்டேன் மிளிர்வதொரு பாம்பும் அரைமேற் கண் டேன், அன்னத்தே றூர்ந்த அரக்கன் தன்னை அலற அடர்த்திட்ட அடியுங் கண்டேன், சின்ன மலர்க்கொன்றை கண்ணி கண்டேன் சிவனைநான் சிந்தையுட் கண்ட வாறே. 11

திருச்சிற்றம்பலம்

---

## மறுமாற்றத் திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம் நரகத்தி லிடர்ப்படோம்† நடலை யில்லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம் இன்பமே எந்நாளுந் துன்ப மில்லை, தாமார்க் குங் குடியல்லாத் தன்மை யான சங்கரன்நற் சங்கவெண் குழை யோர் காதிற் கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க் கொய்ம் மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே. 1

அகலிடமே இடமாக ஊர்கள் தோறும் அட்டுண்பார் இட் டுண்பார் விலக்கார் ஐயம், புகலிடமாம் அம்பலங்கள் பூமி தேவி யுடன்கிடந்தாற் புரட்டாள்பொய் யன்று மெய்யே, இகலுடைய

---

* இச்செய்யுள் இறைவனை அவனருள் காட்டக் காணுதலன்றி வேறு ஒன்றாலும் காண இயலாது என்பதை அறிவிக்கிறது.
† நரகத்திலிடப்படோம் என்றும் பாடம்.

விடையுடையான் என்று கொண்டான் இனியேதுங் குறைவி லோம் இடர்கள் தீர்ந்தோம், துகிலுடுத்துப் பொன்பூண்டு திரி வார் சொல்லுஞ் சொற்கேட்கக் கடவோமோ துரிசற் றோமே. 2

வாராண்ட கொங்கையர்சேர் மனையிற் சேரோம் மாதேவா மாதேவா என்று வாழ்த்தி, நீராண்ட புரோதாயம்* ஆடப் பெற் றோம் நீறணியுங் கோலமே நிகழப் பெற்றோம், காராண்ட மழை போலக் கண்ணீர் சோரக் கன்மனமே நன்மனமாக் கரையப் பெற்றோம், பாராண்டு பகடேறி வருவார் சொல்லும் பணி கேட்கக் கடவோமோ பற்றற் றோமே. 3

உறவாவார் உருத்திரபல் கணத்தி னோர்கள் உடுப்பனகோ வணத் தொடுகீ ளுளவா மன்றே, செறுவாருஞ் செறமாட்டார் தீமை தானும் நன்மையாய்ச் சிறப்பதே பிறப்பிற் செல்லோம், நறவார்பொன் னிதழிநறுந் தாரோன் சீரார் நமச்சிவா யஞ்சொல்ல வல்லோம் நாவால், சுறவாருங் கொடியானைப் பொடியாக் கண்ட சுடர்நயனச் சோதியையே தொடர்வுற் றோமே. 4

என்றும்நாம் யாவர்க்கும் இடைவோ மல்லோம் இருநிலத்தில் எமக்கெதிரா வாரு மில்லை, சென்றுநாம் சிறுதெய்வம்** சேர்வோ மல்லோஞ் சிவபெருமான் திருவடியே சேரப் பெற்றோம், ஒன்றினாற் குறையுடையோ மல்லோ மன்றே உறுபிணியார் செறலொழிந்திட் டோடிப் போனார், பொன்றினார் தலைமாலை அணிந்த சென்னிப் புண்ணியனை நண்ணியபுண் ணியத்து ளோமே. 5

மூவுருவின் முதலுருவாய் இருநான் கான மூர்த்தியே என்றுமுப் பத்து மூவர், தேவர்களும் மிக்கோருஞ் சிறந்து வாழ்த்துஞ் செம்பவளத் திருமேனிச் சிவனே என்னும், நாவு டையார் நமையாள வுடையா ரன்றே நாவலந்தீ வகத்தினுக்கு நாத ரான, காவலரே யேவி விடுத்தா ரேனுங் கடவமலோங் கடுமையொடு களவற் றோமே. 6

நிற்பனவும் நடப்பனவும் நிலனும் நீரும் நெருப்பினொடு காற்றாகி நெடுவா னாகி, அற்பமொடு பெருமையுமாய் அருமையாகி அன்புடையார்க் கெளிமையதாய் அளக்க லாகாத், தற்பரமாய்ச்

---

* புரோதயம்–நீராடலின் ஒரு விசேடம். தீர்த்தவிசேடமுமாம்.
** சிறுதெய்வம்–செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள்.

